உ

சிவமயம்

திருநெல்வேலிக் [illegible]நல்லூர்

ஸ்ரீ சுந்தரசுவாமிகள்

அருளிச்செய்த

# சுவாநுபூதிரஸாயனம்

திருநெல்வேலி ஷை சுவாமிகளது மாணாக்கர்

சதாசிவத்திருவடியாரவர்கள்

முன்பதிப்பித்த பிரதிக்கிணங்க

திருநெல்வேலி ஷை சுவாமிகளது மாணாக்கர்

மாவடி சிதம்பரம்பிள்ளையால்

பரிசோதிக்கப்பட்டு

ஷை யூர் ஷை சுவாமிகளது மாணாக்கர்

பஜனை கொ. சிதம்பரம்பிள்ளை

கேட்டுக்கொண்டபடி

திருநெல்வேலி

யூனியன் சென்றல் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது

இரண்டாம் பதிப்பு

இதன்விலை அணா ௰

1904

குரோதி௵



ஸ்ரீ சுந்தரசுவாமிகள் படம்.

## சாற்றுக்கவி

திருநெல்வேலி சிவபக்த சிரோமணியாகிய
புராணிகர் சண்முகம்பிள்ளையவர்கள் பாடிய

### விருத்தம்

[illegible]ண்டி[illegible]ாவளாகத்தறமுறைநாவார்
தில்லைவாழந்தணர் முதலாந்
தொண்டரோரறுபான் மூவர்களுடனே
சுந்தரஸ்வாமியைச்சேர்த்து
[illegible]ண்ட[illegible]றுபானல்வராயியம்ப
[illegible]முள்ளோர்கடனவனே
[illegible]தனுலுற்பத்திப்பிரக
[illegible]ல்வழுத்தினன்மகிழ்ச்சே

# பிரகரண அட்டவணை


| நம்பர் | பெயர் | பக்கம் |
| --- | --- | --- |
| 1 | உற்பத்திப்பிரகரணம் | 1 |
| 2 | சப்தபூமிப்பிரகரணம் | 12 |
| 3 | முத்தர்களின் இலக்ஷணப்பிரகரணம் | 16 |
| 4 | சர்வமதநிரூபணப்பிரகரணம் | 19 |
| 5 | பிரணவப்பிரகரணம் | 31 |
| 6 | சிரவணாதிசம்பிரதாயப்பிரகரணம் | 46 |
| 7 | அகங்காராதிகளை நீக்கவுபாயமுரைத்தது | 49 |
| 8 | சமுசயநிவிர்த்திப்பிரகரணம் | 51 |
| 9 | கன்மத்திரய வரலாற்றுப்பிரகரணம் | 52 |
| 10 | உபாசனையின் பலமுரைத்தபிரகரணம் | 53 |
| 11 | சத்தியாசத்திய வரலாற்றுப்பிரகரணம் | 56 |
| 12 | பாத்திராபாத்திர விவேகமுரைத்தது | 63 |
| 13 | பந்தமுத்திகளின்விபரமுரைத்தப்பிரகரணம் | 66 |
| 14 | சுவாநுபவத்தில் சச்சிதானந்தமுதலிய நிரூபணப்பிரகரணம் | 74 |
| 15 | வேதாந்தசித்தாந்தமிரண்டுக்குமுள்ள விரோதசமாதானப்பிரகரணம் | 80 |
| 16 | குருசிஷ்யர்களின் கிரமமுரைத்தப்பிரகரணம் | 82 |
| 17 | முத்தர்களுக்கும் முமுக்ஷுக்களுக்கும் வேண்டும் சாதனமுரைத்தபிரகரணம் | 84 |
| 18 | சந்நியாசவரலாறுரைத்தபிரகரணம் | 85 |
| 19 | சமாதியின் மனோவிருத்தி சோதனம் | 87 |
| 20 | சமஷ்டியுபாதியுரைத்தபிரகரணம் | 90 |
| 21 | சருவஞ்ஞஞானவுண்மை யுரைத்தது | 110 |
| 22 | விசிஷ்டாத்வைதநிரூபணப்பிரகரணம் | 112 |
| 23 | த்வைதமதநிரூபணப்பிரகரணம் | 114 |
| 24 | லளிதாநுபூதிப்பிரகரணம் | 116 |

# புத்தக விளம்பரம்

இதனாலறிவிப்பதியாதெனில்

இப்புத்தகந் தனித்தனி வாங்குபவர்கள்

சுவாநுபூதிரஸாயனம் புத்தகம் 1-க்கு ரூ 0-10-0
சுவாநுபவ ரஸமஞ்சரி புத்தகம் 1-க்கு 0-12-0
நிஜானந்த விலாசம் புத்தகம் 1-க்கு 0-14-0
வீதமாகவும்,

மூன்றுஞ்சேர்ந்த கட்டிடமாயுள்ள புத்தகம் வேண்டுமென்றபேக்ஷையுடையவர்கள் புத்தகம் 1-க்கு ரூ 2 வீதமாகவும், திருநெல்வேலி மேலரதவீதியிலிருக்கும் ஸ்ரீ யூனியன் சென்றல் அச்சுயந்திரசாலையிலும், ஷை யூர் ஷை வீதி நாரூல் இஸ்லாம் அச்சுயந்திரசாலையிலும், ஷை யூர் தெற்குரதவீதி ஸ்ரீ சுந்தரநடராஜர்பஜனை சபையில் பஜனை கொ. சிதம்பரம்பிள்ளை யிடத்திலும்; திருவனந்தபுரம் சாலைத்தெருவில் பொன்வாணிபஞ் செய்யும் பூலாயிதாஸ் அவர்களிடத்திலும்; கிரயத்திற்குப் பெற்றுக்கொள்ளலாம்.

சிவமயம்

# ஸ்ரீ சுந்தரஸ்வாமிகள்

## சரித்திரச்சுருக்கம்

இஃது ஷ்டி சுவாமிகளின் பிரதமசிடராகிய
திருநெல்வேலித்திம்மராஜபுரம்
பிச்சுசுவாமிகள் அருளிச்செய்தது

---

இலங்குமா யிரத்தோ டெழுநூற்றாண்டுக்கிசைந்திங்கர
வருடத்தில், நலங்கொள்கார்த்திகைநன்மதி யினிலநடநாட்
சனிவாரத்தில் விடையிற், கலங்கலில்பொருளைக்கோடக்கல்
லூர்க்காமர்பூசுரர்செய்மாதவத்தாற், பொலங்கொளும்பரமசுந்
தர குருவாய்ப்புவிமிசையவதரித்தனனே. (௧)

அவதரித்ததிவேர்ங் கிடவளர்ந் துறவோராத்சிகைபூணு
நூலணிந்து, பவமறம்மறையாகம்முணர்ந்தவற்றுட் பன்னிய
வணடைந்ததன்பின், லுவமையொப்பிறந்த சானகிமாதை யு
ளங்கொளநன்மணம்புரிந்து, சிவபரம்பொருளைச்சிந்தனைசெய்
மெய்யுஞ் செறிதரப்பூசனைசெயவே (௨)

செய்யவப்பலத்தாற்றேசிகன் விசுவேசுரரிடஞான தீ
க்ஷையும்பெற், றையமற்றறிவாலிந்திரசாலமகிலமென்றுணர்
ந்து நற்றுறவாய், மெய்யறிவனந்தானந்த மேவிடுநாள்விசுவேச
ர் பூரணமடையக், கையிலாமலகக்கனியெனச்சோமசுந்தரன்
கருணைநோக்கடைந்தே. (௩)

தேசுறுசகசநிட்டையிற் பொருந்தித்தீர்த்தங்கள் சாலிப
ல்தலமும், பூசுரர்குழுவோடளவில்யாத்திரையிற்போக்கினன்
சிற்சிலபொழுதை, வீசுறுசிறுகால்நெல்லையம்பதியில் விளங்
குமாருத்திரமதனோ, டாசறுதீபவிலக்கமுமியற்றி யரன்வழி
விடையினுள்கழித்தான். (௪)

ஆனிலேந்தா டுமைநதிக்கடவுளாலேயப்பதிட்டையுமாங்கே
ஞானிகள் வியக்கச்சாத்திரசாலே நலமுடனமைத்ததுமன்றி,
மாணிலத்துள்ளபதிகளிற் சிலதைநயம்பெறப்புதுக்கியுமிடை
யே, மோனிகடுதிக்கச்சாத்திரநான்கை மொழிந்தனன் சில
தினந்திகழ்ந்தே. (௫)

திகழுமாயிரத்தைம்பத்திநாலாண்டிற் செறிவெகுதானிய
வருடம், புகழுமைப்பசியாறுந்தெய்தி மதிநாள்புகல் கிருட்டி
ணபக்ஷத்தசமி, நிகழ்மகம்பகன் மூன்றுடனிருபஃதாய்சேர்ந்
த நாழிகையரிமனத்தில், துகளில்சீரடியார்சூழ்ந்தினிதிருப்பக்
அந்தான் கலந்தனன்பரத்தே. (௬)

முற்றிற்று



## குரு பரம்பரை

ஆதிகுருதக்ஷிணாமூர்த்தி நாராணர்- பிரமன் வசிஷ்டர் ச
க்தி-பராசரர்-வியாசர்-சுகர்-கவுடபாதர்- கோவிந்தயோகீந்திரர்
சங்கராசாரியார்-பத்மபாதர்-ஹஸ்தாமலகர்-தோடகர்-வார்த்தி
கக்காரர்-வித்தியாசங்கரர்-வித்தியாரண்யர்-அப்பயதீக்ஷதர்-நீ
லகண்டதீக்ஷதர்-அனந்தநாராயணசாஸ்திரிகள்-சங்காசாஸ்திரி
கள்-என்னேசுரபட்டாரகர்-என்னுஹம்ஸர்-இராமசுப்பிரமண்
ய-பௌண்டரீகர்-சிவசுப்பிரமண்யர் இராமச்சந்திரசாஸ்திரி
கள் விசுவேசுவராள்-சுந்தரயதீந்திராள்.

☞ இவர்களுக்கு உண்மையை யபரோட்சிப்பித்தவு
டன் பரிபூரணமாய்விட்ட விசுவேசுவராளுக்குக் குருபுத்திரர்
களான சோமசுந்தரசாஸ்திரிகளால் சருவவிருத்திபரிசோத
னேல்லாச ரஹஸ்யார்த்தமான ஸஹஜஸ்திதி அருள்செய்யப்
பட்டது. இவர்களது பூர்வாச்சிரமத்தில் மாதாமகரான சுந்
தரேசுவரசாஸ்திரிகளால் ஸ்ரீ சங்கரபாஷியாதிபருள் செய்யப்
பட்டது.

உ

சிவமயம்.

# சுவாநுபூதிரஸாயனம்.

## கடவுள்வணக்கம்.

ஆதிமத் யாந்த மின்றி யகண்டபூ ரணமாய் ஞானச்
சோதியாய்த் துரிய பூமி துகளறு நிலத்தின் மேவுங்
கோதிலாச் சைத ன்யத்தின் குளிர்மலர்ப் பதங்கள் போற்றி
ஊதியச் சுவாநு பூதி ரசாயன முரைக்கின் றேனே.

## குரு வணக்கம்.

அருணிறைந்த பரசிவமே மூன்றுருவா னாற்போல்வந்
தடியே னுய்ய
பரவியபா ஷியமுரைத்த சுந்தரசாஸ் திரிகளையும்
பரிவாய் ஞான
தருமுயர்வில் வேல்வரா ளையுஞ்சகச சமாதிநிலை
சாற்றி யாண்
குருசோம சுந்தரசாஸ் திரிகளையும் பணிந்துநெஞ்சுட்
கொண்டு வாழ்வாம்.

## அவை யடக்கம்.

பந்த முத்திய றிந்தருள் பத்தர்முன்
அந்த மில்ஸ்வாநு பூதிர சாயனம்
முந்த யான்மொழி வேனெனல் மூசிகம்
எந்த மேருவுங் காண்பனென் றேகல்போல்.

## இந்நூற் கதிகாரிகள்.

தாரணியிற் சாஸ்திரங்க ளனந்தங் கோடி
தனித்தனியே பார்த்துணரச் சத்தி யில்லார்க்
கோரணியாய்த் திரட்டிவைத்தே னிந்நூற் கேற்ற
வுத்தமரா ரெனினவஸ்தை யொருமூன் றுக்கும்
பேரணியா யிருந்தந்தக் கரண வாதைப்
பித்தேறு முத்தர்களாம் பேதை யான
ஊரணியா மலநிறைந்த வுடலை மெய்யென்
றுழ்லுவா ரன்றெனவு முரைக்கலாமே.

## க—வது உற்பத்திப்பிரகரணம்.

ஏகமா யெக்காலத்திலும் அழிவில்லாததாயுள்ளது பிரம்மே ஒன்று; அதினிடத்தி லசைவற்ற ஆகாயத்தினிடத்திற் றோன்றிய வாயுவைப்போல சுத்தமாஞ் சத்துவ குணமென்னு மாயைதோன்றி, அம்மாயையிற் சத்வ ரஜோ தமோ குணமென்னு முக்குணத்தின் சமுதாயம் பொருந்திய ஜடசக்தியான பிரகிருதிஜநித்தது.

அப்பிரகிருதியே செய்கையின் பேதத்தால் ஆவரண சக்தி யென்றும் விக்ஷேபசக்தி யென்று மிரண்டு பிறிவுடன் கூடி, சத்வகுணத்தை விழுங்கித் தான்மேலிட்ட தமோகுணத்தின் உண்மையான ஆவரண சக்தியால், பிராந்தியாற் றோன்றிய சோரபுத்தியாந் தாணுவின் மறைவுபோல், ஆத்மாவினிடத்தின் மறைதலுண்டாய் சமஷ்டி பிரமாண்டமாய்த்தோன்றக், கொஞ்சஞ் சத்துவத்தின் ரேகையுடைய ரஜோகுணமேலான ஸ்வரூபமுடைய விக்ஷேபசக்தியானது லிங்கசரீர முதலான வியஷ்டிகளின் பேதத்தைத் தோன்றுவித்து, பிரமாண்டத்தை யலங்கரிப்பித்து நிற்க, அதை அவித்தையென்றும் விவகரிப்பார்கள்; அதுவே சகலஜகத்துக்குஞ் ஜநநமுதலான துன்பத்தைக்கொடுக்கு மோஹத்துக்கு முதலாம்.

இவ்விதமான சக்திகளாற் றோன்றுகிற சமஷ்டியான ஜகத்தை மூவிதபேதத்தா லபிமானித்த சைதந்நியம், விராட்டு இரணியகற்பன் அந்தரியாமி எனவும் பேதமுடையனவாம்.

அதில் விராட்டைக் கூறுமிடத்தில் சமஷ்டியில் ஸ்தூல சரீரத்தை யபிமானித்த சைதந்நியம் விராட்டாம், சூக்ஷ்மசரீரத்தை யபிமானித்த சைதந்நியம் இரணியகற்பனும், காரண சரீரத்தை யபிமானித்த சைதந்நியம் அந்தரியாமியாம்.

வியஷ்டியில் ஸ்தூலசரீரத்தை யபிமானித்த சைதந்நியம் விஸ்வனுவான், சூக்ஷ்மத்தை யபிமானித்தசைதந்நியம் தைஜஸனுவான், காரணத்தை யபிமானித்த சைதந்நியம் பிராஞ்ஞனுவான்.

வியஷ்டி உடல்மூன்றுக்கும் அப்புறப்பட்டதாய் சகல திருஷ்டாவாய் விளங்குகின்ற சைதந்நியமே சாக்ஷியாகும். சமஷ்டி உடல்மூன்றுக்கு மப்புறப்பட்டதாய் சருவசம்பூரணமாய் விளங்குகின்ற சைதந்நியமே சருவசாக்ஷியான ஈஸ்வரனுவான்.

இவ்விதமாக முன்சொல்லிய சமஷ்டி வியஷ்டியான உலகத்துக்கும் பஞ்சபூதமே சாதனமாம். ஆவரணம் விக்ஷேபம் என்றசக்தி அவித்தையாம்; திரிகுணத்தின் சமுதாயமே மூலப்பிரகிருதியாம்.

இம்மூலப்பிரகிருதியுடன் கூடிய சைதந்நியமான ஆத்மாவினிடத்தினின்றும் அவகாசரூபமான ஆகாயமுண்டாயிற்று; அதினின்றும் வாயுதோன்றிற்று; அதினின்றும் அக்கினிதோன்றிற்று; அதினின்றும் அப்புத்தோன்றிற்று; அதினின்றும் பிருதிவிதோன்றிற்று.

இதின்குணங்கள் சப்த ஸ்பரிச ரூப ரச கந்த மென்கிற ஐந்து, பிருதிவிக்கு இந்தக்குணங்கள் ஐந்துமுண்டு;

அப்புவுக்கு கந்தந்தள்ளி மற்றநான்கு; அக்கினிக்கு கந்த ரசந் தள்ளி மற்றமூன்று; வாயுவுக்கு சப்த ஸ்பரிசமென்கிற இரண்டு; ஆகாயத்துக்கு சப்தம் ஒன்றே.

இனி பஞ்சபூதத்தின் குறிப்பு கடினமுடையது பிருதிவி நெகிழ்ச்சியுடையது அப்பு உஷ்ணமுடையது அக்கினி சலனமுடையது வாயு வெளியுடையது ஆகாயம் எலும்பு தோல் ஸ்நாயு உரோமம் மாமிசம் இந்த ஐந்தும் பிருதிவியின் விகாரமாம்; இரத்தம் மூத்திரஞ் சிலேஷ்ட்மஞ் சுக்கிலம் மேதசு இந்த ஐந்தும் அப்புவின் விகாரமாம்; பசி தாகம் நித்திரை ஆலசியம் இரதி இந்த ஐந்தும் அக்கினியின் விகாரமாம்; நடத்தல் தாண்டுதல் ஏறுதல் இறங்குதல் தகைவுதல் இந்த ஐந்தும் வாயுவின் விகாரமாம்; காமங் குரோதம் மோகம் பயம் சோகம் இந்த ஐந்தும் ஆகாயத்தின் விகாரமாம்; காமங் குரோதம் உலோபம் மோஹம் மதம் மர்ச்சரம் இந்த ஆறும் உள்ளத்தின் சத்துருவாகும்; ஜநிக்குதல் இருக்குதல் வர்த்திக்குதல் பரிணமம் க்ஷயம் நசிக்குதல் இந்த ஆறும் தேகபாவங்களாம்; அசனம் பிபாசை சோகம் மோகம் ஜரை மிருதி இவைகள் ஷடூருமிகளாம்; தோல் எலும்பு மாமிசம் இரத்தம் மேதசு மச்சை சுக்கிலம் இந்தத்தாதுக்களிடத்தினின்று தேகரூபமான பிரபஞ்சம் ஜநித்தது.

இவ்வளவும் மாயையின் விகாரமானதால் அறிவற்றஜடமாம், இந்தஜடமான ஜகத்தில் சிவமாஞ்சைதந்நியமானது பிரவேசித்து அதின் சந்நிதான விசேஷத்தா லிந்தஜகத்துஞ் சைதந்நியம் போலவே விளங்குகின்றது.

தேவர் மனிதர் பசு பக்ஷி முதலான ஜடமானஜகத்தினுள்ளே பிரவேசித்துநின்ற ஈசனைத் தெரிவிக்குத லெப்படியெனின்; உடல்முதலான சகலங்களையும் என்னுடல் என்கண் என்மனம் என்புத்தி என்சுகம் என்துக்கம் என்னகங்காரம் என்பெண்டு என்பிள்ளை என்பொருள் என்பூமி என்ஜாக்கிர

த்து என்சொப்பனம் என்தூக்கம் என்சமாதி எனஜாதி என் வர்ன்னம் என்ஆச்சிரமம் என்தர்மம் என்பாவம் என்று ஜடமானகடத்தைப் புருடன்போல விளங்கிப்பிக்கிற சகலஜகத்தைப் பகுத்தறிந்த அறிவான சைதந்நியமே பிரமமாம். இதைத் திருக்கென்று கூறுவார்கள். மற்ற சகலங்களையுந் திருசியமென்று கூறுவார்கள்.

இந்தத் திரிசியமான தேகத்தை நாமென்றும் நமதென்றும் அபிமானிக்க சீவத்துவம் நேரிடும், அக்காலத்தில் அவன் உபாதியையுஞ் சுபாவத்தையுந் தெரிய விபரமெப்படியெனின்; மூலப்பிரகிருதியின் உண்மை திரிகுணத்தின் சமுதாயமானதால் அவ்வித வுபாதியையுடைய சைதந்நியத்தில் ஆகாயாதிகள் ஜநித்ததால் குணத்திரயத்தின் சுவாபம் அதையுடையதாகும்.

அவ்விதபஞ்சபூதத்தின் ஸாத்வீகாம்சத்தினின்றும் அந்தக்கரணம் ஜநித்தது, அவ்வந்தக்கரணமே விருத்திபேதத்தால் மனம் புத்தி சித்தம் அகங்காரமென்று நான்குபேதத்தையடைந்தது; இதை அந்தரிந்திரியமென்று கூறப்படும்.

பாகியேந்திரியங்களின் விவரமெப்படியெனின்; ஞானேந்திரிய மென்றும் கன்மேந்திரிய மென்றும் வகை ஒன்றுக்கு ஐந்துவீதம் பத்தாகும்; இவைகளில் ஞானேந்திரியமாவது சுரோத்திரம் த்வக்கு நேத்திரம் ரசனை கிராணம் ஆக ஐந்து, கன்மேந்திரியமாவது வாக்கு பாதம் பாணி பாயுரு உபஸ்தம் ஆக ஐந்து, இவற்றின் விஷயங்களாவன சப்த ஸ்பரிச ரூப ரச கந்தமென்கிற ஐந்தும் ஞானேந்திரியத்தின் விஷயங்களாம், வசன கமன ஆதான விசர்க்க ஆனந்தமென்கிற ஐந்துங் கன்மேந்திரியத்தின் விஷயங்களாம்.

இந்திரியங்களி னுற்பத்தியாவன ஆகாயத்தின் சத்துவாம்சத்தினின்றுஞ் சுரோத்திரம் ஜநித்தது, வாயுவின் சத்துவாம்சத்தினின்றுந் த்வக்கு ஜநித்தது, அக்கினியின் சத்துவாம்

சத்தினின்றும் நேத்திரம் ஜநித்தது; அப்புவின் சத்துவாம்ச த்தினின்றும் ரசனே ஜநித்தது; பிருதிவியின் சத்துவாம்சத்தி னின்றுங் கிராணம்ஜநித்தது; சமஷ்டிபஞ்சபூதத்தின் ரஜோம் சத்தினின்றும் பிராணனுண்டாயிற்று; ஆகாயத்தின் ரஜோம் சத்திலிருந்து வாக்குண்டாயிற்று; வாயுவின் ரஜோம்சத்திலி ருந்து பாணியுண்டாயிற்று; அக்கினியின் ரஜோம்சத்திலிரு ந்து பாதமுண்டாயிற்று; அப்புவின் ரஜோம்சத்திலிருந்து பாயுறு உண்டாயிற்று; பிருதிவியின் ரஜோம்சத்திலிருந்து உபஸ்த முண்டாயிற்று.

பூதங்களில் வாயுவான பிராணன் மாத்திரம் விருத்திபே தத்தால் பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் என்று ஐந்துபேதமாயிற்று.

ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரத்திரயத்தின் வரலாறு பூத ம் (௫) ஞானேந்திரியம் (௫) கன்மேந்திரியம் (௫) வாயு (௫) கரணம் (௪) ஆ தத்துவம் (உ௰௪-ம்) கூடினது ஸ்தூலசரீ ரமாம். வாயு (௫) ஞானேந்திரியம் (௫) கன்மேந்திரியம் (௫) மனம் (௧) புத்தி (௧) ஆ (௰௭) தத்துவமுடையதாய் அப ஞ்சீகிருத பூதத்தினின்றுண்டானது சூக்ஷ்மசரீரமாம் அது வே சொர்க்காதி போகங்களுக்குச் சாதனமாம்.

தூக்கத்தி லொன்றுந்தெரியாமற் றூங்கினேனென்ற சொல்லா லநுபவிக்கப்பட்ட வொன்றையும் அறியாமையான அஞ்ஞாநுபவமே காரணசரீரமாம்.

இவற்றின் அவஸ்தையாவன ஜாக்கிரஞ் சொப்பனம் சுழுத்தியென மூன்றும். அவற்றுள் சாக்கிரமாவது பாகியே ந்திரியங்களோடுகூடின ஸ்தூலசரீரவிஷயமான ஜகத்தின் வி யாபாரமாம். சொப்பனமாவது மனதின் வாசனரூபமான ஜகத்தின் பிரவிருத்தியாம். சுழுத்தியாவது புத்திமுதலான சகலகரணங்களும் லயித்து தன்னறிவை மயக்காநின்ற தூக் கமான அஞ்ஞாநுபவமாம்.

இந்த மூன்று சரீரத்தையுஞ் சாக்ஷியான ஆத்மாவுக்குக் கிரீடையடையும்பொருட்டானதால் மூன்று புரமாகக்கூறப் படும்.

கத்தியைமறையாநின்ற உறைபோல் ஆத்மாவை மறை யாநின்ற மூன்றுடலி னுள்ளடங்கிய பஞ்சகோசத்தின் விபர மாவன. அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞான மயம் ஆனந்தமயம் எனவைந்தாம்.

அவற்றுள் அன்னமயகோசமாவது ஸ்தூலசரீரமாம் அதெப்படியெனின் அன்னாதிபோசனத்தால் விருத்தி க்ஷயங் காணப்படுவதாலும் உற்பத்திக்கு முன்னும் லயத்துக்குப்பி ன்னும் ஸ்வரூபமில்லாததனாலும் என்சரீரமென்று கடம் போல ஜடமாய் வேறுபட்டு அநுபவிக்கப்படுதலாலும் இந்த அன்னமயகோசம் ஆத்மாவாகத் தக்கதல்ல.

பிராணமயகோசம் ஆத்மாவாகுமெனின் ஆத்மாவல்ல; எப்படியெனின் பிராணனானது தன்னை லடக்கத்தக்கதாயும் விடத்தக்கதாயுஞ் சுழுத்தியிற் பிராணனிருந்தும் விஷயங்க ளையறிய அறிவில்லாததனாலும் என் பிராணனென்று வேறு படுத்தி அநுபவிக்கப்படுவதனாலும் பிராணவாயு வெளிக்கண் ட காற்றுப்போல ஜடமானதாலும் பிராணமயகோசமும் ஆ த்மாவாகத் தக்கதல்ல.

மனோமயகோசம் ஆத்மாவாகுமெனின் ஆத்மாவல்ல; எப்படியெனின் சங்கற்ப விகற்பத்தாற் றோன்றியதாயுஞ் ச முசயமுடையதாயும் நிச்சயத்தால் நாசமுடையதாயுங் காம க்குரோதாதிகளாற் றுன்பமுடையதாயும் என்மனஞ் சமா தானப்படாததாற் காதுகேட்கவில்லையென்று தனக்குவே றுபட்டதாயும் அநுபவிக்கப்படுவதால் ஜடமானமனோமய கோசமும் ஆத்மாவாகத் தக்கதல்ல.

விஞ்ஞானமயகோசம் ஆத்மாவாகுமெனின் ஆத்மாவல் ல; எப்படியெனின் சுத்தன்சாக்ஷ யாயுஞ் சுழுத்தியிற் காரண

ததால் லயித்ததாயும் விவகாரசமயத்திற் சரீர விந்திரியங்க ளை வியாபித்ததாயும் என்புத்தி கெட்டுப்போயிற்றென்று சொல்லும்போது நாசமுடையதாயும் என்புத்தியென்று தன க்கன்னியமா யநுபவிக்கப்படுவதாலும் நிச்சயரூபமான புத் தியும் ஜடமானதால் விஞ்ஞானமயகோசமும் ஆத்மாவாகத் தக்கதல்ல.

ஆனந்தமயகோசம் ஆத்மாவாகுமெனின் ஆத்மாவல்ல; எப்படியெனின் தூக்கத்திலநுபவிக்கப்பட்ட ஆபாசமான சுகலேசத்தை யபிமானித்து ஸ்வப்பிரகாசமான தன்னையறி யாம லொன்றுந் தெரியாமையான அவித்தையாம் அஞ்ஞான த்தின்முழுகி, அந்தசுழுத்தியாகின்ற அஞ்ஞானவிருத்தியிற் றோன்றிய சுகத்தைத் தூக்கந்தெளிந்தபின் சுகமாய்த் தூங்கி னேனென்றும் விஷயவிருத்தியிற் பிரதிபலித்த துக்கத்தை யபிமானித்து நான் துக்கியென்றும் அநுபவிக்கப்படுவதாலுந் துரியசமாதியில் நாசமுடையதாயும் நானென்ற அகங்கார தத்துவமான இந்தவானந்தமயகோசமுங் கடம்போல் ஜடமா ய்த் தனக்கன்னியமா யநுபவிக்கப்படுவதா லாத்மாவாகத்தக் கதல்ல.

இந்தக்கோசங்களைந்துஞ் சரீரத்திரயங்களி லடங்கும்வித மெப்படியெனின்; ஸ்தூலசரீரத்தில் அன்னமயகோசமும் சூ க்ஷமசரீரத்தில் பிராணமயகோசமு மனோமயகோசமும் விஞ் ஞானமயகோசமும், காரணசரீரத்தி லானந்தமயகோசமுமாக அடங்கும்.

சீவாத்மாவின் ஸ்வரூபத்தைத் தெரியவிபரமெப்படியெ னின்; ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி இந்தமூன்றவஸ் தைக்கும் அபிமானிகளான விசுவன் தைஜஸன் பிராஞ்ஞ னென்று விவகரிக்கப்பட்ட ஜீவர்கள் மூன்றுபேர்களா, அல் லது ஒருவனே மூன்றுபேதமாய்த் தோன்றுகிறானா? மூன்று

பேருமொருவனென்றால் ஓரவஸ்தையி னநுபோககாலத்தின் மற்றோரவஸ்தையின நுபோகமநுபவிக்கப் படாததா லந்தந் தஅவஸ்தையிலநுபவியாகின்ற சீவன்வேறெனக்கூறலாமே? உத்தரம் மூன்றவஸ்தைக்கும் நானேற்றுத் தூங்கினேன் இவ்விதமான சொப்பனங்கண்டே னிவ்விதமாய் விழித்திருந்து விவகரித்தேனென்று ஏககாலத்தி லொருவனே விவகரிப்பதால் வாதிக்கப்படாத வநுபோகமானதாலு மிந்தமூன்றவஸ்தைகளையு மறிந்த சைதந்நியமே; பேதத்தொழில் செய்யுமோரரசன் மூன்றுகட்டுடைய வோரரண்மனையில் ஒவ்வொருகட்டி லொவ்வொருவிதமான தொழிற்செய்யுங்காலததில் அந்தந்தத்தொழிலால் வரும்பேரினல் அவ்வரசனெவ்வித பேதமாய் விவகரிக்கப்படுகிறானே, அவ்விதமாய் மூன்றுபேதமாயநுபவிக்கப்படுகிறான்.

இதுபோல் சமஷ்டிசாக்ஷியாகின்ற சைதந்நியமே சமஷ்டி யவஸ்தாபேதத்தால் விராட்டு இரணியகற்பன் அந்தரியாமியென்று விவகரிக்கப்படும்.

சுத்தசத்வமான மாயோபாதி யுடையதாயுஞ் சருவஞ்ஞமாயுஞ் சருவசம்பூர்ணமாயுஞ் சருவஜகத்துக்குங் காரணமாயுஞ் சருவசாக்ஷியாயும் விளங்குகின்ற லசைதந்நியமே ஈஸ்வரனாவான்.

அவித்தையை யுபாதியாகவுடையதாயுங் கிஞ்சிஞ்ஞனும் அசம்பூர்ணனும் அகமகமென்றெல்லாராலும் அநுபவிக்கப்பட்ட சைதந்நியமே சீவனாவான்.

இவ்விதமான சீவேஸ்வரரை உள்ளபடி தெரிவிக்கவந்த சுருதிகளின்பயன், கருமகாண்டம் உபாசனாகாண்டம் ஞானகாண்டம் என்று மூன்றுபேதமாகும்; சீவன் தேகாபிமானத்தோடுங் கூடினகாலத்திற் றேகத்தைப்பற்றின வருணாச்சிரம தருமங்களைப் போதிப்பிக்கும்; பின்பு வருணாச்சிரம கன்மாநுஷ்டானத்தால் அந்தர்முகப்பட்டகாலத்திற் சீவனுக்கு

இருதயகமலத்தி லீஸ்வரனுடைய சகுணோபாசனையை விதிக்கும். உலகவாடிக்கை முதற்பிரமலோகவரையிலும் நிராசையாய் முமுட்சுவானகாலத்திற் சிவனுக்கு ஞானகாண்டத்தை விதிக்கும். இந்தமுமுட்சுவுக்கு ஞானகாண்டத்தின் விபரந்தெரியக்கூறுதல்; சிவன் எப்போதருசியுடன் ஜகத்துக்கண்ணைத் தள்ளி முத்திவழி தேடுகிறானோ அப்போ தவனுய்யும்பொருட்டு பிரமோபதேசத்தைச் சொல்லுகிறதுடன் ஆசரியாகமுகமா யுபதேசிக்குங் குருசிஷ்யர்களின் நடத்தையுந் தெரியக்கூறுகின்றது.

குருவானவர் அடாம்பிகராயுஞ் சாந்தராயும் நிராசையுடையவராயும் வேதசாஸ்த்ரார்த்தங்கள் தெரிந்தநுபவிஞ்ஞராயும் வேதாந்த சம்பிரதாயந் தெரிந்தவராயுஞ் சிஷனுடைய சித்தபரிபாகங் கண்டு உபதேசிக்கத்தெரிந்தவராயுங் கபடமற்றுச் சொல்லுகின்றவராயு மிருக்கவேண்டும்.

சிஷன் பிரமமேசத்தியம் மற்றசிவேஸ்வர ஜகத் தசத்தியமென்று நித்தியாநித்தியவிவேகந் தோன்றி முத்தியடையவேண்டுமென்ற யிச்சையினாற் றேகபோகமுதற் பிரமலோகபோகம் வரையிலும் மலத்தில் அருசிதோன்றினாற்போ லருசிதோன்றி, அவற்றின் தியாகபுத்தியாகிய வைராக்கியஞ் சமம்தமம் உபாதி திதீக்ஷை சிரத்தை சமாதானமுடைய முமுட்சுத்துவமாகிய இந்தநான்குசாதனங்க ளுடையவனாக விருக்கவேண்டும்; சிஷன்பின்பு ஆசிரியர் பாதகமலத்தைச் சேர்ந்து அஷ்டாங்கத்துடனே நமஸ்காரஞ்செய்து கைகூப்பித்தலை வணங்கி வணக்கத்துடனே விலகிநின்று அதிபூதம் அத்யாத்மகம் அதிதைவம் இவ்விதமான தாபத்திரையாக்கினியினால் நிதாந்தந்தனானேன் என்னாதனாகிய ஆசிரியரே! கிருபை பொருந்திய வுமது திருக்கண்பார்வையா மருவியால் இரக்ஷிக்கவேண்டுமென்று கேட்க; அப்போதாசிரியர் மாணாக்கனை நோக்கி குழந்தாய் பயப்படவேண்டாம் எக்காலமும் பய

மில்லாததாயு மெப்போது மானந்தக்கடலாயும் அகண்டஸச்சிதானந்தமாயும் ஸ்வயஞ்சோதியாயும் விளங்குகின்ற பிரமமே நீயென்றுபதேசிக்க.

மாணுக்கன் ஜநநமரணம் பொருந்திய நானெப்படி பிரமமாவேனென; உபநிடத முதலானதுகளினுலும் பெரியோர்களநுபவித்த வநுபவங்களினுலுந் தகுந்த யுக்திகளினுலுஞ் சொல்லுகிற தென்னவெனின்; ஸச்சிதானந்த பிரமசைதந்நியந்தவிர மற்றஜகமெல்லாம் ஜடமானதாலும் அந்தச் சைதந்நியமேஜகத்தை சிருஷ்டித்து அதிற்பிரவேசித்து வருவதினுலுஞ் சீவரூபமான சாக்ஷியாய்விளங்குதலாலும் உன்னுடைய மூன்றவஸ்தைகளையு மறிந்தசாக்ஷியான வுனக்குஞ் சிருஷ்டிக்கப்பட்டும் பரிபாலிக்கப்பட்டு மழிக்கப்பட்டுந் தன்னிடத்திற் கற்பிக்கப்பட்ட ஜகத்துக்குஞ் சாக்ஷியான பிரமசைதந்நியத்துக்குஞ் சைதந்நியரூபமாயாவது சாக்ஷிரூபமாயாவது பேதங்கூடாததாலுஞ் சமாதியிற்றுரியத்தில் ஜகமநுபவிக்கப்படாததாலுஞ் சமஷ்டி வியஷ்டி அவஸ்தைகளைத்தள்ளி சாக்ஷிமாத்திரமாய் நின்றுயாகில் கானலிற்றோன்றிய ஜலம்போலுற்பத்திக்கு முந்தியகாலத்திலும் விவகாரகாலத்திலும் நாசத்துக்கப்புறப்பட்ட காலத்திலு முன்னிடத்தில் ஜகம்பொய்யென்றநுபவிக்கப்படுதலால் நீயே பிரமமென்றேன்.

ஆனதால் நீ இவ்விதமாய்ச் சமாதிசெய்வா யென்றநுக்கிரகிக்க, உடனேசிஷன் சமாதியிலிருந்து பிர்மானந்தாநுபூதியை யடைந்து அங்கே ஈசன் குரு தான் மற்றஜக மென்கிற பேதமற ஆனந்தமாத்திரமாய்நின்று இருகண்ணுலும் ஆனந்தபாஷ்பம்பெருகி யுடலும் புளகிதமாகி சமாதியினின்றும் விழித்து ஆசிரியர்பாதத்தில் நமஸ்காரஞ்செய்து எக்காலத்திலும் விளங்குகின்ற ஏகமாம் பிரமஸ்வரூபத்தைத்தவிர மற்ற சகலஜடமான ஜகங்களும் பொய்யெனத் தம்பட்டமடித்து ஆனந்தக்கடலாடிநின்ற சிஷனை யாசிரியருச்சிமோந் தாலிங்க

னஞ்செய்து அகண்ட ஸச்சிதானந்த பிரமமாகிய சிஷனுக்குப் பந்தமுத்தியற்ற நகரத்தில் ஜயஜயவென் றாசீர்வாதஞ்செய்து ஆத்மானந்த ராச்சியத்தின் முடிசூட்டி இருவரு மொருவரா கத்திவ்வியமங்களரானார்கள்.

உற்பத்திப்பிரகரணமுற்றிற்று.



## உ—வது சப்தபூமிப்பிரகரணம்.

ஐயா ஆசிரியரே! கேவலம் ஸன்மாத்திரமாய்ச் சேஷித்த போதரூபமான பரமாத்மா வொருவனே நிச்சயமென்றுபதே சித்தபிரகாரஞ் சமாதியநுபவத்தாலுஞ் சுருதியுக்திகளாலுஞ் சரியென்றறிந்தேன்; ஆனாலிந்தப்போதமே விவகாரகாலத்தி லநேகபேதமாய்த் தோன்றுவதால் முன்னேகமாய்த் தோன் றியபோதம் விவகாரகாலத்தி லநேகபேதமாய்த் தோன்றுவ தற்கு சுபாவமாய்க் கூடாததனால், லஃதெவ்விதோபாதியாற் கூடுமென்பதையும் அந்தவுபாதிகளா லெத்தனைவிதமாய்த் தோன்றுகின்ற தென்பதையுந் தெரிய வுபதேசித்தருள வே ண்டுமென்று மாணக்கன் கூற,

ஆசிரியர், பரமாத்மாவாகிய போதம் உபாதிபேதத்தா லெண்ணமற்ற அநேகபேதமாய் விளங்கினபோதிலும், மஹான் களாலதை எழுவகுப்பாய்ப் பகுத்து சப்தபூமியென்று விவ கரிக்கப்படும். அஃதெப்படியெனின் நிராவரணசைதந்நி யம் ஸாவரணசைதந்நியம் ஸாக்ஷிசைதந்நியம் அந்தக்காரண வச்சின்னசைதந்நியம் அந்தக்கரணவிருத்தியவச்சின்னசைத ந்நியம் இந்திரியாவச்சின்னசைதந்நியம் விஷயாவச்சின்னசை தந்நியம் என்றேழுபங்காய்க்கூறப்படும்.

இவைகளி னர்த்தமெப்படியெனின் சாவரணசைதந்நிய மென்ற விவகாரத்தை யபேக்ஷித்துப் பிரமமானது நிராவரண சைதந்நியமென்று கூறப்படும்.

சர்வஞ்ஞத்வாதிக் குறிப்புகளுக்கு முதலாயுள்ள சுத்த சத்வமாகின்ற மாயையை யபிமானித்த சைதந்நியமாமீசனே சாவரணசைதந்நியமென்று கூறப்படும்.

அவஸ்தாத்திரயங்களைப் பகுத்தறிந்த சைதந்நியமே சோதிதத்வம்பதமான சாக்ஷிசைதந்நியமாம்.

மனம் புத்தி சித்தம் அகங்காரம் இவைகளின்சமுதாய மானதாயும் பஞ்சபூதங்களின் சமஷ்டி சத்வாம்சங்க ளிடத்தி னின்று உற்பத்தியானதாயும் உள்ள அந்தக்கரணத்தை யபிமா னித்த சைதந்நியமே யந்தக்கரணவச்சின்ன சைதந்நியமாம்.

அவ்வந்தக்கரணத்தின் விகாரமான காமம் குரோதம் உ லோபம் மோஹம் மதம் மச்சரம் இவைமுதலான சகலவிஷ யங்களாயுள்ள ஆந்தரவியாபாரமான விருத்தியை யபிமானித் த சைதந்நியமே அந்தக்கரணவிருத்தி யவச்சின்ன சைதந்நி யமாம்.

சப்த ஸ்பரிச ரூப ரச கந்த மென்கின்ற இவைகளையறி கின்ற சுரோத்திரம் த்வக்கு சக்ஷு சிங்ஙவை கிராண மென் கின்ற ஞானேந்திரிய மென்ன, வசன கமன ஆதான விசற்க ஆனந்த மென்கின்ற இவைகளைவிஷயிகரியாநின்ற வாக்கு பா தம் பாணி பாயுறு உபஸ்த மென்கின்ற கன்மேந்திரிய மென் ன, இந்தவிருவகைப் பேதமுடைய இந்திரியங்களை யபிமானி த்தசைதந்நியமே இந்திரியாவச்சின்ன சைதந்நியமாம்.

பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாய மென்கின்ற பஞ்ச பூதங்களையும் இவற்றின் விகாரமான கடம் படம் முதலான சகல பௌதிகங்களையு மபிமானித்த சைதந்நியமே விஷ யாவச்சின்ன சைதந்நியமாம்.

இவற்றினநுபவம் வருகிறதின்பொருட்டு அவஸ்தைகளைக் கூறுதல், ஜாக்கிரம் சொப்பனம் சுழுந்தி துரியம் துரியாதீதம் அதீதோதீதம் சன்மயம் என்றேழுவகையாய்க் கூறப்படும்.

இவற்றினநுபவ விவரமெப்படியெனின் ஜாக்கிரத்தில் விஷயாவச்சின்ன சைதந்நியமும், இந்திரியாவச்சின்ன சைதந்நியமும், சொப்பனத்தில் அந்தக்கரண விருத்தியவச்சின்ன சைதந்நியமுமாக அநுபவிக்கப்படும்.

மனம் புத்தி சித்தம் அகங்காரம் இந்த நான்கும் அந்தக்கரணத்தின் விகாரமானதால், தனது விகாரத்தால் தனது ஸ்திதி யநுமானிக்கப்பட்டுத் தனதுகாரணமான வஞ்ஞானத்தோடும் பேதமறத் தனதுவிகாரங்களின் யாதொரு தோற்றுதலு மற்றுத், தூக்கத்திலநுபவிக்கப் படுவதாற் சுழுத்தியில் அந்தக்கரணவச்சின்ன சைதந்நியமநுபவிக்கப்படும்.

இவற்றில் ஜாக்கிரஞ் சொப்பன மிரண்டும் அஞ்ஞானிகளாகிய சீவர்களால் நிர்ணயமா யநுபவிக்கப்படும்; சுழுத்தி தினந்தோறு மநுபவிக்கப் பட்டபோதிலும் அவர்களால் நிர்ணயம்பண்ணக் கூடாது.

மூன்றுமவஸ்தையான சுழுத்தியில் எனக்கொன்றுந் தெரியாமல் தூங்கினேனென்ற தான் வேறுபட நின்றநுபவித்த சைதந்நியத்தை ஸாக்ஷியென்றுகூறலாம். ஆனதால் தன்னை ஸாக்ஷியா யறிவித்த ஸாக்ஷிபோதவிருத்தியே துரியாவஸ்தையாம்; அவ்வவஸ்தையி லவ்விதமான ஸாக்ஷிவிருத்தியை யபிமானித்த சைதந்நியமே ஸாக்ஷி சைதந்நியமாய்த் துரியாவஸ்தையி லநுபவிக்கப்படும்.

சமஷ்டி வியஷ்டி யென்று விவகரிக்கப்படுகின்ற ஜகஞ்சடமானதா லதற்குத்தானே சித்திகூடாது, நானுவிசித்திரத்தோடுங்கூடின சர்வஜகத்தையுஞ் சிருஷ்டிக்க வேண்டுமானுல் நானுவிசித்திரமுடைய சருவஞ்ஞ சக்திபொருந்திய சைதந்நியத்தாற் கூடவேண்டும், ஆனதால் அந்த சைதந்நியமானது மாயை

யன்றிச் சுத்தசைதந்நியத்துக்கு சருவஞ்ஞ சக்தியை விவகா ரத்தில் நிரூபிக்கக் கூடாது; ஆனதாற் பரதந்திரமான சுத்தசத்வமாயும் விசித்திர ஸ்வபாவமாயு மிருக்கின்ற மாயையை சைதந்நியம் அபிமானிக்க அச்சைதந்நியத்தை சாவரணசைதந்நியமென்று விவகரிக்கப்படும்.

முற்கூறிய ஜகத்தை யதின்காரணமான மாயையிற் காரணத்தைத்தவிரக் காரியம் வேறில்லை யென்று பேதமறக்கண்டு, அம்மாயையை அபிமானித்த சைதந்நியமுஞ் சைதந்நியரூபமான தன்னைத்தவிர வேறில்லாததனுற் றன்னுளடங்கிய அகண்டோபாதியான மாயையை அபிமானித்த சைதந்நியத்தை நானென்றும் அகண்டோகமென்று முபாதியே துரியாதீதாவஸ்தையாம். அதிற் சாவரணசைதந்நிய மநுபவிக்கப்படும்.

அவ்வகண்டோகமென்னு மகம்விருத்திக் கப்புறப்பட்டு, அவ்விருத்தியை யறிந்த சைதந்நியமே நிராவரண சைதந்நியமாம். அவ்விருத்தியினநுபூதியே அதீதோதீதாவஸ்தையாம் அதில் நிராவரண சைதந்நிய மநுபவிக்கப்படும்.

அகண்டோக மென்றவிருத்தி ஞாதிரு ஞானம் ஞேயமுடையதாக விளங்குவதால் அவ்விருத்தி யபிமானியை சூக்ஷ்ம திரிபுடி யுடையதான மஹாசாத்வீகாகங்காரியென்று விவகரிக்கப்படும் இதைத்தற்போத மெனவுங் கூறுவார்கள்.

இவ்விருத்தியுந் தனததிஷ்டான ஸ்வரூபமாய்த் தெளிந்து அதுவானஸ்திதியே ஸத்தாம்; பூர்வாவஸ்தையை யபேக்ஷித்து ஸன்மயாவஸ்தை யென்று கூறப்படும். இதில் மஹா மௌனமானதால் விவகாரமேகிடையாது.

இவ்விதமான பிரமாநுபூதிமானைப் பிரமமென்று கூறுவார்கள். இவர்கள்பொருட்டு விதிநிஷேதரூபமான சாஸ்திரங் கிடையாதென்று ஆசிரியர்கூற மாணக்கன் சகலசம்சயங் களைந் தீர்ந்து தானேதானானன்.

இரண்டாவது பிரகரணம் முற்றிற்று.

## ௬-வது முக்தர்களின் லக்ஷணப்பிரகரணம்.

சாதனபேதத்தா லநுபூதியின் றாரதன்மியங்களினல் வித்து வரன் வரியான் வரிட்டனென்று நான்கு வகுப்பாய்க் கூறப்படும். குருவின் பிரசாதத்தால் ஸ்வாநுபூதியை யடைந்திருந்த போதிலுந் துடர்ச்சியுடனே செய்கின்ற சாதனங்களின் பலத்தாற் சமாதிகாலத்திற் சிலகாலம் நிர்மலாநுபூதி யுடையவர்களாகவு மற்றக்காலங்களில் ஜகத்தின் விருத்தியாற் பாதிக்கப்பட்டும் வித்தியாவிருத்தியால் சுகதுக்கங்களைத் தங்களுக்கில்லையென்று நீக்குதல்செய்வார்கள்; இது வித்தின்குணமாம்.

சொப்பனத்திற்கண்ட ஜகத்தை சாக்கிரத்திற்பொய்யென் றநுபவிப்பதுபோல, விவகாரந்திற்றோன்றிய ஜகத்தை சாதனபலத்தாற் சமாதிகாலத்திற் பொய்யென் றநுபவிப்பார்கள்; இது வரன்குணமாம்.

இரச்சுவிற் றோன்றிய சர்ப்பத்தை யாப்தவாக்கியத்தாற் றிடமாய் ரச்சுவென்ற றிந்தபின்பு ஒருகாலத்திலு மதைச்சர்ப்பமென் றறியமாட்டாதவர்போல, ஸச்சிதானந்தகனமான பிரமமாகிய தன்னிடத்திற் றோன்றிய பிரபஞ்சத்தைக், குருசொன்ன சுருதி யுக்தி ஸ்வாநுபவ பலத்தாற் பிரமமாகிய தானேயென்றறிந்தபின்பு, ஒருகாலத்திலும் அதைப்பிரபஞ்சமென் றறியமாட்டார்கள்; ஆனல் விவகாரகாலத்தில் தெரிந்தவன் ரச்சுவைத்தவிர சர்ப்பம் வேறில்லை யென்றநுபவிப்பதுபோல, இவர்களும் விவகாரகாலத்தில் ஸச்சிதானந்தகனமான வானந்தக்கடலாகிய தன்னைத்தவிர ஜகம்வேறில்லையென்றே யநுபவிப்பார்கள்; இது வரியான்குணமாம்.

நினைவோடுமறிந்து கண்டத்தில் மாலையா யலங்கரித்துக்கொண்ட ரச்சுவை, சர்ப்பமென்றாவது சர்ப்பமில்லையென்றாவது இரச்சுவென்றாவது யாதொன்று மெண்ணாம லெப்படி ஸ்வபாவமாய்ச் சஞ்சரிப்பார்களோ, அப்படியே

காரமாய் நிர்மலமாய் ஸ்வயஞ்சோதியாய் ஸச்சிதானந்தகன மான தன்னிடத்திற் பிரபஞ்சமென்றுவது பிரபஞ்சமில்லையெ ன்றுவது தானென்றுவது யாதொரு விருத்தியுமற்றுச் சஞ்ச ரிப்பார்கள்; இது வரிட்டன்குணமாம்.

இதில் வித்து வரன் வரியானென்ற இம்மூவர்களுக்கும் அகண்டாகாரவிருத்தி யென்னுஞ்சாதனமுண்டு, ஆரூடனுக்கு அந்த விருத்தியுங்கூடக்கிடையாது.

அம்மூவர்களுக்குஞ் சாதனமான அகண்டபிரமவிருத்தி யானது, ஸ்புரணபேதத்தால் வகையொன்றுக்கு நான்குவிதம் பன்னிரண்டுபேதமாகும்; அந்தஸ்புரணங்களை ஸ்வப்பிரதான மென்றும் அஸ்வப்பிரதானமென்றும் ஸமப்பிரதானமென்றும் மூன்றுவகுப்பாய்க்கூறப்படும்.

இந்தஸ்புரணங்கள் ஒவ்வொன்றும் மூன்றுபேத முடை யதாகும். அவைகளில் ஸ்வப்பிரதானமாவது நான் பிரமமெ ன்ற வகண்டவிருத்தியாரூட சைதந்நியவுபாசனையில் நானெ ன்றுவிளங்கிய விருத்தியே அகண்டமா யிருப்பதாற் கடங் க லசமென்ற விவகார மெப்படியெனத் தெளிந்து, விருத்தியும் ஜடமானதால் ஞாதுரு ஞான ஞேயமற்ற ஸ்வரூபஞானமே, கடமென்றதின்பொருள் உள்ளபடி மண்ணென்பதுபோல, நா ன் பிரமமென்றதின் பொருளாக வறிந்து உபாசிக்கின்றதாம்.

அவ்விருத்தியில் உபஹிதசைதந்நியத்தை விசாரித்தறி யாமல் விருத்திமாத்திரத்தை யுபாசிக்கின்றது அஸ்வப்பிரதா னமாம்.

அவ்விருத்தியுஞ் சைதந்நியமும் ஒருக்காலும் பிரிந்தி டாது அக்கினியும் உஷ்ணமும்போலொன்றுதான்; விருத்தி காணப்படாவிடத்தி லொடுங்கி நின்றதென்றது ஸமப்பிரதான மாம்.

இதில் ஞேயத்தை யிப்படியே மூன்று விதமாயும் ஞான த்தை மூன்று விதமாயும் ஞாதாவை மூன்று விதமாயு முபாசி

## ௯—வது முக்தர்களின் லக்ஷணப்பிரகரணம்.

சாதனபேதத்தா லநுபூதியின் றாரதன்மியங்களினல் வித்து வரன் வரியான் வரிட்டனென்று நான்கு வகுப்பாய்க் கூறப்படும். குருவின் பிரசாதத்தால் ஸ்வாநுபூதியை யடைந்திருந்த போதிலுந் துடர்ச்சியுடனே செய்கின்ற சாதனங்களின் பலத்தாற் சமாதிகாலத்திற் சிலகாலம் நிர்மலாநுபூதி யுடையவர்களாகவு மற்றக்காலங்களில் ஜகத்தின் விருத்தியாற் பாதிக்கப்பட்டும் வித்தியாவிருத்தியால் சுகதுக்கங்களைத் தங்களுக்கில்லையென்று நீக்குதல்செய்வார்கள்; இது வித்தின்குணமாம்.

சொப்பனத்திற்கண்ட ஜகத்தை சாக்கிரத்திற்பொய்யென் றநுபவிப்பதுபோல, விவகாரத்திற்றோன்றிய ஜகத்தை சாதனபலத்தாற் சமாதிகாலத்திற் பொய்யென் றநுபவிப்பார்கள்; இது வரன்குணமாம்.

இரச்சுவிற் றோன்றிய சர்ப்பத்தை யாப்தவாக்கியத்தாற் றிடமாய் ரச்சுவென்ற றிந்தபின்பு ஒருகாலத்திலு மதைச்சர்ப்பமென் றறியமாட்டாதவர்போல, ஸச்சிதானந்தகனமான பிரமமாகிய தன்னிடத்திற் றோன்றிய பிரபஞ்சத்தைக், குருசொன்ன சுருதி யுக்தி ஸ்வாநுபவ பலத்தாற் பிரமமாகிய தானேயென்றறிந்தபின்பு, ஒருகாலத்திலும் அதைப்பிரபஞ்சமென் றறியமாட்டார்கள்; ஆனல் விவகாரகாலத்தில் தெரிந்தவன் ரச்சுவைத்தவிர சர்ப்பம் வேறில்லை யென்றநுபவிப்பதுபோல, இவர்களும் விவகாரகாலத்தில் ஸச்சிதானந்தகனமான வானந்தக்கடலாகிய தன்னைத்தவிர ஜகம்வேறில்லையென்றே யநுபவிப்பார்கள்; இது வரியான்குணமாம்.

நினைவோடுமெறிந்து கண்டத்தில் மாலையா யலங்கரித்துக்கொண்ட ரச்சுவை, சர்ப்பமென்றாவது சர்ப்பமில்லையென்றாவது இரச்சுவென்றாவது யாதொன்று மெண்ணும லெட்புடிஸ்வபாவமாய்ச் சஞ்சரிப்பார்களோ, அப்படியே ஏகமாய் நிஷ்

களமாய் நிர்மலமாய் ஸ்வயஞ்சோதியாய் ஸச்சிதானந்தகன மான தன்னிடத்திற் பிரபஞ்சமென்றுவது பிரபஞ்சமில்லையெ ன்றுவது தானென்றுவது யாதொரு விருத்தியுமற்றுச் சஞ்ச ரிப்பார்கள்; இது வரிட்டன்குணமாம்.

இதில் வித்து வரன் வரியானென்ற இம்மூவர்களுக்கும் அகண்டாகாரவிருத்தி யென்னுஞ்சாதனமுண்டு, ஆரூடனுக்கு அந்த விருத்தியுங்கூடக்கிடையாது.

அம்மூவர்களுங்குஞ் சாதனமான அகண்டபிரமவிருத்தி யானது, ஸ்புரணபேதத்தால் வகையொன்றுக்கு நான்குவிதம் பன்னிரண்டுபேதமாகும்; அந்தஸ்புரணங்களை ஸ்வப்பிரதான மென்றும் அஸ்வப்பிரதானமென்றும் ஸமப்பிரதானமென்றும் மூன்றுவகுப்பாய்க்கூறப்படும்.

இந்தஸ்புரணங்கள் ஒவ்வொன்றும் மூன்றுபேத முடை யதாகும். அவைகளில் ஸ்வப்பிரதானமாவது நான் பிரமமே ன்ற வகண்டவிருத்தியாரூட சைதந்நியவுபாசனையில் நானெ ன்றுவிளங்கிய விருத்தியே அகண்டமா யிருப்பதாற் கடங்க லசமென்ற விவகார மெப்படியெனத் தெளிந்து, விருத்தியும் ஜடமானதால் ஞாதுரு ஞான ஞேயமற்ற ஸ்வரூபஞானமே, கடமென்றதின்பொருள் உள்ளபடி மண்ணென்பதுபோல, நா ன் பிரமமென்றதின் பொருளாக வறிந்து உபாசிக்கின்றதாம்.

அவ்விருத்தியில் உபஹிதசைதந்நியத்தை விசாரித்தறி யாமல் விருத்திமாத்திரத்தை யுபாசிக்கின்றது அஸ்வப்பிரதா னமாம்.

அவ்விருத்தியுஞ் சைதந்நியமும் ஒருக்காலும் பிரிந்தி டாது அக்கினியும் உஷ்ணமும்போலொன்றுதான்; விருத்தி காணப்படாவிடத்தி லொடுங்கி நின்றதென்றது ஸமப்பிரதான மாம்.

இதில் ஞேயத்தை யிப்படியே மூன்று விதமாயும் ஞான த்தை மூன்று விதமாயும் ஞாதாவை மூன்று விதமாயு முபாசி

க்கவேண்டும். ஞாதுரு ஞானம் ஞேய மென்பது விருத்தி யை யபேக்ஷித்ததால் விருத்தியென்பது குணத்தை யெதிரிட்டு வந்ததாற் குணங்களும் மூன்று விதமானதாலு மதுகளையு மப்படியே வுபாசிக்கவேண்டும்.

முக்திகளிற் சீவன்முக்தி யென்றும் விதேகமுக்தி யென்று மிருவகைமுக்திகளிருக்கின்றது; இவைகளில் தேகமுள்ள போது சீவன்முக்தியென்றும், அது நீங்கினகாலத்தில் விதேகமுக்தி யென்றும் விவகரிக்கப்படும்.

சீவன் முக்தர்களுக்குப் பிராரப்தமான வுடலுள்ளமட்டுந் தான் முக்தனென்கிற வகங்காரந் தனக்குள்ளே தோற்றுமானதால் இவர்களுக்குப் பிராரப்தஞ் சொல்லப்படும்.

அதிகாரியின் பேதத்தாற் றேகமுள்ளபோதே விதேகமுக்தியுங் கூடலாம் இவர்களுக்கு அஃதுள்ளபோதே பிராரப்தங்கிடையாது எதினாலென்னில் இவர்களிடத்தில் முக்தனென்றுவது பெத்தனென்றுவது தானென்றுவது பிரமமென்றுவது யாதொரு விருத்தியு மில்லாததனாலும் எக்காலத்திலும் ஸ்வயமகண்டரஸமா யிருப்பதினாலுஞ் சரிரம் நசித்தபின்பு தேகிசரியாய்ப் போவதினாலும் பிராரப்தமில்லை. உடலுடனிருக்குங் காலத்தில்மாத்திரஞ் சுகதாரதன்மிய முண்டு. இவ்விதமான முக்தர்களுக்கு விதிநிஷேதங்களை வேதங்களிற்கூறமாட்டாது; இவர்களெவ்விதமான தொழிற்செய்தாலுஞ் செய்கையுஞ் செய்விக்கையு மற்றேயிருப்பார்கள். இவ்விதமானவர்கள் ஸ்திதியெப்படியோ அப்படியே இதுவே வேதாந்தங்களின் முடிவாகும்.

மூன்றுவது பிரகரணம் முற்றிற்று.

## ௨—வது ஸர்வமதநிரூபணப் பிரகரணம்.

ஒருகுருவினிடத்தில் அப்பியாசித்த வெகுசிஷர்கள் தம் தம் அநுபவத்துக்குத் தகுந்தபடி பேதமான சாஸ்திரங்களை யுண்டுபண்ண நானுவாய் மதங்களுண்டாய் ஒன்றுக் கொன்று விவாதமுண்டாகி யாத்மநிலையை யறியாமல் ஜகத்திற் சாகங் காரிகளான மதவாதியர்கள் மதங்களை யுள்ளபடி நிரூபித்திரு ப்பதினு, விந்தசாஸ்திரத்தில் ஆத்மநிலையை யுள்ளபடி யுபதே சிக்கப் படுகின்றது சுருதிகளின் சம்மதப்பிரகாரம் யுத்தியநு பவத்துடனுங்கூட, அகண்ட ஸச்சிதானந்த பிரமமாகிய திவ் வியமங்கள தேஜோவிக்கிரகரான பரமகுரு, தாபத்திரையத் தால் தக்தனுயுள்ள சிஷ்யர்களினுற் பிரார்த்திக்கப்பட்டு உப தேசிக்கின்றார்.

வாரீர் மாணுக்கர்களே ஆத்மஞானத்தைத்தவிர வேறெ வற்றினுலுந் துக்கநிவர்த்திக்குப் பதிலுபாயமில்லாததினுல், அதுமிகவு மரிதானதால் மிகவும் வணக்கத்துடன் ஞாபகமாய்க் கேட்கவென; அப்படியே யென்றார்கள்.

ஆசிரியர் உலகத்தில் நான் என்பிள்ளை என்பெண்டு என் மாடு என்வீடு என்தனம் என்பந்து வென்றவபிமானத்தால், அவற்றின்கூடுதலாலுங் குறைதலாலு முண்டான சுகதுக்கங் களை யந்தந்தக் கூடுதல் குறைதல்களையுந் தன்னிடத்திலாரோ பித்து, நான் கெட்டுப்போனேன் நானின்றைக்குத்தான் ஜநித் தேனென்று வெகுவிதமாயுள்ள பிராந்திவாசனையால், சுடுங்க யுள்ள ஜலத்தில் அக்கினியின் சம்பந்தத்தால் ஜலத்திற்குடெ ன்றுங் குளிர்மையே ஜலத்தின் ஸ்வபாவமென்று மறியாமல் உஷ்ணமே ஜலஸ்வபாவ மென்பதுபோல், நானென்கிற தன் னையறியாமற் றுக்கமுண்டாயிற்று; ஆகையால்துக்கமான மர ணத்தைக்கொடாநின்ற சர்ப்பத்தை யெப்படித் தெரிந்தோர் நாடார்களோ, அப்படிப்போல என்னுடையதென்கிற மம

தையைவிட்டுத் தான்மாத்திரமாய்த் தனித்திருந்தால் துக்கங் கணீங்கிச் சுகக்கடலாடுவாயென.

சிஷ்யர்கள் வாரீர் எங்களை ஜநநக்கடலினின்றுங் கடத்தி ஈடேற்றவந்த பரம்பொருளே யருளியதுசரியே; ஆனாலும் மமதைநீங்கு முபாயங்கூறீரென, ஆசிரியர் ஜகமெல்லாம் நான் என்னுடையது ஆண் பெண் புண்ணியம் பாவம் சுவர்க்கம் நரகம் காரணம் காரியம் சுகம் துக்கம் ஞானம் அஞ்ஞானம் பேதம் அபேதம் ஆசாரம் அநாசாரம் ஜநநம் மரணம் பந்தம் மோக்ஷம் என்றிவ்விதமாய் விளங்குகின்றதை யுள்ளபடி பிரத்தியக்ஷவிரோதமின்றியிவ்விதமாய் விசாரிப்பிக்கின்றோம்.

நல்லது ஜகத்தில் நானென்றும் நானல்லவென்றும் என்னுடையதென்றும் விவகாரத்தில் திருசியமானகடத்தை நானென்ருவது நானல்லவென்ருவது விவகாரங் காணப்படாததனால், மானிடர் மற்றெல்லாவஸ்துக்களையு மென்னுடையதென்று தனக்கன்னியமா யநுபவிக்கப்படுவதால் அவையெல்லாம் ஆத்மாவானதானுகான்.

கடமுதலானவைக ளுடையுங்காலங்களில் தனக்குஸ்வபாவமா யாதொருகுறைதலு மில்லாததுபோல, பந்துக்கள் முதலான சகலங்களுக்கு முண்டான சுகதுக்கங்களை ஸ்வபாவமாய்த் தன்னிடத்திற் காணுததனல் அவர்களுந் ஆத்மாவானதானுகான்.

அவர்கள் கெடுங்காலத்திற் றுக்கமும் லாபகாலத்திற் சுகமு முண்டாவதினுல், அவர்கள் நாமெப்படி யாகமாட்டோமென்றால், தேசாந்திரத்தி லிருக்குங்காலத்தில் அவர்கள்சுகதுக்கங்கள் தெரியாததனுற் றுனுகானென்றேம்; ஆகையாலன்னியர்களாலே நம்முடையவ ரென்றும் அகமென்றும் விவகரிக்கப்படுமானதால், மிஞ்சினதாய் சகலங்களையும் வகுத்தறிந்த வுடலேதானுவான்.

ஆனால் உடலானதன்னிடத்திலும் நானென்றும் என்னுட ல் என்கை என்கால் என்கண் என்றும் விவகாரங் காணப்படு வதால் இதுவும் நாமாவோமாவென்றால், தேகத்திலெந்தவிட த்தில் வேதையுண்டான போதிலுஞ், சுகதுக்கங்களைத் தானே சமமாயநுபவிக்கிறதினால் உடலேதானுவான்; ஆனதாற் றன் னைத்தவிர மற்றவை துக்கங்கொடுக்கத் தக்கதென்று யோசித் தநுபவித்து அவைகளைத்தள்ளவேண்டுமெனர.

மாணாக்கன் ஆத்மாவொருவனே யவனைத்தவிர வேறில் லையென்று உபநிடதஞ் சொல்லுகிறதில் நீங்கள் மூவகையாய்ச் சொல்லுகிறதெப்படியென? ஆசிரியர் விவகாரபேதத்தால் பரமார்த்தமென்றும் அபரமார்த்தமென்றும் இருவகைப்படும்; அவற்றுள் பரமார்த்தமாவது பிரத்தியக்ஷாநுபூதியிற் பஞ்சபூ தங்களைத்தவிர வேறேயாதொரு வஸ்துவையுங் காணாததனா லும்; அவைகளே யதிஷ்டவிசேஷத்தா லங்கங்கேயொன்று கூடி யவற்றின்பேதருணமுடைய வெற்றிலை பாக்குச் சுண் ணமிவைகளின் சேர்க்கையின்சிவப்புப்போல;சேர்க்கைவிசே ஷத்தால் அறிவுஜநித்தது; அதனாற்சகல விவகாரங்களுமுண் டாயிற்று; அந்த அறிவும் அர்த்ததின மில்லாததாயும் அர்த்த தினம் பேதத்தைத் தோன்றுவிக்கிறதாயும் அப்பிரத்தியக்ஷ மாயும் நான் அவன் இவன் எனதென்ற பேதத்துடன் றுக்க ங்களைக்கொடுப்பதாயும் என்னறிவென்று வேறுபடுவதாயும் அப்பேதமான அறிவு தவிர்ந்தவிடஞ் சுகதுக்கவாதை யில்லாத தாயும் பேதமற்றபூரணமாயு மிருப்பதாலந்த அவஸ்தையேபர மாத்மா அதுவேபரமார்த்தம்; இதில் நானென்றும் எனதென் றும் விவகாரமில்லாததனால் நிர்விகாரி யதனால்நித்தியம் அவ னே தன்னிடத்திற்றோன்றிய பேதமான அறிவாலநுபவிக்கப் படுமுடலே கண்டமானதால் ஆத்மாவென்று கூறினோம்; இவ னொருவனே மோக்ஷத்தினதிகாரி.

ஆகிலும் அவன் வெகுபேதம்போய்த் றோன்றினபோதி

லும், ஆகாயத்திற்றோன்றிய சந்திரசூரியர்களுடைய இல்லாத பிரதிபிம்பம் எங்கும் வெவ்வேறாய் ஜலத்திற்றோன்றி ஜலமென்றும் பிரதிபிம்பமென்றுஞ் சூரியனென்றும் விவகரிக்கப்பட்டு ஒருஜலத்திற்றானே யெப்படி பேதந்தோன்றுகிறதோ, அப்படியேதன்னிடத்தி லில்லாதுதோன்றிய பேதஅறிவாலாத்மாவும் வெகுபேதம்போற் றோன்றுகிறான்; அவன்பரமார்த்தத்தி லாத்மாவாவான்.

மற்ற மிருக முதலானவைகளுக் காத்மாவை யுள்ளபடி விசாரிக்க யோக்கிதை யில்லாததனு லவைகளனாத்மா வாகலாம். பரமார்த்தத்திற் பஞ்சபூதங்களான ஆத்மாவைக்காட்டிலும் வேறில்லாததனல் அவற்றையும் பரமாத்மாவென்று விவகரிக்கலாம்.

அதிலாத்மாவுக்கு விவகாரத்தால்வந்த ஜாதிமுதலானவைகளைக்கூறுதல், ஆணென்றும் பெண்ணென்று மிரண்டு ஜாதிதவிர வேறில்லை. ஆனற்சாஸ்திரங்களில் அநேகஜாதியாய்ச் சொல்லுகின்றதேயெனின் எந்தஜாதியிலும் ஆண் பெண்ணிரண்டைத்தவிரப் பிரத்தியக்ஷபேத மில்லாததனு லில்லையென்றோம்.

இவைகளும் ஸ்தூலசூக்ஷ்மபேதத்தால், இப்போசொன்னது ஸ்தூலமாம். இனி சூக்ஷ்மமாவது பிந்துவென்றும் நாதமென்றுஞ் சொல்லப்படும்; ஸ்தூலத்திலுண்டானதாயும் நானாபேதத்தைத் தோற்றுவியாநின்ற அறிவும் ஆண் பெண் ஜாதிகளானசூக்ஷ்மரூப நாதபிந்துக்க ளைக்கியமாகுங் காலத்தில் நான் எனதுஜாதி யென்கின்றசகலமான பேதஅறிவும் நசித்துப் பூதபஞ்சகமான பரிபூரணமா மாத்ம ஸ்வபாவமாகவானந்தத்தைக்கொடுக்கும். சூக்ஷ்மபூம்பாவம் ஆனந்தரூபம் ஸ்தூலம் ஆனந்தஜநகம் புண்ணியமாவது அஹிம்சையாகும் பாவமாவது ஹிம்சையாகும் இகத்திலநுபவிக்கப்பட்டசுகமே ஸ்வர்க்கமாகுந் துக்கமே நரகமாகும். பிந்துநாதங்காரணம்

மற்றஜகக்காரியம் மமதாத்தியாகஞ்சுகம் மமதைதுக்கம் பர மாத்மாவை யுள்ளபடியறிவது ஞானம் அதைத்தவிர ஜகமன் னியமென்றறிகிறது அஞ்ஞானம். உலகம்வேறு பரமாத்மா வேறென்றறிகிறது பேதம் இரண்டுமொன்றுதா னென்றறி கிறது அபேதம் பூதபஞ்சகத்தின் சேர்க்கையாற்றோன்றிய அறிவால் நானென்று சரீரமாகவிளங்குவதே ஜநநம். நித்தி ரைசெய்கின்றவன் கையிலிருந்து நழுவினபுஷ்பம்போல் சேர் க்கையானது நெகிழ்ந்து நானென்கிற அறிவு நாசமேமரணம் நானென்கிற யெண்ணமே துக்கத்தைக் கொடாநின்ற மமதை க்கேதுவானதா லதுவேபந்தம் அதுவற்றதே மோக்ஷம் என் றிப்படியுபதேசிக்க; அவர்களுமப்படியே வெகுகாலம் நிஷ் டைசெய்ய அதுவே யாத்மாவென்று மந்தப்புத்தியையுடைய சிலர்கள் திர்ப்தியடைந்தார்கள்.

சிலர்கள் ஆசிரியரை விஞ்ஞாபிக்கிறார்கள் ஸ்வாமி அதிர் ஷ்டமென்பது புண்ணியவிசேஷத்தா லுண்டாகப்பட்டது அந் தப்புண்ணியம் அறிவன்றிச்சித்திக்கமாட்டாததனுல் ஜடமான பஞ்சபூதங்களுக்குஞ் சேர்க்கையெவ்விதமா யுண்டாயிற்றென் றுகேட்க, ஆசிரியர் நிஜமே அதுபிரத்தியக்ஷத்தில் ஞானேந்தி ரியத்தைத்தவிர வேறில்லாததனுலும் பூதபஞ்சகத்தின் சுபா வம் சப்த ஸ்பரிஸ ரூப ரச கந்தங்களானதால் ஞானேந்திரிய ங்கள் விளங்குங்காலத்தில் ஜகமெல்லாம் விளங்குகின்றது ஒடு ங்குங்காலத்தி லெல்லா மொடுங்குகின்றதினுல் விஸ்தாரமான ஆலமரஞ் சிறிதான தனதுபீஜத்தைத்தவிர வேறில்லாதது போல ஞானேந்திரியத்தைத்தவிர வேறேஜகமில்லாததால் அ வைகளே யாத்மாவெனப்படும்.

நல்லது அவைகள் வெகுவானதா லெல்லாங்கூடி யாத் மாவா தனித்தனியாவென, அநேக வர்ன்னபேதங்களுடைய ரந்தரங்களோடுங்கூடின லாந்தரினுள்ளெரியாநின்ற தீபம் வெ ளியிலநேகம் பிரகாசமாய்த்தோற்றியுந் தன்னிடத்தி லேப்ப

டிவிகாரமில்லையோ, அப்படியே ஒன்றுதானே அநேகம் பேர் ந் றேற்றுகின்றதென்றார். சிலர்சரியென் றிருந்தார்கள்.

சிலர்கள்கேட்கிறார்கள் பிராணனொடுங்கிய பிரேதத்தி லிந்திரியங்களைக் காணவில்லையே ஆத்மா அநித்தியமாவென; அப்படியே சகலமும் பிராணனிலுண்டாயிருந்து நசிக்கிறதா ல் அதுவேயாத்மாவென்றார். சிலரதிலே நின்றுபோனார்.

சிலர் விஞ்ஞாபனம் அநுபவத்தி லடக்கப்பட்டும் விடப் பட்டுஞ் சுழுத்தியிற் பிராணனிருந்தும் ஜடமாய்க் காண்பதா லும் பஞ்சபூதங்களுக்குள் ளொன்றாயிருப்பதாலு முன்சொ ன்ன தோஷமிதில்வாராதோவென; சொன்னதுசரியே பிராண னுடைய கமாகமங்கள் சமுச்சயசங்கற்பரூபமான மனதிற் சக லமும் விளங்குவதால் இதுவேயாத்மாவென்றார்.

சமுச்சயசங்கற்பரூபமான மனமும் உறுதியான விஞ்ஞா னமாம் புத்தியில்விளங்குவதால் அதுவேயாத்மா வாகலாமோ வென; சரிதானப்படிக் கில்லாமற்போனால் சங்கற்பமானமன ம் விஞ்ஞானத்திற்றோன்றி நசிப்பதால் அதுவும் நாசமுடைய தாகும் ஆகையால் ஆத்மாவாகத் தகாதென்றார்.

அந்த விஞ்ஞானமானபுத்தியும் என்னுடையவிஞ்ஞான மென்று மமதைக்குவித்தான அகங்காரத்திற் றோன்றிவிளங் குவதா லதினாலே மற்றவைகள் நாசமுடையதானதாலும் அக ங்காரமே ஆத்மாவாகலாமோவென்; அப்படியேயென்றார்.

சிலசீடர்கள் சுழுத்தியில் நானென்ற அகங்கார மில்லா ததினாலு மற்றயாதொன்று மில்லாததினாலுஞ் சூநியமே ஆ த்மாவாகலாமோவென; அப்படியே யாகலாமென்றார்.

பின்பு சிலசீடர்கள் ஜாக்கிரத்தில் நன்றாய்த் தூங்கினே னென்று சுழுத்தியபிமானி யொருத்தனில்லாமல் விவகாரங்கூ டாததினா, லவனாலே சகலமுஞ் சிவிப்பதினாலும் சுருதிகளிற் சொல்லப்பட்ட சுவர்க்க நரகங்களைச் செய்யப்பட்ட புண்

ண்ணியபாவங்களாலநுபவிக்க மரணத்தின்பின் சீவனைத்தவிர வேறேகதி யில்லாததினாலும் சுழுத்தியபிமானியான சீவனே ஆத்மாவாகலாமோவென; அப்படியேயென்றார்.

பின்பு சிலசிடர்கள் சீவர்களெல்லாம் அஸ்வதந்திராளாய்க் காணப்படுவதாலும் கிஞ்சிஞ்ஞர்களாயிருப்பதாலும் பிரகிருதிகளுக் கிராஜன்போல் ஸ்வதந்திரனும் சருவஞ்ஞனும் ஒரு ஈசனிருக்கலாம் அவனே பரமாத்மாவாகலாமோவென; அப்படியேயென்றார்.

சிலசிடர்கள் உபநிடதங்களிலும் யோகசாஸ்திரங்களிலுஞ் சீவர்களையும் பிரம்மாகச் சொல்லுவதாற் பின்னங்களான நதிகள் சமுத்திரத்தையடைந்து சமுத்திரமாத்திரமாய் நிற்பதுபோல், சீவர்களுங் கரணகல்விகளைவிட்டுத் துன்பமற்றுப் பரிபூரணமான பிரமத்திலடங்கி ஆனந்தமயமாயிருப்பதே உண்மையான ஆத்மநிலையாகலாமோவென; அப்படியே ஆகலாமென்றார்.

சிலசிடர்கள் அஸ்தி பாதிப்பிரியமான ஸச்சிதானந்தஸ்வபாவமாயும் அநிர்த ஜட துக்கமான நாமரூப துக்கஸ்வபாவமாயும் இருவகையாய் விளங்குவதால், ஆத்மஸ்வபாவம் ஸச்சிதானந்தம் அநாத்மாவான ஜகத்ஸ்வபாவம் அநிர்தஜடதுக்கமான நாமரூபங்களுமாகலாம், அக்கினியின் உஷ்ணப்பிரகாசங்கள்போற்பின்னகுணங்களானதால் ஆத்மாநாத்மவஸ்துக்கள் அநாத்மவஸ்துக்கள் மாயையின்விகாரம் ஆத்மவஸ்துக்கள் ஸச்சிதானந்தஸ்வபாவம் ஆகிலும் பிராந்தியா லதின்தருமங்களைத் தனக்குந் தன்தருமங்களை யதற்குமாறி வாசனையா லநுபவிக்கப்படாநின்ற சீவராசிகள் விவேகஞானத்தாற் சேதித்துத்தன்னைத்தவிர மற்றதை மறந்து தான்மாத்திரமாகவே சம்பூரண ஸச்சிதானந்த ஸ்வபாவமாயிருப்பதே சாங்கியசாஸ்திரப்படி நிஜமான ஆத்மநிலையாகலாமோவென; அப்படியேயென்றார்.

பின்பு சிலசீடர்கள் உபநிடதங்களின் முடிவையும் ஸ்வாநுபூதியையும் யுத்தியாய் நன்ருயோசிக்குங் காலத்தில், ஸச்சிதானந்த ஸ்வபாவமான பிரஞ்ஞையாம் பிரமத்தில் மாயைமுதலான சகலஜடவஸ்துக்களும் அம்புதியில் அலை குமிழ் நுரை முதலானவை ஜநித்துவிளங்கி நசித்ததுபோற் ருேன்றுகின்றதினுல், ஜலத்தைத்தவிர அலைமுதலானவைகளைப்படி வேறில்லையோ? அப்படியே பிரஞ்ஞையாம் பிரமத்தைத் தவிர வேறில்லாததினுல் பழுதையிற்ருேன்றிய சர்ப்பத்தைக் கண்டு கடிபட்டுப் பிராணனிழந்துபோவோமென்றிருக்குங்காலத்தில் உண்மையான புத்திசொல்லி யிதையறிந்து ஆச்சரியத்தோடுங்கூடி அந்தப்பழுதையைக்கண்டு கையிலெடுத்து அவர்களுக்குக்காண்பித்து அவர்களாலும்ஒப்பப்பட்டுச் சர்ப்பமென்கிற பிராந்தியைத்தள்ளிப் பழுதை மாத்திரமாயநுபவித்துச் சுகியாவதுபோல, ஜகத்பிராந்தியைத்தள்ளி பிரஞ்ஞானகனமான ஏகமாம் பிரமாநுபூதியே யெதார்த்தமான ஆத்மநிலையாகலாமோவென; அப்படியேயென்ருர்.

பின்பு சிலசீடர்கள் சுருதி யுத்தி யநுபவங்களினுல் நிர்ணயிக்கப்பட்டும் நிர்ணயிக்கப் படாமலிருக்கின்றதாயும் யாதொருகுறிப்புக் குட்படாததினுல், ஒருவிவகார மில்லாததாயுமுள்ள வஸ்துவைப் பிரஞ்ஞானகனமென்றும் ஸச்சிதானந்தமென்றும் ஏகமென்றும் விவகரிக்கக்கூடாது. அநிர்த ஜடதுக்கமான ஜகத்தை யபேக்ஷித்துவந்ததா லதுமுக்காலத்திலுமில்லாததால் அவித்தையாற் பந்தமென்றும் வித்தையால் மோக்ஷமென்றும் பிரமமென்றுஞ் சிவனென்றும் அவற்றினைக்கியமென்றுஞ் சகலவிவகாரங்களும், உதித்தசூரியனிடத்திற் றமசு எப்படியில்லையோ? அப்படியே சகலவிவகாரங்களும் ஸதோதிதஸ்வப்பிரகாசனுன பரமாத்மாவிடத்தி லில்லையென்கிற விவகாரத்தைக்கூடச் சகிக்கத்தக்கதல்ல; ஆகையா லப்படியுண்மையா யிருக்கிறதால் தேவரீரெங்கள் பேரிலருள்செய்

தி ரக்ஷிக்கவேண்டுமென; கிருபைபொருந்திய ஆசிரியர் மிகு ந்தசந்தோஷத்தை யடைந்து அப்படியேதான் இதுவேசத்தி யம் நீயேயுண்மை தெரிந்தவன் நீயேநித்தியானந்தக் கடலாம் பிரமமென்று உச்சிமோந்து ஆலிங்கனஞ்செய்து யிருவரு மி ருகண்ணாலு மானந்தபாஷ்பமா முத்தாரம்பூண்டு,புளகோல்லா சமான கவசந்தரித்து மனமுருகிப் பந்தமற்று முக்தியாங்கன் னிதனைத் தழுவிப் பிரமாநுபூதியாமுடிசூடி அசைவற்றசுக மாஞ் சிங்காசனத்தில் திவ்வியமங்கள கொலுவிருந்தார்கள்.

பின்புசில சீடர்கள் விழிதிறந்து ஆசிரியலரவணக்கத்து டன் கைகூப்பி விஞ்ஞாபிக்கை; முன்தங்களாலுபதேசிக்கப்ப ட்டும் முடிவையடையாமற் புத்தியின்பேதத்தால் அததற்கு த்தகுந்தபடி பலன்காட்டி அந்தந்தப்படியிலே நின்றுபோனார் களே! அவர்களுக்கென்னகெதி அவர்களும் இப்பதவியை ய டையவல்லவர்களா? அதில் எவர்களுக்கென்ன பெயர்கள் மத சங்கேதத்தாற்சொல்லியது, அவரவர்களுடைய அநுபூதிக ளிந்தச்சாஸ்திரத்திற்சொல்லிய எந்தெந்த அநுபூதிகளிலடக் கமாகத்தெரியும் சகலமுந் தெளிவாகக்கூறவேண்டுமென.

ஆசிரியர், அவரவர்கள் அந்தந்தப்படியில் நின்றுபோன போதிலுங் கெதியுடையவர்கள்தான், அததற்குத் தகுந்தபடி வேதத்தில் பூர்வமீமாம்சா மதத்திலிருந்தும் அந்தந்தமதத் திற் சொல்லியபடி ஆத்மாவை விசாரியாமல் கர்மாநுஷ்டா னம்பண்ணுகின்ற ஜடகர்மடர்களுக்குக்கூட கெதியொப்பப்ப டுமாகில் இவர்களுக்கு ஆத்மவிசாரணை குருமுகமாய்ச்செய்து அந்தமதத்திலுள்ளபடியநுஷ்டிக்க ஏன்கதியில்லாமற்போய் விடும்? இவர்களிகத்திற் சுகதுக்கரூபமான துன்பமற்றிருக்கி றார்கள்; ஜன்மாந்திரத்திற் பூர்வவாசனாபலத்தா லந்தந்தமத ங்களையடைந்து முன்மதாநுஷ்டான குருவாக்கியசிரத்தாபல த்தாற்கூடியமட்டும் சித்தசுத்தி யுடையவர்களாய், மேன்மேல் சாஸ்திராநுபூதி பெலாபெலங்களை யூகத்தாலுந் தகுந்தகுருக்

களையடைந்து அவர்களது கருணையினாலும் உள்ளபடி கெதியையும் உண்மையையுங் காலவிளம்பத்தின்பேரி லடையவே செய்வார்கள்.

தேகாத்மவாதியர்கள் சாருவாகரெனப்படுவார்கள் இவர்கள்மதம் அத்வைதாநுபூதியி லன்னமயகோசாநுபூதியிலடங்கியது. எப்படியெனின்; அன்னமயகோசம் பஞ்சபூதவிகாரமானதால் வியஷ்டி சமஷ்டியான சகல அன்னமயகோசங்களும் பஞ்சபூதத்தின் விகாரமானதாற் பஞ்சபூதத்தைத்தவிர வேறில்லையென்றறிந்து அதையறியாநின்ற நாம் அதாகோமென்ற சோதிதஅன்னமயகோசாநுபூதியி லடங்கிநின்றிடினும் அதற்குத் திருக்விவகாரத்தை யொப்பாத குறைச்சல் ஒன்றுமாத்திரம் பேதம்.

இந்திரியாத்மவாதியர்கள் சுகதர்களெனப்படுவார்கள்; இவர்கள் முன்சொல்லியவர்களுக்குச் சூக்குமாள்; எப்படியெனின் வியஷ்டி சமஷ்டிகளான இந்திரியங்கள் பஞ்சபூதங்களின் சத்வ ரஜோரூபமான தெளிவுகளானதாலும் அவ்விதவிந்திரியங்களும் ஜடமானதாலும் அவைகளாலறியப்பட்ட விஷயங்களில் ஞாபகம் வெகுதினத்தின்பிறகு இந்திரியங்கள் வைகல்யத்தையடைந்து அந்தவிஷயஞாபகம் நானின்னபடி யிவ்வளவு நாளைக்குமுன் அநுபவித்திருக்கிறேனென்று அநுபவத்துக்கு வருவதாலும், ஒருவனநுபவித்தது மற்றொருவனுக்குத்தெரியமாட்டாததினாலும் அந்தவிந்திரியங்களை நானென்று உண்மையாய்க் கூறக்கூடாது.

இந்திரியங்களின் சமுதாயத்தைச்சொல்லுவோமெனின்; பிரதிதினஞ் சுழுத்தியில் அவைதக்காணாததினாற் பிரத்தியக்ஷப்பிரமாணப்படிக்கு மரித்ததாகவேசொல்லவேண்டும், மரித்திடின் முந்தியஞாபகங்கூடாது; ஆகையாலதுவும் ஆத்மாவான நாமாகத்தகோமென்றதில் சரீரத்தைமேவிவிளங்காநின்ற இந்திரியங்களைத் திரிசியமாயறியாநின்ற சோதித அன்னமயகோ

சாநுபூதியில் உள்ளடங்கியதுதான்.

பிராணாத்மவாதியர்களை ஜைனர்களெனக்கூறப்படும்; இவர்களை க்ஷமணகாளென்றுந் திகம்பராளென்றுஞ்சொல்லுவார்கள். இவர்கள்கீழ்ச்சொல்லியவிருவர்களுக்குஞ் சூக்குமாளென்றும் ஸ்தூலாளென்றுங் கூறப்படுவார்கள்; எப்படியெனின் இந்திரியவாதத்திலறிவின் சாயையிருப்பதாலும் பிராணவாதத்தில் அஃதில்லாததினாலும் பிராணன் ஜடமாகிலும் இந்திரியங்கள் பிராணனிலுள்ளடங்குவதினாலும் பிராணன்விகசித்தும் ஒடுங்கியும் அதையறியாநின்ற சோதித பிராணமயகோசத்தினநுபூதியில் அவர்களநுபூதியடங்கிநிற்கும். பிராணனுடையவிகாசங்களை மேவிநின்ற நானென்ற உண்மை பிராணனுகுமானால்; தனதுலயத்தைத்தானெப்படியறிவான் ஆகையாலறியுந்தன்மை வேறிருக்கின்றதென்று அறியாத்தன்மைமாத்திரம் அவர்களிடத்திற்குற்றம்.

மனமேயாத்மாவென்ற வாதியர்கள் ஆருகதரெனப்பிரசித்தர்கள். மனமிருந்தும் நசித்தும் ஜடமானதாலும் அதையறியாநின்ற நாம் அந்தமனமாகத்தகோம்.

அப்படியே விஞ்ஞானமயகோசமும் நாமாகத்தகோம்: இந்தவிஞ்ஞானமயகோசாத்மவாதியர்களைப் பௌத்தரெனச்சொல்வார்கள்.

சுழுத்தியைச் சூனியமென்றறிந்து எல்லாஞ்சூனியமென்ற சூனியவாதியர்களை நாஸ்திகரெனப்படுவார்கள் இவர்களிடத்தில் வேண்டியசாதனஞ் சூனியத்தையறிந்த தன்னைமாத்திரஞ் சூனியமாயறியாமல் இருக்கவேண்டியது. இந்தமூவர்களநுபவமும் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயகோசாநுபூதியி லடங்கிநிற்கும்.

சுழுத்தியிற் சுழுத்தியபிமானி யொருவனில்லாமற்போனாற்சுழுத்தியெப்படிவிளங்கிடும் ஆனதால் அந்த அபிமானியே

ஆத்மாவென்றவர்களைப் பூர்வமீமாம்ஸரெனக் கூறுவார்கள் அபிமானியென்றது அபிமானத்திலடங்கியது; இரண்டுவிவகாரமுந் திருசியமானதால் அக்காலத்திலும் அபிமானமிருக்கிறதா யொப்பிடிற் காந்தம் எக்காலத்திலும் அசைவின்கர்த்திருகமுடையதா யொப்பவேண்டிவரும்: எந்தவிடத்திற் கர்த்திருத்துவதர்மங் காலபேதத்தாற் காணப்படுகின்றதோ, அந்தவிடத்தி லுபாதியைவாங்கிக்கொண்டே நிரூபிக்கப்படவேண்டும்; எங்கேகர்த்திருத்துவ தர்மங் காணப்படவில்லையோ அந்தஸ்தலத்தில் நிருபாதிகமாகவேண்டும்.

ஒருவஸ்து நிருபாதிகமென்றுஞ் சோபாதிகமென்றும் உண்மையை ஸ்வபாவமாயுடையதாகாது; ஆகிலோ பரமார்த்தவிவகாரபேதத்தா லொப்பப்படும்; ஆகையால் பரமார்த்தம் நிருபாதிகம் விவகாரம் சோபாதிகம் இந்தமதத்திற் சொல்லியசிவன் பரதந்திரனைதால் அவனை ஆத்மாவென்று கூறக்கூடாது.

சருவவல்லமையுடைய ஈசன் ஒருவனிருக்கவேண்டுமென்றொப்பிய சிவபின்ன ஈசுராஸ்தித்வாதிகள் பௌராணிகரென்று சொல்லப்படுவார்கள். உபநிடதங்களில் யாதொருவன் தானுபாசிக்கின்ற தேவதை தனக்குவேறென்று உபாசிக்கின்றானோ அவனுபாசனையின்பெருமை தெரிந்தவனல்ல அவனைப் பசுவென்றுகூறுகின்றது.

ஆகையால் வேதவிரோதங் காணப்படுவதாலுஞ் சருவகுணம் பொருந்தினவனாகிலும் ஈசன் நமதுகுணங்களை நாமெதிரிட்டுப்பார்ப்பதுபோல, அவரும் அப்படியேபார்க்கவேண்டும்; அப்பார்வையில் திரிசியமானகுணங்கள்நீங்கிச் சின்மாத்திரமாய்ச் சேஷித்திடும். நமதுகுணங்களையும் அப்படி நீக்கிடிற் சின்மாத்திரமாயே சேஷித்திடும். சித்திற்சித்தின்பேதம் ஆகாயத்தில் ஆகாயபேதம்போல ஒப்பத்தக்கதல்ல. இந்த அநுபவமும் முன்சொன்னதிலடங்கியது.

பின்னசிவேஸ்வராஐக்கியம் ஆத்மநிலையென்றவர்களைச் சேசுரசாங்கியரென்று கூறப்படும். இவர்கள் ஐக்கியத்தைய றிந்த நாம் ஐக்கியமாகோமென்றறியவேண்டும்.

நிரீஸ்வரசாங்கியர்கள் மதத்தில் பிரதானம்சத்தியம் ஸ்வதந்திரம்ஸச்சிதானந்தம் என்று அநேகரூபமான ஆத்மாக்கள் ஆத்மஞானத்தால் மாயாசம்பந்த ராகித்தியமேமோக்ஷமென்பார்கள்; அவர்கள்மதத்தில் முத்தன்பொருட்டு ஜகத்பிரதீதியில்லை ஜகமிருக்கின்றதென்கிறதும் ஆத்மாவெகுவென்கிறதும் திருஷ்டாவை முன்னிட்டாகவேண்டுவதால், அது திருசியத்தை முன்னிடத்திரியுந் திருசியப்பிரதீதியற்ற நம்மிடத்தில் அஃதெப்படிக்கூடுமென்ற விவேகமில்லாமைமாத்திரங் குற்றம்.

இப்படியே மேலான ஞானத்தாற் பிரமத்தைத்தவிர முக்காலத்திலும் ஜகமில்லையென்ற அத்வைதமுந் துவைதத்தை முன்னிட்டிருப்பதால் துவைதாத்வைதஸாக்ஷியான நாம் அத்வைதமென்றுகூடக் கூறத்தகோமென்றறியவேண்டும். இம் மூன்றுந்தற்பத த்வம்பத அசிபதாநுபூதிகளில் அடங்கிநின்றது மேலானபரமாத்வைதமென்றுகூடக் கூறத்தகாததால் உள்ளபடிதெளிவதே யுண்மையான நிலைமையாம்.

நான்காவது பிரகரணம் முற்றிற்று.



## ரு—வது பிரணவப் பிரகரணம்.

பிரணவத்தின்வரலாறு பிரணவமென்பது அகார உகார மகார மூன்றெழுத்துடையதாம். அதின்மூன்றெழுத்தும் அவயவமாகும் மூன்றுங்கூடினது அவயவியாகும்.

அவ்விதமானபிரணவம் விருத்திபேதத்தால் ஸ்தூலம் சூக்ஷ்மம் காரணம் துரியமென்று நான்குபேதமாய்ச்சொல்லி

ப்படும். இவ்விதமானபிரணவத்தில் விந்து நாதம் பரையென்கிற சூக்ஷ்மாக்ஷரங்களைச் சேர்க்க அதீதம் அதீதோதீதம் ஸன்மயம் என்றேழுவகுப்பாய்ச் சொல்லப்படும். ௪௯

இவ்விதமான பிரணவம் அவயவமான ஏழு அக்ஷரத்தின்பேரில் ஒவ்வொன்றுக்கு ஏழுபேதவீதம் (சயகூ) பேதமுடையதாகும். இதுசமஷ்டி வியஷ்டி பேதத்தால் (கூ௰அ) ப்பிரிவுடையதாகும். இதிலிரண்டு எவ்விதத்தாலும் நிரூபிக்கத் தகாததினால் அவற்றைத்தள்ளி (கூ௰சு) பேதமாய் நிரூபிக்கப்படும். இதின்முதலான அநுபவத்தின்வரலாறு. ஜாக்கிரஜாக்கிரம், ஜாக்கிரசொப்பனம், ஜாக்கிரசுழுத்தி, ஜாக்கிரதுரியம், ஜாக்கிரதுரியாதீதம், ஜாக்கிர அதீதோதீதம், ஜாக்கிரஸன்மயமென்னப்படும்.

இதின் முதலாவது ஜாக்கிரஜாக்கிரத்தைக்கூறுதல்: அயங்கட இதிஞானத்தில் இதுவென்றுங் கடமென்று மிரண்டு விருத்தி தோன்றுவதால் இதுவென்கிறஞானஞ் சமுதாயமாயிருப்பதாற் கடமென்கிற ஞானத்துக்கு முன்னமே யகத்தியமாயொப்பத்தக்கதா யிருப்பதாலும், பிரத்தியக்ஷமாயநுபவிக்கப்பட்டபோதிலும் இதுவென்கிற சமுதாயஞான்ங் குறிப்புக்கடங்கத்தக்கதல்ல; ஆகையால் அதை நிருவிகற்பமென்று சொல்லலாம், இவ்விதநிருவிகற்பமான இதுவென்கிற ஞாநுபூதியே ஜாக்கிரஜாக்கிரமாகும் இதின் அபிமானி விஸ்வவிஸ்வனுவான்.

அயங்கட இதிஞானத்தில் இதுவென்கிற விவகாரத்தை முன்னிட்டுவந்த கடஞானமானது கம்புக்கிரீவாதி மற்றுயுள்ள சவிகாரியானதாற் கடஞானநுபூதியானது முந்திய நிருவிகற்பத்துக்குப் பேதமுடையதானதால், ஜாக்கிரசொப்பனமாகும். கம்புக்கிரீவாதி மற்றுயுள்ள சவிகாரியென்பதின்பொருள் மனதைச்சார்ந்ததால் இதின் அபிமானியே விஸ்வதைஜஸனுவான்.

அயங்கட இதிஞான முண்டாகுங்காலத்தில் அவ்விதமான பார்வையாந்தொழில் கர்த்தனன்றிக்கூடாது; யூகிக்குங் காலத்தில் அவ்விதகர்த்தனுங் கண்ணைத்தவிரவேறுகாணப்படாததினுற் றொழிலாங்கரும முண்டாகவேண்டுமானுல் முன்னேகர்த்தனுங் கண்ணிடத்தி லடங்கியிருக்கத்தகும்; தொழிலாங்கரும மடங்கியிருந்தவிடம் சுழுத்தியாம். ஆகையால் அவ்விதகண்ணுன அநுபூதியே ஜாக்கிரசுழுத்தியாகும். அதினபிமானியான சைதந்நியம் விஸ்வப்பிராஞ்ஞனுவான்.

இவ்விதகடஞானங் கர்த்திருத்வத்தை முன்னிட்டிருந்தபோதிலும் வெகுதொழில்களைச் செய்யாநின்ற கர்த்தாவுக்கு எல்லாத்தொழில்களினுல்வந்த கர்த்திருத்வங்களை யுண்மையாகவே சொல்லுவோமேயாகில், ஏககர்த்திருத்வ காலத்திலவன் ஸ்வபாவமான அநேக கர்த்திருத்வ ரூபமாயுள்ள பிரதிபந்தம் ஜநித்து ஏககர்த்திருத்வஞானங் கெடுக்கப்பட்டுப்போம்; ஆகையாற் கர்த்திருத்வ அகர்த்திருத்வ ரூபமாயுள்ள எவ்விதவிவகாரங்களும் ஸாக்ஷியை முன்னிட்டே சித்திக்கக்காணப்படுவதால், அப்படியே அநுபவத்திலும் அறிந்தேனென்ற கர்த்திருத்வமென்ன அறியாமலிருந்தேனென்ற அகர்த்திருத்வமென்ன இந்த இரண்டுந் தொழிலுக்குட்பட்டதானதாற் றொழில்களை ஜடமென்று சங்கிக்கத்தகாததினுல் ஜடமாந்தொழில் அறிவான ஸாக்ஷியன்றி சித்திக்கத்திரமுடையதாகாது. ஆனதாற் கர்த்திருத்வமுடைய கண்ணுன அநுபூதியாஞ்சுழுத்தியுந் தனததிஷ்டானமான ஸாக்ஷியன்றி விளங்கமாட்டாது; அவ்விதகண்ணுன சுழுத்தியின் அதிஷ்டானமான ஸாக்ஷியநுபவமே ஜாக்கிரதுரியாவஸ்தையாகும் இதினபிமானி விஸ்வதுரியனுவான்.

இந்தக்கண்ணுன நயனேந்திரியத்தின் அதிஷ்டானமான ஸாக்ஷியன்றி நயனேந்திரியமெப்படி ஸ்வதந்திரமல்லவோ, அப்படியே சகலேந்திரியங்களும் ஸ்வதந்திரமல்ல. இவனே சக

லேந்திரியங்களுக்கும் முன்போலவே யதிஷ்டான ஸாக்ஷியா வான்; இவ்விதஸாக்ஷிதருமம் இவனுக்கு ஸ்வபாவமா அல்ல வாவென்று விசாரிக்கும்போது, இந்திரியங்கள் விவகரிக்குங் காலத்தில் ஷூகங்களற்றுப் பார்வைமுதலானவைகளுமற்றுநிர் விஷயமாயிருக்கச் சிலகாலத்திலநுபவத்துக்கு வருவதால் அப்போது தனதுமறைவுமற்று தனதுஸ்புரணமுமற்று விளங்கி நின்று பின்புபார்வைமுதலானவைகளை யெதிரிட அக்காலத் திற் றன்னிடத்தில் ஸாக்ஷிதருமத்தையறிந்து இவைகளெதிர்ப்படும் முந்தியகாலத்திற் றனது தருமத்தைச்சோதிக்கும் போது ஸாக்ஷிதருமந் திரிசியத்தை முன்னிட்டு வந்ததானதாற் றிரிசியத்தை நீங்கிநின்ற தன்னிடத்தில் ஸாக்ஷிதருமம் ஸ்வபாவமாய்ச் சாரந்தக்கதல்ல; துரியனென்ற பெயர் ஸாக்ஷிஸ்வரூபமானதால் ஸாக்ஷியென்றவிவகாரம் அவஸ்தையைப்பற்றி வந்ததால் ஸ்வபாவத்தில் தான் அவஸ்தைகளுக்குட்படாததினால் முன்சொல்லியபிரகாரம் முந்திய துரியாவஸ்தைக்கு சருவேந்திரியாதிஷ்டானமென்கிற துரியேந்திரியமான விஸ்வதுரியனும் மேலான அநுபூதி விசேஷத்தால் அவ்விதனுகான். அந்தமேலான அநுபூதியே ஜாக்கிரதுரியாதீதாவஸ்தையாம். அதினபிமானியான அதிந்திரியசைதந்நியமே விஸ்வதுரியாதீதனுவான்.

இவ்வித அநுபூதியும் அதினபிமானியும் பூர்வாவஸ்தையினுல் அதீதப்படுமாகிலும் அதிந்திரியனென்றவிவகாரம் இந்திரியத்தைச் சார்ந்துவந்ததினுல் அந்தவிவகாரமுந் திரிசியத்தை முன்னிட்டேயிருக்கின்றது. இவ்விததிரிசியத்தை முன்னிட்டுவந்த விவகாரந் திருக்கின்பூரணமகிமையாகாது. சர்ப்பமாய்த்தோன்றிய பழுதையிற் சர்ப்பமென்ற அநுபூதியென்ன பின்பு ஆப்தனுடையமொழியாற் சர்ப்பமல்ல இரஜ்ஜுவென்ற அநுபூதியென்ன இந்த இரண்டும் பரஸ்பர விரோதமுடையதானதால், உறுதியாற் பயந்தீர்ந்திருந்த போதிலும் வாசனுரூ

பமாய்ச் சிலகாலம் பயந்தோன்ற அதிதீனுகிய நம்ம யெவ் விதமாய்ச் சார்ந்ததென்றெண்ண முன்சொன்ன அநுபூதி இரண்டுக்கு முதலான. ரஜ்ஜுவென்ற அநுபூதியே இடங்கொடுக்க லாயிற்றென்றறிந்து, சர்ப்பமஃதல்ல ரஜ்ஜுதானென்ற மூன்றுவாசனையும் நீக்கி யுள்ளபடி யிருப்பதே ஸ்வபாவமாம்; இப்படியே திரிகியாபிமானியின் முதலான பிராஞ்ஞன் அவனை நிஷேதியாநின்ற துரியன் இவர்களின்பீஜமான துரியாதீதன் என்கிற அநுபூதியு முன்சொன்ன திருஷ்டாந்தப்பிரகாரஞ் சிலகாலத்தில் வாசனுரூபமான திருசியஉத்போதமாகும்; இவ் விதநிலைநீங்கி திருசியங் * தரிசனங் திருக்குதிருஷ்டா அதிஷ்டானம் நிரதிஷ்டானம் இவ்விதவிவகாரங்களற்ற எதார்த்த ஸ்திதியே உண்மையாம். இவ்விதஸ்திதியும் விவகரிக்கப்பட்டுப்போனதால் ஜாக்கிரதீதோதீதமாம் இதையபிமானித்த சைதந்நியம் விஸ்வாதீதோதீதனுவான்.

அதுவான அதுவே ஸன்மயம் அதுவான அதுவே ஸன்மயன் இதின் பயன் அவஸ்தையாய்க் கூறினபோதிலும்உண்மையாய் அவஸ்தையாகாது; அந்த சைதந்நியம் அவஸ்தாவநுகான். சங்கற்பமானமனதைச் சம்பந்தியாததாயும் இந்திரியோபாதிகளைச் சாராததாயும் நிரூபாதிக விஸ்வசைதந்நியனும் ஜாக்கிரத்தைக் கடந்தவனுயுஞ் சொப்பனத்தைச் சாராதவனும் ஒருபதார்த்தத்தின் பார்வையைவிட்டு மற்றொரு பதார்த்தத்தை நினைத்துப் பார்க்கிறதற்குள்ளாகச் சகலகேவலாவஸ்தைகள் நீங்கிய இந்திரியவியாபாரமான ஜாக்கிரத்திலுள்ளபடி தெளிவாய் விளங்குகின்ற சைதந்நியம் விஸ்வஸன்மயனுவான்.

உ-வது சொப்பனத்தையும் தைஜஸனையுங்கூறுதல்.

ஜாக்கிரத்தில் ஸ்தூலமாய் அரோபத்தின் முடிவாயும் அபவாதகாலத்தில் ஆதியாயுஞ் சோதிதேந்திரியசத்துருபனு

* தரிசன விவகாரம் திரிசியத்திலடங்கி நிற்கும்.

யும் விளங்குகின்ற விஸ்வாதிஷ்டானனை தைஜஸன் விவகார பாரமார்த்திக பேதத்தால் மனோமயனதின் அதிஷ்டானமாயு ங் கூறவேண்டுவதால் ஜாக்கிராவஸ்தைநீங்கி சொப்பனவவஸ் தையின் பிரதமபரிசுபந்தமான அநிர்வசனீயநிருவிகற்ப வாச னபீஜரூப மனோபகிதஞானம் பிரதிபலிக்க அந்த அவஸ்தை யே சொப்பனஜாக்கிரமாம் அந்தஅவஸ்தாபிமானியே தைஜ ஸவிஸ்வனுவான்.

இந்த அவஸ்தை அயமென்ற ஜாக்கிரஜாக்கிரத்துக்குஞ் சூக்குமமெப்படியாகில் தனக்கெதிரான விஷயத்தை யெதிரி ட்டுப்பார்க்க விளங்குகின்றதத்து. இதில் விஷயம் அதன்விரு த்தி பதின்வாசனரூபம்பீஜம் அதினதினபிமானம் இவ்வள வும் ஏகமானமனதினலே கூடவேண்டுவதால், எதிரிடாமலிரு க்க விஷயம் விஷயாகார மனோபகித ஞானேஸ்புரணமான சொப்பனஜாக்கிராவஸ்தையும் அதினபிமானியான தைஜஸ விஸ்வனுஞ் சூக்குமமாம்; அவ்விதஸ்புரணமே விஷயாகாரமா ய்ப் பரிணமிக்க அறிவற்றகடாதிகள்போலுள்ளடங்கிய அறிவு டையதாக அந்தவிருத்தியே சொப்பனசொப்பனமாம் அதின பிமானியான சைதந்நியமே தைஜஸதைஜஸனுவான்.

சொப்பனத்தில் விஷயாகாரஸ்புரணனந்தரம் அந்தவிஷ யமானகடத்தை அயங்கட மிதிஞானத்தால் விஷயீகரிக்க, அ தில் இஃதென்ற ஞானவிருத்தியே சொப்பனசுழூத்தியாம் அதையபிமான சைதந்நியமே சொப்பன பிராஞ்ஞனுவான்.

இவ்வித மூன்றவஸ்தையுடன்கூட சருவவிவகாரதிருசி யம்பொருந்திய சொப்பனவவஸ்தையை, அந்த அவஸ்தையிற் றனே சொப்பனமென்றறிய அந்தவிருத்தியே சொப்பனதுரி யாவஸ்தையாம் அதினபிமானியே சொப்பனதுரியனுவான்.

முந்திய அவஸ்தையிற் சுழூத்தியையும் அதன் பிராஞ்ஞ னையுங் கூறியது போலில்லாமல் இந்த அவஸ்தையில் அய

மென்ற விருத்தியையும் அதினபிமானியையும் எங்ஙனங்கூற லாமென்னில், ஆரோப அபவாதமாயுள்ள விவகாரத்தில் ஜாக்கிரசத்தைத விஷயசத்தை இரண்டும் பேதமுடையதாயுஞ் சொப்பனத்தி லபேதமுடையதாயுமிருப்பதாற் கூறலாம்.

நல்லது, சொப்பனத்திற் சொப்பனமென்ற விருத்தி யெப்படிவருமென்னில் சிலர்களிடத்தில் இஃது சொப்பனமான தா லிந்தக்கெடுதல் நம்மை பாதிக்க மாட்டாதென் றநுபவங் காணப்படுவதால் ஜாக்கிரத்திற் கடதிருஷ்டா யெப்படிக் கடமாகாமற் கடஸாக்ஷியாவானோ, அத்தன்மைபோல சொப்பனத்திற் சொப்பனதிருஷ்டாவை சொப்பனமெனக் கூறக்கூடாததினுற் சொப்பனஸாக்ஷி யெனலாம் அவனே சொப்பனதுரியனெனச் சங்கையில்லை. பிரமவித்துக்களிடத்திலோ ஜாக்கிரத்தில் ஜாக்கிரஸாக்ஷியென்ற அநுபூதிபோலவே சொப்பனத்திற் சொப்பனஸாட்சியென்ற அநுபவம் அப்பியாசபலத்தா லநுபவசித்தம்.

## ௩-வது சுழுத்தியையும் பிராஞ்ஞனையுங் கூறுதல்.

விவகாரத்தில் விழிப்பென்று சொல்லத்தகாததாயுஞ் சொப்பனமெனத்தகாததாயுந் தூக்கமெனத்தகாததாயுந் தூக்கத்திற் பிரதமவியாபகமான இந்திரியங்களின் மயக்கமே சுழுத்திஜாக்கிரமாம். அதினபிமானி பிராஞ்ஞவிஸ்வனும். அதினநுபவம் இளங்கிளைத்தண்டு ஜலத்தாழ்வால் வாட்டத்தின் றுவக்கம் எப்படியோ அப்படியாம்.

அவ்வித அஞ்ஞானபிரதமவியாபகத்தால் மயங்காநின்ற இந்திரியத்தின் மயக்கைப் பூர்த்தியாய்க்கொடாமற் சூக்ஷமமான அஞ்ஞானவியாப்தசங்கற்பதருமவிசேஷத்தால் நிருவாசனையா யிந்திரியங்களைப் பகிர்முகப்படுத்தாநின்ற விருத்தியே சுழுத்திசொப்பனமாம். இந்தவிருத்தி யபிமானியே பிராஞ்ஞதைஜஸனும். இதினநுபவம் தாபமானவெய்யிலிலாடுகின்

மேய்க்காநின்ற இடையர்கள் நின்றபடியே தடியாற் றாழ்வாய்க்கட்டையைத் தாங்கிக்கொண்டு நிர்வியாபாரனாய் ஆட்டின் விருத்தியைவிட்டு இந்திரியங்களின் சலனமுமற்றுப் பூர்த்தியான தூக்கமென்று கூறப்படாமல் ஆட்டுகளின்சலனவிசேஷசமகாலமாய் நிர்வாசனையாக இந்திரியங்களைப் பகிர்முகப்படுத்துவதுபோலாம்.

இவ்வித இரண்டுவிருத்தியினுடைய முடிவானதாயும் பிராந்தியாற் சைதந்நியத்தைச் சம்பந்தியாநின்ற விவகாரத்தாற்றோன்றிய அவித்தையா சக்தியின் பூரணவிகாசமாயுமுள்ள விருத்தியே சுழுத்தியிற் சுழுத்தியாம். இதினபிமானியே பிராஞ்ஞ பிராஞ்ஞனும். இவ்விதமானவிருத்தி யஞ்ஞானத்தின் பூரணவிகாசமானதால் இவ்விதமான விகாசமென்ற அவஸ்தை தனது சங்கோசமான சூக்ஷமஸ்திதியை அபேக்ஷித்து சித்திக்கவேண்டுவதாலவ்விதமான சூக்ஷமரூப அஞ்ஞானமேன்கிற சுழுத்திபீஜமானது, ஜாக்கிரத்தை யெதிரிடத்திரிய ஜாக்கிரத்தைச் சம்பந்தியாததாயுஞ் சுழுத்தியைநீங்க எதிரிடாநின்றுமுள்ளவிருத்தியே சுழுத்தி துரியாவஸ்தையாம். அதினபிமானியே பிராஞ்ஞதுரியனும். இதினநுபவம் அசைவற்ற ஊசிக்காந்தம் ஊசி இரண்டுமெதிர்ப்படக் காந்தத்தின் சமீபமான சந்நிதானத்தின் சம்பந்தவிசேஷத்தால் நிர்வியாபாரமான ஊசியசைய அவ்வித அசைவின்சித்தியின்பொருட்டு இவ்விதமென்று நிருணயிக்கப்படாத பூமியின் சம்பந்தத்தைவிட நீங்குதலின் பிரதமவியாபாரமதுபோலாகும்.

அஞ்ஞானம் ஜடமானதால் அதற்கும்வியாபாரங்கூடாது ஆத்மா நிர்வியாபாரியானதால் அதற்கும் வியாபாரங்கூடாது இந்த இரண்டுவஸ்துவுக்குஞ் சம்பந்தரூபமான வியாபாரமெப்படிவரலாமென திருஷ்டாந்தத்தில் காந்தம் ஊசி இரண்டையுந்தவிர சலனகாரணமுஞ் சலனவிகாரியும் வேறுகாணப்படா

ததினை லெப்படி நிச்சயிக்கப்படுகின்றதோ அவ்விதமாய் நிச்ச யிக்கப்படலாம்.

ஆனல் இலக்ஷணப்பிரமாணங்களினல் வஸ்துசித்தி க்கவேண்டுவதா லாத்மலக்ஷணங்களெவை அஞ்ஞான லக்ஷணங்களெவை? ஆத்மலக்ஷணஞ் சத்து சித்து ஆனந்தமென்று ஞானலக்ஷணம் அநிர்தம் ஜடம் துக்கம் எனப்படுகின்றன.

சத்தாவதென்ன? மூன்றவஸ்தையுஞ் சிருஷ்டி நிரு மோக்ஷம்வரையிலும் தோன்றித்தோன்றி நசிப்பக்கின்றது. ஸ்பாவங் குறைவுநிறைவற்று அழியாமல் நிற்கிறமானம் உபமா

சித்தாவதென்ன? தன்னிடத்தி லாரோபிக்கப்பட்ட ஜகங்களை அதிஷ்டானமான தானன தன்சத்தைப்பிரத்தியக்ஷம் குவித்து ஸ்வயம் விளங்கிநிற்கின்றதாம். சம்சயம் பா

ஆனந்தமாவதென்ன? எல்லோர்களுந் தன்னிடம் நிச்ச கப்பிரேமையுடையவர்களாய்க் காணப்படுவதாலாரோபிக்கப்பட்டும் பி ன சகலங்களையுஞ் சுகிப்பியாநின்றும் ஸ்வயஞ்சுகமாயிரு ன்றதாம்.

விவகாரத்திற்றேற்றியும் உண்மையிலில்லாநின்றது அநி ர்தம். விவகாரத்திலிருந்தும் அந்நிய விளங்குதலை அபேக்ஷிக் கிறது ஜடம். சம்சயவிபரீத அந்யதாவென்ற பிராந்தியை அ பேக்ஷிக்கின்றது துக்கமாம்.

நல்லது, உண்மையாமாத்மாவினிடத்திலில்லாநின்ற அநி ர்தஜடதுக்கலக்ஷணமுடைய அஞ்ஞானத்தோடும் ஆத்மசந்நி தான சம்பந்தமெப்படிக்கூடுமென்னில், பழுதையின் சம்பந் தஞ் சர்ப்பத்தினிடம்போற்கூடும்.

ஆனல், அஞ்ஞானமில்லையெனச் சொல்கின்றீரோ? ஜாக் கிராதி விவகாரத்தையொப்பி விவகாரத்தாற் சோதிக்குங்கால த்தி லில்லாததினை லில்லையென்றேம்.

அநுபவத்தாலும் வஸ்துவின்விவகாரமாயாவது அதின்

அநுபவமாயாவது பார்க்கிலோ, சசவிஷாணம்போல உண்டு இல்லையென்றுகூடச் சொல்லத்தகாது.

விருத்த அப்படியே வஸ்துவையுஞ் சொல்லக்கூடாதோ வெனி யான து சம்போல நிஷேதிக்கத்தகாது.

ஷசமகால சு-வது துரியத்தைக்கூறுதல்.

டுத்துவது ரேஷுவானவன் சற்குருவாலுபதேசிக்கப்படுங்காலத் தைகளிரண்டையுந்தள்ளிச் சுழுத்தியைச் சோதி இவ்வித நேற்றுத்தூங்கினேனென்று சொல்லுகிறாயே நீ பிராந்தியாற் எப்படித்தெரிந்தாயென? அவன் விழித்திருக்குங்கா தாற்றோன்றிய த்தியநுபூதியை யடையாம லடைந்துபார்க்கும் ள விருத்தியேன்க்குவேறுபட அவஸ்தையைப் பாராநின்றபார் பிராஞ்ஞ பிரபூதிவிருத்தியே துரியஜாக்கிரமாம். அதினபிமானி தின் பூரணவனும்.

ஸ்தை அவ்விதவநுபூதியில் ஞானமே ஞேயமான ஆணவமாய் சித்தான்றினதால் ஞானத்தைத்தவிர ஞேயம்வேறில்லையென் றது துரியசொப்பனமாம். அவ்விருத்தியினபிமானியே துரிய தைஜஸனும்.

அந்த அநுபூதியில் ஞாதாவைத்தவிர ஞானம் வேறுகா ணாததினால் அவ்விதஞாதி ரநுபூதியே துரியசுழுத்தியாம். அதினபிமானியே துரியபிராஞ்ஞனும்.

அந்த அநுபூதியில் ஞேயஞானமில்லாத ஞாதாவென்ற விவகாரம் நிரூபிக்கச்சரியாகத் தகாததினால் திரிபுடியில்லாத அதிஷ்டான சுத்தசைதந்நியமாமநுபூதியே துரியதுரியமாம். அதில் விருத்தியில்லாததினாற் றுரிய துரியனும். நிரூபிக்கக் கூடாததினால் வித்வதநுபவங்களினாலுங்கூட மௌனமேசரி.

இதற்குக்கீழாறு அவஸ்தைகளையும் மேலுள்ளா அவஸ் தைகளையும் நிரூபிக்கினும் அறியஅரிதானதாலும் அந்தரியா மியான பரமசிவத்தின் ஆஞ்ஞாபங்க பயத்தினாலும் இந்தச்சா ஸ்திரத்தில் நிரூபிக்கப்படவில்லை.

☞ இந்தச் சாஸ்திரத்திற் சொல்லிய மூன்றின அவஸ்தையின்முதலான விருத்திஞானாநுபூதியை யுள்ளபடியடைந்தாலும் அப்பொழுதே அவ்வித அநுபூதிமானைச் சுருதிகள் பிரமமெனக்கூறுகின்றன.

ஆத்மாநுபூதி சிரவணத்தை முன்னிட்டாகவேண்டுவதால் அவ்விதசிரவணம் உபநிஷத்ரூபமான வேதவேதாந்தங்களின் பொருளாக விளங்குவதால் அவ்விதவேதப்பொருளை நிருணயஞ்செய்யும்பொருட்டு பிரமாணங்களை நிரூபிக்கின்றது. அவையாவன, அநுபலப்தி பிரத்தியக்ஷம் அநுமானம் உபமானம் அருத்தாபத்தி சாப்தம் எனப்படும்.

அதுஷ்டகர ணோற்பன்னமானஞானம் பிரத்தியக்ஷம் கோடித்வயத்தை அவலம்பித்திராநின்ற ஞானம் சம்சயம் பாதிக்கப்படாநின்ற உறுதியால் நிருணயிக்கின்றஞானம் நிச்சயம். இந்நிச்சயஞானமே பிரமாணஞானம் இந்த இரண்டும் பிரத்தியக்ஷத்திலடங்கியன.

யோக்கியாநுபலப்திஞானம் அபாவத்தை யறிகின்றது. பிரத்தியக்ஷங் கடபடாதிகளான முன்னிருக்கின்ற பாவபதார்த்தங்களைக் குறிக்கின்றது. அநுமானம் பருவதத்திற்புகையைக்கண்டு அக்கினியை நிருணயிக்கின்றது. உபமானம் நாட்டிற்பசுவைப்போல காட்டிற்கவயத்தைக்கண்டு கவயமிருகமென்று நிச்சயிக்கின்றது. அருத்தாபத்திவாக்கியார்த்தத்தால் நிருணயிக்கப்பட்டபொரு ளிப்படியாகத்தகாது இவ்விதமான விரோதமதி னேரிடுவதாலென்றது. சாப்தஞ் சிரவணத்தானிருணயிக்கின்றது.

இவ்விதசாப்தம் மூன்றுவிதமாம், அவையாவன அக்ஷரம் பதம் வாக்கியம் என்பனவாம். ரம்மென்ற ஓரக்ஷத்தாலக்கினிசொல்லப்படுவதாற் சிலர்களோகாக்ஷரத்தை அருத்தபோதகமாகச்சொன்னார்கள். ராம : என்ற இரண்டெழுத்துமுதலானபதத்தால் பதார்த்தங்களைப் போதிப்பதால் அப்பதத்தை

ச்சிலர்களருந்தபோதகமாகச் சொன்னார்கள். தேவதத்தோ கட மானயதியென்ற கர்த்திரு கருமகிரியையுடைய வாக்கியத் தால்த் தேவதத்த கர்த்திருக கடகர்மக ஆனயன கிர்திமாநிதி அருத்தபோதகத்துவம் வாக்கியத்திற் கண்டிருப்பதால் வாக் கியத்தையே போதகமாகச் சொல்லப்படுகின்றது.

அவ்விதவாக்கியங் குணபூதமென்றும் பிரதானமென்று மிரண்டுபிரிவுடையதாகும் குணபூதமென்பது அவாந்திரவாக் கியம். பிரதானமென்பது மஹாவாக்கியம். சிலவிடங்களிலிர ண்டும் ஒன்றுகூடி யேகார்த்தத்தையுஞ்சொல்லும்.

அவாந்திரவாக்கியமாவது, ஸ்வயந்தன்வாக்கியாநுஷ்டா னத்தாற் பலன்கொடுக்கத்தகாது. மஹாவாக்கியமாவது இத ரவாக்கியத்தை யபேக்ஷியாமற் றானே பலன்கொடுக்க வல்ல மையுடையது.

இவ்விதமான மஹாவாக்கியம் விதியென்றும் நிஷேத மென்று மிரண்டுவிதமாய்ச் சொல்லப்படும். விதியாவது இவ் விதமாய் நடக்கவேண்டு மென்ற நியோகாதிகாரம். நிஷேதமா வது இவ்விதமாய் நடக்கக்கூடாதென்ற நியோகாதிகாரம். இ ந்த நியோகரூபமான விதிநிஷேதமிரண்டுஞ் சுகர்திரகமான சீவதிசைய்யைப்பற்றினதாற் கருமகாண்டத்தில் உபயோகப் படும்.

இந்தவிஷயத்தில் பூர்வமீமாங்கிஷர் சாசனத்தாற் சாஸ் திரமென்று சொல்லப்படுவதால் விதிநிஷேதரூபகருமநியோக மன்றி வாக்கியார்த்தம் அனர்த்தம் பொருளுடையதாகத் தகா தென்கிறார்கள்.

உத்தரமீமாங்கிஷர் எந்தஸ்தலத்திற் கருமநியோகமன்றி ப் பலன்காணவில்லையோ, அந்த இடத்தில்த்சரி எந்தவாக்கி யத்திற் கருமாபேக்ஷையன்றித்தானே பலன்கூடுமோ அவ்வி டத்திற் சமுசனுத் சமுசனத்தாற்சொல்வதால் சாஸ்திரமென் று சொல்லப்படவாம் ஆனதால் உபநிஷதங்கள் கர்த்திரு கரு

மகிமைகளை நிஷேதிப்பதாலும் அதில் அவித்தையா நிவர்த்தி ஆனந்தவாப்தி இரண்டும் மஹாபலமாய்க் காணுவதாலுங் கூடாதென்று அதைக்கண்டிக்கிறார்கள்.

வேதாந்திகள் பக்ஷத்தில் அந்தமஹாவாக்கியமானது சித்தார்த்தபோதகமென்று சொல்லப்படும். அஃதாவது முன்னுள்ளபொருளை யுள்ளபடிபோதிப்பதாம். இந்தசித்தார்த்த போதகமானவாக்கியம் லௌகிகம் வைதீகம் என்றிரண்டுவகை யுடையதாகும் *புத்திர ஃதேஜாத ஃ என்றது லௌகிகம் தத்வமசிமுதலான வாக்கியங்கள் வைதீகம்.

இந்தச்சித்தார்த்தபோதகமான வைதீகமஹாவாக்கியம் பிராப்தபிராப்திகரமென்றும் நிவிர்த்த நிவிர்த்திகரமென்றும் இரண்டுபேதமுடையதாகும். முன்னமே பிராப்தமாயிருக்கின்றதை பிராபிக்கிறது பிராப்தபிராப்திகரம் முன்னமே நிவிர்த்தமாயில்லாததாயிருக்கிறதை நிவிர்த்திப்பிக்கிறது நிவிர்த்த நிவிர்த்திகரம்.

முதலாவது நதிகடந்தவர்கள் பத்துச்சனங்கள். அவர்களிலொருவன் றன்னைநீக்கி மற்ற ஒன்பது பெயரையெண்ணி யொருத்தனைக்காணமல் நதியிற்போய்விட்டானே வென்றெண்ணி ரோதனஞ்செய்ய, அதையூகமுடைய வோராப்தன்கண்டு எண்ணினவனையுங்கூட்டிப் பத்தாவதானவன் நீயென்றது போலுபதேசம். முன்னமேசர்ப்பமில்லாததாயுள்ள பழுதையைச் சர்ப்பமில்லையென்றதுபோலுபதேசம். இவ்விதசாப்தப் பிரமாணத்தாற் சாப்தபோத முண்டாகவேண்டும் இந்த ஒரு பிரமாணந்தவிர மற்ற ஆறுபிரமாணங்களுந் திருசியார்த்தவிஷயங்களாம்.

இவ்விதசாப்தார்த்தத்தை நிருணயிக்கிறதின்பொருட்டு ஆறுலிங்கங்கள் விதிக்கப்படுகின்றது உபக்கிரமம் உபசங்கா

*புத்திர ஃதேஜாத ஃ என்றது புத்திரோத்பத்தியுடையவனைப் பார்த்து உனக்குப்புத்திர னுண்டாயிருக்கிறா னென்றது.

ரம் அப்பியாசம் அபூர்வதை பலம் அருத்தாபத்தியென்னும் வாக்கியங்களாம். சிருஷ்டிக்குமுன்னே ஸன்மாத்திரமாயிருந்ததென்றவாக்கியம் உபக்கிரமம். எவன் சிருஷ்டிக்கு முன்னிருந்தவனோ அவனாத்மா அவனே நீயென்றது உபசங்காரம். ஜகமெல்லாம் அதின்மயமென்றவாக்கியம் அப்பியாசம். முன்னில்லாத ஆரோபத்தாற்றோன்றிய நாமரூபமாறி சித்தான ஞானோதயமென்றவாக்கியம் அபூர்வம். பந்தம்விட்டுநீங்கித்தான் பிரமஸ்வரூபமாகின்ற மோக்ஷவாக்கியம் பலம். முன்னமேயருத்தாபத்தி நிரூபிக்கப்பட்டிருக்கின்றது.

இந்த ஆறுலிங்கங்களாற் சாப்தமானமஹாவாக்கியார்த்தங்களை நிருணயிக்க நான்குவேதங்களும் நான்கிலக்கங்களுடைய மஹாவாக்கியத்திலடங்கி நிற்கின்றதால், இந்த நான்கு வாக்கியங்களின் பொருளையே ஆத்மமந்திரம் லக்ஷணையாற் சொல்லுவதால், அந்த ஆத்மமந்திரத்தின் பூர்வசந்திலோபத்தாற் சோவென்றவர்ணத்திற் சகாரத்தைவிட்டு ஓகாரத்தையெடுத்துக்கொண்டு, ஹம்மென்ற இடத்தில் ஹகாரத்தைத் தள்ளி விந்துவான எழுத்தைச்சேர்த்துப், பிரணவமுண்டானதால் மற்ற சகலவேதசாஸ்திரங்களும் ஏகாக்ஷரமான பிரணவத்தி லடக்கமாய்ச் சொல்லப்படுகின்றது.

ஆகையாற் கீழே விஸ்தாரம்போலப் புலம்பிய பிரணவார்த்தத்தை எவர்களுக்குந்தெரியச் சுருக்கமாய்க்கூறுகின்றது. ஓ வென்றதின்பொருள் சிருஷ்டிக்குமுந்திய சுத்தசைதந்நியமாம். விந்துவின்பொருள் சுழுத்திக்கிமுன்னமே சித்தமாயிராநின்ற சாக்ஷியாஞ்சுத்தசைதந்நியம். இந்த இரண்டு பொருளுஞ் சோதித தற்பத த்வம் பதங்களின்பொருளானதாவிரண்டையும் ஏகமாய்ச்சேர்க்க அவற்றின் சம்பந்தமே அசிபதமாம் அதின்பொருள் பிரமசிவர்களை லக்ஷணவிருத்தியாற் கூடத்தோற்றுவிய்யாம லெக்காலமும் ஏகமாய்விளங்குகின்ற குறிப்புக்கடங்காத உண்மையெதுவோ அதுவாம்.

☞ இந்த நிலையையடைந்தே ஜனகர் முதலோர்வாழ்ந் தார்கள். அவ்வளவுமகிமையென்ன ஜனகருக்கென்னில்? அஃது கேளாய். உபதேசம் பெருங்காலமுதலெக்காலத்திலும் மூன்றுடாவனையற்றவனாயும் அதிதீரனாயு மஹாராச்சியாதிகாரஞ் செய்துஞ் சித்தானந்தனைத்தவிர அந்நியமிருக்கிறது அல்லது இல்லையென்கிற விருத்தியென்ற சரீரங்கூட இல்லாததானன உண்மையாகநின்றதினாலுங், குருவினாலிவன நிமேதாவியாயிருக்கிறான் நாம்ஞாபகமா யெப்படியுப்தேசித்து வெளிவருவோமோவென்ற சங்கையுள்ளேயிருக்கலாமெனா யாக்கியுவர்க்கர் கூட சங்கித்திருக்கலாமோவென்று சுருதியிற்சூக்ஷ்மமாய்க் காணப்படுவதாலும், அவர்மகிமையை யப்படிக்கூறுகின்றது.

சங்கை கர்த்தாவன்றிக்கரணங்கூடாது. க்ரணமன்றிக் காரியங்கூடாது அகர்த்தனாகிய விதேகமுக்தரான ஜனகரெப் படி ராச்சியாதிகாரஞ்செய்தாரென? ஓர்வேடனிராமுழுவதும் விழித்து உதயத்திற்பசியோடும் வெகுநேரமலைந்து ஓர்பக்ஷியின்பேரி லம்பெய்ய உடனேதூக்கத்தால் மயங்கி அம்பின்வியாபாரமே தெரியாமல் அவன் பூமியிற்கிடக்கினும், அந்தஅம்பு பூர்வமேறியவிசையா லெப்படி வெகுதூரங்கோணுமற்போயந்த லக்ஷயத்தைதட்பேதிக்கின்றதோ அப்படிக்கூடலாமேன.

சீவன்முக்தி விதேகமுக்தியெனவிரண்டு எவ்விதங்கூடுமென? அநுபவபேதத்தாற்கூடுமென்றது. அநுபவமொரு நிலைமையைக்குறித்திருந்தபோதிலுஞ் சாதனபேதத்தாற்சொல்லலாம்.

சீவனானன்று நான்பிரமம் ஜகமும் பிரமமென்ற அநுபவவிருத்தியுடையவனாவான் சீவன் முக்தன். அவ்வித அநுபூதிவிருத்தியு மில்லாதவனாவான் விதேகமுக்தன்.

☞ இவனுக்கு விதேகமுக்தனென்றபெயர் பிறர்கள் யுள்ள [illegible] யிட்டுவந்தது. அவனுக்கு சீவன்முக்

தனென்றபெயர் நனதகண்டாகார விருத்தியின் வாசனையால் வந்தது.

ஜனகர்முதலான சம்மியக் தரிசிகளிடத்திற் சுத்தப்பிரமத்திலெப்படி சீவன்முத்தி விதேகமுக்தி யென்ற ஒருவிவகாரமுமில்லையென்கிறதுகூட இல்லையோ, அப்படியே இல்லையொமாணக்கன் ஸ்ரீ ஆசியரிருவர்களு மானந்தக்கடலாடி நித்தியமுங்கொரானார்கள்.

பிரணவப்பிரகரணம் முற்றிற்று.



## ௬-வது சிரவணதீ சம்பிரதாயப் பிரகரணம்.

அன்னமயகோசமென்கிற ஸ்தூலசரீரம் ரத்த மாம்சாதி விகாரமானதால் ஜடமென்றறிந்து அதை நீ யென்றபிமானியாதேயென்ற ஆசிரியாலறிந்த மாணக்கன் செய்யவேண்டியதென்னவெனின், மாம்சக்கடையிற் கட்டித்தூக்கியிராநின்ற ஒருரித்தஆட்டைக் கண்ணாற்பார்த்தாலதின் அஸ்தி ரத்த மாம்சம் நரம்பு குடர் முதலானவைகளெந்த வர்ன்னமாயிருக்குமோ அப்படியே தன்னுடலின் அவயவச்சேர்கையாய் விளங்குகின்ற மாம்சாதிகளை மனக்கண்ணாற்பிரித்துப்பார்த்து இந்தச்சரீரமு மாம்சாதிகளானதா லுரித்தஆட்டைப்போலிதுவும் ஜடமென்றறிந்தநுபவித்து;மேலுமிந்த உடலில் நகமுதற் சிரசளவாயிலுள்ள அவயவங்கள் வெவ்வேறு நாமமுடையவைகளானதினால் அவற்றில் நானென்ற பெயராவது உண்மையாவது யாதொன்றையுங்காணாததினா லுடலாத்மாவில்லையென்றறிந்து, உடலைமறந்து இதைச்சலிப்பிக்கும்வஸ்து எதுவெனப்பார்த்துப் பிராணனாயிருக்குமோவென நிற்கத்தக்கது.

இவ்விதமாய்ப் பிராணாதிகோசங்களைச் சோதித்து பஞ்

சடீகோசாதீதசாக்ஷியை நாமென்றறிந்தநுபவித்து அவனையே பிரமமென்றறிய உபாயம்: அண்டாண்டகோடிகளை நினைக்க மனதில் சங்கற்பவாசனுவிசேஷத்தாற் பகிரிந்திரியப் பிரத்திய க்ஷமாய்த்தோற்றிவிளங்குவதுபோல விளங்கிநிற்க அவ்வித மனோமயமான ஜகத்தையேகாகார சத்வவிருத்தியால் வியாபித்துப்பார்க்க ஜகத்திலாகாயத்தின் வியாபகம்போல சூக்கும மானவிருத்தியின் வியாபகங்காணப்படும்.

அவ்விதவிருத்தியின் வியாபகத்தாலடங்கி விளங்குகின்ற ஜகத்தை நாமரூபங்களைத்தள்ளிப்பார்க்க, நான்கு பூதபௌதிகங்களும் ஆகாயாநுபூதிபோல அகண்டாகாரசைதந்நியவிருத்திரூபமாய் விளங்குகின்ற நாமரூபாதிவிகாரங்களற்றுச் சிதாகாயாநுபூதி தோன்றும்.

இந்த விருத்தியினின்று ஸ்வாநுபூதியைச் சோதிக்க இந்தவிருத்தியும் ஜடமானதாலிதின்சாக்ஷிஞானமே நாமென்றும், இந்தவிருத்தி ஞானத்திற் சமஷ்டிஜகந்தோன்றஉள்ளும்வெளியும் வியாபித்த பூரணமென்றும், வியஷ்டிமாத்திரத்திற்றோன்ற சாக்ஷிவிருத்தி ஞானமென்றுங், கண்டமென்றும் விளங்கிற்றென்றறியப்படும்.

இந்தப் பூரணவிருத்தியை யபிமானித்த சைதந்நியந்தவிர இந்தவிருத்தியை யபிமானித்த சைதந்நியம் வேறில்லையெனவும் அநுபவிக்கப்படும். இந்தவிருத்தியை நாமில்லையென்று தள்ளிச் சேஷித்தவஸ்துமாத்திரமாய் நிற்கவேண்டும். அப்பொழுதே உண்மைவெளியாகும்.

சகசசமாதியை அடைய விசேஷாநுபூதி நிரூபணம். விவகாரத்திற் சகல இந்திரியங்களின் விருத்திகள் பின்னபின்னங்களாய்த்தோன்றி விளங்கியிருக்கினும் பின்னபின்னமாய்த்தோன்றி விளங்குகின்ற மடகடபடாகாசங்களை யகண்டாகாய வியாபகம்போல ஏகமானசைதந்நியவிருத்தியா லிந்திரியங்களாய்ப்பிரிந்து விஷயங்களை வியாபித்தநுபவிக்குங்காலத்தில்

தனென்றபெயர் தனதகண்டாகார விருத்தியின் வாசனையால் வந்தது.

ஜனகர்முதலான சம்மியக் தரிசிகளிடத்திற் சுத்தப்பிரமத்திலெப்படி சிவன்முத்தி விதேகமுக்தி யென்ற ஒருவிவகாரமுமில்லையென்கிறதுகூட இல்லையோ, அப்படியே இல்லையெனமாணக்கன் ஸ்ரீ ஆசிரியரிருவர்களு மானந்தக்கடலாடி நித்தியமுங்களாரானார்கள்.

பிரணவப்பிரகரணம் முற்றிற்று.



## சு—வது சிரவணாதி சம்பிரதாயப் பிரகரணம்.

அன்னமயகோசமென்கிற ஸ்தூலசரீரம் ரத்த மாம்சாதி விகாரமானதால் ஜடமென்றறிந்து அதை நீ யென்றபிமானியாதேயென்ற ஆசிரியாலறிந்த மாணக்கன் செய்யவேண்டியதென்னவெனின், மாம்சக்கடையிற் கட்டித்தூக்கியிராநின்ற ஒருரித்தஆட்டைக் கண்ணாற்பார்த்தாலதின் அஸ்தி ரத்த மாம்சம் நரம்பு குடர் முதலானவைகளெந்த வர்ன்னமாயிருக்குமோ அப்படியே தன்னுடலின் அவயவச்சேர்கையாய் விளங்குகின்ற மாம்சாதிகளை மனக்கண்ணாற்பிரித்துப்பார்த்து இந்தச்சரீரமு மாம்சாதிகளானதா லுரித்தஆட்டைப்போலிதுவும் ஜடமென்றறிந்தநுபவித்து;மேலுமிந்த உடலில் நகமுதற் சிரசுவரையிலுள்ள அவயவங்கள் வெவ்வேறு நாமமுடையவைகளானதினால் அவற்றில் நானென்ற பெயராவது உண்மையாவது யாதொன்றையுங்காணாததினா லுடலாத்மாவில்லையென்றறிந்து, உடலைமறந்து இதைச்சலிப்பிக்கும்வஸ்து எதுவெனப்பார்த்துப் பிராணனலிருக்குமோவென நிற்கத்தக்கது.

இவ்விதமாய்ப் பிராணாதிகோசங்களைச் சோதித்து பஞ்

சடோகாசாதீதசாக்ஷியை நாமென்றறிந்நுபவித்து அவனையே பிரமமென்றறிய உபாயம்: அண்டாண்டகோடிகளை நினைக்க மனதில் சங்கற்பவாசனுவிசேஷத்தாற் பகிரிந்திரியப் பிரத்திய க்ஷமாய்த்தோற்றிவிளங்குவதுபோல விளங்கிநிற்க அவ்வித மனோமயமான ஜகத்தையேகாகார சத்வவிருத்தியால் வியாபி த்துப்பார்க்க ஜகத்திலாகாயத்தின் வியாபகம்போல சூக்கும மானவிருத்தியின் வியாபகங்காணப்படும்.

அவ்விதவிருத்தியின் வியாபகத்தாலடங்கி விளங்குகின்ற ஜகத்தை நாமரூபங்களைத்தள்ளிப்பார்க்க, நான்கு பூதபௌதி கங்களும் ஆகாயாநுபூதிபோல அகண்டாகாரசைதந்நியவிருத் திரூபமாய் விளங்குகின்ற நாமரூபாதிவிகாரங்களற்றுச் சிதா காயாநுபூதி தோன்றும்.

இந்த விருத்தியினின்று ஸ்வாநுபூதியைச் சோதிக்க இந்தவிருத்தியும் ஜடமானதா லிதின்சாக்ஷிஞானமே நாமெ ன்றும், இந்தவிருத்தி ஞானத்திற் சமஷ்டிஜகந்தோன்றஉள்ளு ம்வெளியும் வியாபித்த பூரணமென்றும், வியஷ்டிமாத்திரத்தி ற்றோன்ற சாக்ஷிவிருத்தி ஞானமென்றும், கண்டமென்றும் விளங்கிற்றென்றறியப்படும்.

இந்தப் பூரணவிருத்தியை யபிமானித்த சைதந்நியந்தவி ர இந்தவிருத்தியை யபிமானித்த சைதந்நியம் வேறில்லையெ னவும் அநுபவிக்கப்படும். இந்தவிருத்தியை நாமில்லையென்று தள்ளிச் சேஷித்தவஸ்துமாத்திரமாய் நிற்கவேண்டும். அப் பொழுதே உண்மைவெளியாகும்.

சகசசமாதியை அடைய விசேஷாநுபூதி நிரூபணம். வி வகாரத்திற் சகல இந்திரியங்களின் விருத்திகள் பின்னபின்ன ங்களாய்த்தோன்றி விளங்கியிருக்கினும் பின்னபின்னமாய்த் தோன்றி விளங்குகின்ற மடகடபடாகாசங்களை யகண்டாகாய வியாபகம்போல ஏகமானசைதந்நியவிருத்தியா லிந்திரியங்க ளாய்ப்பவித்து விஷயங்களை வியாபித்துப்பார்க்குங்காலத்தில்

வாசனையால் விஷயவியாபாரந்தோன்றினு மப்பார்வையி னநுபூதியிற்றோன்ற விகாரஞ்சிதாகாரமாயே விளங்கும்.

அவ்விதவிளங்குதலின்பேதஞ் சிலகாலத்திற்குணத்தில் மணிகள்போலும், அக்கினியின்சுவாலையால் வியாபிக்கப்படா நின்றகாள்வாய்ச்செங்கலின் ரேகைபோலும், உண்மையறிந்த பின்றோன்றிய கானல்ஜலம்போலுந், தோன்றியசர்ப்பம் பழுதைமாத்திரமாய்த் தோன்றுவதுபோலுஞ், சுழுத்திபோலுஞ் சின்மாத்திரமாயும் ஸன்மாத்திரமாயுங் குறிக்கக்கூடாததாயநுபவிக்கப்படும்; இஃதுசிவன் முத்திவிஷயமாம்.

இவ்வித அநுபூதி சன்மாத்திரமானபோதிலுஞ் சத்தில் சத்தையொப்பவேண்டிவரும்: அவ்விதசத்தையும்அசத்தென்னில் விளங்காது. சத்தென்னில் சத்தையெனக்கூடாது. நிர்த்தருமத்தில்த் தருமமொப்பக்கூடாது. ஒப்பிடிற்காரணம்வேண்டும். தன்னை விளங்குவிக்கத்தனது ஞாபகம் வேண்டுதல் போலென்றால் திரிசியமாய்விடத்திரியும். பின்புவஸ்துவானது சசவிஷாணமாய்விடும் ஆகையால் சத்தையென்ற ஸ்வகதபேதங்கூட இல்லாத பரமார்த்தஸ்வபாவமாக அந்நியந்தான் தானில்லையென்று யாதொருவிதத்தாலுங் குறிக்கக்கூடாநின்றதாயுஞ் சூநியமென்றும் அறியாமையென்றும் அறியுந்தன்மையென்றுஞ் சொல்லக்கூடாத உண்மையெனத்தகாத ஒப்பற்றநிலையையுடைய விதேகிகளின் விவகாரமும் அவர்களுக்கப்படியே விளங்குமென்றுகூடச் சொல்லத்தகாது.

பிரமநிஷ்டர்களின்றெளிவான நிலைமையானதை ஈசனுலர் திரிமூர்த்திகளினாலும் வேதங்களினாலு மற்றப்பிரம நிஷ்டர்களினாலும் இவ்விதமென்று மதிக்கக்கூடாது. மதிக்கப்படுமாகில் சவிசேஷமாய்விடும் நிருவிசேஷமெனக்கூடாது பிரமமோ நிருவிசேஷம்.

ஆனால் பிரமத்தையறிந்துய்ய ஞானங்கூடவேண்டுவதில்லையோ? அப்படியே ஆத்மாவை யாவரித்த அஞ்ஞானமாகிய

இருளைநீக்க உபாயமெப்படியென? எக்காலத்திலுமெங்கும் ஏகமாய்விளங்கிய ஸ்வப்பிரகாச சிதாதித்தனை யஞ்ஞானமான இருள்மறைக்க உதித்ததெப்படியோவென.

மாணுக்கன் நடுநடுங்கிச் சுகமடைந்து மனமொழிந்து வணக்கத்துடன் விண்ணப்பஞ்செய்கின்றான் தேவரீரதுகருணையினால் ஜனகசனகாதிகளு மரிதரிதெனப்புகழும் எனது உண்மைநிலையடைந்து அபயமெனும் பெருமைதனைச் சிறியேனும் பெறுமற் பெற்றேன் ஆனுலிந்த நிலையினின்று பார்க்கில் பிரமமென்பதெவ்விடமோ ஈஸ்வரனெவ்விடமோ மாயையெவ்விடமோ சிவனெவ்விடமோ முக்தியெவ்விடமோ பந்தமெவ்விடமோ ஆணவமெவ்விடமோ ஸ்வர்க்கமெவ்விடமோ நரகமெவ்விடமோ மதங்கடோறும் நின்ற கடவுள்களெவ்விடமோ வேதாந்தசித்தாந்தநிலைமைகளெவ்விடமோ யெல்லாம் வெகுவிசித்திரமாயிற்றென்று குறிப்பற்றுப்பொங்கிய சிவானந்தங் கரணகலவிகளனைத்தையும் விழுங்கியுண்ண ஆனந்தக் கண்ணீரும் ஆறுய்ப்பெருகி உள்ளங்கால்தொட்டு உச்சந்தலைவரையுடலும்புளகித்து இருகைகூப்பிக்கம்பலயமாகி உருண்டுபிரண்டு திக்கோடு திகாந்தந்தெரியாமலுடல்மறந்து ஆனந்தக்கூத்தாடி தனது சிரந்தனிலாசிரியரிருதாண்மலர்களை யெடுத்துச்சூடி யிருவருமொருவராயிந்திராதிகளும் ஜெயஜெயவெனஏகசிங்காசனதிபர்களானார்கள்.

சு-வது பிரகரணம் முற்றிற்று.



எ—வது அகங்காராதிகளைநீக்க வுபாயமுரைத்த பிரகரணம்.

தனது குணகுணங்களைத் தானே சோதிக்கவேண்டுந் தன்மை. அகங்காரமானது ஸ்தூலமென்றுஞ் சூக்ஷமமென்

றுங் காரணமென்றும் மூன்றுபேதமுடையதாம். அது லௌகிக கார்ம பாக்தா யௌக ஞானியமென்று ஐந்துபேதமுடையதாகும்.

☞ இதிலெந்தநிலைமையிலெவரிருக்கிறார்களோ அவர்கள் ஸ்தூலதாமசத்தைப் பற்றுங்காலத்தில் தன்னைப்போலெவர்களும் உலகத்திலெதார்த்த செய்கையுடையவர்களா?யில்லையென்று வாக்கினாலும் வசனிப்பார்கள். சூக்ஷமத்தைப் பற்றுங்காலத்தில் நம்மைப்போலிருப்பார்களா? வென்றெண்ணுவார்கள். காரணத்தைப் பற்றுங்காலத்தில் தங்களுக்குக்கூடத்தெரியாமற் பீஜாகாரமாய்த் தோற்றமறையும் மனதினாலுங்கூட அறியக்கூடாது; ஆயினுமிதற்கடையாளம் அந்தக்காணங்கிஞ்சித்துக்கலங்கி அது தெளிவாய்மலரும் முசமுஞ் சூக்ஷமமாயதற்குத்தகுந்த விகாரமுடையதாகும்.

தான்தடத்தனாயிருந்து அதிசூக்ஷமமான விவேகத்தால் மூன்றுவிகாரங்களையுஞ் சோதித்தாற்றெரியப்படும்.

ராசதத்தைப்பற்றினால் தானெதார்த்தனாயிருந்தாலுந் தன்னையெல்லாரும் எதார்த்தனென்றறிய வேண்டுமென்று முளைக்கும். சத்வத்திற்பற்றினால் சாஸ்திரங்களினாலும் பெரியோர்களினாலும் ஒப்பியபிரகாரம் நாமுமாய்விட்டோமென விளங்கும். பிறர்களுக்கு உபகாரமாகட்டுமென்றாகிலும் விளங்கும்.

☞ இவ்விதவாசனைகள் முளைக்கத் தகுந்தபடி யூகத்தால் நிற்குணனை தன்னிடத்திலொன்று மில்லையென்று தள்ளி நிருவிகாரியாய்த்தானிற்கிற் கற்பூரதீபமானது தானேயொடுங்கியதுபோல அகங்காரமுந் தானேநீங்கிவிடும்.

ஆசைகள்வந்தடுக்கிற் சோதிக்குமுண்மை தரித்திரானில் ஞானிகளையருள்செய்த ஈசனமக்குத் தனதாரபுத்திராதிகளையேனருள்செய்யவில்லைத் தானேயருள்செய்வானென

மூளைக்கும். தனிகளாகில் ஞானாதிகளையருள்செய்ததுபோல ஐகிகங்களையும் நமக்கருள்செய்தானென மகிழ்ந்திட மூளைக்கும் மூன்றுபேதமுடையதாகவே யாப்தகாமனாயுள்ள நமக்கிதினாலொன்றும் பிரயோசன மில்லையெனத்தள்ளத் தானே நீங்கிவிடும்.

எ-வது பிரகரணம் முற்றிற்று.



## அ—வது சம்சயநிவிர்த்திப் பிரகரணம்.

எவ்விதமான சம்சயாதிகள் வரினும் நிலையிற்றீர்வுயிற் சுலபரம். நாம்பிரமமாவோமாவெனச் சம்சயமுதிக்கில், தாணுவிற் புருஷனோவென்ற சம்சயாதிஷ்டானமான தாணுவை யுண்மையாய் ஸ்பரிசித்துப்பார்க்கில். [illegible] நிஷேதிக்க இடமன்றி யெப்படி நீங்கிவிடுமோ அப்படியே சம்சயாதிஷ்டானமான தன்னை யுண்மையாயுள்ளபடி ஸச்சிதானந்தமாகப்பார்க்கிற் றானேநீங்கிவிடும்.

சூநியவிருத்திவந்துமயக்கிடில் அந்தச்சூநியமும் நம்மால்விளங்குகின்றதா லதினதிஷ்டானமாய் விளங்குகின்ற நாமுஞ் சூநியமோவென் றநுபவத்தாற்பார்க்கிலதுவுந்தானே நீங்கிவிடும்.

நம்மையென்னமோ வொன்றுந்தெரியாமல் மயக்குகின்றதெனக் காஷவிருத்தி வரி னவ்விதமறைவையும் விளங்குவிக்கின்ற நம்மை யெவ்விதமாய் மறைத்திடுமென்றநுபவத்தாற் பார்க்கி லதுமுன்போலவே நீங்கிவிடும்.

ரச்சின்சட்பந்தத்தால் விருத்திவிகாரித்து நான் விகாரியென உய்யும்படிமூளைத்திடில் விகாரத்தை யறியாநின்ற நாமெப்படி விகாரியாவோமெனினீங்கிவிடும்.

தம்சாயும் பிரகாசமாயும் இன்னமெய்விநமாயாயினும் விருத்தியகண்டமாய்முளைத்திட இதெல்லாந் திரிசியமான்தாற் கண்டமாகும், கண்டமெல்லாம் நாமல்லவென்று நிலையினில் லாமனிற்க எல்லாவினைகளுஞ் சூரியப்பிரகாசத்தினிருள்போல்நீங்கிவிடும்.

ஞானிகளினாலும் ஞானசமுச்சய யோகிகளினாலும் அடைந்தசாதனத்தால்வந்த பலத்தின்பேதம் ஞானிகள் தன்னைப்பிரஞானகனமான பிரமமாயறிந்தநுபவிக்க இரண்டாம்வஸ்து இல்லாததினாற், றன்னைத்தவிர எக்காலத்திலு மன்னியபதார்த்தமான மனம் பந்தம் முக்தி ஞானம் ஒன்றுமில்லவே இல்லையென்று அந்தக்கரணத்தில் பூரணபலத்தையடைந்து விவகாரங்கள் செய்திடினும் ஜநநமரணங்களைக் கடந்திருப்பார்கள்.

ஞானசமுச்சயயோகியர்கள் ஓர்தன்மையாய்க் கற்பாந்தம்வரை நிஷ்டசமாதிசெய்யினும் மனம் பகிர்முகப்பட்டிடில் அக்காலத்திற் றேகநீங்கிடிற் பிரமலோகத்தையடைந்தாவது அல்லது மனிதனாக ஜநித்தாவது வெகுசித்துடையவனாய்ப் பின்புஆசிரியராலாய் சமுச்சயமில்லாத கேவலஞானத்தையடைந்து முக்தராவார்கள். கேவலஞானத்தாற் பிரிதிபந்தமில்லாத முக்தியையடையலாம். ஞான யோக சமுச்சயத்தால் முக்திபிரிதிபந்தமுடைதாகும் அஃது மத்திமாதிகாரிகளுக்குபயோகமாகும்.

அ-வது பிரகரணம் முற்றிற்று.



## கூ—வது கன்மத்திரயவாலாற்றுப் பிரகரணம்.

———:0:———

முக்தர்களுக்கு ஆகாமிய சஞ்சித பிராரப்தமென்ற மூன்றுவிதமான கர்மங்களுமில்லையென்றுஞ், சிலர்கள் பிராரப்தமாத்திர முண்டென்றும் அங்கீகரித்திருக்கிறதின்றாற்பரியம்.

ஸ்வாநுபூதிவந்ததின் பிறகு சுருதியுக்தியநுபவங்களினு லினி ஜன்மங்கிடையாதென்ற உறுதித்தன்மையினு லாகாமிய சஞ்சிதமிரண்டும் ஞானிகளுக்கில்லை. ஸ்வபாவரீதியாய்ப் பிராரப்தம் நிரூபிக்கத்தகாததாயிருந்த போதினும் பிரத்திய க்ஷமாய் விவகாரத்திற்காணப்படுவதா லுடல்நாசபரியந்தம் பி ராரப்தபோக மங்கீகரிக்கப்படுகின்றது அப்படிக்கு அங்கிகரி க்கக்கூடாதென்றும் நிஷேதிக்கப்படுகின்றது.

எப்படியெனின், மூன்றுஸ்திரீகள் ஒருபுருஷனுக்குத் தாரங்களாயிருக்க அந்தப்புருஷன் மரிக்கில் இருவர்கள் அம ங்கிலியாயிருக்கிறார்களென்றும் ஒருத்தி சுமங்கிலியாயிருக்கி ருளென்றும் எப்படிச் சொல்லக்கூடாதோ, அப்படியே ஒரு சிவனைப்பற்றி யங்கிகரித்த மூன்றுகன்மங்களில் அந்தசிவதி சைநீங்கினபின் னிரண்டுகன்மங்களைநீக்கி பிராரப்தத்தை மா த்திரம் அங்கிகரிக்கின்றது.

மேலுஞ் சுருதியிற் சகலகர்மங்களும் உண்மையையறி ந்தபின் க்ஷயித்திடுமென்ற அநுக்கிரகத்துக்கு விரோதப்பட வுஞ்செய்திடும். இப்படிப் பிரகரணத்திற் சங்கராசாரியர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

நான் பிராரப்தத்தை யொப்பியது சிஷ்யபுத்தியையபே க்ஷித்தேயன்றி எனதபேக்ஷையாய்ச் சொல்லவில்லை. ஸ்வ பாவமாய்ப் பிராரப்தமொப்பிடில் சுருதியின் அபிப்பிராயத் தை வஞ்சித்துப் போதிப்பிக்கிறவர்களாவார்கள். ஆனல் முக்தர்களுக்கு ஆகாமிய,சஞ்சித பிராரப்தங்களு மில்லையென் பதே இந்நூலின்ருற்பரியம்.

நிசம்சய சம்மியக்த ரிஷிகள்விஷயத்திற் பிராரப்தமொப் பப்படவில்லை. அவர்களிடத்திற் காணப்படுகின்றதென்ரு லோ, பழுதையிலொருவனுக்கு சர்ப்பந்தோன்றியும் பிறனுக் குத் தோன்ருவிடில் அத்தன்மைபோல.

ஆனால் உம்முடைய விவகாரத்தைப்பார்க்குங் காலத்தில் அவர்களின்பொருட்டு சாஸ்திரங்களொன்றும் பிரயோசனமில்லையோ? பரமார்த்தாநுபூதி யடையுமுன்னமே யவர்களின் பொருட்டு சகலசாஸ்திரங்களும் பிரமாணந்தான்.

நல்லது, அவர்கள் நடத்தைதபிசகிடிலோ? பிசகிடார்கள். பிசகினதைக்கண்டாலோ? பிசகினதாய்க்காணப்பட்டிடினுமவர்கள் பிசகியிரார்கள். ஆனாலவர்கள்பொருட்டு சாஸ்திரம் வியர்த்தமாய்ப் போய்விடுமா? நல்லசாணைவைத்தகத்தியைக் கரும்பாறையில் வெட்ட அதின் முனை யெப்படியோ அப்படியே.

நல்லது சுகர் ஞானோதயமானவுடன் தேகங்காணாமனீங்கியிருக்க நீரிப்படி சொல்லியதென்னையென? அஃது யோகமகிமையேயன்றி ஞானமகிமையன்றென்று சுருதிவிசாரணையில் ஸ்ரீசங்கராசாரியர்களிதைப்பற்றி முன்னமே நிருணயித்திருக்கிறார்கள்.

மேலும் வாராகோ உபநிஷத்தில் ரிபுவானவர் ஞானோதயமானபின்பு சொல்கின்றார்; இந்தச்சரீரம் ஆச்சந்திரார்க்கமிருந்தாலு மிருக்கட்டும் இப்பொழுதே போனாலும்போகட்டுமென்று சொல்லியிருக்கிறார்.

உடலானது பிறர்கள் பார்க்கக்காணாமலே போகவேண்டுமென்றால் ரச்சுஞானம் வந்தபின்பு சர்ப்பமும் நசித்திடவேண்டுமென்ற விவகாரம் வரத்திரியும் ரச்சு விலஞ்ஞானரூபமான சர்ப்பப்பிரதீதிமாத்திரம் நசிக்குமேயன்றி சர்ப்பமிருந்தாலன்றோ நசிக்கவேண்டும் ரச்சுசர்ப்பமாய்ப் பரிணமித்திடிலது சரி விவர்த்தித்திடில் அத்தன்மைபோல ஆத்மவிவர்த்தரூபமானதேகம் நசித்திடவேண்டும் பிறர்கள் பார்க்கக் காணாமலென்றது.

ஞானிகள் சித்சுரூபாளானதா லவர்கள் திருஷ்டியிலிந்த உடலுஞ் சித்தைத்தவிர வேறுபடக்காணவில்லை. ஆகையால்

ஞானேந்தயாசுத்திரம் வேதாந்த ஞானிகளுக்கு வேறொன்றும் வேண்டுவதில்லை முத்திசாதனமாக இதுவே சுருதிகளின் யுத்தியநுபவத்தோடுங்கூடின ஸ்ரீசங்கராசாரியர்களது அபிப்பிராயம் இஃதே சுருதியின் சித்தாந்தம் மற்றவைகளான விகற்பமெல்லாஞ் சுருதியின்பூர்வபக்ஷம்.

கூ-வது பிரகரணம் முற்றிற்று.



௰-வது உபாசனையின் பலனுரைத்த பிரகரணம்.

:o:

சகுணரூபமாய்ப்பத்தர்களா லடையப்படாநின்ற கைலாயாதிகளினுண்மை சாலோக்கிய சாமீப்பிய சாரூபாதிமுத்திகள் சகுணேசன்பூசை நிரந்தர மகிமாசிரவணம் அந்தப்பிரகாரம் நிரந்தரமூர்த்தியானம் இவைகளைக்கீழ்ச்சொன்னமுத்தியின்றன்மையை அடையவேண்டிப் பிராரத்திகம்வரையிற்செய்ய மனதைத்தவிர வேறேஜகமில்லாததினு லர்தந்தப்பத்திவாசனைக்குத்தகுந்தபடி சகுணவித்தியாவாசனுபலத்தாற் பரலோகாதி போகபோக்கிய சேவியசேவகாதி பேதத்தையடைந்து அந்தமனமே பலரூபமாய்விளங்குகின்றது. அந்தமனஞ்சத்வமானதால் அந்தலோகத்தைச் சத்தியமென உபசரிக்கப்படுகின்றது.

அஃது மதினதிஷ்டானசைதந்நியத்தின் அருளினலேயே சித்திக்கவேண்டும் உண்மையிலந்த முத்திகளைச் சொப்பனமெனக்கூற அரிதல்ல இகபாமிரண்டும் ஞானிகளுக்குத் தன்னைத்தவிர வேறில்லாததினு லதைப்பொய்யென்று நிஷேதிக்கவுமாட்டார்கள் மெய்யெனக்கொள்ளவுமாட்டார்கள்; சகலசாஸ்திரங்களின் தீர்க்கபயனுயுள்ள இந்தசாஸ்திரத்தி னிலைமையையடைந்தவர்கள் மயங்காமல் நித்தியமங்கள நிலைமையாய்நின்று விளங்கியிருப்பார்கள்.

ஆனால் பிராமணாள் தவிர மற்றசூத்திரர் முதலானசாதிகளுக்கு ஞானங்கூடாதென்றதின் பயனென்னவெனின், சாதனங்களின்பேரில் ஞானத்தையடைந்திருக்கிற சூத்திராதி விஷயமல்ல. விதுரர் சூத்திரஜன்மமான நாலவருக்கு ஞானத்தை நிஷேதிக்கக்கூடாததினாலவர் பூர்விய ஜன்மத்திற் றருமராஜாவாயிருந்து சாபத்தாற் சூத்திரரானார். சூத்திரராயிருந்து எவர்களுக்கு ஞானமுண்டாயிற்றோ அவர்கள் பூர்விய ஜன்மாந்திரத்திற் பிராமணராயிருந்திருப்பார்களென்றறிய வேண்டியது.

சூத்திரருக்கு வேதத்திலும் அக்கினிஹோத்திராதி கன்மங்களிலும், உபநிஷத்தின் மார்க்கமாய் வேதாந்த விசாரணையிலுமாத்திரம் அதிகாரமில்லையே அன்றிப் பத்தியோகஞானங்களிலதிகாரமுண்டென்பதற்கு சம்சயமில்லை. அவர்களுக்கு திராவிடாதிபாஷைகளினாற் றாராளமாய்க் கிழ்ச்சொல்லியமார்க்கங்களிலதிகாரங்கிடைக்கும்; ஆகையாற் சகலமுஞ் சுருதியின் பயன்பிரகாரஞ் சங்கராசாரியர்களபிப்பிராயமுமிப்படியே.

௰-வது பிரகரணம் முற்றிற்று.



௰௧—வது சத்தியாசத்திய வரலாற்றுப் பிரகரணம்.

:o:

சத்தியமாவது பரமார்த்தமென்றும் அபரமார்த்தமென்றுமிரண்டுவிதமாம். அகண்ட ஸச்சிதானந்த நிற்குணப் பிரமம் பரமார்த்தம். சகுணப்பிரமம் மாயாசம்பந்தப்பட்டதால் அபரமார்த்தம் அபரமார்த்தமென்றால் வியாவகாரிகமெனப்படும். இந்த விவகாரசத்தை யநேகம் பேதமுடையதாகும்.

சுத்திரசிதமானது சசவிஷாணத்தைப் பார்க்கினுஞ் சத்தியம். சுத்திரசிதமானது கடத்தை யபேக்ஷித்து அசத்தியம். கடம் ரசிதத்தை யபேக்ஷித்துச் சத்தியம். பஞ்சபூதங்களை யபேக்ஷித்துப் பாஞ்ச பௌதிகங்கள் அசத்தியம். பாஞ்சபௌதிகங்களை யபேக்ஷித்துப் பஞ்சபூதங்கள் சத்தியம். இவ்வித பூதபௌதிகங்களை விளங்குவிக்காநின்ற ஜாக்கிரத்தை யபேக்ஷித்துச் சொப்பனம் அசத்தியம். அதையபேக்ஷித்து ஜாக்கிரஞ் சத்தியம். பௌத்தர்கள் மதத்திற் புத்திசத்தைத்தவிர ஜகத்சத்தையொப்பக்கூடாததினால், சொப்பனத்தை யபேக்ஷித்து ஜாக்கிரம் அசத்தியம் தார்க்கிகர்கள்மதத்திற் சொப்பனம் ஸ்மிருதிரூபமானதாலும் ஜாக்கிர ஜகம் வஸ்து சித்தமானதாலும் ஜாக்கிரஞ் சத்தியம் சொப்பனம் அசத்தியம். உத்தரமீமாம்சர் மதத்தில் ஜகமும் விவர்த்தமானதால் ஜாக்கிரந் தீர்க்க காலமுடையதால் தார்க்காலிகசத்தியஞ் சொப்பனங் கிஞ்சித்காலமுடையதால் அசத்தியமெனப்பட்டிடினும் அந்தச் சொப்பனமுந் தார்க்காலிகசத்தியமுடையதே. இந்த இரண்டவஸ்தையையும் அபேக்ஷித்து அஞ்ஞானம் விவர்த்தகமானதாற் சத்தியமெனப்படும். அஞ்ஞானத்தை யபேக்ஷித்து மாயை அவயவியானதாற் சத்தியமெனப்படும். இந்த அவித்தையான அஞ்ஞானமு மாயையு முபாதியானதால் உபாதேயமென்ற சைதந்நிய முபாதியை யபேக்ஷித்துச் சத்தியமெனப்படும். அவ்வித சைதந்நியஞ் சீவேசனென்றிருவகையாகத் தோற்றுவதால் ஈசசைதந்நியத்தை யபேக்ஷித்துச் சீவசைதந்நியம் அசத்தியமெனப்படும். ஈசசைதந்நியஞ் சத்தியமெனப்படும். நிருபாதிக சைதந்நியத்தை யபேக்ஷித்து சருவமும் அசத்தியமெனப்படும். நிருபாதிக சைதந்நியமே சத்தியமெனப்படும். பரமார்த்தத்தில் நிருபாதிக சைதந்நியத்தைத்தவிர வேறில்லாததினால் ரச்சுவிற்றோன்றியு மறைந்துந் தோன்றுமலுமிருந்த பிரதீதிரூபமான சர்ப்பமெப்படி ரச்சுமாத்திரமாய்ச்சத்தியமாமோ, அப்படியே சக

லமும் நிருபாதிக சைதந்நியமாத்திரமாய்ச் சத்தியமாம் இருவகையாகச் சத்தியத்தைப் பேதிக்கக் காரணமாய் நின்றஉபாதியென்றும் உபாதேயமென்றும் விளங்கிய வஸ்துவினிலக்ஷணம், உபாதியாவது இல்லாமலிருக்கையி லிருக்கிறதாகத் தோற்றுகின்றதாம் அஃதாவது, ரச்சுவிற் படமுதலான சர்ப்போபாதியானது இல்லாமற்போனாலுஞ் சர்பாநுபூதியாற் சர்ப்போதியை ஒப்பவேண்டும். அந்த உபாதியையு மனனத்தாற் பார்க்க ரச்சுவின் விசேஷாகார ஞானுபாவமென நிருணயிக்கப்படுகின்றதுபோல, ஜாக்கிரஞ் சொப்பனத்திலுஞ் சொப்பனஞ் சுழுத்தியிலுமா யடங்கத் திருசியப்பிரதீதி யில்லாததினாற் திருசியமற்ற திருக்குமாத்திரயாய் நின்றவிடத்தில் மனோதீதமாயுள்ள அநுபூதியை மனமறியாமல் திருசியமற்ற திருக்கில் திரிசியாஞான மாரோபிக்கப்பட அவ்வித அஞ்ஞானமே சாமாநியாகாரம். அதின் ஞானமே சாமாநியாகாரஞானம் அதுவே சிவோபாதி.

இதினபிப்பிராயம் உள்ளபடி திருசியா திருசியத்தைத் அறியாநின்ற அறிவு தான்மாத்திரமாய் நிற்க அதினிடத்திற் திருசியரகித திருக்கினுண்மையை மனமறியாமல் தனது ஸ்வபாவமான அறியாமையினால் ஜடரூபமான § ஞானபிரதியோகியை யாரோபிக்கின்றது.

சுருக்கம், விருத்தி ஞானுபவம் நிருபாதிக சைதந்நியத்தின் சாமாநியாகாரம். ஞாதிரு ஞானம் ஞேயமற்ற ஸ்வரூபஞானமாத்திரம் விசேஷாகாரம் இந்த இரண்டின் ஞானமும் உபாதேயாதிஷ்டான ஞானங்களென்ற இரண்டு பேதத்துக்கு முபாதியாகலாம். உபாதேயமாவது * இதரவியாவர்த்தகமாம். அஃதாவது ரச்சுவின் சாமாநியாகார ஞானமான

---

§ ஞானப்பிரதியோகி என்றது, அஞ்ஞானம் திரிசியம்.

* இதரவியாவர்த்தகமென்றது தனக்கந்நியமாயமேக வஸ்துகளை விலக்குவிக்குந்தன்மை.

ஆவரணோபாதியிற்றோன்றிய உபாதேயரூபமான சர்ப்பம், பயம், விஷாதம், விஷம் மாறுதிகளை விளங்குவிக்கின்றதுபோலவாம்.

விவரணமுதலான வேதாந்த சாஸ்திரங்களிற் றேகாகங்காரமானது சுத்திரசிதம்போலல்ல. சத்தியமென்று காணப்படுகின்றது. அச்சத்தியமும் விவகார சத்தியங்களுக்குளடங்கியது.

விருத்திநிருணயம்:—ஒருகடந்திருசியமாய்த் தோன்ற அக்கடத்தில் விருத்திகளைச் சோதிக்கும் விபரம் கடம் வெகு பூமியின் ரேணுக்களானதாலவ்வித ரேணுக்களே ஒன்றுகூடி கடமாய்த்தோன்றவேண்டுமானால் அவ்விதரேணுக்கள் ஜலசம்பந்தத்துடன் கூடவேண்டும். ஜலசம்பந்தத்தாலும் நெகிழ்தல் ரேணுவைச்சார அவ்விதரேணுவும் நெகிழ்தலுடையதாகும். இறுகாமற் கடமாகத்தக்கதல்ல இறுகுதல் அக்கினியன்றிக்கூடாது அக்கினி அசைவன்றி ஜலத்தைவற்றச்செய்யாது அவ்வித அசைவு இடமன்றிப்பவியாது இவ்விதமாகிற் கடத்தை பிருதிவியின்ரேணுவாய்ப்பார்த்தவுடன் அதற்குச்சேர்க்கையாய் விளங்கியபசைரூபமான ஜலரேணுக்களை அநுபவபலத்தாலறிந்து அதில்நெகிழ்சலை யிறுகுவிக்கும் வல்லமையான சோஷணசக்தியுடைய தகனரூப அக்கினியின்ரேணுக்களை அநுபவித்து அவ்வக்கினிரேணுக்களின் தகனவியாபார ரூபசலனத்தை வாயுரேணுக்களாகவறிந்து அவ்வித ரேணுக்களின் சலனுதாரமாய் ஆகாயத்தையுமநுபவயுக்திவல்லமைகளால் விஷயீகரிக்க பஞ்சபூதங்களின் ஸமுதாயமானகடம் கடாகாரமாயும் அவ்வாகாரத்திலுள்ளடங்கிய ஆகாரமும் நான்கு பஞ்சபூதங்களின்ரேணுக்களும் அந்தந்தக் குணங்களோடும் வெறுவேறாகத்தோன்றும், அப்படித்தோன்றிய பூதங்களை அநுபவபலத்தால் நிருணயித்து அவைகளில் வகைந்கைத்துவிதம் உள்ள பூதப்பிரிவு இருபத்தைந்தையும்

அறிய அப்பூதங்களாகவேவிளங்கும் இதற்குவரலாறு, திருசிய மாய் ஆகாயந்தோன்ற அத்திருசியாகாயந்திருக்காய்நிற்க அப் பார்வையில்விளங்கிய ஆகாயம்பார்வையோடுங்கூட எண்ண த்திலடங்க அவ்வெண்ணம் லயித்துநிற்க அவ்வாகாயமெண் ணத்தின் சூநியமாத்திரமாய் நிற்க சூநியமான ஆகாயம் சூ நியத்தன்மையோடும் நிர்விஷயத்தன்மையை அடையஸம மாய்விடும். ஸமஞ்சடத்தன்மையுடையதால் சித்திலடங் கிச் சித்தாய்விளங்கும். விவர்த்திக்குங்காலத்திலுமப்படியே கிரமமாய்உற்பவிக்கும் ஆனதாலப்படியே மற்ற நான்குபூதங்க ளுமொடுங்கி உற்பவிக்கும் அக்காரணசுபாவத்தை அக்காரி யங்களிலிருப்பதால் உள்ளபடி அறியவேண்டும் இப்படி அறிய பிருதிவிசித்தாய்ப் பார்வையில்விளங்க அதின் சேர்க்கையின் பொருட்டு நெகிழ்தலானஜலம் பிரயோசனமில்லாமல் நிராதா ரமாய்ப்பவித்துச் சின்மாத்திரமாய்ச்சேஷிக்கும். அப்படியே மற்றமூன்றுந் தன்தன் குணங்களோடுங்காரணமான சித்பூத ங்களாய்ச் சேஷிக்கக்கடமுஞ் சித்தாகவேவிளங்கிடும், அந்த சிதாகாரகடத்தில்தக்கபட நியாயமாய்ப் பூதாம்சம் (௨௫) வ கையாயும் சப்தாதிமாத்திரை (௭௫) பேதமாயுமதிசூக்ஷமமா ய் விருத்தியில் விளங்கும்; அப்படியே ஒரு விஷயவிருத்தி யில் (௮) விருத்தியடங்கி நிற்பதுபோல பிரணவப்பிரகரணத் தில் சொல்லிய(௧௬)விருத்தியிலுமதிசூக்குமமாய் (௮-௮)விரு த்தியிருக்கிறது. அதெப்படியெனின்? விருத்தியென்று லந்தக் கரணத்தின் றெளிவானதால் அந்த அந்தக்கரணம் பஞ்சபூத ங்களின்றெளிவாகையா லுரைக்கப்பட்டது. முன்சொல்லிய (௧௬) விருத்திகளும் ஆவரண அத்தியாச ஆரோப அபவாத மென்னும் நான்குவிருத்திகளையுமுள்ளுடையவைகள். ஆக (௮-க்கு௮) (௬௪) விருத்திகளாயிற்று. இவைகள் ஸாத்திய ங்கள் இவைகளினத்துவாநுபூதிக்குத்தக்கபடி சாதனமான நான்கும் மூன்றுசாதனம் (௩) ஆகவும் ஒரு சாதனம்(௧).

ஆகவும்பவித்து ஆக (சூா) ஆயிற்று. சிரவணமே மனனம் மனனமே நிதித்தியாசமானதா லந்தந்த விருத்தியநுபூதிக்குத் தகுந்தபடி அச்சிரவண ரூபமான நிதித்தியாசமும் (ா) விருத்தியாயிற்று ஆக சாதனவிருத்தி (து) ஸாத்தியவிருத்தி (யது)மாம். இதைப்பெருக்க கோடிவிருத்தியாயிற்று. அக்கோடிவிருத்தியிலும் சிருஷ்டி ஸ்திதி சங்கார திரோதான அநுக்கிரக சக்திகளைந்தையும் சிவசக்தி அபின்னமாயுள்ள விமர்சினிரூபமானவியாபினி சக்திஸ்புரணத்தையும் அவ்வவற்றிற்குத்தகுந்த வியாபகமுடையதாகையா லந்த ஆறையுமீவுகொடுக்க (சூ) கோடி விருத்திகளாயிற்று. இவ்வளவுவிருத்திகளும் விகாரமானதால் நிர்விகாரியினிடத்திலுண்டாக யிடமில்லையாதலால், ஒரு விருத்திகளினுதவியின்றி ஸ்வயம் நிருவிகாரியாய் விளங்குகின்றனுனே ஆத்மா அப்படியே விளங்கிட ஸஹஜஸ்திதி அநுபவத்துக்குவரும். இவ்வறுகோடிவிருத்திகளையே திருவாசகத்தி லாறுகோடி மாயாசக்திகளெனக்கூறியது. இவ்விருத்தி சோதனைப்பிரகாரமநுபூதி ஸஹஜஸ்திதியை அருள்செய்யும். இதின்பொருள் ஸஹஜஸமாதி அப்பியாசரூபம் ஸஹஜாவஸ்தை ஸாத்தியரூபம். ஸஹஜஸ்திதி சாத்தியாசாதனவிநிற்முக்தம் அப்படியேவாராகவுபநிஷத்திலிந்த ஸ்திதியை ரிபுமகாரிஷிமிகவும் அரிதரிதெனத்துதித்தார். இந்நிலைமையுடையவன் பிரமமுமல்ல சிவனுமல்ல ஐக்கியரூபனுமல்ல, அவனெப்படியோ அப்படியெனவுங்கூடச் சொல்லத்தகாதெனவும், உரைக்கத்தக்கதல்ல.

குணகுண நிருணயம், சற்குணமென்றும் துற்குணமென்று மிரண்டு பேதமுடையதாகும். குணமென்பது பரமார்த்த ஸ்வபாவம், வியாவகாரிகம் சச்சிதானந்தம். வியாவகாரிகம் வெகுவிதம், சத்து சித்து ஆனந்தமென்ற மூன்றுஞ்

சகுணப் பிரமத்தின் அபேதகுணம். சத்துவம், ரஜசு, தமசு, இந்த மூன்றும் சகுணப்பிரமத்தின் பேதகுணம். இந்தக்குணங்களீசனைச்சார்ந்தால்† பூச்யங்களாகும். ஈசனது அம்சமான சீவனைச்சார்ந்தால் பூச்யா பூச்யங்களாகும். நல்லது பொல்லாததான சகல குணங்களுந் தனது காரணமான ஸச்சிதானந்தத்தைத்தவிர வேறில்லாததினாலும் ஈசனும் ஈசனது குணங்களையும் அன்றிச், சீவனுஞ்சீவனது குணங்களும் வேறாகக் காணப்படாததினாலுங் குணரூபமாயாவது சித்ரூபமாயாவது எந்தவஸ்துவி னடத்தையையும் பார்த்துப் பிரமவிலாசத்தின் மகிமையென்று மகிழ்கின்றதே பூஷணமான நற்குணமாம். மற்றக் குணங்களைப் பகுத்துப் பார்க்கிறது துற்குணமாம். இதுவுங் கீழ்ச்சொல்லியபடி பரமார்த்த விவகாரங்களை யபேக்ஷித்தது.

ஹிம்சை அஹிம்சையின் நிருணயம் பரமார்த்த விவகாரபேதத்தா லிரண்டு பிரிவுடையது. ௧-வது பரமார்த்தத்தில் திருசியா திருசியமற்ற ஸ்வரூபமே அஹிம்சை. ௨-வது திருசியா திருசியமற்ற ஸ்வரூபமான நம்மைத்தவிர வேறில்லையெனச் சேவித்து அகண்ட போதாநுபூதியான நிருவிகற்ப * தாதாத்மியாநுபூதியானது விவகாரத்திற் பரமார்த்த அஹிம்சை பரமார்த்தத்தில் ஹிம்சை. ௩-வது பிரமமான தன்னை யசம்சாரியென்றறியாமற் சம்சாரியெனக் கொள்கை ஹிம்சை. உள்ளபடி யசம்சாரியெனக்கொள்கை அஹிம்சை ௪-வது வேதங்களால் விதிக்கப்பட்ட யாகவிஷயக பசுபந்தம் புண்ணியரூபமென்றெண்ணியநடத்தை அஹிம்சை வேதத்தாற் சொல்லப்பட்டிடினும் பாபந்தானென்றெண்ணிய நடத்தை ஹிம்சை. ௫ வது அரசர்களுக்குத் துஷ்டர்களைச்

---

† பூச்சியங்கள் உபசரிக்கத்தக்கவை

* தாதாத்மியமென்றது தானதுவாயிருத்தல்

சேதிக்கின்றது அஹிம்சை. அவர்களைச் சேதியாமலிருக் கின்றது ஹிம்சை. ௬-வது பிறர்களுக்குத் துக்கத்தையுண் டுபண்ணுகிறது ஹிம்சை. சந்தோஷத்தை யுண்டுபண்ணு கிறது அஹிம்சை. ஹிம்சா ஹிம்ஸைகளெல்லாம் ஈசனது சத்திவிலாசமகிமையென் றறிந்து சீவஸ்வதந்தரத்தைப் பா ராமலிருக்கவேண்டியது.

௰௧-வது பிரகரணம் முற்றிற்று.



## ௰௨—வது பாத்திராபாத்திர விவேகமுரைத்த பிரகரணம்.

தானாதிகளின்பொருட்டுப் பாத்திராபாத்திர விவேகம். பரம்பரைவேத வேதியர்கள் (௧) பின்பு ஸ்வயம் (௨) ஸ்வய மும் வேதவேதியர்கள் (௩) சாம்பவவேதவேதியர்கள் (௪) யோகியர்கள் (௫) ஞானியர்கள் (௬) இவர்கள் உத்தரோத்தர முத்தமமாம். இவ்விதபாத்திரங்கள் பிராந்தியால் அசிட்டர் கள் சிட்டர்கள்போலவுஞ் சிட்டர்க ளசிட்டர்கள்போலவுக் தோன்றப்படலாம் ஆளதாலதமமெனப்படும்.

எங்கும் இடைவிடாநிறைவுடைய பரமசிவ புத்தியாய்த் தானஞ்செய்கின்றதே உத்தமம். நிச்சயம் பேதிக்கக் கார ணமில்லாததினாலுத்தம பாத்திரமவனெனப்படும்.

பிராயச்சித்தவரலாறு கன்மிகளுக்குப் பஞ்சமகாபாதகங் கள் ஞானகிருதமில்லாவிடில் துவாத சம்வத்சரம் மானாபிமா னமின்றித் தான்செய்த பாதகத்தைக் கபடமின்றிப் பச்சாதா பத்தோடுங்கூட உச்சமாய் சகலர்களுக்குந்தெரியச்சொல்லிப் பிச்சாடனத்தா லர்த்தக்கிராசியாய்சீவிக்கத்தக்கது; அப்படி

சக்தியில்லாவிடின் சேதுவாதி ஸ்நானம் விதியாகவேண்டும். அவிவேகிகளாயிருந்து ஷெ பாபம் ஞாபகத்தோடு செய்திடிற் பச்சாதாபத்துடன் சந்நியாசங் கிரஹித்து உபவாசாதிகளி னாற் பிராண விசர்ச்சனஞ் செய்யவேண்டியது. மனம் விவே கோபகாராநுகூலமாகில் ஆத்மவிசாரணை செய்யவேண்டும் பிராணத்தியாகஞ்செய்யக்கூடாது. பக்தர்களாகிற் பரமேஸ் வர நாமரூபாதி ஜபலிங்கார்ச்சனை ஆலயவாசாதி தீவிரமாய்ச் செய்யவேண்டும். யோகிகளாகிற் பிராணாயாமாதி தாரணை செய்யவேண்டும். தியாநிகளாகி லிதயகமலத்தில் மூர்த்தி தி யானஞ்செய்யவேண்டும். அதிற் காரண பஞ்சமூர்த்திகளுக் கும் ஹிருஸ்வதீர்க்க காலபேதமாய்ச் செய்யவேண்டியது. நிற்குணபாவனை உண்மையாய்ச்செய்ய ஒருக்ஷணத்தில் மூன் செய்த அனைத்தும் நீங்கிவிடும். ஞானஞ்ஞானகிருதங்களான சகலபாவங்களும் ஆசிரியரது பணிவிடையுடன் அவர் முக மாய் சிரவணஞ்செய்ய ஒரு வருஷத்தில் நீங்கிவிடும். ஆகை யாற் சகல பாபங்களுக்கும் உத்தம பிராயச்சித்தம். விவேகி களுக்குக் குருமுகமா யபரோக்ஷ சாப்த பிரம விஞ்ஞானமே யாகும். ஆசிரியர்முகமாயடைந்த அபரோக்ஷ பிரம விஞ் ஞானிகளுக்கோ தன்னைத்தவிர வேறே புண்ணியபாவாதிகள் அவர்களநுபவத்திற்காணப்படாததினாற் பிராயச்சித்தவார்த் தையே கிடையாது.

ஸ்துதி நிந்தா நிருணயம்:— வஸ்து ஸ்வபாவ ஸ்திதியே ஸ்துதி, வஸ்து ஸ்வபாவாவஸ்தையே நிந்தை. பிறருடையவும் தன்னுடையவும் அந்தக்கரண தேகேந்திரியாதி ஜடஸ்வபாவ ங்களையிட்டுவந்த ஸ்துதி நிந்தை இரண்டும் நிந்தையெனப்ப டும். எல்லாம் அதுதின் ஸ்வபாவமென்றறிகின்றது ஸ்துதி யெனப்படும்.

சிவசக்தி சமரசம்:— எந்தவஸ்துக்களும் விருத்தியாலே

விளங்கவேண்டுவதா லந்தந்த வஸ்துக்களை விளங்கிப்பிக்கின்ற விருத்தியே சக்தியாம். அந்த விருத்தியையும், அவ்விருத்தியின் விஷயங்களையும் சிவேசரூபமாய் மேவாமல் மேவிய சைதந்நியஞ் சிவமாம்.

விஷயங்களை விருத்திநீக்க விருத்தியும் நிராலம்பமாய் நீங்கிவிடும். விருத்திநீங்கிடில் சிவேசபேதம் நீங்கிவிடும். சிவேசபேதம் நீங்கிடி லெல்லாம் நீங்கிவிடும். எல்லாம் நீங்கினவிடஞ் சிவமாம். அச்சிவமுந் தன்னைத்தானெதிரிடச் சக்தியெனப்படும்.

சுருக்கம். சத்துசிவம், சித்துசக்தி. சத்துச் சித்தென்றவுபாதிமித்தையாம் ‡இராகுசிரசின் உபாதிபோல சிவத்தைத் தவிரச் சக்திவேறில்லை. சக்தியைத்தவிரச் சிவம்வேறில்லை. சிவசக்திபேதங் கற்பிதம் இந்தப்பேதங்கிடையாது இதுவே சிவசக்தியினுடைய சமரசம், சமரசமே யானந்தம். ஆனந்தமென்னின் முக்காலத்திலு மிரண்டாம் வஸ்துவையெதிரிடாத உண்மை. இப்படியென்று உள்ளபடி நிலையை அடைய அவர்களையே பரமசிவமெனக் கூறப்படுகின்றது.

௰உ-வது பிரகரணம் முற்றிற்று.



---

‡இராகு சிரசென்றது, இராகுவைத்தவிர சிரசு வேறில்லை சிரசைத்தவிர இராகு வேறில்லை.

## ௰௩—வது பந்தமுக்திகளின் விபரமுரைந்த பிரகரணம்.

பந்தமுக்தியின் முன்னிட்டுவந்த சித்ஜடக்கிரந்தி. அதின் சித்தியின்பொருட்டொப்பிய அத்தியாசம். அத்தியாசத்தால் நேரிட்ட ஆரோப அபவாதம். இவற்றின் பயனுய்த் தெளிந்த யெதார்த்த உண்மை. இவைகளின் நிரூபணவரலாறு.

சுழுத்தியில் அறியுந்தன்மை அறியாத்தன்மை இவ்விரண்டுவகையு மில்லாத ஸ்வபாவமான நிலையைவிட்டு விழிக்கச் சிதாபாசன் விவகாரத்தால் நான் தூங்கினேனென்று காணப் படுவதில், ஒன்றுந்தெரியாமையான சுழுத்தியிற்கண்ட அறியாமையான ஆவரணம் பந்தமெனப்படும்.

அவ்வித அஞ்ஞானமான பந்தத்தை விவகரியாநின்ற சிதாபாசனிடத்திற்கண்ட விவகாராநுபூதியைச் சோதிக்க, மேற்கூறிய அஞ்ஞானமான பந்தம் இல்லையென்று உள்ளபடி தெளிவதே முக்தியெனப்படும்.

மேற்கண்ட சிதாபாச விவகாராநுபூதியைச் சோதிக்குந் தன்மை யேதெனில், சிதாபாசனுவது கண்ணாடியிற் பிரதிவிம்பித்தமுகம்போல விருத்தியிற் பிரதிவிம்பித்த சைதந்நியஞ்சிதாபாசனும். அவனது ஸ்வபாவம் விருத்தியைச்சார்ந்ததால் சுட்டியறியுந் தன்மை யுடையவனுவான். சுழுத்தியிற் சுட்டியறியுந்தன்மை யில்லாததினுல் அவ்வித அவஸ்தையிற் சிதாபாச னில்லாதவனுவான்.

ஆனுல் தானில்லாத இடத்திலுள்ள அநுபூதியைத் தானுக்க எவ்விதம் வல்லமையுடையவனுவான்? அவனுக்கு வல்லமையில்லாவிடின் மேற்கண்ட அவஸ்தையினநுபூதியை விவகரிக்க சிதாபாசனுக் குதவிசெய்யும்பொருட்டு அவ்வித அவஸ்தாநுபூதியுடையவ னெருத்த னிருக்கவேண்டும்.

ஒன்றுந்தெரியாமையான கீழ்ச்சொல்லிய அஞ்ஞானமான பந்தம் அவனையே சாரத்தக்கது. அவ்விதமானவனைச் சுருதியிலும் அநுபூதியிலும் பிராஞ்ஞனைத்தவிர வேறெகாணவில்லை பிராஞ்ஞனென்பதின் பொருள் (பிரகர்ஷேன அஞ்ஞன் பிராஞ்ஞன்) கிரமமாய் விவகாரத்திற்கண்டபடி அறியாமையான அஞ்ஞானம் எந்த அநுபூதியி லெவனைச்சார்ந்ததோ அவனெனப்படும்.

மேற்கூறிய சிதாபாசனது விவகாரத்தைச் சோதிக்குங்காலத்தில் பிராஞ்ஞனுடைய விவகாரத்திற்கண்ட அறியாமையான அஞ்ஞானம் பிராஞ்ஞனைச் சார்ந்ததால், விருத்தி பிரதிவிம்பிதனான சிதாபாசனுக்கு கண்ணாடியிற் பிரதிவிம்பியாநின்ற பிரதிவிம்பத்துக்கு முகம் விம்பமானதுபோல், பிராஞ்ஞாநுபூதி விவகாரத்திற்கண்ட பிராஞ்ஞன் விம்பஸ்தானமாவான்.

☞ இவ்விதமான பிராஞ்ஞனையும் பிராஞ்ஞோபாதியான ஒன்றுந் தெரியாமையான அஞ்ஞானத்தையும் உள்ளபடி தெளிவித்தல். சுழுத்தியநுபூதியிற்கண்ட ஒன்றுந் தெரியாமையாம் அஞ்ஞானம் உண்மையாய்ப் பிராஞ்ஞனைச்சார்ந்திருக்குமாகில், மேற்சொல்லிய அநுபூதியிலிருந்த வராலாறையுஞ் சுவாநுபூதி முதலானவைகளையும் பார்வையில் வல்லமையில்லாத சுயஞ் ஜெடனான தான் அவ்வவஸ்தையிற்கண்ட அநுபூதிஞானத்தைச் சிதாபாசனுக் கெவ்விதமாய்த் தெரிய உதவி செய்வான்.

பிராஞ்ஞனிடத்திற்கண்ட அநுபூதியைச் சோதிக்குங்கால் சிதாபாசவிவகாராநுபூதியாற் றேன்றிய நானென்றும் ஒன்றுந்தெரியாமையென்றும் சுகமாய்த் தூங்கினேனென்றுமுள்ள விவகாரங்கள் அக்காலத்திற் பிராஞ்ஞனிடத்திற் காண

௰௬—வது பந்தமுக்திகளின் விபரமுரைந்த பிரகரணம்.

பந்தமுக்தியி ன்முன்னிட்டுவந்த சித்ஜடக்கிரந்தி. அதின் சித்தியின்பொருட்டொப்பிய அத்தியாசம். அத்தியாசத்தால் நேரிட்ட ஆரோப அபவாதம். இவற்றின் பயனாய்த் தெளிந்த யெதார்த்த உண்மை. இவைகளின் நிரூபணவரலாறு.

சுழுத்தியி லறியுந்தன்மை அறியாத்தன்மை இவ்விரண் டுவகையு மில்லாத ஸ்வபாவமான நிலையைவிட்டு விழிக்கச் சிதாபாசன் விவகாரத்தால் நான் தூங்கினேனென்று காணப் படுவதில், ஒன்றுந்தெரியாமையான சுழுத்தியிற்கண்ட அறி யாமையான ஆவரணம் பந்தமெனப்படும்.

அவ்வித அஞ்ஞானமான பந்தத்தை விவகரியாநின்ற சிதாபாசனிடத்திற்கண்ட விவகாராநுபூதியைச் சோதிக்க, மேற்கூறிய அஞ்ஞானமான பந்தம் இல்லையென்று உள்ளபடி தெளிவதே முக்தியெனப்படும்.

மேற்கண்ட சிதாபாச விவகாராநுபூதியைச் சோதிக்குந் தன்மை யேதெனில், சிதாபாசனாவது கண்ணாடியிற் பிரதி விம்பித்தமுகம்போல விருத்தியிற் பிரதிவிம்பித்த சைதந்நி யஞ்சிதாபாசனாம். அவனது ஸ்வபாவம் விருத்தியைச்சார்ந் ததால் சுட்டியறியுந் தன்மை யுடையவனாவான். சுழுத்தி யிற் சுட்டியறியுந்தன்மை யில்லாததினால் அவ்வித அவஸ்தை யிற் சிதாபாச னில்லாதவனாவான்.

ஆனால் தானில்லாத இடத்திலுள்ள அநுபூதியைத் தா னாக்க எவ்விதம் வல்லமையுடையவனாவான்? அவனுக் கு வல்லமையில்லாவிடின் மேற்கண்ட அவஸ்தையினநுபூதி யை விவகரிக்க சிதாபாசனுக் குதவிசெய்யும்பொருட்டு அவ் வித அவஸ்தாநுபூதியுடையவ னொருத்த னிருக்கவேண்டும்

ஒன்றுந்தெரியாமையான கிழ்ச்சொல்லிய அஞ்ஞானமான பந்தம் அவனையே சாரத்தக்கது. அவ்விதமானவனைச் சுருதியினும் அநுபூதியிலும் பிராஞ்ஞனைத்தவிர வேறெனாவில்லை பிராஞ்ஞனென்பதின் பொருள் (பிரகர்ஷேன அஞ்ஞன் பிராஞ்ஞன்) கிரமமாய் விவகாரத்திற்கண்டபடி அறியாமையான அஞ்ஞானம் எங்கு அநுபூதியி லெவனைச்சார்ந்ததோ அவனெனப்படும்.

மேற்கூறிய சிதாபாசனது விவகாரத்தைச் சோதிக்குங்காலத்தில் பிராஞ்ஞனுடைய விவகாரத்திற்கண்ட அறியாமையான அஞ்ஞானம் பிராஞ்ஞனைச் சார்ந்ததால், விருத்தி பிரதிவிம்பிதனான சிதாபாசனுக்கு கண்ணாடியிற் பிரதிவிம்பியாநின்ற பிரதிவிம்பத்துக்கு முகம் விம்பமானதுபோல், பிராஞ்ஞாநுபூதி விவகாரத்திற்கண்ட பிராஞ்ஞன் விம்பஸ்தானமாவான்.

☞ இவ்விதமான பிராஞ்ஞனையும் பிராஞ்ஞோபாதியான ஒன்றுந் தெரியாமையான அஞ்ஞானத்தையும் உள்ளபடி தெளிவித்தல். சுழுத்தியநுபூதியிற்கண்ட ஒன்றுந் தெரியாமையாம் அஞ்ஞானம் உண்மையாய்ப் பிராஞ்ஞனைச்சார்ந்திருக்குமாகில், மேற்சொல்லிய அநுபூதியிலிருந்த வாலாறையுஞ் சுவாநுபூதி முதலானவைகளையும் பார்வையில் வல்லமையில்லாத சுயஞ் ஜெடனான தான் அவ்வவஸ்தையிற்கண்ட அநுபூதிஞானத்தைச் சிதாபாசனுக் கெவ்விதமாய்த் தெரிய உதவி செய்வான்.

பிராஞ்ஞனிடத்திற்கண்ட அநுபூதியைச் சோதிக்குங்கால் சிதாபாசவிவகாராநுபூதியாற் றோன்றிய நானென்றும் ஒன்றுந்தெரியாமையென்றும் சுகமாய்த் தூங்கினேனென்றுமுள்ள விவகாரங்கள் அக்காலத்திற் பிராஞ்ஞனிடத்திற் காண

ப்படாததினல் எவனெவனிடத்தில் எந்தெந்த விகாராநுபூதி காணப்பட்டதோ அந்தந்த விகாராநுபூதிகள் அவனவனையே சாரத்தகும். இங்ஙனமாயில் பிராஞ்ஞனிடத்திற் சுட்டியறி யுந்தன்மை யில்லாததினல் அவனைச் சுயஞ்சித்தெனக்கூற லாம். அவனிருக்குமிடம் அவனுனஉண்மையானதால், நிர் விகாரியாவான். அவ்வித நிருவிகாரியான சுத்தசித்தை முற் கூறிய விகாரங்களுள்ள பிராஞ்ஞனெனக் கூறக்கூடாது.

சிதாபாசனது விவகாரத்தால் நேரிட்ட அஞ்ஞானத் தா னில்லாத இடத்திற் கண்டதுபோற் சொல்லிய விகாரங்கள், தனது விகாரங்களானதாற் சிதாபாசனையே சாரத்தகும். ஆ கையாற் சுத்தமாம் விம்பங் கண்ணுடியிற் பிரதிவிம்பிக்கக் கண்ணுடியின் மலத்தாற்றோன்றிய பிரதிவிம்பத்தின் விகாரம் விம்பத்தைச் சாரத்தகாததுபோல விருத்திமலத்தாற்றோன் றிய சிதாபாசனிடத்திற் கண்ட விகாரங்கள் சுத்தசித்தான விம்பத்தைச்சார வல்லமையுடையவையாகாது.

சிதாபாசனது சுபாவம் பேதத்தன்மையானதால் அப் பேதம் அஞ்ஞானத்தை முன்னிட்டுச் சித்திக்கவேண்டுவ தால் அந்த அஞ்ஞானம் பிரதிவிம்பரூப சிதாபாச விம்பமான பிராஞ்ஞனைச் சார்ந்திடிற் பந்தமாகும். அவ்வித பந்தத்தை யுடையவன் பெத்தனுவான்.

சிரவணமனன நிதித்தியாசன சமாதிபெலத்தால் ஒன் றுந்தெரியாமையான அஞ்ஞானம் விவகாராநுபூதியினுள்ள படி பிராஞ்ஞனில்லாவிடிற் சார உபகாரப்படாது. பிராஞ்ஞ னில்லாததன்மையாற் அஞ்ஞானபந்தமானது சார உபகாரப் படாததால் வந்தியாபுத்திர பந்தம்போலெனக் கூறப்படும்.

☞ இங்ஙனங் கூறியபிரகாரம் மேற்கண்ட சிரவண

மனன நிதித்தியாசன சமாதிபெலத்தாற் சுத்தசித்தாம் விம்ப மான தன்னிடத்தில் அஞ்ஞானமாம் பிராஞ்ஞ சீவவுபாதி இல்லையென்று அதிஷ்டானமாகத்தெளிய பிரதிவிம்பரூபமான சிதாபாச சீவிக்கையாம் பிராஞ்ஞன் முக்காலத்திலுங் காணப் படாவிடிற் பழுதையிற்றோன்றிய சர்ப்பம் அதின் விஷம் அதனுலுண்டாகிய பயம் மரணம் அதைப்பற்றிவந்த மந்திர சாமர்த்தியம் இவ்வளவும் அதிஷ்டான ரச்சுவின் ஞானத்தால் வியர்த்தமாய்விடுவதுபோல், பிராஞ்ஞனும் சீவன் அவனுபா தியாம் அஞ்ஞானம் அவன் பிரதிவிம்பமான சிதாபாசன் அவன் விவகாரத்திற்கண்ட ஆண்மைமுதலான விகாரங்கள் இவ்வளவையும் வியர்த்தமெனத்தெளிந்து உள்ளபடி அதிஷ் டானமான தானுய் விளங்குவதே முக்தியெனக் கூறப்படும்.

சிதாபாசன் விவகாரத்தாற் றோன்றியதுதான் பந்தம்; அதை நீக்கவந்த முக்தியுஞ் சிதாபாச விவகாரத்தாற் றோன் றியதுதான். இதில் நிரூபிக்கப்பட்டவுண்மையை ஆக்ஷே பவிசேஷத்தா லுறுதிப்படுத்தும் விவரம். எவன் பெத்த னே, அவனே முக்தனுகவேண்டும். சுருதி யுக்தி அநுபவங் களினுல் வந்த பந்த மோக்ஷங்கூடஸ்தனைச் சார்ந்ததா, அல்லது சிதாபாசனைச்சார்ந்ததா? கூடஸ்தனைச் சார்ந்ததென் ருல் ஒரு கொப்பத்தில் மதயானைவிழ ஒரு *மசகத்தால் விடுதலையாக்கத் தகாததுபோல ஸ்வப்பிரகாசமான கூடஸ் தனைப் பந்தமாங் கொப்பத்தினின்றும் அப்பிரகாசனுன சிதா பாசன் நீக்கத்தகான்.

சிதாபாசனைச் சாரத்தக்கதெனில்? சிதாபாசனுனவன் பிரதிவிம்பனுனதினுல், பிரதிவிம்போபாதி நீங்கினவிடம் விம் பமானதால், விம்பயான இருப்பே முக்தியெனப்படுவதா லவ்

* மசகமென்றது கொசுகு

விரமான முக்தி திசையிற் சிதாபாசனில்லாத தன்மையுடையவனுகின்றான். ஒருத்தன் புண்ணியஞ்செய்ய அந்தப்புண்ணியபலத்தை அகர்த்தனான அந்நியன் போக்தாவென்றது போலாகும். ஒருவன் கட்டுப்பட அந்நியன் விடுதலையாய்விட்டானெனத்திரியும்.

ஆகையாற் பந்தமெவனைச் சார்ந்திருந்ததோ, அவனே முக்திதிசையி லிருக்கவேண்டுமென்று ஆக்ஷேபம்வரச் சமதானம் கூறப்படுகின்றது. பந்தமானது கூடஸ்தனையுஞ்சார்ந்ததல்ல சிதாபாசனையுஞ் சார்ந்த தல்ல, கீழ்ச்சொல்லியபிரகரணத்திலும் பஞ்சதசப்பிரகரணமுதலான சாஸ்திரங்களிலும், பந்தஞ் சிதாபாசனைச்சார்ந்ததென்றதின் விபரம், சீவன் பாரமார்த்திகவிவகாரபேதத்தா லிரண்டுவிதமாய்க் கூறப்படுவான். க-வது கூடஸ்தன். உவது சிதாபாசனுவன். இந்தச்சிதாபாசனென்பவன் வியாவகாரிகனானதாலவன் விவகாரத்திற் கண்டபடி பாரமார்த்திகனென்றும் வியாவகாரிகனென்றும் இரண்டு பிரிவுடையவனுவான்.

☞ இவ்விதசிதாபாசன் விவகாரத்தால்த்தோன்றப்பட்ட மேற்பிரகாணத்திற்கூறிய பிராஞ்ஞனே பரமார்த்திகனுவான். முற்கூறியவிசேஷங்களால் உள்ளபடிதெளிய அவனேநிராவரண அதிஷ்டான சுபாவமாயிருப்பதால், முக்திதிசையிலு முள்ளவனுவான். அவனே சிதாபாசனது விவகாரத்தால் ஆவரணமுடைய பிராஞ்ஞன்போற் றோன்றுவதால், பந்ததிசையிலு முள்ளவனுவான்.

☞ இந்தப் பந்தமுக்தி இரண்டும் விருத்திரூபமானதால் நிற்விருத்திகனான பிராஞ்ஞனை உண்மையாய்ச் சாராதகாது. அவ்விரண்டுஞ் சிதாபாசன் விவகாரத்திற் காணப்படுவதால், சிதாபாசனிடத்திலுதித்த அஞ்ஞானமாம் பந்தவிருத்தியை நீக்க ஞானமெனுமுக்தி விருத்தியைச் சிதாபாச னிடமாய்க் கூறியது.

கைவல்லியத்தில், இந்த அபிப்பிராயஞ் சொல்லாமற் சொல்லப்பட்டிருக்கின்றது. எப்படியெனின், ஸ்வரூபஞா னம் அஞ்ஞானத்தைச் சுடாது. விருத்திஞானமே அஞ் ஞானத்தைச் சுடுமென்ற அந்தச் சாஸ்திரத்தின் அபிப்பிரா யம், ஸ்வரூபத்தி லஞ்ஞானமில்லாததினு லஞ்ஞானஞ் சுடப் படாதென்றும், விழித்தபின் விருத்தியிடமாய்ச் சிதாபாசனி டத்தி லஞ்ஞானந்தோன்றியதா லந்த அஞ்ஞானத்தைச் சுட விருத்தியிடமாய்ச் சிதாபாசனுக்கு ஸ்வரூபஞானம் வேண்டு மென்றுங் கூறப்படுதலாம்.

சித் ஜடக்கிரந்தியாவதென்ன? சுழுத்தியில் ஸ்வபாவ மாய்நின்ற சுத்த சைதந்நியமாங் கூடஸ்தனையுள்ளபடி பகுத் தறியாமல் விழித்தபின் சிதாபாசன் விவகாரத்திற்கண்ட ஒன் றுந் தெரியாமையாம் அஞ்ஞானம் ஜடமாம். அவ்வித ஜட மான அஞ்ஞானம் அந்தக்கரண விருத்தியைச் சார்ந்ததால், அவ்வந்தக்கரண விருத்தியைச்சார்ந்த அஞ்ஞானமாம் ஜடஸ் வபாவத்தை அந்தக்கரணத்தின் ஸ்வபாவமென்றறியாமல், கூடஸ்தனிடமா யாரோபித்துக் கூடஸ்தசுபாவமான ஞானத் தைஜடமெனக்கொள்ள, சித்துஜடமாயும் ஜடஞ்சித்தாயுஞ் சிதாபாசனுற்பிரிக்கப்படாத முடிச்சைப்போல ஐக்கியப்பட அந்தக்கரணத்தின் அறியாமை அகங்காரம் சுகம் துக்க முத லான விகாரங்களை அகாரணமாய்ச் சிதாபாசனுஞ் சித்தைச் சாரத்திரியச் சுழுத்தியுந்தி யநுபவங்களிலிருந்துங்கூட சிதா பாசன் விவகாரத்திற் கண்டபடி பிராஞ்ஞனென்னுஞ் சிவ தத்துவத்தை நிரூபித்தது.

காணகலவிகளோய்ந்த இடமான அதிஷ்டானத்தின் ஸ் வபாவமான ஸ்திதியை ஸ்வரூப ஞானமாத்திரமா யிருந்த தென்றறியாமல், சிதாபாசன் அந்தக்கரணத்தின் அறியாமை யாம் அஞ்ஞானத்தை யதிஷ்டான சைதந்நியத்தி லாரோபிக்க

விரமான முக்தி நிசையிற் சிதாபாசனில்லாத தன்மையுடையவனாகின்றான். ஒருத்தன் புண்ணியஞ்செய்ய அந்தப்புண்ணியபலத்தை அகர்த்தனான அந்நியன் போக்தாவென்றது போலாகும். ஒருவன் கட்டுப்பட அந்நியன் விடுதலையாய்விட்டானெனத்திரியும்.

ஆகையாற் பந்தமெவனைச் சார்ந்திருந்ததோ, அவனே முக்திநிசையி லிருக்கவேண்டுமென்று ஆக்ஷேபம்வரச் சமாதானம் கூறப்படுகின்றது. பந்தமானது கூடஸ்தனையுஞ்சார்ந்ததல்ல சிதாபாசனையுஞ் சார்ந்ததல்ல, கீழ்ச்சொல்லியபிரகரணத்திலும் பஞ்சதசப்பிரகரணமுதலான சாஸ்திரங்களிலும், பந்தஞ் சிதாபாசனைச்சார்ந்ததென்றதின் விபரம், சீவன் பாரமார்த்திகவிவகாரபேதத்தா லிரண்டுவிதமாய்க் கூறப்படுவான். க-வது கூடஸ்தன். உவது சிதாபாசனாவன். இந்தச்சிதாபாசனென்பவன் வியாவகாரிகனானதாலவன் விவகாரத்திற் கண்டபடி பாரமார்த்திகனென்றும் வியாவகாரிகனென்றும் இரண்டு பிரிவுடையவனாவான்.

(௧) இவ்விதசிதாபாசன் விவகாரத்தால்த்தோன்றப்பட்ட மேற்பிரகரணத்திற்கூறிய பிராஞ்ஞனே பரமார்த்திகனாவான். முந்கூறியவிசேஷங்களால் உள்ளபடிதெளிய அவனேநிராவரண அதிஷ்டான சுபாவமாயிருப்பதால், முக்திநிசையிலு முள்ளவனாவான். அவனே சிதாபாசனது விவகாரத்தால் ஆவரணமுடைய பிராஞ்ஞன்பேரற் றோன்றுவதால், பந்தநிசையிலு முள்ளவனாவான்.

(௨) இந்தப் பந்தமுக்தி இரண்டும் விருத்திரூபமானதால் நிற்விருத்திகனான பிராஞ்ஞனை உண்மையாய்ச் சாரத்தகாது. அவ்விரண்டுஞ் சிதாபாசன் விவகாரத்திற் காணப்படுவதால், சிதாபாசனிடத்திலுதித்த அஞ்ஞானமாம் பந்தவிருத்தியை நீக்க ஞானமெனுமுக்தி விருத்தியை சிதாபாச னிடமாய்க் கூறியது.

கைவல்லியத்தில், இந்த அபிப்பிராயஞ் சொல்லாமற் சொல்லப்பட்டிருக்கின்றது. எப்படியெனின், ஸ்வரூபஞா னம் அஞ்ஞானத்தைச் சுடாது. விருத்திஞானமே அஞ் ஞானத்தைச் சுடுமென்ற அந்தச் சாஸ்திரத்தின் அபிப்பிரா யம், ஸ்வரூபத்தி லஞ்ஞானமில்லாததினு லஞ்ஞானஞ் சுடப் படாதென்றும், விழித்தபின் விருத்தியிடமாய்ச் சிதாபாசனி டத்தி லஞ்ஞானந்தோன்றியதா லந்த அஞ்ஞானத்தைச் சுட விருத்தியிடமாய்ச் சிதாபாசனுக்கு ஸ்வரூபஞானம் வேண்டு மென்றுங் கூறப்படுதலாம்.

சித் ஜடக்கிரந்தியாவதென்ன? சுழுத்தியில் ஸ்வபாவ மாய்நின்ற சுத்த சைதந்யமாங் கூடஸ்தனையுள்ளபடி பகுத் தறியாமல் விழித்தபின் சிதாபாசன் விவகாரத்திற்கண்ட ஒன் றுந் தெரியாமையாம் அஞ்ஞானம் ஜடமாம். அவ்வித ஜட மான அஞ்ஞானம் அந்தக்கரண விருத்தியைச் சார்ந்ததால், அவ்வந்தக்கரண விருத்தியைச்சார்ந்த அஞ்ஞானமாம் ஜடஸ் வபாவத்தை அந்தக்கரணத்தின் ஸ்வபாவமென்றறியாமல், கூடஸ்தனிடமா யாரோபித்துக் கூடஸ்தசுபாவமான ஞானத் தைஜடமெனக்கொள்ள, சித்துஜடமாயும். ஜடஞ்சித்தாயுஞ் சிதாபாசனுற்பிரிக்கப்படாத முடிச்சைப்போல ஐக்கியப்பட அந்தக்கரணத்தின் அறியாமை அகங்காரம் சுகம் துக்க முத லான விகாரங்களை அகாரணமாய்ச் சிதாபாசனுஞ் சித்தைச் சாரத்திரியச் சுருதியுக்தி யநுபவங்களிலிருந்துங்கூட சிதா பாசன் விவகாரத்திற் கண்டபடி பிராஞ்ஞனென்னுஞ் சிவ தத்துவத்தை நிரூபித்தது.

காணகலவிகளோய்ந்த இடமான அதிஷ்டானத்தின் ஸ் வபாவமான ஸ்திதியை ஸ்வரூப ஞானமாத்திரமா யிருந்த தென்றறியாமல், சிதாபாசன் அந்தக்கரணத்தின் அறியாமை யாம் அஞ்ஞானத்தை யதிஷ்டான சைதந்யத்தி லாரோபிக்க

அதிஷ்டான ஞானமே அஞ்ஞானமாம் ஜடமாய்த்தோன்றி நின்றதை அந்தக்கரணத்தின் மலமாம் அறியாமையால், சிதாபாசனுக்கு உள்ளபடி தெளியத் தெளிவில்லாமற்போயிற்று.

அதிஷ்டானத்தி னுண்மையாம் ஸ்வரூப ஞானமும் அந்தக்கரணத்தின் மலமாம் ஜடமான அஞ்ஞானமும் சிதாபாசனுக்கு விழித்தபின் ஏகாகாரமாய்த் தோன்றுவதால், அவ்விதமான தோற்றமே சித்ஜடக்கிரந்தியாகும்.

அதைச் சுருதி யுக்தி யநுபவங்களினு லுள்ளபடி சோதித்துத் தெளியாமற் சிதாபாசன் அஞ்ஞானமென்று அபிமானிப்பது ஆரோபமாகும்.

கீழ்ச்சொல்லிய சாதனவிசேஷங்களால் ஞாதுரு ஞானஞேய ரகித அதிஷ்டான ஞானமாத்திரமாய் நின்றதெனத் தெளிந்து முக்காலத்திலும் அஞ்ஞானமில்லையென நீக்க அபவாதமாகும். அத்தியாசமாவது இவ்விதமான ஸ்வருபத்தில் அஞ்ஞானமென்றும் ஞானமென்றும் இரண்டினது ஐக்கியமென்றும் அவ்வைக்கியத்தால் வந்தது பந்தமென்றும் அப்பந்தத்தை நீக்கச் சாதன விவேகத்தாற் கிடைத்தது ஸ்வருபக்ஞானமென்றும் அவைகளைச் சொல்லாநின்றது சுருதிகளென்றும் அந்தச்சுருதிகளின் விசாரணையிற் சாதனமுடையவர்க ளதிகாரிகளென்றும் அவர்களுடையும் பலன் சருவமான பந்தநிவிர்த்தி ரூபமான ஸ்வாத்மானந்தஸ்வபாமா முக்தியென்றும் இவ்விதமான சகல விவகாரங்களுஞ் சிதாப்பாசனைப்பற்றி வந்ததாலவ்வித சிதாபாசன் அந்தக்கரண விருத்தியிற் பிரதிவிம்பரூபமானதா லந்த அந்தக்கரணத்துக்குப் பீஜம் அஞ்ஞானம், சிதாபாசனுக்கு விம்பங் கூடஸ்தனுமன்றி வேறுகதி காணப்படாததினுல், ஸ்தோதிதனை கூடஸ்த ஸ்வபாவத்தி லறியாமை ஸ்வபாவமுடைய அஞ்ஞானமா

மறைவுநேரிட்டதென்று எக்காலத்திலுஞ் சுருதி யுக்தி யநுப வங்களால் நிரூபிக்கத் தகாததுதான். அப்படியிருக்க அந்தக் கரணஞ் சிதாபாச னிவ்விரண்டுக்கும் இடங்கொடாநின்ற அஞ்ஞானமில்லாவிடில், பீஜமில்லாத விருக்ஷம்போல இல்லாதவையாய்விடும்.

அவ்விரண்டு மில்லாமற்போகச் சித்தின் தருமம் ஜடத்துக்கும் ஜடத்தின் தருமஞ் சித்துக்கும் ஐக்கிய விசேஷத்தாற் பந்தம் வந்ததென்ற விவகாரம் ஷை ஐக்கியத்தை முன்னிட்டிருப்பதால், ஸ்வப்பிரகாசமுடைய சூரியனும் அப்பிரகாசமுடைய இருளுங் கலந்துநின்று விளையாடுகின்றதின்தன்மை போல மிகவுஞ் சித்திக்கத்தக்கதல்ல. ஆயினும் உலகத்திற் கண்ட அநாதியாம் விவகாரத்தாற் பந்தமுக்தியின் விவகாரங்கள், எவனுக்குப் பந்தந் தோன்றினதோ எவனுக்கு முக்தி தோன்றினதோ அவரவர்களின் பொருட்டு அவ்வித விவகாரங்களும் அவ்வித சுருதிகளும் பிரமாணமாகும். இவ்விதமானலோகவிவகார மாத்திரத்திற் கண்ட சித்து ஜடம் அததின் தர்மம் இவைகள் புணர்ச்சியாய் நின்றதென்ற அவிவேகம் அத்தியாசமாம். இவ்வித அத்தியாசத்தை முன்னிட்டேலௌகிகம் கருமம் பக்தி யோகம் ஞானம் இவைகளைப் பிரவர்த்திக்கும்படிசெய்கின்ற சாஸ்திரங்களைத்துஞ்சித்திக்கவேண்டும்.

௧௩-வது பிரகரணம் முற்றிற்று



## ௰௪—வது சுவாநுபவத்தில் ஸச்சிதானந்தமுதலிய நிருபணப் பிரகரணம்.

---

ஸச்சிதானந்தம் மாயை சத்வம் ரஜசு தமோகுணம் ஆவ ரணம் விக்ஷேபம் வித்தை அவித்தை பஞ்சபூதோற்பத்தி இவ்வளவையும் அநுபூதியிற்றெரிய விபரம்.

சமாதியில் அகண்ட போதாகாரமா யிருந்து லயித்து திரிபுடியின்றிய ஞானமாத்திரமாய்சேஷிக்ஃ சுவாநுபூதியை யடைந்துவிடுவான். அவ்வித அநுபூதியினின்று நீங்கினமாத் திரத்தி லகண்டாகார ஞானம் பூருவம்போலுதித்திட, அதினி ன்றுதிரிபுடி யில்லாத அதிஷ்டான ஞானநுபூதியை யெதிரிட அதிஷ்டான ஞானநுபூதிபோல் திரிபுடியின்றிய மனோலயரூ பமான நிராகாரவிருத்தியிற் பிரிதிபலித்த சைதந்நியாநுபூதி அவாங் மானஸகோஸரமாய்ப் போதானந்தகளமா யநுபவத் திற்கு வரும்.

அந்த அநுபூதியே அகண்ட விருத்தி யநுபூதியையபே க்ஷித்து ஸச்சிதானந்தமென்று விவகரிக்கப்படுகின்றது இதை ப் பிரமானந்த மயகோசமென்றுவிவகரிப்பார்கள். இதில் விரு த்தியாரூட சைதந்நியஞ்சுத்தசிவமாம். விருத்திரூபப் பிரதி பலனசைதந்நியஞ் சக்தியாம். எதிரிட்டுப்பார்க்க விருத்தியார் ரூன்றிய பேதங் கற்பிதம். அபேதம்வாஸ்தவ்யம்.

☞ இவ்விதமான ஸச்சிதானந்தமாம் பிரமாநுபூதி யை யகண்டமாய் விஷயீகரிக்க அந்த அநுபூதியி லகண்ட விருத்தியே மாயையென்னப்படும்.

அம்மாயாவிருத்தியைச் சோதிக்குங்காலத்திற் பூரணோ ஹமென்ற அநுபூதிரூபமான மாயோபாதியிற்பூரணமென்றும்

அஹமென்றும் அந்தவிருத்திகளை விளங்குவிய்யாநின்று பார்வையென்றுந் திரிபுடி தோன்றுவதால், சத்வ ரஜோ தமோகுணமென்னுந் திரிகுணத்தின் சமுதாயம்பொருந்தின தாகலாம்.

இவ்விதமான மாயையிற் பிரதிவிம்பித்த சைதந்நியம் ஜகசிருஷ்டிசெய்யப் பரியாலோசிக்கின்றதின் தன்மை, வெகு பிரஜைகளாய்ப் பவிப்போமென்று சங்கற்பிக்கத்தன. துபாதியினுள்ளடங்கிய அகம்விருத்தியானது வெகுவுக்குஇடங்கொடாநின்ற அகண்டமாய்ப் பிரதிபலிக்க அதில் வெகுவாயென்ற சங்கற்பரூப ரஜோகுணம் வெகுவித பேதமுடையதாகவாயிற்று.

பின்பு வெகுவாய்ப் பரிணமித்த ரஜோகுணத்தை விளங்குவித்துக்கொண்டு சத்வகுணமும் பேதமுடையதாய்ப் பவித்தது இதில் அகங்காரவிருத்தியிற் பிரதிபலித்த சைதந்நியம் உருத்திரனுவான். வெகுவாயென்ற சங்கற்பரூபமான ரஜோகுணத்திற் பிரதிபலித்த சைதந்நியம் பிரமாவாவான். பவிப்போமென்ற பவனரூப விளங்குதல் விருத்தியிற் பிரதிபலித்த சைதந்நியம் விஷ்ணுவாவான்.

முன்சொன்ன அஹங்கார விருத்தியே சமஷ்டியாவரணமென்னப்படும். முன்சொன்ன சங்கற்பரூப ரஜோகுண விருத்தியே சமஷ்டி விக்ஷேபமென்னப்படும். முன்சொன்னசத்வ குணம் பவிப்போமென்ற பவிஷ்யத்தாயுள்ள அர்த்தத்தைப் பொருந்தினதினுல் மற்ற இரண்டையும் அபேக்ஷித்துசாமாநியமாயிற்று.

பிரளயானந்தரம், சகலஜகமும் வாசனமாத்திர சேஷித்துகித் தனது காரண தேவதைகளோடுங்கூட அகண்ட பரி

பூரணமான திரிகுணத்தின் சமுதாயம்பொருந்திய மாயோபா தியையுடைய சைதந்நியத்திலடங்கிச் சைதந்நியமாத்திரமாய் நிற்க, மாயை தனது ஸ்வபாவத்தை நீங்காமல் நீங்கித் தானுஞ் சைதந்நியமேலான விளங்குதலையடைய அசோதித ஞாதிரு ஞான ஞேய ரஹித கேவலாநுபூதிமாத்திரமாய் சுழுத்தி போலவிளங்கிடத்திரியும்.

அவ்விதமாகப் பிரளயாநுபூதியினின்று நித்தியசித்த ஞானனான ஈசன் ஜகசிருஷ்டிமுகமாய் நான்என்று திரும்ப அவ்வித நானென்ற அகங்காரவிருத்தி அகண்டமானதா லவ்வித விருத்தி பிரதிபலனம்நேரிட பூர்வாவஸ்தை நீங்கி யுத்தராவஸ்தா ரூபமான அகங்காரத்தை யடையாமல், மத்தியில் அகண்டமெனவுங் கண்டமெனவுஞ் சொல்ல உதவாமல் உஸ்சூனபீஜாவஸ்தைபோல் விளங்காநின்ற சுத்தமாஞ் சத்வவிருத்தியிற்பிரதிபலித்த சைதந்நியத்தை முற்கூறிய ஈஸ்வரனது சூக்ஷமோ பாதியை வித்தையெனக் கூறுவார்கள்.

அவனது அஹங்காரரூபமான ஆவரணம் அகண்டமானதால் ஈஸ்வரனது சாயாரூபமான சித்தான பிரதிபலனம் நிராவரணமென்றும், அறியவல்லமையிருந்தும் லீலையால் விக்ஷேபத்தோடேயுங் கூடியது அவித்தையென்றும், இதில் ஆவரணம் விக்ஷேபமிரண்டுஞ் சிருஷ்டியை முன்னிட்டு ஈஸ்வரனுக்குச் சொல்லப்பட்டபோதிலும் அவனது உண்மையாகாது.

பஞ்சபூதத்தி லுற்பத்தியாவது வெகுவாய்ப்பவிப்போமென்ற ஈஸ்வரனது மஹா அஹங்காரதத்துவமே வெகுவென்ற பிரஜாரூபசங்கற்பத்திற் கிடங்கொடுத்ததா லவ்வித அஹங்காரத்தின்விரிவே ஆகாயமாய்த்தோன்ற, அவ்வித ஆகாயத்தின் பிரஜாரூபமான அகங்காரம் அதின்விரிவு சலனமுடையதானதா

ஸத்தவிரிவாற்றோன்றிய சலனமேகிரியாசத்திரூபமான வாய்வு மாய்த்தோன்ற; அவ்வித்சலனஞ் சலனத்தினுதாரமான ஆகாயம் இரண்டையும் விளங்குவியாநின்ற விளங்குதல் அசைவான வாய்வுவினிடமாய்ப் பிரகாசமுடையஅக்கினியாய்த்தோன்ற; அவ்வித பிரகாசமுடைய அக்கினியின் விளங்குதல் நெகிழ்ச்சியின்றி விளங்க ஹேதுவில்லாததனு லவ்வித அக்கினியிடமாய் திரவசக்தியுடைய சலமாய்த்தோன்ற; அவ்வித திரவரூபமான சலந்திரவிக்கவேண்டுமானுல் ஸ்தலத்தைப்பற்றித் திரவிக்கவேண்டுவதா லவ்வித திரவத்தைப் பகிர்முகப்படுத்தாநின்ற கடினமுடைய ஸ்தூலவிருத்தியே பிருதிவியாய்த் தோன்றிற்று.

௵ இவ்வித பஞ்சபூதங்களே வியஷ்டியாய்த்தோன்றுகின்ற சமஷ்டி பிரமாண்டத்துக்குச் சாதனமாம். இதை ய பஞ்சீகிருத பூதமென்று கூறுவார்கள்

முற்கூறிய பூரண அக்ங்காரமான ஆவரணத்திற்றோன்றிய பிரமாண்டத்திலுள்ளடங்கிய வியஷ்டிகளான கண்டரூப ஜகங்களுக்கு முற்றிய ஆவரணத்தைத்தவிரப் பீஜம் வேறேயில்லாததினுலே யெங்கும் வியாபியாநின்ற சமஷ்டி யாவரணமேகண்டமான ஜகத்திற் கண்டாகங்காரமான அதஇன்சமுத்தியுத்திதனுனென்ற சீவாவரணமாய்த்தோன்றிற்று.

வெருவாயென்ற சமஷ்டி சங்கற்பரூபமான விக்ஷேபமே வியஷ்டி ஜகத்திற்சங்கற்பரூப விக்ஷேபமாயிற்று. முன் சொன்ன அபஞ்சீகிருத பஞ்சபூதங்களே பஞ்சீகிருதங்களாகப் பவித்து ஸ்தூலபஞ்சபூதங்களாயிற்று.

அபஞ்சீகிருத பஞ்சபூதங்களின் விளங்குந்தன்மையான சத்வகுணத்தினின்றும் அந்தக்கரணமுண்டாயிற்று. ஆகாய

த்தின் சத்வகுணத்தினின்றுஞ் சுரோத்திரமுண்டாயிற்று. வாயுவின் சத்வாம்சத்தினின்றுந்துவக்குண்டாயிற்று. அக்கினியின்சத்வாம்சத்தினின்றும் நேத்திரமுண்டாயிற்று. அப்புவின் சத்வாம்சத்தினின்றும் ரசனையுண்டாயிற்று. பிருதுவியின் சத்வாம்சத்தினின்றுங் கிராணமுண்டாயிற்று.

ஆகாயத்தின் ரஜோகுணத்தினின்றும் வாக்குண்டாயிற்று. வாயுவின் ரஜோகுணத்தினின்றும் பாணியுண்டாயிற்று. அக்கினியின் ரஜோகுணத்தினின்றும் பாதமுண்டாயிற்று. அப்புவின்ரஜோகுணத்தினின்றும் பாயுறுண்டாயிற்று. பிருதுவியின்ரஜோகுணத்தினின்றும் உபஸ்தமுண்டாயிற்று. பஞ்சபூதத்தின் ரஜோகுணத்தினின்றும் பிராணனுண்டாயிற்று.

இவ்வித சூக்ஷமரூபமானராஜ ஸத்வகுணோற்பத்தியுடைய இந்திரியங்கள் ஸ்தூலரூபமான பஞ்சபூதங்களையும் அவற்றின்குணங்களையும் கிரகிக்கும் வல்லமையுடையவையாயிற்று. மற்றத்தேஹாதிகள் இரத்தமாம்ஸாதிகளானதாற் கேவலபஞ்சபூதங்களின் சூக்ஷமவிகாரங்களாகும். மலை ஜலம் முதலானஜடங்கள் பஞ்சபூதத்தின் ஸ்தூலவிகாரங்களாகும்.

சங்கை ஆத்மா ஸ்வத: சருவவியாபகனானல் பிரேதசரீரம் மற்ற மலைமுதலான ஜகங்களிலிருக்கத்தகுவான் சிவசரீரங்கள்போல் ஏன் அவைகளும் அறிவுடையதாய்விளங்கவில்லை உத்தரம் மாயை சத்வ ரஜஸ் தமோகுணமான மூன்றுவிதமுடையதானதாற் சத்துவத்திற்பிரதிபலித்த சைதந்நியம் அதிகமாய்ப்பிரகாசிக்கும். ரஜசிற்பிரதிபலித்த சைதந்நியஞ் சாமாநியமாய்ப்பிரகாசிக்கும். தமசிற்பிரதிபலித்த சைதந்நியஞ் சாமாநியமாய்க்கூடப்பிரகாசிக்கமாட்டாது. சூரியனது பிரதிபிம்பம் கண்ணாடி வெண்கலம் மண்கலம் இவற்றிற்போல.

சங்கை, சைதந்நியம் வியாபகமானால் மரணாந்திரம் பரலோகத்தைப் புண்ணிய பாபங்களின்பொருட்டு அடையுந்தன்மையெப்படியென? உத்தரம் ஜாக்கிரத்திலநுபவிக்கப்படாநின்ற ஸ்தூலசரீரத்தை நீங்கி சூக்ஷமசரீரியான சீவனுக்கு சொப்பனசரீரம்போலத்தகுமென சைதந்நியம்முக்காலத்தினும் ஏகசொரூபமாயிருந்தபோதிலும் பிராந்திவந்ததாய் விளங்குகின்ற சீவர்களுக்கு பிராந்தியால்வந்த துக்கநிவிர்த்தி கிடைக்கவேண்டுமானாற் சகுணேஸ்வரனதுபிரசாதத்தாலுஞ் சற்குருவின் பிரசாதத்தாலுஞ் சிரவண மனன நிதித்தியாசன தியான தாரண சமாதி சித்திக்க அதில்விளங்கிய ஸ்வாநுபூதிவிசேஷத்தால் ஜனனமரணப்பிரவாகரூப சம்சாரநிவிர்த்திரூபமான கதிகிடைக்கும். அவ்வித முக்தியினாற் றான் உள்ளபடிவிளங்கத்துக்கங்கள்தானே அதிஷ்டானமாத்திரமாய்சேஷித்து நீங்கிவிடும்.

சங்கை தானே சகல ஜக்மானாற் றன்னவஸ்தைகளைத் தானறிவது போல் சகல ஜகங்களி னவஸ்தைகளையுந் தானறிய வேண்டும், அப்படிக் காணாததனாலஃதெப்படிக் கூடுமெனின்; உத்தரம். தன் சொற்பனத்திற் றோன்றிய பருவதத்திற் பிரவேசிக்கத் தெரியாதிருந்தாலு மதினின்று வருகிற சித்தர் முகமா யந்தப் பருவதத்தி னிரகசியங்களை யறிவதாலும் விழித்தபின் சொப்பனம் பொய்யாகி யதிற்கண்ட பருவதாதிக ளியாவுந் தன்னைத் தவிர வில்லாதது போற் கூடும். ஆகையால், முன்சொன்ன சகுணேசன்கிருபை முதலிய சகலசாதனங்களும் அவசியம்வேண்டும்.

ஙசு-வது பிரகரணம் முற்றிற்று.

## ங௧-வது வேதாந்தசித்தாந்தமிரண்டுக்குமுள்ள விரோதசமாதானப் பிரகரணம்.

முதல் பரமசிவம் ஸச்சிதானந்தம் பசுபதிபாசங்கள் அநாதிநித்தியங்கள், இந்தச்சித்தாந்தம் வைதீகந்தாந்திரமென்னுமிரண்டுவிதமாம். வைதீகத்தில் சத்தேசித்து சித்தேயானந்தமெனப்படும். தாந்திரத்தில் வேறாக இராநின்ற உஷ்ணமும் பிரகாசமும் அக்கினியைவிட்டுப் பிரிக்கத்தகாத தன்மையா யெப்படிவிளங்கிநிற்கின்றதோ அப்படிவிளங்கி நிற்கின்றதெனப்படும்.

அநாதி நித்தியமாவதென்ன? வைதீகத்தில் வாசனுபரம்பராவிசேஷத்தாலுற்பத்தியை நிருணயிக்கத்தகாமல் அநாதியென்றபோதிலும், சுருதியுக்தி அநுபவங்களால் உண்மையிற் காணாததினால் சசவிஷாணம்போலுற்பவியாதெனவும்படும்

நித்தியமாவதென்ன, இல்லாத சசவிஷாணமெப்படியழிந்திடாதோ அத்தன்மைபோல், தந்திரார்த்தம் ஸ்பட்டஞ்சற்குருவாலுபதேசித்ததின்பின்பு தத்துவங்களைப்பிரித்துப்பார்க்க ஆத்மோதயம்,பாசங்களைச்சாராமல்நிற்க அருளுதயம், அந்த அருளாலாணவமடங்கிநிற்கப் பணைதெரிசனம், அப்பணையிலடங்க சிவயோகம், அச்சிவத்தையாகமாநுபூதியுக்திப்பிரமாணத்தாலறிய சிவஞானம், அச்சிவஞானத்தில்நிற்க சிவானந்தோதயம்- சிவானந்தமயமாய்நிற்க ஆனந்தாதீதப்படுகை, இவ்வளவும் வைதீகத்தில் விருத்தியாற்றோன்றியதேயன்றி வஸ்துவுக்கு அவஸ்தைகளல்ல. தாந்திரத்தில் உண்மையாகவே வஸ்துவுக்கு அவஸ்தையெனக்கூறப்படும்.

முக்தி நிலையைக்கூறுதல், வேதாந்திகள்பக்ஷத்தில் முக்தியில் வஸ்து ஒன்றென் ... த்தில் ... ணடென்றுங்

காணப்படுகின்றது. விவகாரத்தாற்பேதந்தோன்றினுந் திரிபுடியற்றிருப்பதா லநுபூதியிற்பேதமில்லை.

விவகாரத்திற்பேதமேதெனின், வேதாந்த வைதீக சித்தாந்தத்தினுடையவும்நெறி, சமாதியிலொன்றுமில்லாதபோதினும் வஸ்து நிஷேதங்கூடாததினால் ஒன்றென்ற தர்மமாத்திரமங்கில்லையெனினும் வஸ்து ஒன்றில்லையென நிஷேதிக்கக்கூடா தெனத்தாற்பரியம். அவ்வித அநுபூதியில் திரிபுடியில்லையெனினுஞ் சித்தாந்திகள் ஒன்றிரண்டென இடமில்லாததுவாய்க்காணினும் முன்னுபாசனாகாலத்திற் கண்டபசுவாஞ்சிவசுபாவம் அக்கினியி லதின்சூடுபோல் அடங்கிநிற்கின்றதெனத் தாற்பரியம். பதியிலடங்கிநின்ற முத்தர்களான சிவயோகஞானியர்கள், ஒருதடாகஜலங் கலசத்திலெடுக்கப்பட்டுக் கலசத்தோடுஞ் சமுத்திரத்தினுள்ளமிழ்த்திட ஒன்றாய்க்கலந்து எப்படிப்பிரிந்திடாதோ அப்படி யென்கிறார்கள்.

வேதாந்திகள் தத்துவத்திற் பேதமொப்பி முத்தியிலடங்கிநின்றதென்றால், சுழுத்தியிலடங்கியும்பின்பு பந்தவாசனையுதிப்பதுபோலுதித்திடும். ஆகையாற் பசுபதிபேதஞானமுத்தி பிரதிபந்தமாமெனக்கூறுகின்றார்கள்.

வேதாந்திகளநுபூதியில் நான் பிரமமென்றஞானத்தில் நானென்றசிவபோதமிருப்பதால்அஃதுபந்தத்தைக்கொடாதோவெனில்? கடம் கலசம் என்கிற நாமமாத்திரம் பேதமாய்த்தோன்றுகின்றதேயன்றி, நான் பிரமம் என்ற இரண்டுசொல்லுக்கும் பொருள் சுத்தசைதந்நிய மொன்றுதானென்கின்றார்கள்.

ஆகையாற் பழுதையைப் பழுதையென்றறிந்த பின்பு அந்தப்பழுதை முன்போற் சர்ப்பாகாரமாய்த் தோன்றினும்

பயங்கிடையாது, அத்தோற்றுதலும் நீங்கிடிலோ சொல்லவேண்டுவதில்லையெனவுரைக்கின்றார்கள். ஆனால் உபநிடதம்(௱அ-ம்)சிவாகமங்கள் (உ௰அ-ம்) புராணங்கள் (௰அ-ம்) மற்றுள்ளபாரதாதிகளையும் நன்றாயோசிக்குங்காலத்தில் ஜகத்தின்கண்ணை நீக்கி வஸ்துமயமாய்ச்சொல்லவந்ததாகவே ஆகுகின்றது.

சமாதியில் அவ்விதஜகம்நீங்கிடினும் அதிற் பசுபதிபாசமிருக்கின்றதாகச் சொல்லுகிறதில் உபகாரத்தைக்காணவில்லை. அப்படியடங்கியிருக்கின்றதாய் ஒப்பினால் ஜநித்திடுவானென்று உபநிடதங்கள் மிகவும் முறையிடுகின்றன. சிவத்திற் பசுபதிபாசம் மூன்றுபேதமும் முக்காலத்தினுமில்லவே இல்லையென்று அந்தச்சிவமும் நானென்ற உபாதிநீங்கின நானசைதந்நியத்தைத்தவிர வேறில்லாததினால்த் தானசிவமாய் ஒன்றிரண்டென்ற விவகாரமின்றிநின்றிடில் வேதாந்த சித்தாந்தத்தின் நிலைமையாம். இதுவே சமரசமானமுடிவுள்ள நன்னிலை இன்னிலையில்நின்ற மஹான்கள் மகிமையைச்சுருதிகள் மங்களபேரிகை அடிக்கின்றன.

௰௫-வது பிரகரணம் முற்றிற்று.

---

## ௰௬-வது குருசீஷர்களின் கிரமமுரைத்த பிரகரணம்.

அந்தேவாசியானவன்பரமகுருவின் திருவடியைநம்பித்தானுய்நிற்கவேண்டும், உண்மையான உறுதிவேண்டியது. அணிமாதிபதங்களை யருள்செய்திடுங் கொருவாதிபதம்

களையருள்செய்திடினும், அறுபத்துநாலுகலைஞ்ஞானங்களை யருள்செய்திடினும், இராச்சியங்கிடைக்க அருள்செய்திடினும் அவர்களெல்லாம் பரமகுருக்களாகத்தகார்கள். மாதர்பிதா பந்து தாரம் புத்திரர்கள் பொருள் முதலான ஜகபந்தங்கள்யாவையும் நானென்றும் எனதென்றும்வந்த அவித்தையை யவலம்பித்துநிற்கின்ற தாபத்திரையங்களால், நிற்கதியாய்த்தவிக்கின்ற, தன்னை நித்தியானந்தக்கடலான பரமசிவமென்று செவியிலுரைத்து உபதேசத்தாற் கேடர்தன்னைக்குளவியாய்ச்செய்த தன்மைபோல், ஸச்சிதானந்தமாய்ச்செய்தவ னெவனோ கேவலங்கிருபையினால் அவனே பரமகுரு அவனே பரமசிவ மென வேதங்களால் உண்மையாய்க்கூறப்படும்.

அவர் வருதியில் நிற்க லோகங்களனைத்தும் துவேஷித்திடினும் தனம் பூமி கீர்த்தி சுகம் அதிஷ்டம் லாபம் முதலானவனைத்தும் கெட்டிடினும், மாதிரு பிதிரு தார சுற்ற பந்துவனைத்தும் விரோதித்திடினும் ஜாதி வருணம் ஆச்சிரமம் தருமம் குலம் கோத்திரம் இவ்வளவையும் பேதித்து நடக்கவுரைத்திடினு மதிக சந்தோஷமாய்க் கபடமன்றி மிகுந்த பயபக்தியுடனே வேதங்களின் விதியாகவெண்ணி நடக்கவேண்டியது.

தெரிந்தாவது தெரியாமலாவது அவ ருபகாரத்தைச் சொப்பனத்திற்கூட மறக்கக்கூடாது; அங்ஙனம் மறக்கில் ஆச்சந்திரார்க்கம் பிறவித்துன்பமாம் நரகத்தையடைவான்.

மாணுக்கனுக்கு சிவனது கோபம் வந்தால் ஆசிரியரது கருணை இரக்ஷிக்கும் அவரது கோபம்வரில் சிவனது கருணையினுலுங்கூடப் பரிபாலிக்கத்தகாதென்றும், அந்தசற்குருவே தனக்கு மாதா பிதா தெய்வ முயிர்த்துணை மற்றுஞ்சருவமும் அவ்வாசிரியரைத் தவிர வேறில்லையென்றும் உபநிடதங்கள்

ஓலமிடுவதா லுண்மையா யன்போடுங்கூட அவர் வருதியில் நிற்கவேண்டியது அங்ஙனம் நிற்கில், அவனது மகிமையை நமது குலதெய்வமென்று வேதங்கள் சகல மங்களங்களும் பொருந்த வாழ்த்திநின்றிலங்கிடும்.

௯-வது பிரகரணம் முற்றிற்று



௰-வது நான்குவிதமுடைய முக்தர்களுக்கும் முமூட்சுகளுக்கும் வேண்டுஞ்சாதனங்களை யுரைத்த பிரகரணம்.

ஆரூடனுக்கு எல்லாம் பிரமமென்ற அநுபூதியுமற்று விருத்திகளுதித்திடினும் நசித்திடினும் உள்ளபடி தானாய்விளங்குதலே சகலசாதனமுமாம். வரன் வரியானிவர்களுக்கும் நான் பிரமமென்றவிருத்திதப்த பீஜாகாரமாய் சொப்பனம்போற்றோன்றுமற்றோன்றி அடரோக்ஷாநுபூதியை சதா அருளிடும் அந்த அநுபூதியே இருவர்களுக்குஞ் சாதனமாம்.

வித்துக்கு ஸ்தூலமான அகண்டாகாரவிருத்தி ஞானபெலத்தாற்றன்னை யபரோக்ஷிகரிக்கப் பிராரப்தவாசனையாற் பகிர்முகப்படத்திரியும் அப்பொழுது சுவாநுபூதியை யடைந்திருந்தபோதினுந் தக்தபட நியாயமாயாவது சம்சயாதிகளின் றுக்கமுதித்திடும் ஆகையால் அவனுக்கந்த அகண்டாகாரவிருத்திஞானமே உள்ளங்கைக்கனிபோலத் தன்னைத்தெளிவித்திட அதுவே சகல சாதனங்களாக வுரைத்திடப்படும்.

மும்முட்சுகளுக்கு வேண்டுஞ் சாதனங்கள் (க-வது)விஷயங்களிற்றோஷதரிசனம் ஸ்மிருதிரூபமாயும் அநுபூதிரூபமாயுமுள்ளது (உ-வது) இந்திரியங்கள் விஷயங்களை நாடாமலிருக்கின்றது. (ங-வது)மனம் இந்திரியங்களையும் விஷயங்களையுஞ் சாராமல்நிற்கின்றது (ச-வது) பூருவாகமப்பிரமாணந்தாற் சொல்லிய உலகமுஞ் சுவர்க்கமுதல் கைலாயம்வரையிலுங் கருமங்களினுற் சாதிக்கப்பட்டுப்போனதால், இகபரமிரண்டுலோகங்களும் அழிந்திடுமென்று அதில் மனமொழிந்திடுதல் (ரு-வது) அப்பியாசித்த வேதாந்தசாஸ்திரத்தாற் பிரமமென்ற ஒருவஸ்துமாத்திரம் ஒருக்காலுமழிவற்றிருக்குமென்ற உண்மை கொள்கை. (சு-வது) அந்தப்பிரமத்தை சற்குருவுபதேசத்தால் நானென அபரோக்ஷிக்கின்றது இவைகளே மும்முட்சுகளுக்கு வேண்டுஞ்சாதனங்களாம்.

ய௪-வது பிரகரணம் முற்றிற்று.

——:o:——

## யஅ-வது சந்நியாச வரலாறுரைத்த பிரகரணம்.

(க-வது)காமியகன்மபரித்தியாகஞ்சந்நியாசமெனப்படும் (உ-வது) சருவகன்மபலத்தியாகம். (ங-வது) சருவகன்மங்களையும் ஈஸ்வரார்ப்பணபுத்தியாயநுஷ்டிக்கிறது. (ச-வது) சருவகன்மங்களையும் பிரமாகாரபுத்தியாய்ச்செய்கின்றது.கன்மங்களுக்குள் சிரௌதமான நித்தியாக்கினிஹோத்திர மிகவும் உத்தமம். இப்படி இந்தக்கன்மங்களையநுஷ்டிக்க அந்த அநுஷ்டானபலதாதாவான ஈசனது கருணையால் எவ்வளவு காளிந்தகாயிகமான கன்மத்தைச்செய்கின்றது, இதற்குமுடிவென்

னவென்றுபார்க்கில் இந்தஜடகன்மத்தாற் பிரயோசனமில்லை. இந்தக்கன்மம் ஈசனது பிரசாதஜனகமாயினும் ஹிருதயத்திற்செய்யுஞ் சிவத்தியானம்போலாகமாட்டாது சித்தசுத்தியையுண்டுபண்ணும். அந்தச்சித்தசுத்தியாற் சகுணத்தைதியாநிக்க சகுணேசனுடைய பிரசாதத்தால் நிற்குணப்பிரமஞானமே பெரிது அதினாலேதான் மோக்ஷம். அந்தஞானம் ஆசிரியரது கிருபைபொருந்திய சிரவண விசேஷத்தாற் சித்திக்குமென்றறிந்து, அவ்விதசிரவணத்தி னதிகாரம் உத்தமம் மத்திமம் அதமம் எனமூன்றும் அதில் சாவகாசமுள்ளபோது துடர்ச்சி அதமம். கிரஹஸ்தாச்சிரமத்திலிருந்துகொண்டு இல்லறத்துடர்ச்சியை மிகவுந்துடராமல் அதிதீவரமாய் இதிற்பிரவேசிக்கிறது மத்திமம். சருவகருமத்தியாகபுரஸ்ஸரம் சிகா எக்ஞோபவீத தியாகத்துடன் இல்லறத்தை நீக்கி சிரவணத்தின் பொருட்டு சந்நியாசித்துக்கொள்கிறது உத்தமாதிகாரமாம்.

வித்வச்சந்நியாசமெனவும் விவிதிஷாசந்நியாசமெனவும் இரண்டுபிரிவுடையதாகும். முந்திநிரூபிக்கப்பட்டது விவிதிஷாசந்நியாசமெனப்படும் நிருவாணபதவியை யடைந்தும் எங்கிருக்கினுந் தாழ்வில்லாவிடினுங் கார்ஹஸ்த்யத்தா லென்ன வேண்டுவதெனத்தள்ளி நைஷ்டிகமாய் ஞானகௌரவத்தாற் கிரகிக்கப்படுகின்றது.

முத்தியைப்பிரதிபந்தியாநின்றவாசனையை நிரூபிக்கப்படுகின்றது உலோகவாசனை சாஸ்திரவாசனை தேகவாசனை என்று மூன்று பேதமுடையதாகலாம் எல்லாவாசனையும் மனதின் விகாரமானதாற் சங்கற்ப விகற்ப பீஜமாகசித்திக்கும். அவ்விதமான மனம் பேதமறநின்ற சுழுத்தியிற்காணுததால் சத்வாசனை யசத்வாசனையெல்லாம்பேதத்தையெதிரிட்டே சித்திக்கக் காணப்படுகின்றது அசத்வாசனையாவதெது? சத்வாசனையா

வதெதுவென? உயர்வு தாழ்வு புண்ணியம் பாவம் சுத்தம் அ சுத்தம் சுகந் துக்கம் நான் என்னுடையது ஈசன் சீவன் விதி நிஷேதம் கிரஹிக்குகை தள்ளுகை இவ்விதமாய்க்கூறப்படுகி ன்றவைகளெல்லாம் பேதவாசனையானதால் அசத்வாசனையா ம். இவ்வளவும் உலகம் தேகம் சாஸ்திரம் இவைகளை முன்னி ட்டுக்கொண்டே காணப்படுகின்றன. தாவரமுதற்பிரமம்வரை யிலுள்ள சகலதிருசியங்களையுந் திருக்கான சைதந்நியத்திற் றோன்றுவதாற் பழுதையிற்றோன்றிய சர்ப்பம் முக்காலத்தி லும் பழுதையைத்தவிர வேறில்லையென்றறிந்து சுகமாயிருப் பதுபோல, சித்தான தன்னிடத்திற்றோன்றிய சகலங்களையு முக்காலத்திலுந் தன்னைத்தவிர வேறில்லையென்றறிந்து தானு ன சுகமாயிருப்பதே சத்வாசனையாம். இந்தஇரண்டுவாசனை யில்மூந்தியது பந்தத்தைப்பற்றியது, பிந்தியது முத்தியைப் பற்றியதாம்.

பந்தமுக்தி அததுகளில் விகற்பவர்சனைய்ற்றதின்சுபாவ மே நிலையானதால் எப்படி வாசனை அற்றதாகுமெனு? அது வாசனையுமல்ல நிர்வாசனையுமல்ல உள்ளபடியானவஸ்துவே நின்மலமானதாலதுவே நிர்வாசனையெனப்படும். உண்மையை த்தெளிந்தவர்களே நிர்வாசனையெனும் உண்மையான நித்திய மங்களரொனக்கூறப்படுவார்கள்.

## ௰௯-வது சமாதியின் மனோவிருத்தியின் சோதனை யுரைத்த பிரகரணம்



சமாதியில் சாமியம் லயம் விநாசம் அத்தியந்தாபாவம் ஐக் கியமெனும் ஐந்துவகைப்படும். சாமியமாவது சமமாய் நீரும் பாலுங் கலந்துநின்றாற்போல சீவோபாதியானது அகண்டபிர மோபாதியிற் சூக்குமதிரிபுடியுடையதாகக்கலந்து நின்றதாம்

லயமாவது அந்த சூக்ஷ்ம திரிபுடியும் லயித்து அகண்ட பிர மோபாதி மாத்திரமாய்த் தனித்தது லயமாம். விநாச மென்பது பிரத்வம்சமென்னப்படும் எக்காலத்திலும் அகண்ட விருத்திமாத்திரமாய் நிற்கத்தனக்குமுன்னமே ஸ்வபாவமாய்க் கண்டமான மனமிருந்தும் இப்போது விஷயத்திற் செல்லாத தனாற் சமாதிபெலத்தால் இருந்தமனம் இறந்துபோனதாய்க் கொள்கின்றதாம். அத்தியந்தாபாவமாவது ஸ்வபாவமாயிருந்த அகண்டமான பிரமபோதத்தைத்தவிரச் சீவபோதமுக்காலத் திலும் இல்லவேயில்லையெனக்கொள்கின்றதாம்.

ஐக்கியமாவது பிரமபோதமென்றதுஞ் சீவபோதத்தை முன்னிட்டே சித்திக்கின்றதாகத்தோன்றுகின்றது கண்டமா ன சீவபோதத்தைவிளங்குவித்து நின்றபோதிலும் பூரணமாக ந்தகாது சீவபோதம் பிரமபோதமிரண்டும் போதரூபமாயொ ன்றுதான். அந்தப்போதம் இருந்திடினும் நசித்திடினும்நிறபே க்ஷமாயெக்காலத்திலும் ஒன்றுபோலவே உள்ளபடிபோதாதீ தஸ்வபாவமாய் விளங்கிநிற்கின்றதெனக்கூடச் சொல்லத்தகா து இதினிடமாய் பிரமசீவனென்ற விவகாரமாவது விவகாரத் தையிட்டுவந்த அநுபூதியாவது வந்தியாபுத்திரனென நிஷேதி யாமல் நிஷேதிக்கின்றது.

முன்சொன்ன நான்குவிதசமாதியுடையவர்களும் அவஸ் தாத்திரயத்தின் சாக்ஷிவிருத்திஞானத்தையே பிரத்தியேகாத் மாவென அறிந்து, சமாதிபெலத்தாலகண்ட பிரமவிருத்திஞா னத்திலடங்கி யந்தப்பெலத்தாற் சீவோபாதியை நிஷேதித்தார் கள் ஐந்தாவான் தன்னிடத்தில் தன்ஸ்வபாவத்தால் நிஷேதியா மல் நிஷேதித்தான் இவன் ஒருவனே உள்ளபடிதெளிந்தவன்,

சிலர்கள் ஞானமடைந்ததின் பிறகு மோனசமாதியிலட ங்கியே வெகுகாலம் இருந்துபோனார்கள், சிலர்களதிவிஷயி

களாக இருந்திருக்கின்றார்கள், சிலர்கள் விஷயிகளாவும் ஓடுங்கினவர்களாகவும் இருந்திருக்கின்றார்கள். இதில் எவர்கள் பெருமைஞானமுடையவர்களென்றுங் காரணமேதெனவும் விபரம் பிரமானந்தமயகோசமெனும் ஆனந்தாதீதஸ்வயமானந்தமெனும் பிரமசுகமிரண்டு பேதமுடையதாகும். விவகாரத்தால் கீழ்ச்சொல்லிய நான்கு பேதமுடைய சமாதிமான்களும் பிரமானந்தமயகோசத்திலடங்கிநின்று அந்த ஆனந்தத்தாற் சிவபோதம் விழுங்கப்பட்டிடில் விஞ்ஞானமயகோசமானது சுழுத்தியாம் ஆனந்தமயகோசத்தி லடங்கிநின்றதுபோல பிரமானந்தமயகோசத்தி லடங்கிடுவார்கள் மற்றொருவன் ஸ்வயமானந்தரூபனானதா லநுபூதிநிறபேக்ஷன் அவன் சமாதியிலடங்கி நிற்கவுமாட்டான் அவன் சமாதியிலடங்கியது அடங்கியதுமல்ல அவன் செய்கின்றபிரவிருத்தி பிரவிருத்தியுமல்ல, அவனிடத்தில் சமாப்தபிராரப்தமென்றும் அசமாப்தபிரார்ப்தமென்றும் மிளிதபிராரப்தமென்றும் அந்நியர்கள் விவகாரத்தால் மூன்றுவிதமாய் விவகரிப்பார்கள்.

ஸ்வயமானந்த ரூபனாயிருந்தபோதிலும் பிராரப்தம் சமாப்தமா யிருப்பதால்த் தேகந்தவிரமற்றசேஷ்டை யவனிடத்திற்காணப்படாது. அசமாப்த பிராரப்தன் தானானஸ்வயமானந்த ஸ்வரூபத்தைத்தவிர வேறுவஸ்துக்களை யெதிரிடாமலிருந்தபோதிலும் பிராரப்தம் அசமாப்தமாயிருப்பதாலவனிடத்திற் சகல போகங்களுங்காணப்படும். மிளிதபிராரப்தவானிடத்திற் பாதிக்காலஞ் சமாதியும் பாதிக்காலம் விஷயபோகமுமாகக்காணப்படும் ஸ்வயமானந்தரூபாளான இந்த ஞானிகளுக்கு சமாதிசாதனமுமல்ல; விஷயபோகம் விரோதமுமல்ல; சாதனம் விரோதமெல்லாமவர்களுக்குத் தானான ஆனந்தமாகவே விளங்காமல் விளங்குகின்றதென: மாணுக்கன் அப்படியே தெளிந்து ஸ்வயமானந்தரூபனானான்.

ருக-வது பிரகரணம் முற்றிற்று.

## ௨௰-வது சமஷ்டியுபாதியை யுரைத்த பிரகரணம்.

விராட்டு இரணியகர்ப்பன் அந்தரியாமி சருவஞ்ஞபரமேஸ்வரன் இவர்களையுள்ளபடி யநுபவிக்க அவர்களினுபாதிகளையும் அவ்வுபாதிகளிற்கண்ட அவர்கள் ஸ்வபாவத்தையும் நிரூபிக்கப்படுகின்றது.

☞ இதில் விராட்டாவது அதிவிஸ்தாரமுடைய சாகரங்கள் பருவதங்கள் நதிகள் விருக்ஷங்கள் மனுஷ்யர்கள் மற்றுள்ள சகல பதார்த்தங்களுமுள்ளடங்கிய பிரமாண்டத்தை, ஜாக்கிரகாலத்தில் நினைக்க, இந்திரியங்களின்சத்தையினால் மேற்கண்ட சகல ஜகங்களும் விளங்கியபிரகாரம் விளங்குவதால் சகல பிராணிகளுடைய இந்திரியங்களும் அவற்றின் வியாபாரங்களும் அந்த இந்திரியங்களிற் பிரதிபலித்த சைதந்நியத்தினால் விளங்கவேண்டுவதாற், சகலர்களின் இந்திரியவியாபாரங்களிற்றோன்றிய சகலஜகமுஞ் சகலேந்திரியவியாபாரங்களுஞ் சைதந்நியமன்றி விளங்கத்தகாது.

ஆகையால் ஒருவனிந்திரியங்களிற்றோன்றிய சகலஜகந்தானே சருவர்களினிந்திரிய வியாபாரங்களில் வியவஸ்தாபேதமாய்த் தோன்றினபோதினும், வியவஸ்தையைநீக்கி ஜகத்தையுமறிய உபயோகியாயிராநின்ற இந்திரியவியாபாரங்களையும், அதிற்பிரவேசித்து விளங்காநின்ற சைதந்நியத்தையும் அபேதமாய்க்கூறத்தடையில்லை.

ஆகையால், தனதுசொப்பனத்திற்கண்ட கீழ்ச்சொல்லியபடி நானாபேதமுடைய ஜகமும் அதை யநுபவியாநின்ற சகலஜீவர்களும் அவர்களினிந்திரியவியாபாரங்களும் பின்ன பின்னங்களாய்த்தோன்றினபோதினுந் தன்மனோபாதியைத்தவிர எப்படிவேறில்லையோ, அவைகளின் சகலேந்திரியங்களிலு

ம் அவைகளிற்றோன்றிய சகலவிஷயங்களினும் விளங்கிநின்ற சைதந்நியமான தன்னைத்தவிர எப்படிவேறில்லையோ அப்படியே சகலேந்திரியங்களிற்றோன்றிய சகல ஜகங்களுஞ் சகலசீவர்களினிந்திரியங்களுந் தனதிந்திரியங்களைத்தவிரவும் தனதிந்திரியத்திற் பிரதிபலித்த சைதந்நியத்தைத்தவிரவும் சகலேந்திரியங்களிற் பிரதிபலித்த சைதந்நியமும் வேறேயில்லை.

☞ இதினநுபவம் தனதிந்திரியவியாபாரமே சகல சீவர்களினிந்திரியங்களா யநுப்பிரவேசித்து அந்தந்த சீவர்களினிந்திரியவியாபாரங்களாய்ப்பவித்து அந்தந்த இந்திரியங்களுக்கு விஷயங்களான ஜகத்தைஅநுசந்தானவிசேஷத்தாலநுபவித்து அந்தந்த விஷயங்களையும் அந்தந்த இந்திரியவியாபாரங்களையும் உள்ளிருந்து விளங்குவியாநின்ற சருவேந்திரிய ஸத்தாரூபமான சைதந்நியத்தை சகலஜகங்களினும் ஏகாகாரமாய் வியாபித்து விளங்குவித்து, விளங்கியசைதந்நியத்தை யேகமென்றநுபவிக்க தன்னுடையது பிறருடையது என்ற இந்திரிய விவகாரம்நீங்கி, சகலேந்திரியங்களினும் அவைகளின் விஷயங்களினும் உள்ளும்வெளியும் வியாபித்து ஏகாகாரமாய் விளங்கிய விராட்டுபாதியும் விராட்டு சைதந்நியஸ்வரூபமுந் தன்னிந்திரியாபிமானிசைதந்நியரூபமான விஸ்வனைத்தவிர வேறில்லையென அநுபவிக்கலாகும்.

இரணியகற்பனைக்கூறுதல், தனது சொப்பனத்தில் மனோவாசனரூபமான நானுபேதமுடைய ஜகமானது எப்படி விளங்குகின்றதோ, அப்படியே சகலசீவர்களுக்குஞ் சொப்பனத்தில் மனோவாசனரூபமாய் நானுவியவஸ்தாபேதங்களாய்த் தோன்றுவதால், இந்திரியசத்தையைவிட்டு மனோவாசனரூபமானசத்தையினுற் சகலஜகங்களும் ஒன்றுபோலச்சாக்கிரவாசனைநீங்கிட அவரவர்களின் சொப்பனத்தில் வியவஸ்தாபேத

மாய்த்தோன்றிய சகலவிஷயங்களும் அவைகளின் வியாபார ங்களும் சகல விஷயவியாபாரிகளான இந்திரியங்களும் அவைகளிற்றோன்றிய நானாசீவர்களின் சங்கற்பாதிமனோவியாபாரங்களும் நானா வியவஸ்தாபேதங்கள்போற்றோன்றினபோதினும் வியவஸ்தாபேதங்களைத் தள்ளத்தனது மனோவாசனாரூபமாய்த்தோன்றிய தனது சொப்பனம்போலவே சகல சொப்பனங்களும் ஆய்விடும்.

தன்மனதிற்றோன்றிய தனதுசொப்பன ஜகமுந் தன்மனதில்விளங்கிய தனது சைதந்நியமுந் தன்மனதையுந் தனது சைதந்நியத்தையுந்தவிர எப்படிவேறில்லையோ, அப்படியே சகல சொப்பனங்களும் அவைகளிற்றோன்றிய சகல ஜகங்களுஞ்சொப்பனவாசனாபீஜமான மனங்களும் அவைகளிற்பிரவேசித்துவிளங்கிய சைதந்நியமுந் தன்மனதையுந் தன்சைதந்நியத்தையுந்தவிர வேறில்லையென அறிய இரணியகற்பனதுஉபாதியும் அவனது ஸ்வரூபமும் வெளியாகும்.

☞ இதினநுபவம் சகலசீவர்களின் ஜாக்கிரநீங்கிய மனோபாதியை நானாவாயுள்ளபடி யதுசந்தானித்து ஒவ்வொரு மனோவாசனையிற்றோன்றிய நானாவாகிய விஷயாநுபூதிகளை வெவ்வேறாகிய மனோபாதிகளில் அதிவிஸ்தாரமாக விஷயஜகத்தினநுபூதிகளைப் பின்னபின்னங்களாய்த் தியானவிசேஷத்தாற்கற்பித்து, அந்தந்த மனோரூபமான சொப்பனங்களைத் தன்சொப்பனம்போல அதிவிஸ்தாரமாயநுபவித்து, அந்தந்த சொப்பனங்களிற்றோன்றிய ஜகங்களையும் வாசனாபேதங்களையும் அநுபவியாநின்ற சீவர்களையும் அந்தந்த சீவர்களினிந்திரியங்களையும் அவரவர்களின் சங்கற்பவிசேஷமுடைய மனதுகளையும் சங்கற்பரூபமான தன்மனதைத்தவிர சங்கற்பபேதங்களுடைய அந்தந்த மனதுகளும் வேறில்லையெனத்தெளிந்து

சகலர்களின் சொப்பனமும் அதிற்றோன்றிய விஷயங்களும் அவற்றிலநுபவியாநின்ற விஷயிகளும் பின்னபின்னங்களாய்த் தோன்றினபோதிலும் அவைகளை யுள்ளும்வெளியும் அநுப் பிரவேசித்து தன்மனோபாதியால் விளங்கிப்பார்க்கத் தன் மனோபாதியு மதிலநுப்பிரவேசித்துத் தனது சைதந்நியமும் ஏகாகாரமாயநுபவிக்கப்படும்.

அவ்வித அதிவிஸ்தாரமுடைய நானாபேதமான சகல சொப்பனஜகங்களையும் நானாசொப்பன பீஜமானமனதுகளையும் அவைகளின் அநுப்பிரவிஷ்டமனோபாதியுடைய சிவசைதந்நியங்களையும் உள்ளும்வெளியும் வியாபித்துவிளங்கிய அறிவான தன்னையும் அறிவினுபாதியான ஏகாகார மனோவிருத்தியையும் பேதமாய் நிரூபிக்க யுக்தியநுபவங்களால் காரணமில்லாததனால், அவ்வித சகல சொப்பனங்களையும் உள்ளும் வெளியும் வியாபித்த ஏகாகாரமனோவிருத்தியே இரண்ய கற்போபாதியாகும். அந்த உபாதியிலுள்ளும் வெளியும் வியாபித்து விளங்கிய சைதந்நியமே இரண்யகற்பனாவான். இப்படியநுபவிக்க தைஜஸனான நம்மையுந்தைஜஸவுபாதியான மனது அந்தக்கரண விருத்தியையுந் தவிர இரண்யகற்பவுபாதியும் இரண்யகற்பனும் வேறில்லையெனத் தெளியவரும்.

அந்தரியாமியைக் கூறுதல், எறும்புமுதற்பிரமாதிவரை சகலசிவர்களும் ஜாக்கிரஞ் சொப்பனமிரண்டுவகையான இந்திரியவுபாதியையும் மனோபாதியையும்விட்டுநீங்கசகலர்களும் ஜகவியாபாரமற்று சுழுத்தாளாய்விடுகின்றார்கள். அப்பொழுது தான் பிறர் என்ற வியகாரசூநியங்காணப்படுகின்றது. அப்படியே சகலேந்திரியங்களிலுஞ் சகலமனதுகளிலும் பிரவேசித்துநின்ற இரண்யகற்ப ஸ்வபாவமுடைய தனதுதைஜஸனேயும் அவனுபாதியான அந்தக்கரணத்தையும் சகலசிவர்களின்

ஜாக்கிரசொப்பனங்களிலும் உள்ளும்வெளியும் வியாபித்தவ்
வபாவத்துடன்கூட சுழுத்தியை யநுசந்தானபெலத்தினு லடைந்துவிட சகலசீவர்களும் சகல ஜகவுபாதிகளைவிட்டு நீங்கிச் சுழுத்தியையுடையவர்களாய் விடுவார்கள்.

அவ்வித சகல சீவர்களின்சுழுத்தி, அஞ்ஞானரூபமானதால் அவ்வித சகல அஞ்ஞானமும் அவரவர்தன்மையில் வியஷ்டித்தன்மையாற் பேதமுடையதாயினும், அவ்வளவு அஞ்ஞானத்தையும் உள்ளும்வெளியும் வியாபித்து சுழுத்தியை அடைந்த சைதந்நியஞ் சமஷ்டியுபாதியுடைய இரண்யகற்பனுனதைஜஸனைத்தவிர வேறில்லாததனுல் கீழ்க்கண்ட சுழுத்தியுபாதியாகிய அஞ்ஞானமும் சமஷ்டியாகலாம். சமஷ்டியென்றால்வியஷ்டியைப்பற்றிவந்ததால் அபேதமான பேதமுடையதாகவும் ஏகத்தைப்பற்றிவந்ததால் அகண்டமெனவுங் கூறப்படும்.

☞ இதில், இரண்யகற்பன் ஏகமானதால் அவனது சுழுத்தியுபாதியான ஆவரணமும் அகண்டமெனப்படும். அவ்வித அகண்ட சுழுத்தியுபாதியான ஆவரணத்திற் பிரதிபலித்தசைதந்நியம் அந்தரியாமியெனப்படும் அவ்வித உபாதியை மாயையென்று விவகரிப்பார்கள் அவ்வித உபாதியை யுடையவனை மாயியெனக்கூறுவார்கள்.

☞ இதினநுபவட், கீழ்ச்சொன்னபடி சற்வோபாதியில் ஏகனுய்விளங்கிய இரண்யகற்பசுபாவமுடைய, தான் சகல சுழுத்திகளையும் அநுப்பிரவேசித்து அடங்கிநிற்க, தனதஞ்ஞானம்போல் சகல அஞ்ஞானமும் ஆவரணரூபத்தாற் பேதமில்லாததால் சகல வியாபாரங்களும் நீங்கிய சருவர்களினஞ்ஞானமும் நமதஞ்ஞானத்தைத் தவிர வேறில்லையென அநுபவிக்கக்கூடும்.

அவ்வித ஜகச்சூநியாகார சகல சுழுத்தியநுபூதியையுங்

த்தாகார்மாய்நுப்பிரவேசித்துப்பார்க்க சகலர்களின் சூநியாகாரமான சுழுத்தியநுபூதியும் அகண்டமாயநுபவிக்கப்படும். அவ்வித அகண்டோபாதியான சூநியாகார்சுழுத்தியா மாயையும் அதிலநுப்பிரவேசித்து நின்றமாயியாம் ஈஸ்வர சைதந்நியமும் நமது சுழுத்தியுபாதியையும் அந்தவுபாதியிலநுப்பிரவேசித்த பிராஞ்ஞசைதந்நியத்தையுந் தவிர வேறில்லையென அநுபவிக்கலாகும்.

சருவஞ்ஞபரமேஸ்வரனைக்கூறுதல், தனது சுழுத்தியைக்காட்டிலும் வேறில்லாநின்ற அகண்டாவரணமாம் ஸர்வசுழுத்தி ஸ்வரூபமான மாயையை அநுப்பிரவேசித்த சைதந்நியவுபாதியுடைய அந்தரியாமியான பிராஞ்ஞனும் தான்விழிக்குங்காலத்தில் நானென்ற அகங்காரவிருத்தி நமது தேகத்தையும் நமது இந்திரியங்களையும் நமது இந்திரியங்களின் லயரூபமான சுழுத்தியையும் பீஜரூபமாயேகீகரியாநின்றது போல ஸமஷ்டி ஸ்தூலஜகத்தையும் ஸமஷ்டி இந்திரியங்களையும் ஸமஷ்டி அந்தக்கரணங்களையும் அவற்றின் லயரூபமான மஹா சுழுத்தியையும் பீஜாகாரமாய் விஷயீகரியாமல் விஷயீகரிக்கும்.

அவ்வித மஹா அகங்காரவிருத்தியில் பிரதிபலித்த சைதந்நியத்தால் மஹா அகங்காரத்தின் ஸ்வபாவத்தையும் மஹா சுழுத்தியின் ஸ்வபாவத்தையுஞ் சோதித்துப்பார்க்க, அவ்வித சுழுத்தியை அறியும்பொருட்டு அபாதிதனுயுள்ள அதிஷ்டான சைதந்நியத்தைத் தானுகவிளங்குவிக்கும்; அவ்வித அதிஷ்டான சைதந்நியத்தைப் பிரதிபிம்பமாகக்கிரகியாநின்ற சுத்த அஹங்காரவிருத்தியில் பிரதிபலியாநின்ற பூரணசைதந்நியத்தையும் அதினுபாதியையும் ஸருவஞ்ஞ ஈசனென்றும் வித்தியாசக்தியென்றும் அறியப்படும்.

அவ்வித ஈஸ்வரன் தனது வித்தியோபாதியினால் ஸர்வ சாக்ஷி ஆவான். அவ்வித ஸர்வசாக்ஷியான அவனுஞ்சுழுத்தி சாக்ஷியான நம்மைத்தவிர் வேறில்லையெனத்தெளிந்து விபஷ்டி சுழுத்தியிலும் இதின் சமஷ்டிசுழுத்தியான பிரளயத்திலும் ஞானம் அஞ்ஞானம் ஞானஞானம் யாதொரு விருத்தியில்லாத்தினால், விருத்தியினுதவியில்லாத ஸ்வப்பிரகாசமான சைதந்நிய ஸ்வரூபமாக நில்லாமல்நிற்க சொப்பனத்திற்கண்ட ஜகம்விழித்தவுடன் திருஷ்டாமாத்திரமா யெப்படியில்லாமல் த்தெளிந்ததோ அப்படியே ஜாக்கிரத்து முதலான ஸருவசம் பூரணம்வரையிலுள்ள திருசியமெல்லாம் ஸ்வயந்திருஷ்டாவாயுள்ள திருக்மாத்திரமா யில்லாமல்த்தெளிந்துவிடும்; அப்பொழுது உண்மைவெளியாம்.

பஞ்சீகரணஅநுபவவாலாறு, அதிஷ்டானமான ஸத்சொரூபமே தானான தன்விகாசவிசேஷத்தால் சத்தாரூபமாய் விவர்த்திக்க, அவ்வித சத்தைக்ருச்சித்தென்ற நாமமுண்டாயிற்று. இவ்வித தனதுஸ்பூர்த்திரூபமான நாமரூபங்களால் நிர்விசேஷமான அதிஷ்டானத்தை ஸத்தென்று ஸவிசேஷமாக எதிரிட, அந்தஸத்தை வியாபகதர்மமுடையதாகவாயிற்று.

அவ்வித தர்மிக்கு, தர்மம்வியாப்பியமாய் வீக்ஷிக்கப்பட அந்தத்தர்மமே இதந்தையெனுந் தன்மையுடைய துவம்பதசத்தையென்று பெயருடையதாய்ப்பவித்தது இஃதையெதிரிட்டுப்பாராநின்ற வீக்ஷணதர்மத்தால் அறிகிறேனென்று தர்மியானஸ்வாத்மஸ்பூர்த்திவரத்திரிய, அறிகிறேனென்ற உத்தமபுருஷைகவசனத்திலுள்ளடங்கிய வசந்தாரூபமாகத் தர்மியின் வீக்ஷணதர்மமே விவர்த்தித்தது இவ்விதவீக்ஷணுகங்காரதர்மத்தால் வீக்ஷிதாவான ஞாதாவுக்கு அகங்காரியென்ற பெயருண்டாயிற்று.

ரு௯ இவ்வித வீக்ஷிதஞாதாகங்காரியென்று நானுவுபாதியாற்றோன்றிய நானுநாமமுடைய இந்தத்தர்மி நானுவாய்ப் பவிப்போமென்று ஜகசிருஷ்டிசெய்யும்படி வீக்ஷிக்க, வீக்ஷிதாவானநானேசராசரமான ஜகத்தாகவிவர்த்தித்தான். பின்பு தனது விவர்த்தமான ஜகத்திற் றோன்றிய சர்ப்பத்தில் இரச்சுசத்தை அநுசூதமாய்ப் பிரவேசித்ததுபோல, அநுப்பிரவேசித்துநிற்க, அநுப்பிரவிஷ்டபாதத்துக்கு ஆத்மாவென்றும் அநுப்பிரவேசத்துக்குப் பாத்தியப்படாத முத்தியபாதத்துக்குப் பரமாத்மாவென்றும் பெயராம்.

அநுப்பிரவிஷ்ட ஆத்மாவுக்கு உபயோகத்தின்பொருட்டு விவர்த்திக்கப்பட்ட அசரமான பஞ்சபூதமென்ன சரமான பாகியேந்திரியங்களென்ன அந்தரிந்திரியங்களென்ன இவைகளுக்கு உற்பத்தியிற்கண்ட பஞ்சீகரணத்தை, அம்ச விநிமயமுடைய தத்துவங்களில் அந்தந்த அம்ச விநிமயம் அநுபூதியிற்றெரிய நிருபணப்பிரகாரம்.

பஞ்சபூதங்கள், பஞ்சிகிருதமென்றும் அபஞ்சிகிருதமென்றும் இரண்டு பிரிவுடையதாகும். அவ்வித அபஞ்சிகிருத பஞ்சபூதத்தில்நின்றும் பஞ்சிகரணமுடையது பஞ்சபூதமாம். அவ்வித அபஞ்சிகிருத பஞ்சபூதங்களை யெட்டுப்பங்காக்கிப் பாதியை ஸ்வபாகங்களாய்வைத்து நான்குபாகங்களை விநிமயவிசேஷத்தாற் பஞ்சிகரணநுபூதி யெப்படி யென்னின், பஞ்சிகிருதாபஞ்சிகிருதமென்னு முபாதியையுடைய பஞ்சபூதங்கள், இருபத்தைந்து வகுப்புடையதாகும். அதில் ஆகாயபஞ்சகமாவதேதெனி? பூதாகாயம் இந்திரியாகாயம் சைத்தாகாயம் சூநியாகாயம் சிதாகாயம்; பூதவாயு இந்திரியவாயு பிராணவாயு சூநியவாயு சித்வாயு; பூதாக்கினி இந்திரி

யாக்கினி சைத்தாக்கினி சூநியாக்கினி சிதக்கினி; இப்படியே மற்றவிரண்டும். அவைகளின் சப்தாதிகுணங்களும் அப்படியே. ரஜஸ் சத்வம் தமஸ் சாமியற் சுத்தசத்வமென்னும் ஐந்துகுணங்களே சப்தாதிகுணங்களாயும் பஞ்சபூதங்களாயும் விவர்த்தித்து, அபிவியஞ்சியாபிவியஞ்சகமாக விளங்குவதால் அந்தக்குணங்களோடும் பூதங்களின் பஞ்சீகரண உபயோகியான அர்த்தபாகத்தை நான்கு அம்சமாய்ச்செய்த அம்சம் அந்தந்த யீவுப்பிரகாரஞ் செல்கையெப்படியெனின், ஆகாயத்தின் திரிகுணங்களில் ரஜோகுணம் விஜிரிம்பிக்க அந்தவிஜிரிம்பணமே வாயுவினிடமாய்ச் சென்று அசைவுக்கிடமாய் நிரவி ஆகாயத்தின் ரஜோகுண விஜிரிம்பணமான ஒரு அம்சத்தையடைந்தது. அந்த வாயுவின் முக்குணத்திற் றமோகுணம் விஜிரிம்பிக்கத் தமோகுணத்தின் விஜிரிம்பணமான ஒரு அம்சத்தை யக்கினியினிடமாய்ச்செலுத்தித் தகனசாமர்த்தியமாய்ப்பிரகாசிக்க அவ்வித அக்கினியின் சத்வகுணம் விஜிரிம்பித்து ஜலத்தில் திரவகுணமாய் பிரவேசிக்க, அவ்வித அப்புவின் தமோகுணம் விஜிரிம்பித்துப் பிருதிவியிற் கடினமாய்விளங்க, அவ்வித பிருதிவியின் சத்வகுணமானது விஜிரிம்பிக்க அவ்வித விஜிரிம்பணத்தை ஆகாயம் அதிசூக்ஷமமான உச்சநீச விலாச பாவமாக அடைய, ஆகாயத்தின் சத்வகுணம் விஜிரிம்பிக்க அஃதை வாயு நிராகாரத்தன்மையாய்க்கொள்ள, வாயுவின் சத்வகுணம் விஜிரிம்பிக்க அஃதை யக்கினி தனது ஊர்த்வச்வலனமாகத் தரிக்க, அக்கினியின் தமோகுணம் விஜிரிம்பிக்க அஃதை அப்பு அதிஜாட்டியமான சீதஸ்பரிசமாக அடைய, அப்புவின் சத்வகுணம் விஜிரிம்பிக்க, அஃதைஅணுவாதி மகதந்த அவயவாவயவியான ஜகத்தாரணசக்தியாகத்தரிக்க, பிருதிவியின் தமோகுணம் விஜிரிம்பிக்க அஃதை அணுகடமடமேரு மஹதாதி நாமமுள்ள ஸ்தூல பேதமுள்ளதாகத்தரித்தது. ஆகாயத்தின் தமோ

குணம் விஜிரிம்பிக்க அஃதை வாயு நிராகார ஸ்பரிசமாகக் கொள்ள வாயுவின் ரஜோகுணம் விஜிரிம்பிக்க அஃதை யக்கினி லோகிதவர்ன்னமாக அடைய, அக்கினியின் ரஜோகுணம் விஜிரிம்பிக்க அஃதை அப்பு சுக்கிலவர்ன்னமாகத்தரிக்க, அப்புவின் ரஜோகுணம் விஜிரிம்பிக்க அதைப்பிருதிவி கிருஷ்ணவர்ன்னமாகத்தரிக்க, பிருதிவியின் ரஜோகுணம் விஜிரிம்பிக்க அஃதை ஆகாயந் தன்னிடமாய் மற்ற இரண்டு குணங்களால் ஸ்தம்பிக்க ஆகாயம் ஸாமிய குணமுடையதாயிற்று. காரண பூதம்போ லப்படியே நான்கு பூதங்களும் பஞ்சீகிருத வேறுவேறான சாமியாவஸ்தையை யடைந்தது.

☞ இவ்வித சாமியம் ஸ்தூல மத்திம சூக்ஷுமகாரண துரியமென்று ஐந்துவிதமாய்க் கூறப்படும். அதில் மூன்சொல்லிய சிதாகாயத்திற் சுத்தசத்வம் விவர்த்தமாய் விகசிக்க சிதாத்மக நாதோற்பத்தி யுண்டாயிற்று.

அவ்வித நாதம் சூநியாகாயத்தைப்பிரவேசிக்க, கிஞ்சித்துக் கிரியாசக்திரூபமான அஸ்பஷ்த ஸ்பஷ்தமுடைய நாதமாயிற்று. அவ்விதநாதம் சைத்தியாகாயத்தையடைய இச்சாஞானக் கிரியாசக்தியுடைய அநுச்சாரித வர்ன்னரூபமான நாதமாயிற்று. அவ்விதநாதம், பஞ்சீகிருதபூதாகாயத்தைச்செல்ல, இச்சா ஞானக்கிரியையென்ற மூன்றானதன்சக்தியாற் றான் மூன்றுபாகமாய்ப்பவித்து, அதில் இச்சாபாகத்தை சைத்தியத்தில்வைத்து ஞானபாகத்தை சப்தக்கிரஹணசாமர்த்தியமுடைய சுரோத்திரேந்திரியமாகச்செய்து கிரியாபாகத்தை வாக்கிந்திரியமாகச்செய்து இந்த வாக்கிந்திரியத் துவாரா தந்தோஷ்டத் தாலுவாகாத கிரியாசம்புடிதமாய்க்கொண்டு வைகரி விசேஷநாதமாய் விளங்கிநின்றது.

☞ இவ்வித நாதமே ஐந்துவிதமான வாய்வைச்சம்பந்தி

க்க அந்தவாயுக்களில் காரணகுணமான நாதமாகியும், முன் சொல்லிய காரியகுணமான ஸ்பரிசமாகியும் அதின் மாத்ரா ரூபமான த்வக்கிந்திரியமாகியும் விளங்கிநின்றது. அப்படியே மற்ற மூன்றுபூதங்களிலும், காரணகாரியகுணங்களாகியும் அ ததின்பாகமான இந்திரியங்களாகியும் பவித்துநின்றது.

இந்தப்பிரகாரமே அந்தக்கரணமனோபுத்தி சித்தாகங் காரங்களாயும், இச்சாஞானக்கிரியா சூக்ஷ்ப்த நாததத்துவம், மத்திம பஞ்சீகிருத சாமிய பஞ்சபூதங்களைச்செல்ல, அந்தக்க ரணமனோபுத்தி சித்தாகங்காரங்களாயும் அதனுகளின் அஞ் ஞானசம்சயநிச்சய ஆலோசனை அதைக்கொடாநின்ற அக மெனு மௌட்டியங்களான தர்மங்களாகியும் பவித்து நின்றது.

☞ இதில் அந்தக்கரணத்திலதிஷ்டான ஞானசக்தியா ன பஞ்சபூதங்களின் வியாகிருத சுத்தசத்வமும், மனதில் வா யுவின் கிரியாசக்தியான ரஜோகுணமும், புத்தியில் அக்கினி யின் ஞானசக்தியான சத்வகுணமும், சித்தத்தில் அப்புவின் ஞானசக்தியான சத்வகுணமும் ஆகாயத்தின் கிரியாசக்தியா ன ரஜோகுணமிரண்டும், அகங்காரத்திற் பிருதிவியின் கிரியா சக்தியான தமோகுணமும், அக்கினியின் ரஜோகுணமுமாக நிரவிநிற்கும்.

அந்தக்கரணமென்பது இரண்டுபாகமுடையதாம். சங் கோசவிகாசபேதத்தால் அஃது அகங்காராதிகளை யெதிரிடத் திரிய விகசிதாந்தக்கரணமென்றும், ஜகத்சத்தாசூநியமான சுழுத்திவிருத்தியை யெதிரிடத்திரியக் காரணஞ்ஞானரூபசங் கோசாந்தக் கரணமென்றுங் கூறப்படும்.

முன்சொல்லிய ஞானசக்தியான சமஷ்டி பஞ்சபூதவியா கிருத சுத்தசத்வஞ் காரணஞ்ஞான ரூபமான சங்கோசாங்

த்க்கரணத்திலும்; விகாசரூபாந்தக்கரணத்தில் ஆகாயத்தின் ஞானசக்தியான சத்வமுமாக நிற்குமென்றறிந்தநுபவிக்கத் தக்கது. இவ்வித அஞ்ஞான ரூபசங்கோசாந்தக் கரணமானது அவிவேகிகளிடத்தில் அவித்தையாகவும், விவேகிகளிடத்தில் வித்தையாகவும் விளங்கும். அவிவேகியென்றால், நான் தூங்குகிறேனென்றவனை விழித்திருப்பதாயறிவதுபோல தூங்கினேனென்றதன்னை விழித்திருந்தவனாயறிய விவேகமில்லாதவனே யவிவேகி. உள்ளபடியறிந்தவனே விவேகியாம்.

ஸ்ரீ இந்தப்பஞ்சபூதங்களின் தனதம்சமான மாத்திரைகளையும் குணங்களின்மாத்திரைகளையும் பஞ்சீகரணனந்தரமுதித்த மாத்திரைகளையும் காரணமாத்திரைகளோடுங்கூட, இலக்கமிட்டு அவைகளின் ஆவிர்ப்பாவமே (கூ௰௪) தத்துவம் அதின் திரோதானமே பிரளயம் அவைகளின் அவிவேகமே பந்தம் விவேகமே மோக்ஷமென்றும் அவைகளின் சங்கோச விகாசரூபாவிர்ப்பாவதிரோ பாவமுடைய தலங்களால் வந்த நாமங்களுடன் நிரூபிக்கப்படுகின்றது.

சத்வம் இராஜசு தமசு சாமியம் இந்த நான்கும் நான்கு மாத்திரையுடையவைகளாகும். அந்நான்கும் ஒன்றுவ்கு அம்சமுடைய பஞ்சபூதங்களைச்சார, ஒரு பூதத்தின் நான்கு அம்சத்தால் (௰௬) மாத்திரையாகி அப்பிரகாரஞ் சகலாம்சங்களாலும் (அ௰) மாத்திரையாகப்பவித்துப் பூதங்களுக்குப் பஞ்சீகரணத்தைத்தோற்றுவித்தது, அவ்வித பஞ்சிகிருத பூதங்களிற்றோற்றிய காரியகுணங்களான (௰௫) மாத்திரைகளைச் சேர்க்க (கூ௰௫) மாத்திரைகளாயிற்று. இதில் அதிஷ்டான சத்தாமாத்திரையைச்சேர்க்க (கூ௰௪) ஆயிற்று. இவ்வித மாத்திரைகள் (கூ௰௪) தத்துவங்களாய்விளங்கி பிரமாண்டங்களாக விவர்த்தித்திருக்கின்றது. இவ்வித (கூ௰௪) மாத்திரைகளும்

ஒவ்வொன்று தன்தன் காரணமாத்திரையிலடங்க சருவமும் ஸ்தான அமாத்திரையிலடங்கும்.

இவ்வித மாத்திரைகள் ஜகத்தாய்விளங்கிய காலத்தில் நான்குவகுப்பாய் பகிர்மாத்திரையென்றும் அந்தரமாத்திரையென்றும் காரணமாத்திரையென்றும் ஸமமாத்திரையென்றுங் கூறப்படும். இந்த நான்குஞ் சீவநிலையில் ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் இந்த அவஸ்தைகளில் ஜாக்கிரத்தில் சப்த ஸ்பரிச ரூபரஸ கந்த பஞ்சபூத பாஞ்சபௌதிக பஞ்சேந்திரியங்களாக விளங்கிநின்று, கூடஸ்தேந்திரியமான பாகியமாத்திரை தனது விகாசமான சப்தாதியனைத்தையும், தனது சங்கோச விகாச விசேஷத்தால் கிராஹியகிராஹகமாக விளங்கி நிற்கின்றது.

கூடஸ்தெந்திரியமென்றால், சிரவணாதி ஐந்திந்திரியங்களிலும் வாக்காதி கர்மேந்திரியங்களிலும் அந்தந்த நாமங்களோடுங்கூட சுரோத்திரேந்திரியம் த்வக்கிந்திரியமென்று இந்திரியசத்தைத அநுரூதமாய் வியாபித்து விளங்குவதால், சிரவணாதி உபஸ்தாந்தம் ஸர்வேந்திரியகோளகங்களையுந் தனது சத்தையால் வியாபித்து கோளகோபாதிபேதத்தால், அந்தந்த வல்லமையுடையவனாகத் தோன்றி கோளகங்களில் நின்றும், தனதுவியாபகம் ஆந்தரமாத்திரையின் ஸ்புரண விசேஷத்தால் றன்னிடத்திலடங்கி நிற்க அவ்விதசங்கோச விகாசத்துக்காதாரமா யிருந்த இந்திரியசத்தாவிசேஷமே கூடஸ்தேந்திரிய மெனப்படும். இந்தமாத்திரைக்கு ஸ்தானம், கண்டோர்த்வபாகத்தில் அந்தாசிக்வையின் ஊர்த்வப்பிரதேசமான விந்துவாகாரகோளக விசேஷமாம்.

இப்படியே அந்தரமாத்திரையுந் தனது ... சருவமான ... அஹங்காரசித்த அந்தக்கரணமென்று

ஐர்தையுங் கிராஹ்யகிராஹகமான தனது தர்மவிசேஷத்தால் விளங்குவித்து, தனது காரணமாத்திராஸ்பந்த விசேஷத்தால் தனது வியாபக சக்தியைத் தன்னிடமாய் அடக்கி நிற்கு மிந்திரிய சத்தைப்போல, இந்த சத்தையும் நான் சங்கற்பித் தேன் நானிருணயித்தேன் நான் ஆலோசித்தேன் நானகங் கரித்தேன் நானிந்த நான்கையுர் தவிர்ந்திருந்தேனென்று அ ஹம்ஸந்தை வியாபித் தநுபவிக்கப்படுவதால், மனமுதற் சித்தம்வரை தவிர்ந்த இடம் அந்தக்கரணமானதால், இந்த அந்தக்கரணாதி ஐர்தாக அததினுபாதியினின்றுவிளங்கித் தன து உபாதிமாத்திரமாய் சேஷித்ததெதுவோ அந்தஹந்தைக்கு அந்தரமாத்திரையெனச் சங்கேதம். இதினிருப்பு, ஹிருதய குஹரத்தில் அங்குஷ்டாகாரமாய் விளங்கிய தஹரமத்திம மான விந்து ரூபகோளகவிசேஷமாம்.

அஹந்தையென்றதின்பொருள், அற்பமென்றும் மத்தி மமென்றும் மகத்தென்றும் மூன்றுவிதமாகத்திரியும். மன முதற்சித்தம்வரை நான்கினுள்ளடங்கிய அஹங்காரம் அற் பமெனப்படும். அந்தக்கரணம் மத்திமமெனப்படும். அஃதை யும் வியாபித்துவிளங்கிய அஹந்தைமகத்தெனப்படும்.

காரணமாத்திரையைக்கூறுதல்:— சமமாத்திரையின் ஸ் பந்தவிசேஷத்தால் மஹாஹந்தை தனது சங்கோச விகாச ரூபமான இரண்டுமாத்திரைகளின் கிராஹ்யகிராஹகரூபமாய் விளங்கிய வியாப்திதர்மத்தை, தனதிடமாயடக்கிநிற்கத்தனது காரியமாத்திரை காரணமாத்திரையோடுங் காரணமாத்திரையா ன தனது சக்தியால் ஐக்கியப்பட, சர்வோபரமரூப அநிர்வச னீய சுழுத்தி சத்தாரூபமாக விளங்கி நின்றதெதுவோ, அது வே காரணமாத்திரை யெனப்படும்.

அத்திரையின் வியவியாம்:— பூதங்கள் தப்ராதிமாத்

திரைகளோடும் ஞானேந்திரியத்தி லடங்கிநிற்கும், இந்திரியங்கள் தனது மாத்திரைகளோடும் மனோபுத்தி அஹங்காரஞ் சித்தமிவற்றை விழுங்கிய அந்தக்கரணத்திலடங்கிநிற்கும். அந்தக்கரணம் மஹாஹங்கையிலடங்கிநிற்கும், மஹாஹங்கை காரணமாத்திரையில் ஐக்கியத்தையடைந்து காரணமாத்திரைமாத்திரமாய் சேஷித்துநிற்கின்றது. இது சீவர்களின் நைமித்திக சங்காரம் இந்தமாத்திரையினுதாரம், முன்சொல்லியவிந்துகோசகம்மூன்றுவரணமுடையதாகும். பகிராவரணம் ரஜோகுணம் ஞானசக்தி இவ்விரண்டையுமுடையது. இரண்டாமாவரணம், சத்வகுண இச்சாசக்திஇவ்விரண்டையுமுடையது. மூன்றுமாவரணம் தமோகுணம் கிரியாசக்தி இவ்விரண்டையு முடையது; இந்த மூன்றுமாவரணம் காரணமாத்திரைக்கு இருப்பிடமாம் குணமென்பது சிங்காசனம் சக்தியென்பது அதிகாரவல்லமை. கீழ்ச்சொல்லிய மஹாஹங்கை காரண சாத்வீகாஹங்கையென்றும் காரண ராஜஸாஹங்கையென்றும் காரணதாம்ஸாஹங்கை யென்றும் மூன்று பேதமுடையதாகும்.

இதை யநுபவத்திற்றெரியவிபரம்:—சுகமாய்த்தூக்கஞ் செய்தேனென்றதில், முன்சொல்லிய மஹாஹங்கை காரண சத்வாநுபூதியை எதிரிடசுத்தமாத்திராநுபூதியுடைய, காரண சத்வாஹங்கையென்றும். காரணதமோவநுபூதியை யெதிரிட பாதிதஜகஞான அதிஷ்டானஞானரூப அஞ்ஞான சாடாந்தகாரமான காரண தாம்ஸாஹங்கை யென்றும், காரண ரஜோகுணாநுபூதியை யெதிரிட, செய்தேனென்ற கிரியையுடைய காரணராசஸாஹங்கை யென்றுந் தெரியவரும்.

கீழ்ச்சொல்லிய காரணமாத்திரையினநுபூதியில் ஜகப்பிரதீதியில்லாததனால் ஞானசக்தி இச்சாசக்தியிலும், இச்சாசக்தி கிரியாசக்தியிலுமாக லயித்து, கடம்போல இச்சாஞ

னசக்தி ஈனமாக்ய்கொண்டு தானூர்தனது ஸ்பூர்த்திரகிதமாய்ச் பவித்து சாம்மியமாத்திரையாய் விளங்கிநின்றது.

இத்திசையே சிவனைமித்திகப் பிரளயம். இதிற் கிரியாசக்தியுங் குணத்திரையத்தில் லயத்துடன் லயித்துவிட்டதால், குணசாம்மியம் சக்திசாம்மியம் இவ்விரண்டும் சாம்மிய மாத்திராரூபமாக விளங்கிநிற்கும்.

துரியமாத்திரையைக் கூறுதல்:— முன்சொல்லிய காரணமஹாசாத்விகாஹங்தை துரியமாத்திரையை யெதிரிட வர்த்தமானத்திற் றூங்குகிறேனென்றவன் விழித்திருக்கிறானென்று அறியப்படுவதுபோல, பூதகாலத்திற் றூங்கினேனென்ற நாமமும் விழித்திருந்தோமெனவே ஆகுகின்றதைத் தெளிந்து, அவஸ்தாத்திரையத்தி லுள்ளடங்கிய ஸ்தூலமுதல் சாம்மியம் வரை மாத்திரைகளைச் சோதித்து சாம்மியாசாம்மிய குணத்திரைய சம்பந்தரகித பிரஞ்ஞானகன சத்தா மாத்திரமான துரியமாத்திரையை அஹமென்றநுபவிக்க, அவ்வநுபூதியில் விஜாதிய பேதரகித ஸஜாதிய பேதசூசக வநுக்ஷிப்த சாக்ஷிஞானமே துரியமாத்திரை யெனப்படும்.

இந்த சாக்ஷிஞானம் நிர்விசேஷமென்றும் சவிசேஷமென்றும் பிரதிபாதிக்கத்தக்கதாகும். எப்படியெனின், முன்சொல்லிய காரணசாத்விக மஹாஹங்தை சாக்ஷிஞானத்தை யெதிரிட தான் ஸ்வயம் ஜடமான விஜாதீயமானதால் ஞேயயாகத்திரியும், காரியரூப விஜாதீயமான ஞேயதர்மத்தைநீங்கி தனது காரணமான சாம்மிய மாத்திரையின் சத்தாரூபமான சாம்மியத்தை அநுபூதி விசேஷத்தாலடைய அவ்வநுபூதியில் ஆகாயம்போல் நிர்மலமாய் சாக்ஷி ஞானநுபூதிவிளங்க அவ்வநுபூதியில்விளங்கிய சாக்ஷிபோதத்தை சாம்மியாநுபூதி பெலத்தால் அஹமென்று விஜிரிம்பிக்க, அவ்வஹங்காரமும்

சாக்ஷிபோத கனமாகவே விளங்கும். இஃஉந்த விவேகதிசை யில் ஆத்ம வித்தையென்றும் ஆத்மஞானமென்றும் சொல் வார்கள். அவிவேகதிசையில் அவித்தையென்றும் அஞ்ஞா னமென்றும் விவகரிப்பார்கள்.

முன்சொல்லிய சாக்ஷிபோதகனமான அஹந்தை போத மயமாய் விளங்கினபோதிலும், அவ்வநுபூதியில் அதுநானெ ன்ற ஸஜாதீயதர்மந்தோன்றுவதால், அவ்விததர்மம் அவ் விததர்மி இடமாகவே விளங்கும். தர்மியென்றால் தர்மாபிமா னமுடையவன் இதில் நான் சாக்ஷி யெனும் இரண்டநுபூதி யும் சாம்மிய சத்தாசம்பந்தத்தால் ஏகமாய்விளங்குகின்றது.

சாம்மிய சத்தாசம்பந்தமுடைய காரணமஹாசாத்விகா ஹந்தையில் அதிஷ்டானஞானம் பிரதிவிம்பிக்க அப்பிரதி விம்பஞானத்தை சாம்மியசத்தையால் கீழ்ச்சொல்லிய அஹ ந்தை அஹமென்றுவரிக்க, அவ்வித அகர்தாநிஷ்ட சாம்மிய ஸத்தையை விமர்சினிசக்தியால் நிஷேதியாமலிருக்கின்றது அபிமானம். விமர்சினிசக்தியென்றால ஆலோசனவல்லமை. கீழ்க்கண்ட சாம்மியசத்தை சாம்மியமாத்திரையைச் சாரத் தக்கதென விமர்சிக்க அஹந்தைமாத்திரந் தனித்துவிடும். தனித்திடில் விஜாதீயதர்மத்தைச் சார்ந்து பிரகாசமற்றுக் காரணமாத்திரையி லடங்கிநிற்கும். ஸ்வயம்பிரகாசமான ஞா னமாத்திரஞ்சேஷிக்கும். சேஷித்தவஸ்துவே ஆத்மாவாகும். அஃதேநிர்விசேஷம் பிரதிவிம்பஞானஞ் சவிசேஷம் இஃ தேதர்மியாய் விளங்கிநின்றது இந்தத்தர்மஞானமே துரியமா த்திரை யெனவும் கூடஸ்தமாத்திரை யெனவும் ஆத்மமாத்தி ரையெனவும் பரியாயநாமத்தால் விவகரிக்கப்படும் இஃதே (௬௰௬) மாத்திரைகளாயும் (௯௰௬) தத்துவங்களாயும் பவித் துவியங்களாகியுமான ஜகத்தாகவிளங்குகின்றது; சமஷ்டியை

ப்பற்றுங்காலத்தில் ஈஸ்வரனெனப்படும்; வியஷ்டியைப்பற்று ங்காலத்தில் சீவனெனப்படும்.

☞ இவ்வித கூடஸ்தமாத்திரையில் வியாபினிசத்தியெனவும் விமர்சினிசத்தியெனவும் இவ்விரண்டு சத்திவிவர்த்தித்து அடங்கிநிற்கும். வியஷ்டி சமஷ்டி ஜகமாய்விவர்த்தித்திருக்கின்றஜகத்தைக் காரியமாத்திரைகளாகப்பிரிக்க ஜகத்சத்தை நீங்கி காரியமாத்திராசத்தையாக விளங்கும். காரியமாத்திரையென்றால் ஸ்தூலம் மத்திமம் சூக்குமமாத்திரைகளாகும், இந்தக் காரியமாத்திரையில் ஜாக்கிரஞ் சொப்பனம் இவ்விரண்டும் அடங்கிநிற்கும்; இஃதைக்காரணமாத்திரைகளாகப்பிரிக்க காரியமாத்திராசத்தையை நீங்கிக் காரணமாத்திரை மாத்திரமாய் சேஷிக்கும்; இஃதை சாமியமாத்திரையாகப்பிரிக்க காரணசத்தைநீங்கி சாமியமாத்திரை மாத்திரமாய்த் தனிக்கும்; காரணசத்தையென்றால் ஜகத்சத்தா சூநியப்பிரதீதியாகும், சாமியமாத்திரையை கூடஸ்தமாத்திரையாகப்பிரிக்க சாமியசத்தைநீங்கிக் கூடஸ்தமாத்திரை மாத்திரமாக சேஷித்திடும்; சத்தை யென்றால் விளங்குதல்; எது விளங்கியதோ அதுவே இருக்கின்றது; எதெதனால் விளங்குகிறதோ அதைத் தவிரவேறில்லையெனும் ஞாயத்தால் சாமியமாத்திரை முதல் சகல மாத்திரைகளும் ஜடமானதால் ஸ்வயம் விளங்குதலற்றவைகள்; ஸ்வயம் விளங்குத லற்றவைகளேவைகளோ அவைகள் ஸ்வயமில்லாதவை; ஸ்வயமென்றால் ஸ்வரூபமெனப்படும்; ஆகையாற் கூடஸ்தமாத்திரையான சத்தையைத்தவிர மாத்திரைகள் லசவிஷாணம் போலில்லையெனத் தெளியவரும். இங்ஙனமாகில் ஆத்மாவுக்குக் கூடஸ்தஸாக்ஷி தர்மமான பார்வையெனும் போதாகார ஸ்புரணமாகக் கூடஸ்தமாத்திரை விவர்த்தமாய் விளங்கிநின்றதெனக் கூறியது உபசாரமென் றநுபவியாமலநுபவிக்கப்படும்.

அநுபவச்சுருக்கம்:— முன்சொல்லிய வியாபினி சத்தியானது அகந்தையென்றும் இதந்தையென்றும் இரண்டு பேதத்தையடைந்து இதந்தையாலதின் சங்கோசவிகாச விசேஷத்தால் ஸகலஜகத்தையுஞ் சங்கோசவிகாசமுடையதாக ஆவரித்து ஆத்மாவையும் அகந்தையின் சங்கோசவிகாச விசேஷத்தால் சங்கோசவிகாசமுடையவன்போலாகவே ஆவரித்து நிற்குமாபோல காணப்படும். விமர்சினிசத்தியின் கருணாகடாக்ஷத்தையடைந்து விமர்சிக்க மகாவிஸ்தாரமுடையஜகம் கீழ்ச்சொல்லிய இதந்தையைத்தவிர வேறில்லையெனவும் இதந்தை அகந்தையைத்தவிர வேறில்லையெனவும் சகல ஜகத்தையுமிதென்றும் நானென்றும் வியாபிக்கின்றவல்லமையுடையது வியாபினிசத்தியானதால் வியாபினிசத்தியைத்தவிர ஜகம் இதந்தை அகந்தை இவ்வளவுமில்லாமல் வியாபினி சத்திமாத்திரமாய் விளங்கும், அவ்வித வியாபக சத்தாமாத்திரமாயுள்ள வியாபினிசத்தி, ஆகாயம்போலப் பூரணமானதால் அப்பூரணவல்லமையாம் வியாபினி சத்தியிற் பிரதிவிம்பித்து விளங்கிய சைதந்யம் சோதித தற்பத கூடஸ்தப்பிரமமாம். முன்னமே நிரூபிக்கப்பட்ட அந்தசோதித துவம்பதமான வியஷ்டி கூடஸ்தனையும் சமஷ்டி கூடஸ்தனையும் வியாபினிசத்தியில் பிரதிவிம்பித்து விளங்கிய சைதந்யத்தைத்தவிர வேறில்லையென ஐக்கியப்படுத்த அசிபதார்த்தாநுபூதியான மோக்ஷபதமாகவிளங்கும். அகந்தையும் இதந்தையும் முக்காலத்திலும் கீழேநிரூபித்த நியாயப்படி இல்லாவிடில், வியாபினிசத்தியும் மோக்ஷமுமுபசாரமென அசிபதகூடஸ்தனுக்கு விமர்சினிசத்தியால் தெரியவர வியாபினி சத்தி நீங்காமல் நீங்க அதில் அபிவ்யக்த சைதந்யமும் உள்ளபடி அதிஷ்டான மாத்திரமாய் சேஷியாமல் சேஷிக்க, அபாரகருணாசாகரையான விமர்சினிசக்தியும் ஞாதிருஞானஞேயாஹித நிர்விசேஷ... ...ன்அகூடச சொலத்

தகாத வஸ்து மாத்திரமாய் சேஷித்து நில்லாமல் நிற்குமென வுங்கூடப் பிரதிபாதிக்கத்தகாத வஸ்துமாத்திரமாயுள்ளபடி அநுபவியாமலநுபவிக்கப்படும்.

சரீரோற்பத்தி:—பஞ்சீகரணநுபூதி, ஸ்திரீபுருஷன் எதிரிட இருவருள்ளமும் பிரியமாகவுருக அவ்வித பிரியம் மோக்த்தால் விந்து நாதங்களாகத் தடித்து, கற்பகோளகத்தில் ஸமரசப்பட அவ்விதப்பிரேமையே சுகமாகவிளங்கிற்று. உள்ளமென்பது காரணமாத்திரைக்கும் சூக்கும மாத்திரைக்கும் பொதுவசனம், எப்படியெனின், சமரசத்தில் சுகங்காணப்படுவதால் சுகங்காரணமாத்திரையைப்பற்றினதெனத்தாற்பரியம். சமரசமென்பது சாமியமாத்திரையைப்பற்றினதென்க்கொள்க. அச்சமரஸாநுபூதி, சுகமாயிருந்ததெனச்சொல்வதில் இருந்ததென்றவநுபூதி விளங்கியதே யிருக்குமானதாற், கூடஸ்த சத்தாமாத்திரையைப் பற்றினதெனப்படும். அதைத்தானே வாக்கிந்திரியத்தால் விவகரித்து ஞானேந்திரியத்தாலநுபவிப்பதால் அச்சமரசத்தில் ஞானேந்திரிய கருமேந்திரிங்களடங்கியிருந்ததெனத் தாற்பரியம். அவ்விந்துநாதசமரசமான கற்பகோளகத்தில் கனமுடையதாகவநுபவிக்கப்படுவதால் பஞ்சிகிருத ஸ்தூலபஞ்சபூதகாரியமான அன்னரச சூக்கும விகாரமே உள்ளத்தின்வழியாக விந்துவிற்சென்று சிவகரும பரிபாகவிசேஷத்தால் ரத்தமாம்சாதிகளாகவும் சப்தாதிமாத்திரைகளாகவும் பவித்து மாத்திரைகளின் பரஸ்பரபஞ்சிகரண விசேஷமே ஸ்தூலதேகமாக விளங்குகின்றது; இஃது முன் சொல்லிய ஜாக்கிரத்திலடங்கி நிற்கும். விராட்பிரகரணத்திற் பஞ்சிகரணரகசியம்.

உ௰-வது பிரகரணம் முற்றிற்று

## ௨௪-வது சருவஞ்ஞ ஞானஉண்மையுரைத்த பிரகரணம்

சுருதியில் தத்பதத்தின்ஞானத்தாற் சகலபதார்த்தத்தின் ஞானமும் வருமென்றதின்பயன். தத்பதத்தின்பொருளான ஈசனே நானென்றறிந்த சிவனுக்கும் ஈசனைப்போல சருவஞ்ஞத்வம் வேண்டுமே அதுகாணப்படவில்லையே யெனின்; அவ்விதஞானம் பரமார்த்த விவகாரபேதத்தா லிரண்டு பேதமுடையதாகும்.

அவற்றுள், பரமார்த்தமாவது கானலிற்றோன்றிய ஜலம் பிரவாகம் அலை நுரை குமிளி முதலானவைகளை அநுபவ விவேகபெலத்தால் அதிஷ்டானமான பூமியைத்தவிர வேறில்லையெனத்தெளிந்து அதிஷ்டானமாத்திரமாயறிகின்றதுபோல, சராசரமான சகலஜகங்களையும் நிராகாரசுத்தசன்மாத்திரமாயுள்ள அதிஷ்டானமானதன்னைத்தவிரவேறில்லையெனத்தெளிந்து சுத்தசின்மாத்திரமா யறிகின்றது பாரமார்த்திகசருவஞ்ஞத்வமாம்.

வியாவகாரிக சருவஞ்ஞத்வமாவது, கானலிற்றோன்றிய ஜலம் பிரவாகம் அலை நுரை குமிளி விஸ்தாரம் ஆழம் இவைகளை வெவ்வேறாய்ப் பரிஷ்கரித் தறிகின்ற சருவஞ்ஞஞானம் போல, அதிஷ்டான சுத்தசைதந்நியத்திற்றோன்றிய சராசரமான சகலஜகங்களையும் பின்னபின்னங்களாக அந்தந்த அந்தக்கரண வியாபாரங்களோடும் அறிகின்றவல்லமை வியாவகாரிக சருவஞ்ஞத்வமாம்.

ஆ-ர்: இவ்வி இரண்டு ஞானவல்லமையு மீசனுக்கிருக்கின்றது. ஈசனை சருவஞ்ஞத்வாதியுபாதியை யுடையவனாக தாத்பர்யோபாசனைசெய்கின்றவர்கள் ஈசனது உபாசனபெலத்தால் அவனது வியாவகாரிக சருவஞ்ஞத்வ குணத்தையடை

கின்றார்கள். அவனது உபாதியை நீக்கி யதிஷ்டானத்தைமாத் திரந் தாதாத்மியோபாசனை செய்கின்றவர்கள் பரமார்த்திக சருவஞ்ஞராகின்றார்கள். இந்த இரண்டுவிதமான ஈசோபாசு ஞானவான்கள் இருவகை சருவஞ்ஞத்துவத்தையு முடையவர்களாகின்றார்கள்.

ஆனால் ஈசனுடையவுஞ் சித்தர்களுடையவும்வியாவகாரிகமென்ற சருவஞ்ஞத்வம் பிராந்திஞானமாவென உத்தரம், நிர்குணமாய் சுத்தஸன்மாத்திரமான தனக்கு இரண்டாவதான ஸ்வபாவத்தை முக்காலத்திலுமெதிரிடாமலிருக்கின்ற ஈசு சித்தர்களிடத்திலில்லாததாயுள்ள நாநுவான ஜகவிஷயகஞானமிருக்கிற தென்றொப்பிய சீவர்களின் ஞானம் பிராந்திஞானமேயன்றி, ஈசனது ஞானத்தைப் பிராந்திஞானமென்று யாவர் கூறுகின்றார்கள்.

ஆனால் முற்கூறியஞானமிருவகையாய்க்கூறப்பட்டதின்றற்பரியமேதென அதிஷ்டானமான ஸத்தைத்தவிர த்வைசமாய் ஜகமிருக்கின்றது யென்றொப்பியத்வைதஞானியை சுருதியிலீனனாய் நிஷேதித்திருக்க, சுத்தஸன்மாத்திரமான ஈசுனுக்கு த்வைத ஞானம் ஸ்வபாவமா யிருக்கின்றதாக் வொப்பி அந்தஞானம் ஞானிகளுக்கும் வேண்டும் இல்லாவிடில் அவர்களெங்ஙனம் பிரமஞானியாவர்கள் என்றுகேட்டதின்றற்பரியமேதென.

நல்லது தெளிந்தேன், இப்படிக்கெந்தச் சுருதியிற்சொல்லியிருக்கின்றதென எந்தச்சுருதிகளிலாயினும் இந்த அபிப்பிராயந்தவிர நீ கூறிய அபிப்பிராய மிருக்கின்றதா பாரென்றாசிரியர் கூற, மாணாக்கன் சகல சமுசயங்களுந்தீர்ந்து ஞாதிருஞானஞேயமென்ற ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேதமில்லாத அதிஷ்டான ஞானமாத்திரமாய் சருவஞ்ஞபதவியை அடை

யாமலடைந்து விளங்கிநின்றான்.

உக வது பிரகரணம் முற்றிற்று.

---

## உஉ-வது விசிஷ்டாத்வைத நிரூபணப் பிரகரணம்

நித்திய நிராகார ஸாகாரராய் நின்மலராய் சருவசம்பூரண ராய் ஸச்சிதானந்தஸ்வரூபராய் சருவஞ்ஞராய் சருவஸ்வதந் திரராயுள்ளவர் ஈசன், அவ்வித ஈசன் அபின்ன நிமித்தோபா தானனான தன்னிடத்தினின்றுமுண்டான ஜகத்தில், அவனே சிவரூபனாயும் அந்தரியாமி ரூபனாயும் அநுப்பிரவேசித்துநிற் கின்றான். அவ்வித ஈஸ்வரன்பிரமாண்டத்துக்கு உபரி பிரதே சத்திலிராநின்ற அப்பிராகிருதமான திவ்யதேஜோகடிதமஹா வைகுண்டத்தில் மஹாகாரண பூதமனோபுத்தி சித்த அஹங் கார தத்வரூபரான பிரத்தியும்ன சங்கர்ஷண அநிருத்த வா ஸுதேவரென்று நான்குவிதவியூகமுடையவராய் ஸ்வயங்கார ண கூடஸ்தராய் இலக்ஷ்மிசமேதராய் பிரணவரூப அஷ்டா க்ஷரசக்கரமத்தியிலிருந்து விளங்குகின்றார். அவருக்குப்பர நாராயணரென்றுந்திருநாமமாம்.

சைதந்யரூபமான அவரது ஸ்வபாவம்போல, அவரது சரீரமும் ஸச்சிதானந்தமாம் அவரது சரீரம் வைகுண்டத் திலிருந்திடினுந் தனது நிராகாரமான சைதந்யத் தன்மை யால் ஜகவியாபகராயிருக்கின்றார். அவ்வித ஈசனை மானு ந்தம் ஸாகாரமாத்திரமா யுபாசித்தாற் புராணங்களிற் கூறிய விரஜையென்றநதியிற் சூக்ஷமசரீரத்தால் முழுக திவ்யசரீர வானுப்பவித்து, உபாசனைக்குத்தகுந்தபடி வைகுண்டத்திற் சென்று சாலோக சாமீப சாரூபா திமுத்தியையடைந்து ஈச னது சேவை செய்துகொண்டு நித்யநிர்ப்தராய் விடுகின்றார் கள்.

நிராகார சாகார வுபயரூபமுள்ளவரென்று அந்தசாஸ்திரத்தி ற் சொன்னபடியறிந்துபாசித்தவர்கள்ஸாரூபமுக்தியையடை ந்து அதினின்றுஞ் சாயுச்சியபதத்தையுமநுபவிக்கின்றார்கள். ஸாயுச்சிய முக்தியென்பது நிராகாரத்தைப்பற்றினது. அவ் வித நிராகாரோபாஸனையெங்ஙனமெனின், நிராகாரவியாபக சைதந்யமான ஸருவநியந்தாவாயுள்ள பரநாராயணர் பூரண ரானதால் அங்குஷ்டமாத்திரமான பரிணதசுத்தஸத்வாகா ரதஹரோபாதியால் அவ்விதஅவட்சேதமுடையவராகத்தோ ன்ற சாஸ்திரயுந்தியநுபவங்களா லவ்வித அந்தரியாமியைப் ஞ்சகோசாதீதனுக விசாரித்து சிருஷ்டிகாலத்தில் ஜகத்தை யநுப்பிரவேசித்த ஸருவவியாபக ஸச்சிதானந்த நிராகாரஸா காரரான பரநாராயணரோ தன்ஸ்வரூபத்தாலும் வல்லமையாலு ம் அந்தரியாமியென்னுந் தன்மையுடையவராகக் காணப்படு வதால், கீழ்ச்சொல்லிய பஞ்சகோசாதீதராய் விசாரித்த அந் தரியாமி சரீரத்திலுள்ளடங்கியிருந்தவராய்த் தோன்றினபோ திலும் வியாபகநாராயணராய் விசாரித்து அது நீயாகின்றாயெ ன்று ஐக்கியமாகவுபாசிக்கவேண்டும். அதுவென்றால் அந்த நாராயணர் நீயென்றால் அந்தரியாமியான நீ இதின் பயன்சீவர் களை சரீரமாகவுடையவனாகின்ற நீ ஆகின்றாய் அவனைக்கா ட்டிலுநீவேறில்லை. இந்தப்பிரகாரம் ஆசிரியர் முகமாயுபதேசி க்கப்பெற்று அந்த வுபதேசபெலத்தாலுபாசிக்க மரணாந் தரம், உபயவித்தியாபெலத்தால், வைகுண்டத்தில் ஸாரூப முக்தியை யுடையவனுய்ப்பவித்து ஸாயுச்சியரூபமான ஸருவ வியாபகநாராயணவியாபகமான நிராகாரஸ்வபாவத்தையுஞ் ச ங்குசக்கிரதாரியான ஸாகாரரூபத்தையும் ஸேவியஸேவகபாவ த்துடன் அநுபவிப்பார்கள்.

௭௩. இந்தமதத்தில் ஸ்தூலஜகமநித்தியம், சூக்ஷமஜகஞ் சத்தியம், என்றெப்பவேண்டித்தற்காகவே நாராயணருக்கு

ஸாகாரஸத்தியத்வமொப்பினார்கள். நாராயணரது வியாபகம் நித்தியமென்றதின் பொருட்டு சூக்ஷமஜகத்துக்கு சத்தியத்வமொப்பினார்கள். கேவலநிராகாரமான ஆகாயஞ்சடமானதால் அப்படிவஸ்துவுஞ் சடமாய்விடத்திரியுமென்று ஈசனுக்கு சாகாரத்வமுமொப்பினார்கள். பரிச்சின்ன நிராகாரசாகாரசிவர்களை வேறாகக்கூறுவதின் பொருட்டு ஈசனுக்கு நிராகார ஸர்வவியாபகத்வமொப்பினார்கள்

இந்த மதத்திற்சொல்லிய வுபயரூப அநுபவமெங்ஙனமெனின், ஒரு பீஜத்திற்றோன்றிய விருக்ஷம் பத்திரம் புஷ்பம் பழம் சாகை முதலானவைகளுடன்கூடி ஸ்தூலமாய் விளங்குங்காலத்திலும் அந்த விருக்ஷசத்தையை பீஜசத்தை வியாபித்திருக்கின்றது, நசித்தகாலத்திலுந் தன்னுள்ளடங்கிய சூக்ஷமமான விருக்ஷசத்தையை பீஜசத்தை வியாபித்திருக்கின்றது இவைபோல, ஸ்தூலரூபமாய் விளங்குங்காலத்திலும், ஸ்தூலரூபநசித்து சூக்ஷமமாய் விளங்குங்காலத்திலும், அந்தரியாமியான தன்ஸ்வபாவத்தால் ஜகத்தை வியாபித்துக்கொண்டிருக்கின்றானென்பதாம். ஆனாலிந்தமதாநுபூதியானது அத்வைதத்தில் இரண்யகர்ப்பாநுபூதியிலடங்கியது. சேவிய சேவக பாவமொப்பியது மாத்திரம் பேதம்.

௨௨-வது பிரகரணமுற்றிற்று

## ௨௩-வது துவைதமத நிரூபணப் பிரகரணம்

இவர்கள் மதத்திற் சிருஷ்டிபேதத்தால் வந்த சீவபேதமும் முக்திபேதமும் முக்தியாற்கிடைத்த ஆனந்தபேதமும் உடனுடையதாக ஒப்பினார்கள்.

சிருஷ்டிபேதமாவதென்ன? தாமதசிருஷ்டி ராஜதசிருஷ்டி சாத்வீகசிருஷ்டி மிசிரசிருஷ்டியென்று நான்கு பேதமுடையதாகும். அவ்வித சிருஷ்டிக்குட்பட்ட சீவர்களும் நான்கு

வகுப்புடைய (அம்ச) லக்ஷயோனிபேதமுடையவர்களாய்ப் பவிக்கின்றார்கள். சிருஷ்டிக்கப்பட்ட ஜகத்தை அநுப்பிரவேசித்த ஈசனது லக்ஷணம் உபாசனை இரண்டும் விசிஷ்டாத்வைதத்திற் சொல்லியபடிதான். முக்திகாலத்தில் ஆதிசிருஷ்டியிலெந்தகீடாதிமுதற் தேவஜாதிவரையிலும் ஜனித்தார்களோ, அவ்வித ஜாதிக்குத்தகுந்த அப்பிராகிருதவுடலுடையவர்களாக மரணாநந்திரம் விரஜையில் ஸ்நானம்பண்ணினபிறகு திவ்ய சரீரவான்களாய்ப்பவித்து வைகுண்டத்தைச் சேர்ந்து சாருப்பியமுக்தி நீங்கலாக மற்றமுக்திகளை அடைகின்றார்கள்.

அந்தந்த சீவர்கள் தஹரம் அற்பமாயும் விஸ்தாரயும் அந்தந்தவுடலுக்குத் தகுந்தபடி அங்குஷ்டமாத்திரப்பிரமாணமாயிருப்பதால், அதிலநுப்பிரவேசித்துவிளங்குகின்ற அந்தரியாமியான நாராயணஸ்வபாவம் பூரணமாயினும் சீவர்களின் தஹரத்திலநுப்பிரவேசித்த அந்தரியாமியின் ஸ்வபாவம் பரிச்சின்னமானதால் தஹரதாரதன்மியத்துக்குத் தகுந்தபடி சீவர்களின் விஷயானந்த தாரதன்மியம்போல, முக்தி திசையிற் கிடைத்த அவர்களது ஆனந்தமும் தாரதன்மியமுடையது தான்.

அவர்களுக்குபதேசவிபரம். (அதது) நீயாகின்றாய் ஸ்வயஞ் சிவஸ்வபாவமான நீ (அதது) நாராயணஸ்வபாவ பின்னஸ்வபாவமாக ஆகின்றாய் என்ற இந்த த்வைதம் விசிஷ்டாத்வைதத்திலடங்கியது விசிஷ்டாத்வைதம் தாந்தரிகசித்தாந்தத்திலடங்கியது சித்தாந்தம் வைதீகத்திலடங்கியது இவ்வித வைதீகசித்தாந்தமென்றும் அத்வைதமென்றும் நாமமுடைய அத்வைதமே வைதீகம், மற்ற ஸகலமதங்களும் அவைதீகமெனப்படும்.

☞ இந்தமதங்கள் வேதவிரோதமானதால் முக்கியமாய்

ச்சுருதியில் அனதிகாரிகளான அதிகாரிகளுக்குபகாரப்படும். இவர்கள் மதத்தில்தாந்திரத்தில் சுருதியி னபிப்பிராய மடங்கி நிற்கவேண்டுமெனத்தாற்பரியம். அத்வைதத்திற் சகலசாஸ் திரங்களுஞ்சுருதியி லடங்கிநிற்கவேண்டுமெனத்தாற்பரியம். ஆசிரியர் இப்படியென, மாணாக்கன் வேதத்தினுண்மையான அத்வைதத்தை வெகு பெருமையுடையதாக அறிந்து தன்னி ஷ்டனானான்.

௨௫-வது பிரகரணமுற்றிற்று

## ௨௬-வது இலளிதாநுபூதிப் பிரகரணம்

பரிபூரணத்தியானஞ் செய்துகொண்டு அதை யெங்கும் அறிவுக்கண்ணால் நிதானித்து வியாபித்துப்பார்த்தநுபவித்து பின்பு அந்த அறிவான பார்வையை முன்சொன்ன பூரணத்து க்கும் பூரணமானஞானமென்றறிந்து அந்த அறிவு மாத்திரமா ய் நிற்க, அந்தப்பார்வையும் நீங்கிவிடும் அப்பார்வை நீங்கின் விடம் நிர்க்குணப்பிரமமாம்.

அவ்வநுபூதியிலிருந்து ஞாபகமுண்டாக யாதொரு எ ண்ணமுமில்லாத நிர்க்குணஞான ஸ்வரூபப்பிரமமாத்திரமாயி ருந்தோமென்றும் பூரணத்துக்கும் பூரணமானபார்வையா யி ருந்தோமென்று மநுபவம் வருகிறதால், பூரணசைதந்நியஸா க்ஷியானபார்வையாற்பார்த்ததால் நாம்பார்த்தவனென்னப்ப டலாம். பார்வையுமில்லாதவிடத்தில் நாமிருந்தோமாவெனி ன், ஞானமன்றி யறியக்கூடாததனாலும் எண்ணமில்லாத விடத்தைத்தானே யநுபவித்துச்சொல்வதினாலும் பாதிக்கப் படாத வநுபவமானதினாலும் நானென்கிறவகங்கார விருத்தியு மில்லாததாயும் நானென்கிற அகங்கார விருத்தியின் உண் மையாயுமுள்ள நிர்க்குண ஞானப்பிரம ஸ்வபாவமான நான் மாத்திரமா யிருந்தோமென்றறிந்து; பின்பு சாக்கிர சொப்பன

சுழுத்தி மூன்றையுமறிந்ததன்னை நிதானிக்கவேண்டும்.

☞ இதிற் சாக்கிரத்தையறியும் விபரம்:- பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் இதின் குணங்கள் சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்த மானஜகம் இவற்றின் விசாரமானபடியினாலே இவற்றைக்கிரிசிக்குஞ்சாதனங்கள். சுரோத்திரம் த்வக்கு நயனம் ரசனை கிராணம் என்ற ஞானேந்திரியங்கள். இந்த ஸாதனங்களைக் கிரிகிக்குஞ்சாதனம் அந்தக்கரணம் அதின் விருத்திகள் மனம் புத்தி சித்தம் அகங்காரம் இவற்றினிருபணம்.

சுரோத்திரமானது மனதோடுங்கூட சப்தத்தையும் த்வகிந்திரியமானது மனதோடுங்கூடி ஸ்பரிசத்தையும் நயனேந்திரியம் மனதோடுங்கூடி ரூபத்தையும் ரஸனை மனதோடுங்கூடி ரஸத்தையும் கிராணம் மனதோடுங் கூடிக்கந்தத்தையும் கிரிகிக்கும். மனதென்பது அகாரணமாய் ஸம்சயத்தன்மையுடன் சங்கற்பமுடைய அறிவு; புத்தியென்பது, உறுதித்தன்மையுடன் நிச்சயரூபசங்கற்பமுள்ளஞானம்; சித்தமென்பது முன்னடந்ததையும் பின்னடக்கவேண்டியதையும் இப்போ நடக்கிறதையும் பற்றிப்பாரியாலோசனை செய்கின்ற சங்கற்பஞானமாகும்; அகங்காரமென்பது சகல வியாபாரங்களையுமபிமானித்து நிதானிக்கவல்லவன் நானென்ற சங்கற்ப ஞானமாம்.

இவ்வளவையும் பேதமன்றித் தன்னையுள்ளபடி யறியாமல் நான் எனது என்ற அபிமானத்துடன் விளங்கிய அறிவு சீவனாவான், இவ்வளவும் விகற்பமற்ற எண்ணமில்லாத காலத்திற்கூட அறியுந்தன்மையுடைய ஞானங்கூடன்தனுவான்.

☞ இவர்களை சாக்கிரத்தில் யுக்தியாயநுபவத்துடன்

எல்லாப்பதார்த்தங்களிலுமிருக்கிற தருமப்படியறிய விபரம் ஜாக்கிரத்திற்கண்ட ஜகம் பஞ்சபூதரூபமானதாற் பஞ்சபூதங்களிலுள்ளடங்கிய பஞ்சவிஷயங்களும் அவைகளைத்தவிர வேறில்லாததனுலந்தவிஷயங்களோடுங்கூடின பஞ்சபூதங்களும் பஞ்சேந்திரியங்களாற் கிரகிக்கப்படுவதாற் பஞ்சேந்திரியங்களைத்தவிர சாக்கிரத்திற்கண்ட ஜகம் வேறில்லை.

எப்படியெனில், உலகத்திற் பஞ்சேந்திரிய வியாபாரமிருந்தால் ஜகமுண்டு பஞ்சேந்திரிய வியாபாரமில்லாவிடில் அறியப்படாததால் ஜகமில்லை. அந்தப் பஞ்சேந்திரியங்களும் அந்தக்கரணவியாபாரமில்லாவிடிற் பொய்யாய்விடும். இந்தஅந்தக்கரணவியாபாரங்கள் ஜடங்களானதால் தாங்களிருக்குங்காலத்திலும் இல்லாதகாலத்திலும் வேறுபட இருந்து அறிய ஒருஅறிவு அவசியமிருந்தநுபவிக்கப்படுவதாலும், தாங்களில்லாவிடம் அநுபவத்துக்குவருவதாலும் அதையறிந்த அறிவையில்லையென்று ஒருவராலும் நிஷேதிக்கக்கூடாததனுலும் அவ்விதமான அறிவைச்சாக்ஷியெனக்கூறலாம்.

அந்த அறிவின்சாயாரூபமான அறிவுபோலுள்ள அறிவு அந்தக்கரணவிருத்திகளாகிற கண்ணாடியிற் பிரதிவிம்பிக்க அவ்வந்தக்கரண வியாபாரங்களும் அறிவுபோல் விளங்குகின்றன. அவற்றிற் பிரதிவிம்பித்தஅறிவைக் கண்ணாடியிற் பிரதிவிம்பித்த முகத்தை முகமெனக்கூடாததுபோல அறிவெனக்கூடாது.

இப்படியாகில் அந்தப்பிரதிவிம்பமுகம் முகமன்றி விளங்கமாட்டாததுபோல, அந்தப்பிரதிவிம்பமான அறிவும் தனது விம்பமான ஸாக்ஷியறிவன்றி விளங்கமாட்டாது. அவ்விதபிரதிவிம்பமான அறிவை நானென்றஞானம் ஜீவஞானமாம். அந்த ஞானத்தாற்றோன்றுகின்ற சரீரமுதல் சகலங்களையும்

நானென்றும் எனதென்றும் அபிமானிக்கிற ஞானம் ஸம்ஸாரம்.

இவ்வந்தக்கரண விருத்தியிற்பிரதிவிம்பித்த ஞானமே அந்தக்கரணங்களுக்கு அறியும் வல்லமையாயிருப்பதாலும், அவ்வந்தக்கரணங்களால் விளங்கிய இந்திரிய வியாபாரங்கள் அந்தக்கரணவியாபாரங்களின் அறியும் வல்லமையான பிரதிவிம்பஞானமன்றி விளங்கமாட்டாததனால், அவ்வந்தக்கரணவியாபாரங்களின் அறியும் வல்லமையான பிரதிவிம்பஞானமே இந்திரியவியாபாரங்களுக்கும் அறியும் வல்லமையெனச்சொல்லப்படும்.

அவ்விந்திரிய வியாபாரங்களிற்றங்கிய அறியும் வல்லமையான பிரதிவிம்பஞானமே, இந்திரியவியாபாரங்களால் விளங்கிய ஸகலஜகங்களிலேயும் இந்திரியங்கள் வியாபித்தது போல் உள்ளும்வெளியும் வியாபித்து ஸகலஜகங்களையும் வெவ்வேறாய் விளங்குவிக்கின்றது.

எப்படியெனின், உலகத்தில் எவ்வளவு சப்தமுண்டோ அவ்வளவையும் வெகுதூரத்தினின்றும் சமீபத்தினின்றும் காதே கிரகிப்பதினால், சப்தங்களாற்றோன்றிய தூரமும் சமீபமும் அந்த சப்தங்களின் பொருளாற்றோன்றிய பதார்த்தங்களும் காதினாலறியப்படுவதால் அறியுந்தன்மை ஞானமானதாற் கேட்கிறோமென்ற விருத்தியே அவ்வறிவுக்கு உபாதியானதாற் கேட்கிறதென்கிற விருத்தியுடைய அந்தஞானம் அவ்வளவு தூரசமீபங்களையும் அந்தசப்தங்களின்பொருளால் விளங்கிய பதார்த்தங்களையும் வியாபித்து அறியாநின்ற அறிவாய் விளங்குகின்றது.

ஆனால் அவ்வளவு தூரசமீபங்களிலடங்கிய வஸ்துக்களை சிரவணோபாதியுடைய விருத்திஞானம் நிறைந்து வியாபித்த

தென்ற அநுபூதியின் விபரமெங்ஙனமெனின், ஒருவன் வெகு தூரத்தினின்று சிலவிஷயங்களாயுள்ள சுகதுக்கமுடையவசனங்களை கொர்ஜிக்க அதைக்கேட்டறியாநின்ற சிரவணோபாதியுடைய விருத்திஞானத்தால் அந்தசப்தங்களோடுங்கூட எவ்வளவு தூரத்திலிருந்து கொர்ஜிக்கப்பட்டதோ அவ்வளவு தூரம் வரை சூக்ஷுமமாய் நிதானத்துடன் வியாபித்து அவ்வளவுதூரத்தையும் அந்த சப்தங்களிலுள்ளடங்கிய அருத்தரூபமான வஸ்துக்களையுமறிந்தரால், அவ்வளவு விஸ்தாரமுடையஅறியும்வல்லமை சிரவணோபாதியுடைய ஞானத்துக்கு இவ்வளவு பூரணத்வமிருக்கிறதென்றநுபவத்துக்கு வரும்.

ஷ்ஷ இப்படியே சகலேந்திரியங்களினுலு மநுபவிக்கப்படுகின்ற விஷயாநுபூதிகளை அந்தந்த இந்திரியோபாதிகளுடைய ஞானத்தால் நிதானித்து வியாபித்தநுபவிக்க, அவ்விந்திரியோபாதிகளுடைய விருத்திஞானத்தின் பூரணத்வமநுபவத்துக்கு வரும்.

மனதின்பூரணத்வ மநுபவத்துக்கு வரவேண்டியநுபவ நிரூபணம். ஒருவனொருகாரியத்திலிருக்க அக்காலத்திலநேக யோசனை தூரமுடைய அதிவிஸ்தாரமான ஒருதேசம் அவன் மனதிற்றோன்ற அக்காலத்தி லவனருகிலிருக்கின்றவர்களாற் சொல்லப்பட்ட வசனங்களைக் கிரகிக்கத் தெரியாமற்போக, அவர்களதையறிந்து, உன்னுடைய மனம் எங்கே சென்றிருந்ததென்று வினவ அதற்கவன் என்மனங்கிழ்ச்சொன்னஅநேக மாடகூடங்களாலலங்கரிக்கப்பட்ட ஒருபெரிய பட்டணத்திற் போயிருந்த தென்று கூறப்படுவதால், அவ்வித அநுபவம் மனதிலுதித்தபடியே சோதித்தால் மனதின் பூரணத்வம் வெளிப்படும்.

முக்கூடிய பட்டணத்திற் பிரவேசித்தாநின்ற மனம்

ஜடமான[illegible] அறிவின்னிருந்து விளங்கிய சிதாபாசனொருவ னில்லாமற்போனாலும் முன்சொன்ன தேசம் விளங்கமாட்டாது. [illegible] சாலியறிய விடா மெங்ஙனமெனின்; ஒருவன் மா[illegible] அலைந்தோடிச்சென்றவனை மற்றொருவன் சந்தித்து உன்[illegible] வெகுதூரத்திலிருக்கென்று நுட்புச் சொல்ல அவனத்தயிடத்தி லந்த மாட்டைப் பார்த்திருக்க வேண்டுவதுபோல, இவன்மன மதிதூரமாயு மதிவிஸ்தாரமாயுமுள்ள பட்டணத்தைச் சார்ந்திருப்பதாய்ச் சொல்வதால் இவனு மவ்விடத்திலிருந்து அவ்வித பூரணனாய்ப் பவித்தறிந்திருக்கவேண்டும்.

இவ்விதமா யாலோசித்துத் திரும்பவுமந்த அநுபவத்தை மனதாலும் மனோபாதியுடைய அறிவாலுமறிந் தநுபவித்தால் தானங்கேயிருந்ததும் அங்கே வியாபித்திருந்தோமென்ற மனதினுடைய பூரணத்வமுந் தன்னுடைய பூரணத்வமுந் தெரியவரும்.

இப்படியே மனம் புத்தி சித்தம் அகங்கார மென்ற நான்குபாதியையுடைய பூரணத்வமும் வெளியாகும். இவ்விதமான சகல விவகாராநுபூதிகளும் விருத்தி ஞானமானதன்னை முன்னிட்டநுபவிக்கப்படுவதால், அவ்விருத்தியு மில்லாத அவஸ்தையு மநுபவத்துக்கு வருவதால் விருத்தியற்றவிடத்திற் சிதாபாசனில்லாதவனாகின்றான்.

சிதாபாசனென்பதின் பொருள், கண்ணாடியிற்றோன்றிய பிரதிவிம்பம் விம்பமான முகத்தினுபாஸமானதால் நிருபாதிகஞானமான கூடஸ்தன் அந்தக்கரணவிருத்தியாங் கண்ணாடியிற் பிரதிவிம்பிக்க அப்பிரதிவிம்பமான ஞானம் சித்தான கூடஸ்தனது ஆபாசமானதாற் சிதாபாசனென்னப்படுகின்றான்.

அவ்விதகூடஸ்தனேதானா, அல்லது சிதாபாசனான விருத்திஞானமேதானா, நாமே எல்லாவற்றையுமறிந்து விவகரி

ப்பதாற் சகலத்தையுமறிந்து விவகரிக்கின்ற சிதாபாசனே நாமாகவேண்டும் அவிவகாரியான கூடஸ்தனை எப்படி நா மென்றநுபவிக்கலாமெனின்; சிதாபாசனில்லா[illegible] நாமேயநுபவித்துச் சொல்[illegible]லாலந்தக் கூடஸ்தனநுபவத்தி லகத்திபமொப்பப்படத் தக்கவனாகின்றான். அந்தக்கூடஸ் தனே விருத்தியினுதவி யில்லாமற் சகலத்[illegible]மறியுந்தன் மையுடையவன் அவனையே நாமென் றநுபவத்தாலறியவே ண்டும்.

அக்கூடஸ்தனான நம்மைத்தெளிய விவகாராநுபூதியே தெனின்; ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி இந்த அவஸ்தை களி லிரண்டைநீக்கி மூன்றாவதான சுழுத்தியைப்பார்க்கில், அவ்வவஸ்தையில் விருத்தியில்லாததனாற் சிதாபாசனில்லாத வனாகப்படுகின்றான்.

சிதாபாசனில்லாவிடினும் அஞ்ஞானமிருந்ததாகத் தோன் றுகின்றது. எங்ஙனமெனின், விழித்தவுடன் நானொன்றுந் தெரியாமற் சுகமாய்த் தூங்கினேனென்று விபகரிப்பதாற் றோன்றுகின்றது.

அந்த அஞ்ஞானஞ் சிதாபாசனையே சாரத்தகும் எங்ங னமெனில், சிதாபாசனான தான் தூங்கியிருந்தாற் தான்தூங் கியதை யெப்படியறிகுவான், ஆகையாலறிகிறவன் தூங்க மாட்டான் அறியாமற்றூங்கினே னென்று சொல்லக்கூடாது நான் தூங்கினேனென்ற விவகாரஞ் சிதாபாசனிடத்திற்கான ப்படுவதால் ஒன்றுந்தெரியாமையான அஞ்ஞானமாஞ் சுழுத் தியநுபூதி சிதாபாசனையே சாரத்தகும்.

அச்சிதாபாசனுக்கு அஞ்ஞானம் நேரிட்டதின்காரண மெப்படியெனின்; யாதொருவிருத்தியு மில்லாவிடஞ் சூநிய மென்று கூறக்கூடாது சூநியமென்றாற் சூநியமென்றறியச் சாட்சிவேண்டுஞ்; சாட்சி சித்தாயிருக்கவேண்டும்; அச்சித் தின் சுபாவந் திரிசியத்தை யெதிரிட்டுபார்க்கிறவனாகும்; திரி

சிய சிங்கினவிடம் பார்க்கிறேனென்ற வுபாதியற்ற சுத்த அறிவாம். அவ்வித நிற்குணமான நிர்விருத்திக கூடஸ்த சைதன்யப்பிரதிவிம்பித அகங்கார விருத்தியாங் கண்ணாடி யிற் பிரதிவிம்பிக்க நானென்றறிவ் சுபாவங் கூடஸ்தனென் றறியாமல் அகங்காரவிருத்தியையே நானென் றபிமானித்த தால்கெட்டது.

இவ்வஹங்கார்விருத்தி ஜடமானதா லறியாத்தன்மை யுடையது. அவ்வஹங்காரத்தி னறியாமையா லஞ்ஞானத் தால் அதிற் பிரதிவிம்பமான தன்னிடத்தில் மேற்கூறிய அ ஞ்ஞானந்தோன்றத் தானுந் தனது விம்பமான கூடஸ்தனி டத்திலில்லாநின்ற அஹங்காரத்தி னஞ்ஞானமென்றறியாமற் கூடஸ்தனிடத்தி லஞ்ஞானத்தை யாரோபிக்க நன்றலாரோ பித்த அஞ்ஞானமாம் திரஸ்காரணியாற்றனது விம்பமான கூ டஸ்தனைத் தானென்றறியவல்லமை யில்லாதவனானான்.

திருஷ்டாந்தம் சிலவிடந் தெளிவுள்ளதாயுஞ் சிலவிட மலினமுள்ளதாயு மிருக்கின்ற ஒரு கண்ணாடியில் முகம் பிர திவிம்பிக்கக் கண்ணாடியின் மலத்தாற்றோன்றிய குறைவைப் பிரதிவிம்பத்திற்கண்டு அதிற்கண்ட குறைவை விம்பமான முகத்தி லாரோபிப்பதுபோலாகும். உள்ளபடி கூடஸ்தனி டத்தி லறியுந்தன்மை யறியாத்தன்மை ஆகியத்தன்மை அ ஹங்காரம் இவ்வளவுமில்லாததனாற் கூடஸ்த ஞானமாத்திர மாயிருந்தோமென்று, விவேகத்த அஹங்கார தர்ப்பணத் திற்றோன்றிய பிரதிவிம்பமான சிதாபாசனை யுள்ளபடிதெளி ய மலமில்லாக் கண்ணாடியிற் பிரதிவிம்பித்த முகத்தைப் பார்த்து உள்ளபடி விம்பமானமுகம் நிர்மலமென்று தெளி வதுபோற் றெளியத் தானறிய மற்றவர் கூறிய பிரபஞ்ச மும் சடமானதா லவ்வித சடமான சகல விகாரங்களும் நிருவிகாரியான கூடஸ்த சைதன்யமாந் தன்னிடத்திலுண் டாக இடமில்லாததனால், இராச்சுவிற்றோன்றிய சர்ப்பம் அதி

ன் விஷம் அநால்வந்த பயம் மரணம் அதைத்தீர்க்குமந்திர சாமர்த்தியவுபாயங்க ளிவைகளெல்லாம் இரச்ச ஞானநந்தா ம் வியர்த்தமாய் முக்காலத்திலும் பழுதையைத்தவிரவேறில் லையென்று பழுதைமாத்திரமாய்த் தெளிவதுபோல், நிர்விகா ர கூடஸ்த சைதந்நியமாத்திரமாய்த் தெளிந்துநிற்க சிதா பாசனும் நிர்விகாரியாய்விட்டதால் விகாரம் நீங்கினவிடங் கூடஸ்தனனதிறற் சிதாபாசனு மதினுபாதியான சுத்தா ஹங்காரமும் நிர்விகாரியாய் விடத்திரியும்.

அவ்வந்தக்கரணத்தின் சுபாவம் விகாரமானதால் விகார மற்றவிடம் நிர்விகாரமானதாற் சுத்தமுடைய கற்பூரமலை யக்கினிப்பட்டெரிய அக்கினியுங் கற்பூரமுமெரிந்து ஆகாய மாத்திரமாய் விடுவதுபோல இரண்டும் முக்காலத்திலுமில் லாததாய் நசித்துக் கூடஸ்தமாத்திரமாய் மிஞ்சும்.

இவ்விதமாய் சுருதி யுக்தி அநுபவங்களோடுங் கூட உள்ளபடியறிந்து சமாதிசெய்ய, ஸ்வாநுபூதி பெலத்தால் முக் தனுவான். மென்மேலும் ஸவாநுபூதி பெலத்தால் முக்த னென்ற விவகாரமும் பெத்தனென்ற விவகாரத்தால் வந்த தால் முக்காலத்திலும் நம்மிடத்திற் பந்தம்வாராமலிருக்க முக் தியுஞ் சமாதிபெலத்தால் ஞானமும் நீங்கினதுபோல நீங்கா மல் நீங்கிவிடும்.

கூடஸ்தனது சுபாவம் அவஸ்தை மூன்றிற்கண்ட ஸக ல ஜகத்துக்குஞ் சாக்ஷியாயிருந்ததுபோல, ஸகுணோசுவாத் தியானம் நிர்குண பரிபூரணத்தியானம் அதற்குஞ் சாக்ஷியாய் நின்ற பூரணத்துக்கும் பூரணமானபார்வை அந்தப் பார்வை யும் நீங்கிய விருத்தியில்லாத ஸ்வாத்மாநுபவஸ்திதி இவ்வ ளவுங் கூடஸ்தனை தன்னால் விளங்குவதால், ஜாக்கிரமுத லதீதசமாதிவரையிலுந் தானே நிர்விகாரகூடஸ்த ஞானத் தா லறிந்தவனுகின்றான்.

## துவைதம்நிருபணப் பிரகரணம்.

இவ்வித [illegible] ஞானமில்லாமற்போனால் நமக்கு ஸ்தூ த்திரையனு [illegible]யாகாததுபோல், ஈஸ்வரனுக்கும் சிருஷ் டி ஸ்திதி சம்ஹாரம் சித்தியாது. கூடஸ்தன் நிர்குணனு னதால் நிர்விசேஷனுவான் நிர்விசேஷனிடத்தில் விசேஷ மொப்பக்கூடாது. சுருதி யுக்தி யநுபவங்களினால் எங்கும் கூடஸ்தன் வியாபித்திருப்பதாய்த் தெரிவதால், வீடுகடோ றும் வியாபித்த ஆகாயத்தை ஒருவராலு மென்வீட்டாகாயம் உன் வீட்டாகாயமென்று பேதித்துப பின்னமாகச் செய்ய வுபகாரப்படாததுபோல, பேதிக்க வுபகாரப்படான்.

சிருஷ்டிக்குமுன்னும் பின்னும் பிரளயத்துக்குப்பின்னு ம் அழியாமலிருந்து இம்மூன்றையுமறிந்தவனே கூடஸ்தப் பிரமமாவான். அவ்வித தத்பத கூடஸ்தனுக்கும், அவஸ் தாத்திரய ஸாக்ஷிசைதந்நியமாயுங் கூடஸ்தஸ்வாபாவமாயி ருக்கின்ற நமக்கும், ஸாக்ஷிரூபமாயாவது ஞானரூபமாயாவ து பேதம் நிரூபிக்கத்தகாததனுற், பேதமற்றது ஏகமானதா லவ்வித ஏகனுன நம்மைத்தவிர முக்காலத்திலுமன்னியமில் லையென்று தெளியாமற்றெளிய அக்கணமே உண்மை வெளி யாம். இவ்வித உண்மையையடைந்தவனைச் சுருதிகள் பிரம மென்று மங்களபேரிகை யடிக்கின்றன.

முற்றிற்று.

வாழி.

அண்டர்மாமுனிவர்வாழியருமறையங்கம்வாழி,
தொண்டரும்வாழியிந்நூற்றெகுத்தனர்வாழிமற்றும்,
எண்டிசையுலகினுள்ளோ ரியாவரும்வாழியித்தத்
தண்டமிழ்படிப்போர்கேட்போர்சந்ததம்வாழிதானே.

---

சிவமயம்

திருநெல்வேலிக் கோடகநல்லூர்

ஸ்ரீ சங்கரசுவாமிகள்

அருளிச்செய்த

# சுவாநுபவரஸமஞ்சரி


கல்லிடையூர் வித்வான்

சிதம்பரநாதக்கவிராஜாவர்கள்.


முன் பரிசோதித்துப் பதிப்பித்த பிரதிக்கிணங்க


திருநெல்வேலி

மேற்படி சுவாமிகள் மாணாக்கர்

மாவடி சிதம்பரம்பிள்ளையால்


பரிசோதிக்கப்பட்டு


மேற்படி சுவாமிகள் மாணாக்கர்

பஜனை கோ. சிதம்பரம்பிள்ளையால்



திருநெல்வேலி;

யூனியன் சென்றல் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது

இரண்டாம் பதிப்பு.

இதன் விலை அணா 12

1904.

குரோதி௵

# பிரகரண அட்டவணை


| நம்பர் | பெயர் | பக்கம் |
|---|---|---|
| 1 | பஞ்சகோசாநுபவமுரைத்த பிர...ரணம் | 1 |
| 2 | சகத்தைப பூதப்பகுப்பாகப் பிரித்தது | 7 |
| 3 | கடினாதிகுணப்பகுப்பாகப் பிரித்த... | |
| 4 | சப்தாதிகுணப்பகுப்... | |
| 5 | கிரியாசக்தி... | |
| 6 | சகத்தை... | |
| 7 | சகத்தை... | |
| 8 | இந்திரியாதிக... முரைத்தபிரகரணம் | |
| 9 | தர்மதர்மிமுதலிய குணமுரைத்த... | |
| 10 | அகண்டவிருத்தி சோதனையுரைத்தது | 40 |
| 11 | சரியாதிநிந்தாநிஷேதனப்பிரகரணம் | 42 |
| 12 | நாமார்த்தவைபமுரைத்தபிரகரணம் | 51 |
| 13 | பஞ்சவக்திர விளக்கமுரைத்த பிரகரணம் | 61 |
| 14 | தியானாநுபவமுரைத்தபிரகரணம் | 66 |
| 15 | விபூதிமகிமையுரைத்தபிரகரணம் | 68 |
| 16 | ருத்திராக்ஷமகிமையுரைத்தபிரகரணம் | 76 |
| 17 | பஞ்சாக்ஷரமகிமையுரைத்தபிரகரணம் | 81 |
| 18 | சிவலிங்கமகிமையுரைத்தபிரகரணம் | 87 |
| 19 | சாதுசங்கமகிமையுரைத்தபிரகரணம் | 92 |
| 20 | குருபதேசமகிமையுரைத்தபிரகரணம் | 94 |
| 21 | பரமசிவப்பிரசாதமகிமையுரைத்தது | 97 |
| 22 | அவிமுக்தஸ்தலமகிமையுரைத்தது | 100 |

# சுவாநுபவரசமஞ்சரி

ஸ்ரீசிவாயபரமகுருவேநம:

## கடவுள் வணக்கமும் அவையடக்கமும்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

சகமுதற் பொருளாய்த் தெரிவதற் கரிதாய்
தணிவிலெத் தேவர்க்குந் தேவாய்
சுகவடி வான சொரூபத்தைப் பணிந்து
தொன்மறை நான்கிற்கு மெட்டா
அகம்பதப் பொருளி யநுபவ ரசமஞ்
சரியினி லமைவுறச் செய்து
சகனம தளத்த லெனப்பெரி யோர்முன்
கழறவென் கருத்துமுன் னியதே

## முதலாவது

## பஞ்சகோசாநுபவ முரைத்த பிரகரணம்

### அன்னமயகோசமுதலிய பஞ்சகோசவிசாரணை

ஸ்தூலதேகமாகிய இரத்தமாம்சாதிகளை அணு அணுவாகப் பிரித்து, அந்த அணுக்களையும் அதிநுட்பமான அணுக்களாகப் பார்க்கில், ஸ்தூலந் தோன்றாமல் அதினிரோகை போன்ற ஆகாயாநுபூதி தோன்றும். அவ்விருத்தியே அன்னமயம். அதிற் பிரதிபலித்து விளங்கிய சைதந்நியமே அன்னமயன். அவ்விருத்தியையும் அச்சைதந்நியத்தையும் ஒன்றுபோற்றோன்றுவித்த அகங்காரமே அன்னமயகோசம் என்னப்படும்.

அவ்வகங்காரவிருத்தியை அவ்விடத்திற்றானே நிஷேதிக்கில், அந்த இரேகையுந்தோன்றாமல் அந்த இரேகையின் ஆகாரமாகச் சலனதருமமாத்திரமுடையதாக ஒரு விருத்தி தோன்றும். அவ்விருத்தியே பிராணமயம். அதிற் பிரதிபலித்த சைதந்நியமே பிராணமயன். இவ்விரண்டையும் ஒன்றுபோற்றோன்றுவித்த அகங்காரமே பிராணமயகோசம் என்னப்படும்.

அவ்வித சலனாகாரத்தை வியாபித்ததாயும், சங்கற்ப சல்னரூபமாயும், அநுபவத்துக்கு வருகிற விருத்தியே மனோமயம். அதிற் பிரதிபலித்த சைதந்நியமே மனோமயன். இவ்விரண்டையும் ஒன்றுபோற்றோன்றுவித்த அகங்காரமே மனோமயகோசம் என்னப்படும்.

அவ்வித மனோமயத்தைத் ததாகாரமாய் வியாபித்து, அவ்வாகிருதியைத் திரிசியமாக விளங்குவிக்கின்ற விருத்தியே விஞ்ஞானமயம். அதிற்பிரதிபலித்தசைதந்நியமே விஞ்ஞானமயன். இவ் விரண்டையும் ஏகாகாரமாகத் தோற்றுவித்த அகங்காரமே விஞ்ஞானமயகோசம் என்னப்படும்.

மேற்சொன்ன நான்கு கோசத்திலும் அகங்காரமானது அங்கங்கே தாதான்மியப்பட்டிருந்ததில், அபவாதத்தில் அதனின் றாதான்மியம் நீங்கி எல்லாவற்றின் திருப்திரூபமாயும், இஃது ஆனந்தமென்று முன்னிலைக்கொள்ளாமலும் இருக்கின்ற விருத்தியநுபவமே ஆனந்தமயம். அதிற் பிரதிபலித்த சைதந்நியமே ஆனந்தமயன். இவ்விரண்டையும் ஏகாகாரமாகத் தோற்றுவித்த அகங்காரமே ஆனந்தமயகோசம் என்னப்படும்.

இவ்வித திருப்திரூபமாயுள்ள ஆனந்தமயகோசமானது ஜகத்சத்தாசூந்நியசுழுத்திரூப கேவலாநுபூதியைச் சங்கற்பசத்தாரகிதமாகக்கொண்டு, தனதுஸ்பூர்த்தியற்று தான் இல்

லாததாக விளங்கிநிற்க, விழித்தபின் தன் சங்கற்பாம்சத்தா ல் இலயரூபமான தனது ஸ்திதிநாசத்தையடைய, அவ்வநு பூதி அகங்காரியின் விவகாரத்திற்கண்ட நாமரூபங்களுடை ய வஸ்துவுக்குட்பட்டதாகக் காணப்படாததினால், அவ்வநு பூதியில் தனது சங்கற்பாம்சத்தால் தெரியாமையை ஆரோ பிக்க, அவ்வவஸ்தையே அஞ்ஞானநுபூதியாம்.

அவ்வஞ்ஞானநுபூதியில் ஆனந்தமயன் விவகாரத்தால் அடங்கி நின்றிடினும், விளங்கிடத் தெரிவான். அவ்வஞ்ஞான ஞ்சடமானதால் தானே விளங்கத்தகாதது. கூடஸ்தன் நிரு விகாரி ஆனதால் அவனைச் சாரவும் வல்லமையுடையதாகா து. சிதாபாசனால் விளங்கியதா என்னில், அவ்வவஸ்தை யிற்றானே அவ்வாவரணநுபூதி விளங்கிடவேண்டும். அங் ஙனம் விளங்கிடில் அவ்விளங்குதல் அக்காலத்திலுள்ள அநு பவமானதால், அவ்விளங்குதல் அவ்வநுபூதியிலிருக்க ஆவர ணம் சாரவல்லமையுடையதாகாது.

மேலும் விவகாரத்தால் அஞ்ஞானம் விளங்குவதால், சாக்ஷியை முன்னிட்டே விளங்கவேண்டும். அவ்வித சாக்ஷி யும் சித்தாயிருக்கவேண்டும். அச்சித்தும் தானாகவே சித் திக்கவேண்டும். அவ்வித சித்தானதான் விருத்தியிற் பிரதி பிம்பிக்க, விருத்தியின் ஏகதேசாம்சமான சங்கற்பத்தாற் றோன்றிய பஞ்சகோசத்தையும் அபிமானித்து, விருத்தியின் ஏகதேசாம்சமான சித்தத்தால் ஆலோசித்து, விருத்தியின் ஏ கதேசாம்சமான புத்தியால் நிச்சயித்து, விருத்தியின் ஏகதே சாம்சமான அகங்காரத்தால் அகங்கரித்து, விருத்தியின் ஏக தேசாம்சமான இலயத்தால் இசான்கின் இலயத்தை, விருத் தியிற் பிரதிபிம்பித்த சிதாபாசனது விளங்குதலால், சிதாபா சன் தன்னைச் சடனாகக் கொள்ள, அக்கொள்கையில் சிதா பாசன் ஞானரூபியானதால், அவனையும் அச்சடமான அஞ்

ஞானம் சார உபகாரப்படமாட்டாது. அதில் அஞ்ஞான மென்ற சங்கற்பம் மனதைச் சார்ந்ததாலும் சங்கற்பிக்கப் பட்டதை அவிவேகத்தால் இஃது அஞ்ஞானமென்ற நிச்சய த்தன்மை புத்தியைப்பற்றினதாலும் அவ்விதமாய் ஒன்றும் தெரியாமல் தூங்கினேனென்று முந்திய அநுபூதியை இழுத் துச்செல்லுகின்றது சித்தத்தைப் பற்றினதாலும் தன்னுள் அடங்கிய பஞ்சகோசமுடைய மூன்றவஸ்தையையும் இம் மனம் புத்தி சித்தமென்ற மூன்றின் உதவியால் நான் என்ற து அகங்காரத்தைப் பற்றினதாலும், அவ்வகங்காரம் அன்ன மயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயம் அஞ்ஞானம் இவைகளை, அக்கினி இரும்பை உள்ளும் வெளி யும் வியாபித்ததுபோல், வியாபித்திருப்பதால் அக்கினியான து எப்படி இரும்புக்கு வேறோ, அப்படியே அவ்வகங்கா மும் கோசாதி ஆறுக்கும் அப்புறப்படத்தகும்.

அவ்வித அகங்காரமும் சடமானதால் தானே சித்திக்க த்தகாதது. சிதாபாசனால் சித்திக்கு மென்னில் சிதாபாசன் விருத்தியன்றிச் சித்திக்கத்தகான். இவ்விருத்திக்கும் சிதா பாசனுக்கும் காரியகாரணம் நிரூபிக்கத்தகாது. நிரூபித்தி டில் அந்நியொந்நியாச்ரயதோஷ நேரிடும். சிதாபாசனையே தனக்குத் தானே காரணமெனஒப்பினால், ஸ்வாத்மாச்ரயதோ ஷம் வர நேரிடும். கூடஸ்தனைக் காரணமாக ஒப்பினால், கூ டஸ்தன் சத்தாகிய சிதாபாசனுக்குக் காரணமா? அல்லது அ சத்தாகிய சிதாபாசனுக்குக் காரணமா? அசத்தாகிய சிதாபா சனுக்குக் காரண மென்னில், இல்லாததான முயற்கொம்பு க்கும் காரணமாகத் தெரிவான். சத்தாகிய சிதாபாசனுக்குக் காரணமென்னில், சத்தின்பொருட்டுக் காரணத்வங்கூடாது. அவ்வித சிதாபாசன் சின்மாத்திரமாகச் சத்தா? பிரதிபிம்ப மாத்திரமாகச் சத்தா? சின்மாத்திரமாகச் சத்தெனில், நிரு விகார கூடஸ்தனைத் தவிர சிதாபாசன் இல்லாதவனாவான்,

பிரதிபிம்பரூபமாகச் சத்தெனில் பிரதிபிம்பமானது தோன்றி
பது ஆனதால் இல்லாததே தோன்றவேண்டும். தோன்றிடி
னும், பிம்பத்துக்கு வேறென்னில் பிம்பமன்றி விளங்கிடவே
ண்டும். பிம்பமே பிரதிபிம்பமாக விளங்குகிற தென்னில் பி
ரதிபிம்பமாகத் தோன்றுகின்றதா? அல்லது பிரதிபிம்பமாக
இருக்கின்றதா? தோன்றிடில், சுத்தி இரசதம் போல், தோ
ற்றிய அம்சம் பொய்யெனப்படும். பிம்பமே பிரதிபிம்பமா
ன தென்னில்; பிரதிபிம்பமாகுங்காலத்தில் பிம்பத்துக்கு நா
சமும் உபாதிநாசகாலத்தில் பிரதிபிம்பத்துக்கு நாசமும் வ
ந்து இரண்டும் சித்தியாமற்போய்விடும். மேலும் சுருதி
யுக்தி அநுபவங்களால் கூடஸ்தனிடத்தில் நிருவிகாரத்தன்
மை அசங்கத்தன்மை இரண்டும் அவன் சித்தானதால், சித்
தமாயிருக்கின்றது. காரியோற்பத்தி சித்திக்கவேண்டுமானு
ல் காரணம் சங்கியாயும் விகாரியாயுமிருக்கவேண்டும். அ
த்தன்மை அவனிடத்திற் காணப்படாததினாலும், அவ்வநுபூ
தியில் ஞானஞானம் அகங்காராதி அநுபவிக்கப்படாததினு
லும், ஞானஞானமில்லாத விடத்தில் சிதாபாசன் இல்லா
தவனுகின்றான் ஆனதாலும், கூடஸ்தன் இல்லையென நி
ஷேதிக்கத்தகாதவன் ஆனதினாலும் சுருதி யுக்தி அநுபவங்
களால் கூடஸ்தனைத்தவிரக் காரியவஸ்து வேறுகாணப்படா
ததினாலும், அக்கூடஸ்தன் தானாகவே அநுபவத்திற்கு வருவ
தினாலும், அவ்வித கூடஸ்தனுன தன்னிடத்தில், ஆறுகோ
சமாவது அததின் தாதான்மியமாவது கிடையாது. அகங்
காரதத்துவத்துக்கு ஐந்து கோசத்தின் தாதான்மியம் ஒத்தி
டினும், ஆறுவதான கோசத்தில் தாதான்மியம் கிடையாது.
அகங்காரதாதான்மியம் ஆறுவதுகோசத்தில் இல்லாவிடில்,
அகங்காரியும் இல்லாதவனாவான். அகங்காரி இல்லாவிடில்,
அபிமானியும் இல்லாதவனாவான். அபிமானி இல்லாவிடில்,
அபிமானமும் இல்லாததாகவே சித்திக்கும். அபிமானஞ்சித்
தியாத விடத்தில், அஞ்ஞானமுதலியயாவும் இல்லாதவையா

ஞானம் சார உபகாரப்படமாட்டாது. அதில் அஞ்ஞான மென்ற சங்கற்பம் மனதைச் சார்ந்ததாலும் சங்கற்பிக்கப் பட்டதை அவிவேகத்தால் இஃது அஞ்ஞானமென்ற நிச்சய த்தன்மை புத்தியைப்பற்றினதாலும் அவ்விதமாய் ஒன்றுந் தெரியாமல் தூங்கினேனென்று மூந்திய அநுபூதியை இழுத் துச்செல்லுகின்றது சித்தத்தைப் பற்றினதாலும் தன்னுள் அடங்கிய பஞ்சகோசமுடைய மூன்றவஸ்தையையும் இம் மனம் புத்தி சித்தமென்ற மூன்றின் உதவியால் நான் என்ற து அகங்காரத்தைப் பற்றினதாலும், அவ்வகங்காரம் அன்ன மயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயம் அஞ்ஞானம் இவைகளை, அக்கினி இரும்பை உள்ளும் வெளி யும் வியாபித்ததுபோல், வியாபித்திருப்பதால் அக்கினியான து எப்படி இரும்புக்கு வேறோ, அப்படியே அவ்வகங்கார மும் கோசாதி ஆறுக்கும் அப்புறப்படத்தகும்.

அவ்வித அகங்காரமும் சடமானதால் தானே சித்திக்க த்தகாதது. சிதாபாசனால் சித்திக்கு மென்னில் சிதாபாசன் விருத்தியன்றிச் சித்திக்கத்தகான். இவ்விருத்திக்கும் சிதா பாசனுக்கும் காரியகாரணம் நிரூபிக்கத்தகாது. நிரூபித்தி டில் அந்நியொந்நியாச்ரயதோஷ நேரிடும். சிதாபாசனேயே தனக்குத் தானே காரணமெனஒப்பினால், ஸ்வாத்மாச்ரயதோ ஷம் வர நேரிடும். கூடஸ்தனைக் காரணமாக ஒப்பினால், கூ டஸ்தன் சத்தாகிய சிதாபாசனுக்குக் காரணமா? அல்லது அ சத்தாகிய சிதாபாசனுக்குக் காரணமா? அசத்தாகிய சிதாபா சனுக்குக் காரண மென்னில், இல்லாததான முயற்கொம்பு க்கும் காரணமாகத் தெரிவான். சத்தாகிய சிதாபாசனுக்குக் காரணமென்னில், சத்தின்பொருட்டுக் காரணத்வங்கூடாது. அவ்வித சிதாபாசன் சின்மாத்திரமாகச் சத்தா? பிரதிபிம்ப மாத்திரமாகச் சத்தா? சின்மாத்திரமாகச் சத்தெனில், நிரு விகார கூடஸ்தனைத் தவிர சிதாபாசன் இல்லாதவனாவான்,

பிரதிபிம்பரூபமாகச் சத்தெனில் பிரதிபிம்பமானது தோன்றி
யது ஆனதால் இல்லாததே தோன்றவேண்டும். தோன்றினு
னும், பிம்பத்துக்கு வேறென்னில் பிம்பமன்றி விளங்கிடவே
ண்டும். பிம்பமே பிரதிபிம்பமாக விளங்குகிற தென்னில் பி
ரதிபிம்பமாகத் தோன்றுகின்றதா? அல்லது பிரதிபிம்பமாக
இருக்கின்றதா? தோன்றிடில், சுத்தி இரசதம் போல், தோ
ற்றிய அம்சம் பொய்யெனப்படும். பிம்பமே பிரதிபிம்பமா
ன தென்னில்; பிரதிபிம்பமாகுங்காலத்தில் பிம்பத்துக்கு நா
சமும் உபாதிநாசகாலத்தில் பிரதிபிம்பத்துக்கு நாசமும் வ
ந்து இரண்டும் சித்தியாமற்போய்விடும். மேலும் சுருதி
யுக்தி அநுபவங்களால் கூடஸ்தனிடத்தில் நிருவிகாரத்தன்
மை அசங்கத்தன்மை இரண்டும் அவன் சித்தானதால், சித்
தமாயிருக்கின்றது. காரியோற்பத்தி சித்திக்கவேண்டுமானா
ல் காரணம் சங்கியாயும் விகாரியாயுமிருக்கவேண்டும். அ
த்தன்மை அவனிடத்திற் காணப்படாததினாலும், அவ்வநுபூ
தியில் ஞாதுஞானம் அகங்காராதி அநுபவிக்கப்படாததினா
லும், ஞாதுஞானமில்லாத விடத்தில் சிதாபாசன் இல்லா
தவனாகின்றான் ஆனதாலும், கூடஸ்தன் இல்லையென நி
ஷேதிக்கத்தகாதவன் ஆனதினாலும் சுருதி யுக்தி அநுபவங்
களால் கூடஸ்தனைத்தவிரக் காரியவஸ்து வேறுகாணப்படா
ததினாலும், அக்கூடஸ்தன்தானாகவே அநுபவத்திற்கு வருவ
தினாலும், அவ்வித கூடஸ்தனான தன்னிடத்தில், ஆறுகோ
சமாவது அததின் தாதான்மியமாவது கிடையாது. அகங்
காரதத்துவத்துக்கு ஐந்துகோசத்தின் தாதான்மியம் ஒத்தி
டினும், ஆறுவதான கோசத்தில் தாதான்மியம் கிடையாது.
அகங்காரதாதான்மியம் ஆறுவதுகோசத்தில் இல்லாவிடில்,
அகங்காரியும் இல்லாதவனாவான். அகங்காரி இல்லாவிடில்,
அபிமானியும் இல்லாதவனாவான். அபிமானி இல்லாவிடில்,
அபிமானமும் இல்லாததாகவே சித்திக்கும். அபிமானஞ்சித்
தியாத விடத்தில், அஞ்ஞானமுதலியயாவும் இல்லாதவையா

கிவிடும். அஞ்ஞானமுதலியயாவும் இல்லாவிடில், சிதாபாச ன் முக்காலத்திலும் இல்லாதவனாவான். இவ்வித மனனத் தால் சுருதியின் அபிப்பிராயப்படி ஆன்மாவை உள்ளபடிதெ ளிய, நான்கு கோசத்தைப்பற்றி அகங்காரத்துக்கு ஆனந்த மயகோசமென்றும், நிரகங்காரரூபமான கூடஸ்தனைத் தானாக அறியாததினால், சிதாபாசனுக்கு அஞ்ஞானமென்றும், அவ் வித அஞ்ஞானத்தால் அவன் வியாப்தனென்றும் சாமானிய விவேகத்தால் அதற்குத்தகுந்த சுருது யுக்தி அநுபவங்களி னாலும் அநுபவிக்க, கூடஸ்தனான சாட்சியே தானென்றும் அச்சாட்சியநுபவத்தால் ஜாக்கிராதி இரண்டவஸ்தையும் மூன்றாமவஸ்தையிலடங்கி அம்மூன்றாமவஸ்தையான ஜ கத்சத்தாசூநிய ஆவரணவிருத்தியில் மாத்திரம் பிரதிபிம்பி த்தவன் கூடஸ்தசைதந்நியமானதாலும் அவ்வாவரணம் வி ருத்தியைப்பற்றியதானதாலும் அவ்விதவிருத்தி சாட்சியான தன்னையே முன் ஆவரணத்தோடுங்கூடியிருந்தவனாயும் ஞா னபலத்தால் சாட்சியாய் விளங்குகின்றவனாயும் அறிந்து இ வ்வாவரண விருத்தி சிதாபாசனாற் கற்பிக்கப்பட்டதேயன்றி, அவ்வவஸ்தையில்உள்ளபடி ஆவரணமில்லையெனத்தெளிந்து, அவ்வாவரணம் இல்லாததினால், சாட்சிதருமமும் இல்லையெ ன நிஷேதியாமல்நிஷேதித்து, இவ்விதசாட்சிதருமமும் சிதா பாசனுக்குஅகங்காரதாதான்மியத்தால்வந்தசாட்சிஞாததாதா ன்மியமென்று தெளிந்து, நிருவிகாரகூடஸ்தன் மாத்திரமாய் அகம்பதத்தின்பொருளை அநுபவியாமலநுபவிக்க, பஞ்சகோ ச சோதனையாற்கிடைத்த அதிஷ்டானப்பொருள் உள்ளபடி விளங்கிடும். அப்பொழுது அவ்வதிஷ்டானமான தன்னைத் தவிர ஞாநாஞானரூபமாயுள்ளஷட்கோசங்களும் முக்காலத்தி லுமில்லையென்று அதிஷ்டானமாத்திரமாய் அநுபவியாமலநு பவிக்கப்படும்.

## இரண்டாவது ஜகத்தைப்பூதப்பகுப்

## பாகப்பிரித்தபிரகரணம்

மிருந்தகாமமுடையவர்கள் நவநவமாயுள்ள விஷயவிங்யா சவிசேஷங்களால், எப்படி சுகக்கடலிலாடுகின்றூர்களோ, அப் படியே பங்கிவிசேஷமுடையசமாதிகளால் பிரமநிஷ்டர்களும் ஆன்மாநுபவானந்தக் கடலிலாடுகின்றூர்கள்.

எப்படியெனில் அணுவாதிமேருவந்தமானசகலபௌ மங்களையும் பூமியின் விகாரமாகஅறிந்தால், அப்பூமியும் அ ணுமுதல் மேருவரை அவயவாவயவியாக விளங்கவேண்டும். ஆனல் அப்புவின்சேர்க்கையன்றிக்கூடாது. அப்பூமியில் அ ப்புவின்சேர்க்கையை ஆலோசிக்குங்காலத்தில், பிருதுவியெ ன்பது அணுபரிமாணமுடையதாயும் மஹத்பரிமாணமுடை யதாயும் இருவகையாகக் காணப்படுவதால், அவ்வித பிருது விக்கு இருவகையாயுள்ளபரிமாணங்களுஞ் சுபாவமா, அல் லது ஒருபரிமாணமேசுபாவமா: இருவகையுஞ்சுபாவமென் னில்: அவ்விரண்டும்பரஸ்பரவிரோதியானதால் சித்திக்கத்தகா து. அதில் ஒருபரிமாணஞ்சுபாவமென்னில் மற்றொருபரிமா ணம் அப்பூமியிற் காணமலேயிருக்கவேண்டும். நல்லது ஒரு பரிமாணம் காரணசுபாவமுடையது மற்றொருபரிமாணம் கா ரிய சுபாவமுடையதென்னில்: அணுபரிமாணம் காரணமா? மஹத்பரிமாணம் காரணமா? மஹத்பரிமாணம் அவயவியான தால் எவர்களாலும் காரணமாகக்கூறத்தகாது. அணுபரிமாண ம் காரண மென்னில் காரியமான மஹத்பரிமாணத்துக்கு ஒரு அணுபரிமாணமே காரணமா, வெகு அணுபரிமாணமேகாரண மா; ஒருஅணுபரிமாணமே காரணமென்னில் காரியமும்அணு வாகத் தெரியும். வெகு அணுபரிமாணமே காரணமென்றல் வெகுவாக இருக்கின்ற அணுக்களுக்குச்சேர்கை சலமன்றிக் கூடாது. மஹத்பரிமாணத்துக்குசலத்தின் சேர்க்கையேகா

ணமானால், எவ்விடத்திற் சலத்தின்சேர்க்கை பூமியிற் காண வில்லையோ, அவ்விடத்திற் பூமிக்கு மஹத்பரிமாணத்தன்மை கிடையாது. இங்ஙனமாயின் சீதஸ்பரிசமுடைய காற்றில் அதிசூக்ஷமமாய் அப்பு எப்படியநுபவிக்கப் படுகின்றதோ, அப்படியேமஹத்தாய்விளங்கிய பூமியிலும் அணுக்களின்சேர்க்கைவல்லமையாக விளங்கிய திரவசக்தியானவைப்பே சலமாக அநுபவிக்கப்படலாம்.

அவ்வித அநுபவத்தில் அப்புவைத்தவிர பிருதுவியின் அணுபரிமாணங்களாவது வேறிருக்கின்றதாக ஒத்திடில்; அவ்வணுக்கள் விஷயங்களாக வேண்டும். விஷயீகரிக்கப்பட அதுகள் அணுக்களாகத் தகாது. நிர்விஷயங்களாயின்: அத்தலத்திலிருக்கின்றதாக ஒப்பத்தகாது. இங்ஙனமாயின் அப்புவைத்தவிரபிருதுவி வேறில்லை யெனத் தெளியவரும்.

இவ்வித அப்புவே பிருதுவியாகத் தோற்றக் காரணமேதென்னில்; தனது காரணமான அக்கினியின் உஷ்ணசக்தியால், தனது திரவசக்திஸ்தம்பிக்கப்பட அவ்விதஸ்தம்பனமே, சலமேஆலங்கட்டியானதுபோல்,பிருதுவியாகத்தோற்றிற்று.

மேலேசொல்லியபிரகாரம் எவ்விடங்களில்அப்புவுக்குப் பிருதுவியாய்த் தோற்ற வல்லமையிருந்திருக்கிறதோ, அவ்விடங்களிலெல்லாம் அக்கினிக்கு அநுப்பிரவேச மிருந்திருக்கவேண்டும். அவ்வித அக்கினியைத் தவிர சலம்வேறு வேறில்லையா? வேறாயிருக்குமானால் முன் திரவசக்தியைத் தனது உஷ்ணசக்தியால் ஸ்தம்பித்ததுபோல், முழுவதையும் ஸ்தம்பித்திடத்தெரிய, அப்புவேஇல்லாததாகத் தெரியும். இல்லாவிடில் பழுதையிற் றோன்றிய சர்ப்பம் பழுதையாக ஙசித்தபின் பழுதைமாத்திரமாவதுபோல், அப்புவையும் அக்கினிமாத்திரமாகவே சொல்லவேண்டும்.

அவ்வித அக்கினி தனது உஷ்ணசக்தியால் அப்புவின் திரவசக்தியைப்பிருதுவியாக விளங்கத்தக்கதாகவாவது, திரவசக்தியை நீக்கிப் பிருதுவி அப்பு இவ்விரண்டையு மில்லாததாகவே செய்யத்தக்கதாகவாவது, அப்புவின் திரவசக்தியைஅக்கினிவியாபிக்கவேண்டுமானுல், அக்கினிக்கு சலனமன்றி அவ்விதவியாபகம் சித்திக்கத்தக்கதில்லை. அவ்விதவியாபகம் வாயுவாகச்சித்தித்திடில், பூமி சலத்திலும் சலம் அக்கினியிலுமாயடங்கிட அவ்வக்கினியும் தனது விகாரமான காரியசத்தையில்லாததினுல் தனது காரணமான வாயுவாக சேஷித்திடத்தெரியும்.

அவ்வித வாயுவும் ஸம்யோகாந்தரமில்லாததினுல் சலனமற்று ஆகாயமாத்திரமாகவே சேஷித்திடும். முன்சொன்ன ஜகம் உண்டாகவேண்டுமானுல், வெளியை முன்னிட்டேயுண்டாகவேண்டும் அவ்வித நான்குபூதமுள்ள ஜகம் உண்டாகு முன்னமே வெளியான ஆகாயமாத்திரமாக இருந்திடில், அவ்வித அரூபமான ஆகாயத்தில் நின்றும் ஆகாரமான ஸ்வரூபமுடைய ஜகம் உண்டாயிற்றென்று சொல்லக் கூடாது. ஆகையால் ஆகாயத்தைத்தவிர ஜகம் வேறில்லவேயில்லை. இங்ஙனமாயின் தோற்றிற்றென்று சொல்லவேண்டும். தோற்றில் ஆகாயத்திற் றோற்றியதா? ஆகாயத்திற் சீவுனிடமாகத் தோன்றியதா? ஆகாயம் ஜடமானதால் ஜகமாகத் தானே தோற்றாது சீவனிடமாகத்தோற்றியதென்னில்; அவ்விதசீவன் இந்திரியரூபனு, அந்தக்கரணரூபனு, அஞ்ஞானரூபனு; அல்லது இந்திரியம் அந்தக்கரண அஞ்ஞானம் இம்மூன்றோடுங்கூடிய அறிவா, அல்லது இம்மூன்றுக்கும் அப்புறப்பட்டசுத்தஅறிவா; க-வது இந்திரியமே சீவன்அவனிடமாக ஆகாயத்தில் ஜகம் கற்பிக்கப்பட்டதென்னில்; இந்திரியத்துக்கு விஷயமாகவிளங்கிய ஆகாயம் விளங்கமாத்திரஞ் செய்யுமேயன்றி, ஆகாயமென்றகற்பனைகூட அதில் விளங்கத்தகாது. மே

லும் மற்றநான்குபூதங்களை உள்ளும் வெளியும் வியாபித்த ஆகாயத்தைத்தவிர நான்கு பூதங்களும் வேறில்லை யென்றும் நான்கு பூதங்களும் உண்டாகவேண்டுமானல் ஆகாயமே காரணமாயிருக்கவேண்டுமென்றும், அரூபமான அவ்வாகாயத்தில் நின்றும் ரூபமுடையஜகம் உண்டாகத் தகாதென்றும், அவ்வாகாயத்தைத்தவிர ஜகம் வேறில்லவேயில்லையென்றும் நிரூபித்ததுபோல, இவ்வாகாயமும்விளங்க வேண்டுமானல் இந்திரியமன்றிக் கூடாததினுல் எவ்விடமாய் ஆகாயம்விளங்கிடினும், அவ்விடமாய் இந்திரியசத்தையும் இடைவிடாத் தன்மையாய் விளங்கவேண்டும் அங்ஙனம் இந்திரியசத்தை இடைவிடாததன்மையாய் விளங்கிடில், ஆகாயம் விளங்குதலைத்தவிர வேருயிருக்கின்றதென்று கூறப்படாது.

மேலும் நாமரூபங்களெல்லாம் வாசனரூபங்களானதால், அவ்வாசனை அந்தக்கரணத்தைச் சார்ந்ததால் இந்திரியத்தில் விளங்கிய வஸ்துக்களை, மனமானது நாமரூபமுடையதாக மாத்திரஞ் சங்கற்பித்திடும். அப்படியாகில் அவ்வித நாமரூபங்களுடையதாகவே அவ்வஸ்துக்களை இந்திரியம் விளங்குவித்திடத்தெரியும்.

இங்ஙனங் கூறியபிரகாரம் இந்திரியத்தின்விளக்கமே விரிவாய் விளங்கத்தெரிய அவ்விளங்குதலில் நாமரூபமில்லாததினுல், ஆகாயமென்ற நாமரூபம் சங்கற்பமுடைய மனதாற்றேன்றி இந்திரியத்தினிடமாய் விளங்குகின்றதாகக் காணப்படுகின்றது,

ஆகையால் இந்திரியத்திற்றேன்றியது விளங்குதலும், மனதிற்றேன்றியது நாமரூபமுமாகலாம். அவ்விதவியாபகஇந்திரியவிளங்குதல் மாத்திரமாயுள்ள விளங்குதலில், மனதாற்கற்பிக்கப்பட்ட ஆகாயமென்ற நாமரூபத்தைச்சத்தை இடைவிடாம

ல் நிறைந்திருந்தபோதிலும், அவ்விளங்குதல் மனோவிகார மான ஆகாயமென்ற நாமரூபத்துக்குட்பட்டதல்ல.

முன்சொன்ன பூதங்களை இந்திரியத்தைத்தவிர வேறில் லையென்று நிஷேதித்ததுபோல, இவ்விந்திரியவிருத்தியில் வி ளங்கிய வியாபகவிளங்குதலை மனதைத்தவிர வேறில்லையென நிஷேதிக்கத்தகாது: ஆகவே இந்திரியத்துக்கு இந்திரியமென் ற நாமரூபமாத்திரம் மனதின்சங்கற்பத்தைத்தவிர வேறில்லை யெனச்சொல்லலாம். அவ்விதசங்கற்பரூபமான மனதின்விகா ரத்தாற் றோன்றி இந்திரியத்தின் முன்னிலையாக விளங்குகின் ற நாமரூபங்களை, மனதின்சங்கற்பப்பிரகாரம் நிச்சயப்படுத் தும் புத்தியின்விளங்குதலென்ன, அப்பிரகாரம் ஆலோசிக்கு ஞ்சித்தத்தின்விளங்குதலென்ன, சொந்தமாகக்காட்டுந் திறமை யையுடைய அகங்காரத்தின் விளங்குதலென்ன, இவ்வாறு வி ளங்குதலும் வியாபகமாகிய இந்திரியவிளங்குதலில் மனதாற் கற்பிக்கப்பட்ட நாமரூபங்களை முன்னிட்டிருந்தபோதிலும், நாமரூபம் கற்பிதமானதுபோல புத்திசித்தம் அகங்காரம் இ வைகளின் விளங்குதல், கற்பிதமாகத்தகாது: ஆனல் சங்கற்ப ரூபமான நாமரூபத்தை முன்னிட்டுவந்தவிவகாரங்களை நிச்ச ய ஆலோசனைசொந்தத்தன்மை இவைகளாகத் தோற்றிய ச ங்கற்பமாத்திரம் கற்பிதமாகலாம். அப்படியே மனதுக்கு மனமென்றசங்கற்பத்தன்மை மாத்திரம் கற்பிதமாகுமேயன் றி, அதின்விளங்குதல் கற்பிதமாகத்தகாது.

இவ்விதமனம் புத்தி சித்தம் அகங்கார மிவ்வளவும் ச ங்கற்பவிஷயங்களன்றி விளங்குதல்மாத்திரம் சத்தியமாயின், முன் இந்திரியத்தில் விளங்கிய வியாபக விளங்குதலைத்தவி ர வேறுவிளங்குதல் பேதமுடையதாகச் சங்கற்பிக்க இடமி ல்லாததால், பூதபௌதிகமுதல் அகங்காரம் வரையிலுள்ளோ,

ற்றிய சகல ஜகமும் விளங்குதலைத்தவிர வேறில்லையென்று அ நுபவிக்கவரலாம்.

சுழுத்தியில் அவ்விளங்குதலுமில்லாததினால் இந்திரியம் மனம் புத்தி சித்தம் அகங்காரமாகிய இவைகளற்றவிடம் அந்தக்கரண மானதால், அவ்வந்தக்கரணமே விளங்குந்தன்மை யுடையதாகக்காணப்படுவதால், அவ்வந்தக்கரணமான விளங்குதலைத்தவிர மேற்சொன்ன ஜகம் வேறில்லையென்னில், அச் சுழுத்தியில் அந்தக்கரணமில்லாவிடினும் அஞ்ஞானமிருக்கின்றதாகவே ஒப்பவேண்டும்: எங்ஙனமென்னில், சுழுத்தியில் அந்தக்கரணமில்லாததினால் விளங்குதலில்லையென்று சொல்லவேண்டுமானால், அவ்வந்தக்கரணமில்லையென்று விளங்குவிக்க ஒருவிளங்குதல் அகத்தியம் எவர்களும் ஒப்பவேண்டும் அவ்வித விளங்குதல் சுழுத்தியில் அஞ்ஞானரூபமாய் விளங்குவதால், அவ்விளங்குதலும் அஞ்ஞானத்தைத்தவிர வேறு கக்காணப்படாததினாலும், சகலரும் விழித்தபின் ஒன்றுந் தெரியாமற்றூங்கினேனென்று சுழுத்தியின் அஞ்ஞான அநுபவத்தை அநுபவமாகச் சொல்வதினாலும் அவ்விதகாரணமான அஞ்ஞானத்தைத்தவிர மேற்சொல்லிய அந்தக்கரணாதிகளுக்குச்சுழுத்தியில்வேறுகாரணங்காணப்படாததினாலும், அஞ்ஞானத்தைத்தவிரஜகம்வேறில்லையென்றுவரநேரிட அவ்வித அஞ்ஞானமும் விளங்குதலினாலேயே விளங்கவேண்டும் அத்தலத்தில் விளங்குதல் ஒப்புதலாகிவிடில் அஞ்ஞானமிருந்ததாகக்கூறத்தகாது. அஞ்ஞானமென்றபெயர் விளங்குதலினில்லாமைரூபமானதால், விளங்குதலிருக்குமிடத்தில் விளங்குதலி னில்லாமையாகிய அஞ்ஞானமிருக்கின்றதாக ஒப்புவதற்குச் சரியாகநிரூபிக்கத்தகாததினால், விளங்குதலேயிருந்ததென்று வாதிக்கப்படாத யுக்தியநுபவங்களால் ஒப்பவேண்டும்.

ஆனால் மேற்கண்ட சகலமும் ஒரே தன்மையாய் விளங்குகின்ற விளங்குதலைத்தவிர முக்காலத்திலும் வேறில்லையென்னில்; அந்தக்கரணமென்றும் அஞ்ஞானமென்றும் விளங்குதல்மாத்திரமாயும் மறைவாயுமுள்ள இருவகை விளக்கமும் விளங்கக் காரணம்யாதென்னில்? விளங்கியதென்றும் மறைந்ததென்றும் இருவகையாய்த்தோற்றிய சங்கற்பரூபமான மனங்காரணமேயன்றி, வேறுகாரணமில்லை.

ஆனால் எல்லாம் விளங்குதல் ரூபமாகில், சங்கற்பரூப்மான மனமாத்திரம் விளங்குதலுக்கு அந்நியமா? விளங்குதலுக்கு அந்நியமாகில், அஞ்ஞானம்போல இல்லாததாகத்திரியும். விளங்குதல் ரூபமாகில்; அதனை மனமென்றுசொல்லக்கூடாது. இங்ஙமாயின் ஜகமுதல் அஞ்ஞானம்வரை விளங்குதலைத்தவிர வேறுகாணப்படாததினால், விளங்குதலென்றதின் பொருள் அறிவுரூபமானதால், மேற்சொன்ன பிரகாரம் முக்காலத்திலும் அறிவைத்தவிர வேறுகாணப்படாததினால் அவ்வித அறிவை இந்திரியமென்றுவது அந்தக்கரணமென்றுவது அஞ்ஞானமென்றுவது அவைகளுடன்கூடி விளங்கிற்றென்றுவது எவர்களாலும் சுருதி யுக்தி அநுபவங்களால் நிரூபிக்கத்தகாததுதான். கற்பனையன்றிக்கற்பியங்கூடாது. கற்பகனன்றிக் கற்பனைகூடாது. சிவனென்பது கற்பகரூபமானதால் கற்பனையின் வித்தாவான். ஆன்மாவினிடத்திலோ விருத்தியில்லாத தன்மையால், கற்பியம் அதற்கேதுவான கற்பனை அதற்கேதுவான கற்பகன் என்ற மூன்றுதன்மையும் முக்காலத்திலும் ஒப்பக்கூடவேகூடாது.

ஆகையால் சுத்த அறிவான அவனைச் சிவனென்னக்கூடாது. சுருதி யுக்தி அநுபவங்களினால் பிரமமென்று சொல்லவோமென்னில்; பிரமமென்ற விவகாரமும் சிவத்தன்மை

முக்காலத்திலுமில்லாததினால் நிரூபிக்கத்தகாது. சிவன் பிரம் இரண்டு விவகாரமும் கற்பனையைச் சார்ந்ததால், சிவன்பிரமம் என்ற கற்பனைமாத்திரம் கற்பிதம். இவ்விரண்டு விவகாரங்களிலும் விளங்கியவிளங்குதல் அகற்பிதம். ஆகையால் சருவவிவகாராதீதமாயுள்ள விளங்குதலைத்தவிர யாதொரு விகற்பமும் முக்காலத்திலுமில்லவேயில்லையென்று விளங்குதல்மாத்திரமாய் நில்லாமல்நின்று விளங்கிடுவார்கள்.

முற்றிற்று

---

## மூன்றாவது

### கடினாதிகுணப்பகுப்பாகப்பிரிந்த பிரகரணம்

மேற்கண்ட ப்ருதியைக்குறித்துச் சிலகாலத்தில் இப்படியும் ஆலோசிக்கின்றார்கள். எப்படியென்னில் பிருதுவி என்பது கடினத்தைத்தவிர வேறில்லை: கடினமென்பது வாயுவின் சலனவிசேஷமுடைய அக்கினியின் தகனசாமர்த்தியத்தால் ஸ்தப்தமாகிய அப்புவின் திரவகுணத்தைத்தவிர முன்சொன்ன கடினகுணமும் பிருதுவியினுடன்கூட வேறில்லாததாகலாம். அப்புவின் திரவகுணமும் அக்கினியின் தகனகுணத்தால் மிகுந்து தகிக்கப்படத்தெரிய, திரவம்காணப்படாததால் அதுவும் அப்புவோடேகூட அக்கினியின் தகன குணத்தைத்தவிர வேறில்லாததாகலாம். கடினகுணமாயும் திரவகுணமாயும் விளங்கிய பிருதுவியும் அப்புவும் உஷ்ணகுணத்தைத்தவிர வேறில்லாவிடில், நிராதாரமாகக்கொண்டு எந்த வாயுவின் சலனவிசேஷமான ஸ்பரிசத்தால் திரவகுணமாயும் கடினகுணமாயும் விளங்கிநின்றதோ, அந்தவாயுவின் நிராகாரஸ்பரிசகுணமாத்திரமாய்ச்சேஷித்து முன்போலவே மூன்று பூதங்களும் இல்லாததாகிவிடுகிறது,

ஆகாயம் அசங்கபதார்த்தமானதால் ஸ்பரிசகுணரூபமான வாயுவைத்தவிர ஸ்பரிசயோக்கியமான சங்கிரூபமூன்று பூதங்களுமில்லாததினுலும், தனக்குத்தானே ஸ்பரிசமாக நிரூபிக்கத்தகாததினுலும், ஸ்பரிசரூபமான வாயுவுக்கு ஸ்பரிசத்தன்மை சித்தியாததினுல் ஆகாயத்தன்மையைத்தவிர வேறில்லாததாகிவிடும்.

அவ்வித ஆகாயமும் சப்தகுணத்தைத்தவிர வேறில்லாததினுல், ஸ்பரிசமில்லாவிடத்தில் சப்தமுண்டாகக்காரணமில்லாததினுலும் நிராகாரமானதினுலும் வியாபகமே ஆகாரமென்றிடில், இந்திரியவியாபகத்தைத்தவிர வேறிருக்கின்றதாக நிரூபிக்க உபகாரப்படாததினுலும், அதற்கு வெளித்தன்மையே ஆகாரமென்று ஒப்பினுல், அவ்வித வெளித்தன்மையும் ஸ்பரிசாபாவத்தைத்தவிர வேறுகாணப்படாததினுலும், அதற்கு இந்திரியவியாபகத்தைத்தவிர வேறுதன்மை ஒப்பத்தக்கதல்ல.

இங்ஙனமாயின் பஞ்சகுணங்களோடு பஞ்சபூதங்களுமில்லாததினுல், சகல ஜகங்களும் சகல ஸ்தூலதேகங்களோடுகூட இல்லாததாகமுடியும். ஸ்தூலதேகமுதலிய சகல ஜகங்களுமில்லாவிடில், பஞ்சேந்திரியங்களும் விஷயகிரணவல்லமையினுல், இந்திரியங்களென்ற விளங்குதலையடைந்திருப்பதினுலும், ஸ்தூலதேகமன்றிச் சித்திக்கமாட்டாததினுலும், நிர்விஷயங்களாயும் நிராதாரங்களாயுங்கொண்டு மனதைத்தவிர வேறில்லாததாகவே முடியும்.

மனமென்பது வாசனரூபமானதால் வாசனையென்பது இந்திரியங்களின் வியாபாரங்களையும் விஷயங்களையுந்தவிர வேறில்லாததினுல், இந்திரியங்களுமதின் வியாபாரங்களுமதின் விஷயங்களும் மேற்சொன்னபடி இல்லாவிடில்,

வாசனையும் இல்லாததாகவே சித்திக்கும். வாசனை இல்லா விடில் மனது மில்லாததாகவே சித்திக்கும்: மனமில்லாவிடில் புத்தி சித்தம் அகங்காரம் இம்மூன்றும் திரியில்லாததீபம் போல இல்லாதவையாகக்காணப்படும்.

இந்த நான்குமில்லாதவிடம் சூநியமென்றாவது அறியுந் தன்மையில்லாததினால் அஞ்ஞானமென்றாவது நிரூபிக்க உபகாரப்படத்தகாது. சூநியமென்றால் ஜகமுதல் அகங்காரம் வரையுள்ள யாவைகளும் சூநியமா? அல்லது இவைகளைச் சூநியமென்றறிந்து நிரூபிக்கின்ற அறிவே சூநியமா? அறிவைத்தவிர மற்றது சூநியமென்று நிரூபிக்கில், அவைகள் ஸ்வயம் முக்காலத்திலுமில்லாததினால், முக்காலத்திலுமில் லாத சசவிஷாணத்தை இல்லையென்ற விவகாரம் உபகாரப்படாததுபோல உபகாரப்படத்தக்கதல்ல.

அதையறிந்த அறிவைச்சூநியமென்றிடில், கண்ணன்றி விஷயஞ்சித்தியாததுபோல், சூநியமென்ற விஷயமும் அறிவையன்றிச் சித்தியாது. சூநியமும் அறிவும் இருப்பதாக ஒப்பிடில்; முக்காலத்திலுமில்லாததே சூநியமானதால், இல்லாததை இருக்கின்றதாக எப்படி ஒருக்காலும் ஒப்பக்கூடாதோ, அப்படியே இரண்டாம் வஸ்துவை எதிரிடாது ஏகத்தன்மையாயிருக்கின்ற அறிவையுமிருக்கின்றதாக ஒப்பவேண்டும்.

அப்படியே அவ்விடத்தில் அஞ்ஞானமிருக்கின்றதாக ஒப்பிடில், சூநியம்போலவே அறிவன்றி ஒப்பத்தகாது. அறிவு அஞ்ஞானம் இரண்டுமிருப்பதாகவொப்பினால் அவ்வஞ்ஞானம் அறிவைமறைக்கின்றதா ஜகத்தைமறைக்கின்றதா? அறிவை என்னில், கண்ணன்றி இருள்சித்தியாததுபோல, அறிவன்றிச்சித்திக்கத்தகாது. ஜகத்தை மறைக்கின்றதென்னில் முக்காலத்திலுமில்லாத ஜகத்தை எவ்விதமாக மறைக்குமெ

ன்பது கூடும். மேலும் சூநியம்அஞ்ஞானமென்ற இரண்டு தன்மையும் சங்கற்பத்தால் தோற்றவேண்டுவதால், முன் சொன்னபிரகாரம் சங்கற்பத்தன்மையுடைய மனம் முக்கால த்திலுமில்லாவிடில், இதுகளுமில்லாததாகவே சித்திக்கும். அப்படியே அறிவையுஞ் சொல்லக்கூடாதோவென்னில், அறிந்தே இல்லை யென்று சொல்லவேண்டியிருப்பதால், அறியுந் தன்மை அறிவுக்கேயன்றி வேறொன்றிற்குங்கூடாததினாலு ம், தன்னைத்தவிர மற்றொருபொருள் தன்னிடத்தில் முக்கா லத்திமில்லாததினாலும், தன்னைத் தானறியத் தன்னிடத்தில் திரிசய அம்சமில்லாததினாலும், தானாகவே சித்சித்திருக்கி ன்றது. முக்காலத்திலும் தானேதானாகச்சித்திக்க எல்லாம் தானேதானென்று அநுபவியாமலநுபவிக்க ஆனந்த பரவசத் தாய் அப்படியே ஆனந்தக்கடலாகி விடுகின்றார்கள்.

முற்றிற்று

நான்காவது

## சப்தாதிகுணப்பகுப்பாகப்பிரித்த பிரகரணம்

இந்தப்பிரகாரமாயுஞ் சிலகாலத்தில் ஆலோசிக்கின்றார் கள் பிருதுவியில் சப்தஸ்பரிசரூபரசகந்தம் இவ்வளவுங்காண ப்படுவதால் இவைகள் மற்றப்பூதங்களின் குணமாயிருப்ப தால், மற்றப்பூதங்களும்அவற்றின் குணங்களும் இப்பூதமு ம் இதின் குணமும் என்னமாய்ச் சேர்ந்திருக்கின்றதென்று பார்க்க, எல்லாக்குணமும் எங்கும் இடைவிடாத்தன்மையாக க்காணப்படுவதால் எங்கும் எல்லாப்பூதமுமிருக்கவேண்டும்.

அதில் கடினமுள்ள இடங்களெல்லாம் கந்தமாகக்காண ப்படுவதால், கந்தத்தைத் தவிரக் கடினம் வேறில்லாததினால் கிஷ்ணவருணத்தோடுங்கூடப் பிருதுவியுமில்லாததாகவே சித்

திக்கும். அவ்வித கந்தம் முன் பிருதுவியில் இடைவிடாத் தன்மையாகக்காணப்பட்டதால், அவ்வித பிருதுவியில் இடைவிடாத்தன்மையாகக்காணப்பட்ட இரசமும் கந்தத்தைத் தவிரப்பிருதுவியில்லாவிடில், கந்தசத்தையில் இடைவிடாத் தன்மையாயிருக்கவேண்டும்.

இரசமென்பது தனது காரணமானசலத்தின் குணமான தால், முன்சொன்னகந்தமும் தன்னைத்தவிர கடினம் கிஷ்ண வருணம் பிருதுவி இவ்வளவுமில்லையென நிஷேதித்திட, நிரா தாரமாகக்கொண்டு தன்னை யுள்ளும் வெளியும் வியாபித்திரு ந்த இரசமாத்திரமாகவே சேஷித்திடும். அவ்வித ரசம் சல த்தில் எவ்விடத்திலும் சுக்கிலவருணம் சிதஸ்பரிசம்நெகிழ்ச் சி இவைகளோடும் இடைவிடாத் தன்மையாகக்காணப்படுவ தால், அவைகளைச் சோதிக்குங்காலத்தில் திரவமன்றிச் சீத ங்கிடையாது: சிதமன்றிச் சுக்கிலவருணங்கிடையாது: சுக் கிலவருணமன்றி இரசங்கிடையாது: இரசமன்றி அப்புக்கிடை யாது: அவ்வித அப்பு இரசத்தைத்தவிர வேறில்லையென்னில் அவ்வித இரசத்தை வெளுப்பென்றாவது சிதமென்றாவது நை ப்பென்றாவது சொல்லத்தகாது. ஆகவே அவை இரசத்தை த்தவிர இல்லாதவையாகவே சித்தித்திடும்: அவை யில்லாவி டில் தானும் நிரா தாரமாகக்கொண்டு இல்லாததாகவே சித் திக்கும்.

அப்படியே அக்கினியும் நிராதாரமாகக்கொண்டு ரூபம ற்றுத் தனது காரணமான ஸ்பரிசரூபவாயுவிலடங்கி ஸ்பரிச மாத்திரமாயச்சேஷித்திடும். அவ்விதவாயு அரூபமானதால், ரூபமற்றதாகக்கொண்டு இல்லாததாகவே தெரியும்; அதற்கு ரூபமில்லாவிடினும் ஸ்பரிசத் தன்மையிருப்பதால், இல்லையெ ன நிரூபிக்கத்தகாதென்னில், அதற்கு அவ்வித ஸ்பரிசம் குணமா, அல்லது சுபாவமா? குணமென்னில்; அரூபத்துக்கு ஸ்பரிசங்கிடையாது. சுபாவமென்னில்; மேற சொன்னபடி

காரியபூதங்கள் முக்காலத்திலுஞ் சித்தியாத்தினலும், காரண பூதமான ஆகாயம் நிராகாரமானதாலும், சப்பந்தரகிதமாகக் கொண்டு ஸ்பரிசமே சித்தியாவிடில் வாயுவிருக்கின்றதாக எ ன்னமாக ஒப்பப்படும். ஸ்பரிசமில்லாவிடில் வாயுவில்லாததி னல் ஸ்பரிசமன்றிச்சப்தம் விளங்காது. சப்தத்தைத்தவிர ஆகாயத்துக்கு வேறே தன்மையில்லாததினல், ஆகாயமுமி ல்லாததாகவே காணப்படுகின்றது. அதற்கு விரிதல் சுபாவ மும் சப்தகுணமுமாயிருக்கும்போது இல்லையென்று என்ன மாகச்சொல்லக்கூடுமென்னில்: ஸ்பரிசமில்லாததினல் சப்தம் ஒப்பக்கூடாதென்றது, வாயுவின் ஸ்பரிசத்தைப்பற்றியதற் கேயன்றி, இந்திரியத்துக்கும் ஆகாயத்துக்கும் சம்பந்தம் ஏ ன்கூடாது? சம்பந்தங்கூடுமாயின் சப்தம் விளங்கத்தடையி ல்லையென்னில்; இந்திரியம் ஆகாயம் இவ்விரண்டின் சம்பந் தத்தால் சப்தம் உற்பவிக்கின்றதா அல்லதுவிளங்குகின்றதா? இல்லாத சப்தம் உற்பவிக்கின்றதெனின், இல்லாத ரூபமும் உற்பவிக்கின்றதெனவரும். விளங்குகின்றதெனின்; விஷய மாயிருந்திடில் விளங்கவேண்டும். இந்திரியம் உள்ளதை வி ளங்குவிக்குமேயன்றி இல்லாததை விளங்குவிய்யாது.

முன்சொன்ன பிரகாரம் ஆகாயத்திற் சம்பந்தமில்லாததி னல் சப்தமுமில்லாததெனவேதாற்பரியம். வெளியென்பது நான்கு பூதங்களினபாவத்தை யிட்டுவந்ததால், அபாவத்தைப் பாவபதார்த்தமாக நிருணயிக்கத்தகாது. இங்ஙனமாயின் பிருதுவி முதல் ஆகாயம்வரை அததின் குணங்களோடு கூட அபாவபதார்த்தமானதால், அவைகளை விளங்குவிக்குந்தன் மையால் வந்த இந்திரியமென்ற விவகாரமும், அபாவமாகவே சித்திக்கவேண்டும். இந்திரியமென்ற தன்மை விஷயத்தால் வந்ததா, இந்திரியத்தால் வந்ததா மனதால் வந்ததா? விஷய த்தாலென்னில்; விஷயம் அபாவமானதாற் சித்தியாது. இந் திரியத்தாலென்னில்; விஷயகிரகணவல்லமை சித்தித்திடில் இந்

திரியமென்னப்படும். விஷயமில்லாவிடினும் விஷயங்களைக்கிர கிக்கின்ற இந்திரியமிருக்கின்றதாக ஒப்பவேண்டும். தனக்கு த்தான் விஷயமில்லாததினால், தானே இந்திரியமெனவிளங்கா து. விளங்காப்பொருளை இருக்கின்றதாக ஒப்பக்கூடாது. மனதாற்கூடுமென்னில்: மனமென்றது சங்கற்பரூபமானதால் இருக்கின்றதைச் சங்கற்பிக்கின்றதா இல்லாததை சங்கற்பி க்கின்றதா? இருக்கின்றதைச் சங்கற்பிக்கின்றதென்னில்; இ ந்திரியமுதற் சகலமும் அபாவபதார்த்தமானதால், இவைகளை ச் சங்கற்பிக்கின்றதென்றுகூறக்கூடாது. இல்லாதவைகளைக் கற்பிக்கின்றதென்னில்; ஒருகாலத்தில் வந்தியாபுத்திரனையுங் கற்பிக்கவரும். மேலும் மனதாற்சங்கற்பிக்கவேண்டுமானால் சாக்கிரம் சொப்பனமென்ற இரண்டவஸ்தைகளிலும் இந்திரி யவாசனையை இல்லாததாகக்கொண்டு கற்பிக்கவேண்டும். ஏ தெனில் முன்னமே இந்திரியங்களை அபாவரூபமாகக்கூறின தாற்றான். அங்ஙனமாயின் மனதாற் கற்பித்தசொப்பனம் பி றவி யந்தகன் திருஷ்டியில் ரூபம்விளங்குவதுபோல, இந்திரி யவாசனை யில்லாத மனதுக்கு சொப்பன முதலிய ஜகம் விளங் கிடத்தெரியும்.

இப்பிரகாரம் சாக்கிரம் இந்திரியத்தோடும் சொப்பன ம் மனதோடுங்கூடி விளங்காவிடில், முன் இந்திரியம் அபா வமாகக்கூறப்பட்டதுபோல், மனமும் அபாவமாகவே சித்தி க்கும்: மனமுதற் சகலமு மபாவமாகச்சித்தித்திடில் விருத்தி யில்லாததன்மைபால் ஞானமுமில்லாததாகவே சித்திக்கவே ண்டும். ஞானமில்லாதவிடம் அஞ்ஞானமானதால், அஞ்ஞா னமாத்திரமாயிருக்கின்றதாக ஒப்பவேண்டும். இவ்விதமாக நிரூபிக்கத்தெரிய, ஞானம் அஞ்ஞானமென்ற இவ்விரண்டு விவகாரமும் மேற்சொன்னபடி மனமில்லாத தன்மையால், என்னமாகக்கற்பிக்கக்கூடும். ஞானமில்லாவிடம் அஞ்ஞான மென்றால், ஜகத்ஞானபாவமா அஜ்ஞான ஞானபாவமா? ஜ

கத்ஞானுபாவமென்றால்; ஜகம் முக்காலத்திலுமில்லாததினால் இருந்தழிந்ததே அபாவமானதால், ஜகத்ஞானமேயில்லாவிடில் ஜகத்ஞானுபாவமிருந்ததென எவ்விதமாகக்கூறத்தகும். அதிஷ்டான ஞானுபாவமிருந்ததெனின் பாவமாயாகிலும் அபாவமாயாகிலும் ஒரு வஸ்து விளங்கவேண்டுமானால், ஞானமன்றி விளங்கத்தகாது: அவ்வித ஞானத்தைப் பாவாபாவ விவகாரங்களுக்கு அதீதமாகவே ஒப்பவேண்டும். பாவாபாவ விவகாரங்களுக்கு அதீதமாக விளங்கிய ஞானத்தை இல்லையென்று நிஷேதிக்கத்தகாது: இருக்கின்றதென நிருணயிக்கவுந்தகாது; இருக்கின்றதென்றபாவவிருத்தியும், இல்லையென்ற அபாவவிருத்தியும் சங்கற்பரூபமான மனதைச்சார்ந்ததால், முன்னமே மனமில்லாததாகச் சித்தித்ததுபோல, பாவாபாவ விவகாரமு மில்லாததாகச்சித்தித்திடும்,

இங்ஙனஞ் சித்தித்திடில் முக்காலத்திலும் பாவாபாவாதீத அதிஷ்டான ஞானத்தைத்தவிர வேறுஜகமில்லாததினால், ஜகசிருஷ்டாஈசனென்றும் ஜகதபிமானி ஜீவனென்றும்விவகாரம்வரக் கணக்கில்லை: ஜீவேசபேதம் முக்காலத்திலுமில்லாவிடில், அவைகளின் ஐக்கியமாகிய பிரமபதவியென்றவிவகாரமும் மிகவுஞ் சித்திக்கத்தகாதது தானெனத்தெளிந்து அறிவாய் விளங்கிட அஹோ விசித்திரமெனப்பிரமானந்த பரவசர்களாய் விளங்குகின்றார்கள்.

முற்றிற்று



## ஐந்தாவது

## கிரியாசக்திப்பகுப்பாகப்பிரிந்த பிரகரணம்

அநுபவிக்கப்படுகின்ற இந்த ஜகம் உற்பத்திநாசமுடைய காரியவஸ்துவாகக்காணப்படுவதால், காரியமென்றால் கிருதிஜென்னியமெனப்படும். கிருதிஜென்னியமாகில் இச்சை ஞானமிரண்டுமன்றிக்கிருதிரூபகிரியாசக்தி சித்தியாது எங்ஙனமெனில் ஒரு குலாலனாலுண்டாக்கப்பட்டகடம் குலாலனது இச்சாஞானம் பொருந்திய கிரியையன்றி எப்படி சித்தியாதோ, அப்படியே ஈசசீவர்களுடைய இச்சாஞானக்கிரியையன்றி ஜகம் சித்திக்கமாட்டாது. இங்ஙனமாயின் சகல ஜகத்தையும் கிரியாசக்திமாத்திரமாகப்பிரிக்க, இச்சா சக்திமாத்திரமாய்த்தனித்துப் பொருளில்லாததாய்க்கொண்டு ஞானசக்தி மாத்திரமாய்ச்சேஷித்திடும். ஞானசக்திமாத்திரமாய்ச்சேஷித்திடில், மேற்சொன்ன சகலமு மிச்சா கிரியாவினங்களாகக்கொண்டு ஞானசக்திமாத்திரமாகவே சேஷித்திடும். அப்பொழுது ஞானசக்தியும் நாமரூபத்தோற்றுதலற்று ஏகாகாரமாய் அகண்டமாக விளங்கிடத்தெரியும்.

அதெப்படியாகுமென்னில்; நானாவருணங்களால் விசித்திரமுடையதாய்விலையேறப்பெற்ற ஒரு சவுக்கவஸ்திரம் நூலாகப்பிரிக்கப்பட வஸ்திரமென்கிற பெயர்நீங்கி நூல்மாத்திரமாய்ச்சேஷித்து, அந்தநூலும்பிரிக்கப்பட பஞ்சுமாத்திரமாய்ச்சேஷித்து, அப்பஞ்சும்பிரிக்கப்பட ஆகாயமாத்திரமாய்ச்சேஷித்து, அவ்வாகாயமும் பார்வையில் விளங்கிப் பார்வையைத்தவிர எப்படி வேறில்லாததாக ஆகிவிடுமோ, அப்படியே சகலஜகமும் பார்வைரூபமான ஞானத்தைத்தவிர இல்லாததாகவே விளங்கிடும்.

இவ்வித அகண்டமாய் விளங்கும் பார்வையாகிய ஞான

மும், நாமரூபங்களாகத்தோற்றிய ஜகத்தை முன்னிட்டுவந்த ஸிவேசபேதமில்லாததாகவேகொண்டு விளங்கிடத்தெரியும். அவ்வித ஞானத்துக்குச் ஸிவேச்பேதத்தோடுங்கூட ஜகமுக்காலத்திலுமில்லாவிடிற் பார்வையெனும் ஞானதருமமும் ஞானத்தைத்தவிர வேறில்லாததாகவே சித்தித்து, ஞாதுரு ஞானஞேயமற்ற சுத்த அதிஷ்டான ஞானமாத்திரமான தான்மாத்திரமாகவே விளங்குகின்றதென ஆனந்த உற்சிதங்கொண்டு அப்படியே ஆனந்தக்கடலாகி விடுகின்றார்கள்.

முற்றிற்று

---

## இறுவது ஜகந்தைஇதம் விருத்தியாற்பிரிந்த பிரகரணம்

நாஞாமரூபங்களுடன் அநேக பிரமாண்டகோடிகளாய் விளங்குகின்ற இந்த ஜகத்தை, தியானவிசேஷத்தால் இதுஜகமென்று விஷயிகரிக்கத்திரிய, இது ஜகமென்றஞானத்தில் இதுவென்றும் ஜகமென்று மிரண்டு ஞானமொன்றாய்க் காணப்படுகின்றது.

அதைச் சோதிக்குங்காலத்தில், ஜகதர்மத்தை அவச்சேதமாகஉடைய ஜகத்தென்ற விசேஷியஞானத்தோடுமிதின் தர்மத்தை அவச்சேதமாகஉடைய இதுவென்றவிசேஷிய ஞானத்துக்கு, ஒரு விருத்தியிற் சமானஇருப்புக்காணப்படுவதாலிரண்டு ஞானத்துக்கும் ஒரு விருத்தியே அதிகாணமாகின்றது.

அவ்வித இரண்டு ஞானத்திலிதம் விருத்தியாரூடஞானத்தில் ஜகவிருத்தியாரூடஞானம் விளங்குவதால், கிளிஞ்சிலிற்றோன்றிய இதுரஜதமென்றஞான மிருவகையாய்த்தோற்றினும், இதுவென்றஞானம் முன் விளங்குகின்ற சுத்தியை

யும் தோற்றுகின்ற வெள்ளியையும் அவலம்பித்து எப்படி விளங்குகின்றதோ, அப்படியே இது ஜகமென்றஞானத்திலிது வென்றஞானம் தோற்றிய ஜகத்தையும் அதின் அதிஷ்டானப்பொருளையும் அவலம்பித்தேவிளங்கவேண்டும்.

இங்ஙமாயின் சுத்தியில் ஆரோபிக்கப்பட்டரஜதஞானத்தில், ரஜததர்மமாத்திரம் நிஷேதிக்கப்பட, அவ்வித ரஜதஞானமிது வென்ற ஞானமாத்திரமாய்ச் சேஷித்து, அதுவே சுத்திஞான்மாய் விளங்குவதுபோல், ஜகதர்மம்நிஷேதிக்கப்பட ஜகதர்மத்தை உள்ளும் வெளியும் வியாபித்த இதுவென்ற ஞானமாத்திரமாய்ச்சேஷித்து, இந்த ஜகத்துக்கு அதிஷ்டானமான ஞானமாத்திரமாய் விளங்கிடத்தெரியும். அவ்வித அதிஷ்டானத்தைச்சுருதியுக்தி அநுபவங்களாற் சோதித்துப்பார்க்க பிரஞ்ஞையைத்தவிர வேறுகாணப்படாததினால், பிரஞ்ஞையென்பது ஞான்சுபாவமானதால், ஆகாயத்தில் ஆகாயபேதம்போல் ஞானத்தில் ஞானபேதம் ஒப்பத்தகாது: பேதம் ஒத்திடில் விசேஷம் வேண்டும், ஞான்மோ நிர்விசேஷம்.

இங்ஙனமாயின் இதுசுத்திகையென்ற ஞானத்திற் சுத்திகைஜடமானதால், திருசியமாகிய சுத்திகாதர்மத்தோடும் விளங்கிய, இதுசுத்திகையென்ற ஞானம்தர்மதர்மியாகக் காணப்பட்டிடினும், இது ஜகமென்றஞானத்தில் ஜகதர்மம் நிஷேதிக்கப்பட இதுவென்றஞானம் அகண்டவியாபகமாயிருந்தபோதினும் நிர்விஷயமாகக்கொண்டு நிர்விசேஷ கூடஸ்தமாத்திரமாய்ச்சேஷித்து, ஸஜாதீய விஜாதீய சுகத பேதரகித அதிஷ்டான சின்மாத்திரமான, நாமாகவே விளங்குகின்றதென மகா ஆச்சரியத்தோடுங்கூட நிஸ்தரங்க சமுத்திரம்போல், சுவாத்மானந்தமாத்திரமாகவே யாகின்றார்கள்.

முற்றிற்று

## ஏழாவது

## ஜகத்தை நாமரூபப்பாங்காகப் பிரித்த பிரகரணம்

நானாவாக விளங்குகின்ற இப்பிரபஞ்சம் சுபாவமாகவிள ங்குகின்றதா, அல்லது சீவேஸ்வரர்களால் விளங்குகின்றதா, பிரபஞ்ச லக்ஷணமென்ன, சீவ லக்ஷணமென்ன, ஈசலக்ஷண மென்ன? பிரபஞ்சமென்பது நாம ரூப சுபாவமென்றால்; பஞ் ச பூதத்தின் நாமரூபங்களா, அல்லது தேவ மனுட பசு பக்ஷி விருக்ஷ கோபுர அட்டால பட்டண கிராம கிரக கட பட மடாதி நாமரூபங்களா, அல்லது மொத்த நாம ரூபங்களா? பஞ்ச பூதங்களின் நாமரூபமே ஜகத்தின் நாமரூபமென்னில், பஞ்சபூதங்களைத் தவிர ஜகத்து இல்லாததாகிவிடும். தேவா தி மடாதியந்தமான நானா நாமரூபங்களே பிரபஞ்சத்தின் நா மரூபமென்னில், பஞ்சபூதங்களும் இல்லாததாகக்கொண்டு ஜகத்தும் இல்லாததாய் விடத்தெரியும். மொத்தநாமரூபமே ஜகத்தின் நாமரூபமென்னில், ஜகத்திலெங்கும் பஞ்சபூதங்கா ணப்படுவதால், இந்த நாமரூபங்களாலந்த நாமரூபங்களும் அந்த நாமரூபங்களாலிந்த நாமரூபங்களும் விரோதப்பட்டு இ ரண்டு நாமரூபங்களுஞ் சித்தியாமல், பிரபஞ்சமு மில்லாததா கவே சித்தித்திடும்; அங்ஙனம் பிரபஞ்சம் நாமரூப மில்லாத தாகக்கொண்டு தானு மில்லாததாகச் சித்தித்திடில், அதை விளங்குவிக்குஞ் சீவேஸ்வரர்களுமில்லாதவர்களாகவே சித்தி த்திடுவார்கள்.

அதெப்படியென்னில் சீவனாவது ஞானேந்திரிய கன்மே ந்திரிய மனோ புத்தி சித்த அங்கார பிராண அஞ்ஞானம் இவ ற்றோடுங்கூடி விளங்கிய சைதந்நியமானதால், ஞானேந்தி ரிய மென்பது பஞ்சபூதத்தின் சத்வகுணத்தைத்தவிர வேறி ல்லாததினால், ஞானேந்திரியத்துக்குச் சத்வகுணமானதுசுபா வமா, ஞானேந்திரியமென்ற பேர் சுபாவமா, அல்லது இவ்வி

ரண்டுங்கூடினது சுபாவமா? சத்துவ குணம் சுபாவமென்னில்; இந்திரியங்கள் இல்லாததாய்விடும். இந்திரியங்களென்ற நாமரூபம் சுபாவமென்னில், பஞ்சபூதத்தின் சத்துவகுணத்தைத்தவிர வேறாகவேண்டும்: வேறாகக்கூறிடிற் சொரூபமில்லாததாகக்கொண்டு இல்லாததாகவே சித்தித்திடும். இரண்டுங் கூடியதென்னில், பரஸ்பர விரோதமாகக்கொண்டு ஒன்றுஞ் சித்தியாது. கன்மேந்திரியமும் அப்படியே.

இங்ஙனமாயின் மனோ புத்தி சித்தம் அகங்காரம் நான்கும் அந்தக்கரணத்தைத் தவிர வேறில்லாததினால், அந்தக்கரணமென்பது சமஷ்டி பஞ்சபூதத்தின் சத்துவாம்சத்தைத் தவிர வேறில்லாததினால், மேற்சொன்ன பிரகாரம் அந்தக்கரணமுஞ் சமஷ்டி பஞ்சபூதத்தின் சத்துவாம்சமும், நாமரூபங்களில்லாததாகக் கொண்டு முக்காலத்திலும் இல்லாததாகவே சித்திக்கவேண்டும்: அந்தக்கரணமும் சமஷ்டி பஞ்சபூதத்தின் சத்துவாம்சமும் இல்லாவிடில், அஞ்ஞானமும் இல்லாததாகவே சித்தித்திடும்.

எங்ஙனமென்னில், அஞ்ஞானமென்பது ஞானாபாவமா ஞானத்தை மறையாநின்ற தமோ குணமா? ஞானாபாவமென்னில், அஞ்ஞானம் விளங்கத் தகாததாகக்கொண்டு இல்லாததாகவே சித்தித்திடும். ஞானத்தை மறையாநின்ற தமோகுணமென்னில், தமோகுணத்தால் ஞானம் மறைத்திடப்படில், தமோகுணம் எவ்விதமாய்த் தானே விளங்கிடும். கண்ணைமறைக்கின்ற இருளும் கண்ணும்போல விளங்கிடுமென்னில் இருள் விஷயங்களை மறைக்குமேயன்றிக், கண்ணைமறையாது: கண்ணைமறையாவிடினும் கண் இருளை விளங்குவிப்பதுபோல, தமோகுணமாகிய அஞ்ஞானத்தை ஞானம் விளங்குவிக்கட்டுமேயெனில், இருள் ஜட நிஷ்டமானதாற் கண்ணால் விளங்கிடத்தெரியுமே யன்றிக், கண்ணிலிருந்தே விளங்கிடத்

தெரியாததுபோல, அவ்விடத்தில் தமோகுணஞ் சித்தால் விளங்க வேண்டுமானால், எதினிடமாயாயினுமிருந்து சித்தால் விளங்கவேண்டும். பஞ்சபூத நிஷ்ட தமோகுணமென்னில், பஞ்சபூதமே இல்லாவிடத்துத் தமோகுணம் எவ்விதமாகச் சித்தித்திடும். நிஷ்டமென்பது இருக்கை அவ்வித பஞ்சபூதத்தினிருக்கை இல்லாவிடிலெனக்கொள்க.

மேலும் அவ்வித தமோகுணம் சுபாவமாகவே சித்தைமறைக்கும் வல்லமையுடையதா அல்லது சித்தினுதவியாற் சித்தைமறைக்கும் வல்லமையுடையதா? சுபாவமாகவே மறைக்கும் வல்லமையுடையதெனில், அவ்வித வல்லமை ஜடமா அல்லது சித்தா? ஜடமென்னில், அதற்கு விளங்கும் வல்லமையே கிடையாது. அங்ஙனமிருக்க, சித்தை மறைக்குந்தன்மை எங்ஙனங்கூடும். சித்தென்னில், சித்தைச்சித்து ஒருக்காலுமறைக்கத் தகாது. மேலும் சித்தைத்தவிர, வேறு அஞ்ஞானத்தின் வல்லமையாகச் சித்திக்கிறதா யொத்திடில், சூரியனது ஒளியைத்தவிர இருளுக்கும் தன்மைபட ஒரு ஒளியிருப்பதாக ஒப்பவேண்டும். அங்ஙனம் ஒத்திடில், இருள் சித்தியாததுபோல் தமோகுணமும் இல்லாததாகவே சித்தித்திடும். தமோகுணமாகிய அஞ்ஞானமுதல், ஜகம்வரையினும் அனைத்து முக்காலத்தினு மில்லாவிடில், அஞ்ஞானம் அந்தக்கரணம் இந்திரியங்கள் இவற்றோடுங்கூடி, சீவன் ஜகத்தை விளங்குவித்தானென்றது, வந்தியா புத்திர மஹாராஜானன்றாக இராச்சியாதிகாரஞ் செய்தாரென்பது போலாகும்.

இங்ஙனமாயின் ஜகமுதல் அஞ்ஞானம்வரை சீவனோடுங்கூட முக்காலத்திலும் இல்லாவிடினும், இவற்றின் அதிஷ்டானமாய்நின்ற சுத்தஅறிவை இல்லையென்று நிஷேதிக்கத் தகாது. பழுதையிற் றோன்றியும் விளங்கியும் மறைந்தும்

விளங்கிய சர்ப்பம் பழுதையைத்தவிர முக்கால்த்திலும் இல்லாவிடினும் பழுதையை இல்லையென்று எப்படி நிஷேதிக்கத்தகாதோ, அப்படியே அதிஷ்டான ஞானத்தையும் நிஷேதிக்கத்தகாது.

அதிஷ்டான ஞானத்தைத் தவிர முக்காலத்திலும் வேறு இரண்டாம் வஸ்து இல்லாவிடில், இல்லாத ஜகத்தை ஈசன் விளங்குவித்தானென்று எவ்விதமாகக் கூறலாம்: ஈசனென்றால் சித்தா, வேறா? வேறெனில்; ஜகம்போ லில்லாதவனாகத்தெரிவான். சித்தெனில், அதிஷ்டானமான சுத்த சித்தைத் தவிர வேறில்லாதவனாகவே சித்திப்பான். இங்ஙனங் கூறிய பிரகாரம் ஜகமுதல் ஸர்வேஸ்வரர்கள் வரை தோன்றித் தோன்றி விளங்கி மறைந்திடினும் சுத்தசித்தாகிய அதிஷ்டானமான தன்னைத்தவிர அனைத்தும் வேறில்லாமையினால் சுத்த சித்தான அதிஷ்டானமான நாமே அனைத்தும். நாமே அனைத்துமென்றால் சுத்தசித்தான நாமே நாமெனத்தாற்பரியம் இப்படி ஆலோசித்து அநுபவித்திட எப்படியோ அப்படியே யாகின்றார்கள்.

முற்றிற்று



## எட்டாவது இந்திரியாதிகளின் சூக்ஷ்மாநுபவம் உரைத்த பிரகரணம்

அதாவது இந்திரியம் மனம் புத்தி சித்தமகங்கார மந்தக்கரணமஞ்ஞானம் இவற்றின் சூக்ஷ்மாநுபவமாம்.

விஷயங்களை இந்திரியங்கள் விளக்கமாத்திரஞ் செய்யும், இந்திரியங்கள் எண்ணமன்றி எப்படி விளங்குவிக்கின்றதோ,

அப்படியே மனம் புத்தி சித்தம் அஹங்காரம் இவைகள் ஸ்தூலமாய் எண்ணத்துக்குப் பாத்தியப்படாமல், வாசனு மாத்திரமாகக்கொண்டு அநுபவ ரூபமாய் விளங்குவிந்து விளங்கிடத்தெரியும். அவ்வித வாசனு பீஜமுமடங்கி விருத்தி மாத்திரமாய் நின்றது அந்தக்கரணநுபவமாகும். அவ்வித அந்தக்கரணத்தின் மத்திமாம்சமான சம்சய நிச்சய ஆலோசன அகங்கார மென்ற ஸ்தூல சங்கற்பத்தன்மையில்லாத இவைகளின் வாசனுபீஜரூபமான விருத்தியில், பிரதிபிம்பித்த சிதாபாசனுக்கு விஷயமாகாததாகக்கொண்டு வாசனுமாத்திரமாய் மயக்க மருட்டவிக்கப்பட, அவ்வித மயக்கமாகிய அநுபூதியால் மூத்திய லயவிருத்தியிற் பிரதிபிம்பித்த சைதந்நியத்தோடுந் தாதான்மியப்பட்டுச், சங்கற்பத்தை எதிரிடாமல், தானே ஒன்றுந்தெரியாமற் றூங்கினேமென்ற அஞ்ஞானநுபூதி, சங்கற்பமில்லாத மனே புத்தி சித்த அகங்காரமென்ற இவற்றின் வாசனுரூபமான அநுபவவிசேஷத்தால், மத்திமாம்சமான அந்தக்கரண விருத்தியிற் பிரதிபிம்பித்த சிதாபாசனுக்கு அஞ்ஞானநுபூதிவரத்தெரிய, அதனை ஸ்தூலமான சங்கற்பசத்தையால் விளங்கிய மனம் புத்தி சித்தம் அகங்காரம் இவற்றை ஸ்தூலமாகவுடைய அந்தக்கரண விருத்தியிற் பிரதிபிம்பித்த சிதாபாசன், ஸ்தூலமாக நான் தூங்கினேனென்று விவகரிக்கின்றான்.

இவற்றை உள்ளபடி சோதித்து வாசனுபீஜங்களை நீக்கிக் கூடஸ்த ஞானமாத்திரமாயிருக்கவேண்டும். சிதாபாசனுக்கு விஷயங்களை அறிய விருத்தியினுதவி வேண்டுதல் போல், கூடஸ்தனுக்கு மாத்திரம் விஷய ஞானத்தின்பொருட்டு விருத்தியினுதவி ஏன்வேண்டுவதில்லை? விஷயங்கள் கூடஸ்தஞானத்தில் மனேவிருத்தியாற் கற்பிக்கப்பட்டிருப்பதால், கற்பனவிசேஷங்களை அறியும் பொருட்டு கற்பகமான மனே விருத்தியினுதவி சிதாபாசனுக்கு அகத்தியம்வேண்டும். கூடஸ்தனுக்

குச் சகல் விஷயங்களுந் தானாயிருப்பதால் விருத்தி னுதவி வேண்டியதில்லை.

முற்றிற்று



## ஒன்பதாவது

## தர்மதர்மிமுதலிய துணமுணர்ந்த பிரகரணம்

அதாவது, தர்மம், தர்மி, கிரியை, கிரியி, சம்பந்தம் சம் பந்தி, குணம், குணி, இலக்ஷணம், இலக்ஷியம், பதம், வாக்கி யம், வாசகம், வாச்சியம், அபிதை, இலக்ஷணை, விசேஷணம் விசேஷியம், விசேஷம், வெதிகரணம், சமானாதிகரணம், இவ ற்றின் வரலாறு.

க—தர்மமாவது கடத்தில் கம்புக்கிரீவாதிமத்தாயுள்ள விள ங்குதல்போல, ஜீவேசபேதம் நீங்கிய அகண்டாகார விருத்தி யிற் பிரதிபலித்த சைதந்நியமேயாம்.

உ-தர்மியாவது, அவ்வித சைதந்நியம் விருத்தியின் ச பந்தத்தால் ஏகாகாரத்தன்மைக்குட்பட்டுத் தோன்றுவதால் அவ்வித உபாதி நீங்கின இடம் சுத்த சைதந்நியமானதால் அவனது சுபாவமே விருத்தியால் அகண்டமாய் விளங்குவதா ல் இந்த விருத்தியை அபேக்ஷித்துப் பிம்ப சைதந்நியத்துக் கு நிரூபணங் கூறப்படுகின்றதேயாம்.

ங—கிரியையாவது, ஒரு கடத்தை யிட்டு வந்த குலாலன து தொழில்போல, கண்டம்போல் விளங்கிய ஆன்ம சுபாவத் தை, சுருதி யுக்தி அநுபவங்களால் நான் அகண்டமென்ற அ ந்தக்கரணத்தினிறைவான சலன விருத்தியிற் பிரதிபிம்பித்த

சைதந்நியமேயாம்.

௪-கிரியியாவது, அவ்வித் சலனத்தாற் சலனமுடையவ ன்போற் றேன்றப்பட, சலனரூபக் கிரியாதாரமான மூக்நின விருத்தியை யபேக்ஷித்து நிஷ்கிரியா சைதந்நியமேயாம்.

௫-சம்பந்தமாவது, சமவாயமென்றும் சம்யோகமென் றும் தாதான்மியமென்றும் மூன்று வகுப்புடையதாகும். இ வற்றில், சமவாய சம்பந்தமாவது நித்தியசம்பந்தமுடையது. சம்யோக சம்பந்தமென்றது அநித்திய சம்பந்தமுடையது. தாதான்மியமென்றது அபேத சம்பந்தமுடையதாம்.

௬-சம்பந்தியாவது, அவ்வித சம்பந்தமுடையவனெனப் படுவான். இதின் உதாரணம், கம்புக்கிரீவாதிமத்தாயுள்ள கடதர்மமானது கடத்தைவிட்டு ஒருக்காலும் நீங்கத்தகாமல் நித்தியசம்பந்தமாகக் காணப்படுவதாலும், அப்படியே ஆன் மாவினிடத்திற் சச்சிதானந்தாதி நித்தியசம்பந்தமுடையதெ ன்றும், இரண்டாம் உதாரணம், தெண்டியென்றால் தெண்ட முடையவனானதால் அவ்வித தெண்டசம்பந்தம் அவனில் நின்றும் நீங்கினதாக அநுபவிக்கப்படுவதாலும், அப்படியே ஆன்மாவினிடத்திற் சச்சிதானந்தாதி விருத்தி சம்பந்தத்தால் சச்சிதானந்த மென்றும் அவ்விருத்திகளின் வியோகத்தால் அசங்கியென்றும், மூன்றும் உதாரணம், நீலோத்பலமென் றது நீலமென்றால் நீலமாய் நீலாபின்னமாயுள்ள உத்பலம் நீலோத்பலமென்பதுபோல், அகம்பிரமாஸ்மியென்ற அநுபூதி யில் அகண்டாகார அகம்விருத்தியிற் பிரதிபலித்த சச்சிதா னந்தாகாரமாக விளங்கிய அகங்காரியாயுள்ள பிரமமென்றும் மதவாதியர்களின் அபிப்பிராயமாம்.

இவ்வித சம்பந்தங்களில் தாதான்மியம் இரண்டுவகுப்பு

டையதாகும்: அவை சகஜ தாதான்மிய மெனவும் அச்சஜதா தான்மியமெனவுமாம். சகஜ தாதான்மியமாவது பந்தமுதல் மோக்ஷம் வரையிலும் அவிவேக விவேக விருத்திகளால், அகங்கிருதிக்கு ஆன்மசம்பந்தம் சுபாவமாகக் காணப்படுவதால், அவ்வித அகங்கார சம்பந்தம் சகஜதாதான்மியமென்னப்படும் மற்ற அகக்கரணம் புறக்கரணம் இவற்றின் தாதான்மியம் அசகஜமெனப்படும்.

அவ்வித அசகஜதாதான்மியம், உத்தமம், மத்திமம் அதமம் எனமூன்றுவகுப்பாகக் கூறப்படும். இக்கரணங்களில் தாதான்மியம் உத்தமாசகஜம். தேகத்தைப்பற்றிவந்த ஸ்தூல கிருச வயோ அவஸ்தாதிகளைப்பற்றிய தாதான்மியம் மத்திமாசகஜம். சிகா எக்கியோபவீதாதி உபநயனகர்ம விவாக கர்ம தத்தியாககர்மாதிகளில் நேரிட்ட ஜாதிவருணாச்சிரமாதி தாதான்மியம் அதமாசகஜம். இந்தத்தாதான்மிய சம்பந்தமானது அவிவேகதிசையிற் பூர்வகாண்டத்திற் கர்மசாதனமாயினும், உத்திரகாண்டத்தில் மும்முட்சுத்துவதிசையில் விசாரணையால் நீங்கிடத்தெரியும் சகஜதாதான்மியமென்ற அகங்கார சம்பந்தமானது விவேகதிசையில் வாதிக்கப்பட்டபோதினும், ஜீவ திசையைப்பற்றி வந்த தாதான்மியமாத்திரம் பாதிக்கப்படுமேயன்றி, உத்திரகாண்டத்தாற் போதிப்பிக்கப்பட்ட பிரமசுபாவமான ஆன்மாகங்கார தாதான்மியம் அபரோக்ஷ சாக்ஷாத்காரபரியந்தம் வாதிக்கப்படமாட்டாது. அவ்வித சகஜதாதான்மியமும் உத்திரகாண்டத்தில் விவேகதிசையில் சம்பிரதாய பேதமாக ஒப்பியதேயன்றி, மத்வாதியர்களில் சம்பிரதாய முறையாக ஒப்பப்படவில்லை. அதெப்படியென்னில் நீலகடமென்றால் சுவேதகடமில்லையெனக்காண்பதுபோல் நான் பிரமமென்றால் பிரமாகார அகங்காரவிருத்தியின் வியாவிருத்தியே அபிப்பிராயமாம்.

எ- குணமென்றால், சுக்கிலபட மென்பதில் வெண்மை குணமாயிருப்பதுபோல், நான் அகண்டனென்ற விருத்தியில் திரிபுடி தோற்றுவதால், திரிபுடியாய்விளங்கிய ஞாதுருஞான ஞேய ரூப தமோ சத்வ ரஜோ விகாரங்களிற் பிரதிபலித்த சைதந்நியமேயாம்.

அ-அவ்வித குணமான சோபாதிகசைதந்நியம் நிருபாதிக சைதந்நியத்தினிடமாக விளங்குவதால், இந்தக்குண விருத்தியை அபேக்ஷித்து நிர்க்குணசைதந்நியம் குணியெனக்கூறப்படும்.

கூ- இலக்ஷணமென்பது தடஸ்த லக்ஷணமென்றும் சொரூபலக்ஷணமென்றும், இரண்டு பிரிவுடையதாகும். தடஸ்த லக்ஷணமாவது இப்பிரபஞ்சத்துக்கு சிருஷ்டி ஸ்திதி சங்காரம் எதினின்றோவென்ற விருத்தியிற் பிரதிபலித்த சைதந்நியாநுபவமாம். சொரூபலக்ஷணமாவது சச்சிதானந்தம் பிரமமென்ற சச்சிதானந்தாகார விருத்தியிற் பிரதிபிம்பித்த பிரமாகாரசைதந்நியாநுபவமாம்.

ம- இலக்ஷியமென்பது அவ்வித அநுபவம் திரிபுடியுடையதாயிருப்பதால், அவ்வித திரிபுடி விருத்தியைப்பற்றியதால் அவ்வித விருத்தி ஜடமானதால், அதிற் பிரதிபிம்பித்த சைதந்நியமும் ஜடம்போலத்தோற்றுவதால், அவ்வித ஜடவிருத்தியின் தர்மமான அநித்த ஜடதுக்கத்தன்மையையும் முற்கூறிய சைதந்நியம் உடையதுபோலவே தோற்றுவதால், அவ்வித அநித்தஜடதுக்காதி பிரதீதியை சைதந்நியத்தினின்று நீங்கும்பொருட்டு உபதேசத்தாற் பிரமத்தைச் சச்சிதானந்தமாகத்தோற்றுவித்து, அவ்வித சச்சிதானந்தாகாரமாய்ப் பரிணமித்த சித்தவிருத்தியில் சுயஞ்சச்சிதானந்தமாயிருக்கின்ற

பிரமசைதந்நியம் பிரதிபிம்பிக்க, அச்சைதந்நியாநுபூதியில் முன்னமே பிராந்தியால் தன்னை அநிர்தஜடதுக்கரூபனுகக் கொண்டிருந்த பிரதீதி நீங்கிடத்தெரியும். அப்பிரதீதிநீங்கிடில், சேஷிந்தது வஸ்துவானதால் அவ்வித வஸ்துவே லக்ஷியமாம். அதை அடையும்பொருட்டு முன்சொன்ன அநுபூதியன்றிச் சித்தியாததினால், அவ்வநுபூதியையே சொரூபலக்ஷணமெனக்கூறியது

௰௧- பதம் அதாவது யோக்கிதையுடையதாம், யோக்கிதையென்றால் உள்ளபடி ஒருபொருளைப் பிரதிபாதிக்கத்தக்க வல்லமையுள்ளது.

௰௨- வாக்கியமாவது, ஆகாங்க்ஷை சந்நிதி யோக்கிதை என்ற மூன்றையும் லக்ஷணமாகவுடையதாம்.

௰௩- வாசகமாவது, பதரூபமாயாயினும் வாக்கியரூபமாயினும் பொருளைப் போதிப்பிக்குந் திறமையுடையசப்தமாம்.

௰௪- வாச்சியமாவது, வாசகத்தின் பொருளாகும்.

௰௫- அபிதையாவது, வாச்சியத்தின் பரியாயநாமமாம்.

௰௬- லக்ஷணையாவது, வாசகத்துக்கு வாச்சியார்த்தத்தில் முக்கியமாய்ப் பிரவேசமில்லாவிடில், அருத்தபோதகமாயுபகாரப்படுவதாம். அது ஜகலக்ஷணை அஜகலக்ஷணை ஜகதஜகலக்ஷணை எனமூன்று பிரிவுடையது. (க-வது) ஜகலக்ஷணையாவது கங்கையிற் கோஷமென்பதில் கங்கையில் இடைச்சேரியிருக்கக் கணக்கில்லையென அறிந்து, கங்கைக்கரையிலெனப்பொருள் கொள்வதுபோல், நானென்றுந்தெரியாமற் றூங்கினேனென்றதில், தூங்கியிருந்தால் தூக்கத்தையறியக்கூடாததினால், நான் தூங்கினேனென்றதின் பொருள் நான் சாக்ஷி

யெனக் கொள்கையாய் விளங்கிய விருத்தியிற் பிரதிபிம்பித்த் சாக்ஷி சைதந்நியாநுபூதியாகும். (உ-வது) அஜகலக்ஷணை யாவது, சிவப்பு ஓடுகின்றதென்றதில் சிவப்புநிறமுடைய குதிரை ஓடுகின்றதெனப் பொருள்கொள்வதுபோல், நான் சாக்ஷி யென்றதில், நானென்ற அகங்காரவிருத்தி ஜடமானதால், அவ்வித அகங்காரவிருத்தியை யுடையதுபோற்றோன்றிய சித்தையே, சாக்ஷியெனக் கொள்கையாய் விளங்கிய சைதந்நியாநுபூதியாகும். (ஙு-வது) ஜகதஜகலக்ஷணையாவது, அந்தப் புருஷனே இவனென்றதில் அத்தேச கால வர்த்தமானங்களென்ன இத்தேச காலவர்த்தமானங்களென்ன, இவைகள் விரோதத் தன்மை யடைந்திருந்த போதிலும் அவைகளைத்தள்ளிப் புருஷமாத்திரத்தை அபிப்பிராயமாக்குவதுபோல், அவஸ்தாத்திரையத்துக்குட் பட்டதால் வந்த ஜீவனது கிஞ்சிஞ்ஞத்துவமென்ன, சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரங்களையிட்டுவந்த ஈசனது சர்வஞ்ஞத்துவமென்ன, இந்த இரண்டையும் நீக்க இரண்டு உபாதிகளிலும் சேஷித்த அறிவு ஒன்றாக அநுபவத்துக்கு வருவதால், அவ்வித சர்வஞ்ஞத்துவம் கிஞ்சிஞ்ஞத்துவ உபாதிநீங்கிய ஏகாகாரவிருத்தியிற் பிரதிபிம்பித்த அறிவின் அநுபூதியேயாகும்.

ய௭-விசேஷணமாவது, சத்புருஷன் என்றதில் சத்தாயிருக்கின்ற புருஷன் சத்புருஷன். சத்தாயிருக்கின்றதென்பது விசேஷணமாவது போல், சச்சிதானந்தம் பிரமமென்பதில், சச்சிதானந்த விருத்தியிற் பிரதிபலித்த சைதந்நியாநுபூதியே விசேஷணமாகும்.

ய௮-விசேஷியமாவது, நிருபாதிக பிரம சைதந்நியமே உபாதியிற் சச்சிதானந்தமாய் விளங்குவதால், அச்சைதந்நியாநுபூதியேயாம்.

கக-விசேஷமாவது, அதிந்திரியங்களாயுள்ள பூதங்களின் பரமாணுக்கள் ஒன்றுக்கொன்று பேதமுடையதாக நிரூபணங் காணப்படுவதால், அவற்றின் பேதத்தின்பொருட்டு விசேஷமெனச் சாஸ்திரசங்கேதத்தால் ஒப்பியதுபோல் பிரமசிவ சைதந்நியங்களுக்கு ஸ்வரூபத்தால் தானே பேதமொப்புகிறதின்பொருட்டு அவற்றின் விசேஷமிருக்கின்றதா யொப்பியதாம். இது இதரமதங்களிலுபகாரம்.

உ0-வெதிகரணமாவது, பின்னநிகரணமெனப்படுவதாம்.

உக-சமானநிகரணமாவது, இவன் அரசனென்பதில் இவனென்றஞானமும் அரசனென்றஞானமும் ஒருடலைப்பற்றியிருப்பதுபோல், அகம்பிரமாஸ்மி யென்ற வாக்கியாநுபூதியில் பிரமாகாரமாய் விளங்கிய அகண்டாகாரவிருத்தியிற் பிரதிபிம்பித்த ஜகத்காரண சைதந்நியத்துக்கும் அவஸ்தாத்திரைய சாக்ஷியாய் விளங்கிய சாக்ஷிவிருத்தியிற் பிரதிபிம்பித்த ஆத்மசைதந்நியத்துக்கும் நிர்விசேஷ கூடஸ்தசைதந்நியமே அதிகரணமாயிருப்பதால், அவ்வித நிர்விசேஷ பிரமசைதந்நியத்தைத்தவிர அவ்விரண்டு சைதந்நியமும் வேறில்லாததினால், அவ்வித ஏகாகாரபிரமாநுபூதியேயாம்.

இவ்விதசமானகரணம் முக்கியமெனவும் வாதையெனவும் இரண்டுபிரிவுடையதாகும். அதில் முக்கியசமானநிகரணமாவது முன்சொன்னதேயாம். வாதாசமானநிகரணமாவது சிவபிரமோபாதிகள் தமப்பிரகாசங்கள்போல், விரோதிகளானதால் அவைகளுக்குச் சாமானநிகரண்ணிய ஐக்கிய ஞானத்தாற் கூறத்தகாது. சமாதிபலத்தாற் சிவோபாதி நசித்திடிற் கூடுமென்பதாம்.

மேலும் முக்கியசமானநிக்ரணமே ஒத்திடில், எப்பொ

ழுதும் சீவஜகத்காரண சைதந்நியங்களுக்கு நிர்விசேஷபிரம் சைதந்நியத்தைத்தவிர அதிகரணம்வேறில்லாததினல், சித்த சர்தனமென்ற தோஷமும் வரத்தெரியும். அப்படியே பாரமார்த்திகத்தில் வஸ்து அசங்கியானதால், ஒருபதார்த்தத்துக்கு அதை அதிகரணமாக நிரூபிக்கவுங்கூடாது. ஆகையால் கேவலபாரமார்த்திக விசாரணைமாத்திரத்தால் சமானாதிகரணம் ஒப்பத்தகாது. ஆகையால் வியாவகாரிகத்தில் வந்த சீவோபாதி வியாவகாரிகமாகவே நசித்திடவேண்டும். அங்ஙனம் சீவோபாதி நசித்திடில், பின்பு இரண்டு சைதந்நியமும் ஒன்றாகிவிட்டதால், சாமானாதிகரண்ணியங்கூடும். ஆகையால் வாதாசாமானாதி கரண்ணியமே பிரமாநுபூதியில் உபகாரமேயன்றி, முக்கியசமானாதிகரணம் ஒப்பத்தகாதென்று சேசுரசாங்கிய மதத்திலும் அபிமானமுடைய அத்துவிதிகளில் ஏகதேசிகளும் கூறுகின்றார்கள். அந்த விஷயத்திற் சிலவாதியர்கள் சீவோபாதியால் வாதாசாமானாதிகரண்ணியத்தாற் கூட சீவபிரமசாமானாதிகரண்ணியம் ஒப்புகின்றது அசங்கதமென்கிறார்கள்.

எங்ஙனமென்னில் ஒரு ராஜகியனை நீமஹாராஜாவென்று துதித்திடில் அவன் எப்படி மஹாராஜாவாகத்தகானே அவ்விதப்பிரயோகம் அவனிடத்தில் எப்படி உபசார மாத்திரமாயாகுமோ அப்படிப்போல், சுருதியால் அகம்பிரமாஸ்மியென்று நிரூபிக்கப்பட்டிருந்தபோதிலும், உபசாரமேயன்றிப் பாரமார்த்தமல்லவென்றும், சிலர்கள் மஹாராஜன் போலுள்ள கனம்பொருந்திய ஒரு புருடனை இவன் மஹாராஜனென்றிடில், மஹாராஜ சமானனெனக் கொள்வதுபோல், பிரமசமானனெனக்கொள்ளத்தக்கதேயன்றி ஒருக்காலும் ஐக்கியங்கூடாதெனக்கூறுகின்றார்கள். இங்ஙனம் வரத்தெரிய முக்கியஅத்துவிதிகள் அதைக்கண்டிக்கின்றார்கள். வேதத்திற்குஅந்நியதாகற்பனைசெய்கின்ற மதவாதியர்களின் பொருட்டு விவாதஞ்

செய்கின்றதாமக்கு அகத்தியமல்ல, ஆனுல் வாதாசாமானுதிகரணவாதியர்கள் அத்துவிதிகள்போற் றோற்றுவதால், அவர்கள் பொருட்டு மாத்திரம் உத்தரங்கூறப்படுகின்றது.

க-வது சித்தசாதனதோஷம் வருமெனக்கூறியது சரியே, ஆயினும் பாரமார்த்திகத்தில் அவித்தையா சம்பந்தமிருக்கின்றது போலத்தோற்றியதால், அவ்விதத்தோற்றுதலான அவித்தையா நிவிர்த்தி ஞானமன்றிக்கூடாததினுல், அவ்விதஞானமும் சாங்கிய விசாரணையன்றிச் சித்திக்கமாட்டாததினுல் விசாரணையாற் பிராந்தியாற்றோன்றிய சிவோபாதியாம் அஞ்ஞானம், அதிஷ்டான பிரம மாத்திரமாயில்லாமல் நீங்கிட அக்காலத்திற் சிவேச பேதமாய்த் தோற்றிவிளங்கிய சைதந்நியப் பிரதீதி அதிஷ்டான பிரம மாத்திரமாய் அதைத்தவிர வேறில்லாததாகக்கொண்டு அநுபவத்துக்கு வருவதால், அவ்வித சிவேசவுபாதி நீங்கிய அகண்டாகார சைதந்நியாநுபூதியிற் சைதந்நிய பேதங்காணப்படாததினுல், முன் பிரதீதிமாத்திரத்திற் றோன்றிய சிவேச சைதந்நியங்களுக்குப் பேதம் நீங்கி அதிஷ்டான பிரம சைதந்நியாநுபூதியில் முக்கியசாமானுதிகரண்ணியங்கூறப்படுகை.

உ-வது ஆன்மா அசங்கியானதால் அவனிடத்தில் சிவேசசோபாதிக சைதந்நியங்களுக்கு இருக்கைகூடாததினுல், முக்கிய சாமானுதி கரண்ணியமே சித்திக்கத்தகாதென்றதில் யதார்த்தமாய்ச் சிவேசசோபாதிக சைதந்நியங்களுக்கு அதிஷ்டானத்தினிடமாய்ச் சாமானுதி கரண்ணியம் ஒத்திடில் அதுசரி, பந்தம் வந்ததுபோற் றோன்றிய அதிகாரிகளுக்கு இவ்வித முக்கிய சாமானுதி கரண்ணியமன்றிப் பிரமபரோக்ஷ சாக்ஷாத்கராநுபூதி சித்திக்கக் காரணமில்லாததினுல், அகத்தியம் முக்கியசாமானுதி கரண்ணியம்ஒத்தேதீரவேண்டுமெனவும், வாதாசாமானுதி கரண்ணியம் அனுவசியமென்றும் அறியின் றார்கள்.

இவ்விருவர்களின் அபிப்பிராயம் முக்கிய சாமானாதிகரண்ணியவாதியர்கள் ஞானத்தாற் பிரம சாக்ஷாத்காரமுண்டாவதால், மனோநாசம் பிரயோசனமில்லையெனக் கொள்கின்றார்கள். வாதாசாமானாதி கரண்ணியவாதியர்கள் பிரமஞானமென்பது திரிபுடிசூநிய ஞானமானதால் விசாரணையாற் கிடைத்தஞானம் விருத்தி ஞானமானதால், விருத்திநாசமின்றி அதிஷ்டான ஞானாநுபூதி கிடையாதென்று கூறுகின்றார்கள்.

இதின் சமரசம் முக்கிய சாமானாதி பக்ஷத்திற் பிரமாபரோக்ஷ சாக்ஷாத்கார முண்டாயினும், அவ்வித அநுபூதியில் விருத்தியிருந்திடினும் நிர் விருத்திக சைதந்நியமே அநுபூதியாகத் திருப்திக்கு வருவதால், அவர்களின் விருத்தியுஞ் சூநியம் போலவேதான். வாதாசாமானாதி கரண்ணியர்கள் மதத்தில் மனோநாசத்தையே முக்கியமாயொத்திருந்திடினும் திரிபுடியில்லாத அதிஷ்டான ஞானத்தின் தெளிவு விருத்தி ஞானத்தை முன்னிட்டே சித்திக்க வேண்டியிருப்பதால், அவர்களுக்கும் மனோநாசானந்தரம் அதிஷ்டான ஞானத்தின் தெளிவு விருத்தி ஞானத்தினிடமாயே விளங்குகின்றது. அவர்கள் மனோநாசம் மனோநாசமுமல்ல. இவர்களின் விருத்தி விருத்தியுமல்ல இவர்களுடைய அநுபவத்திலும், திரிபுடியில்லாத அதிஷ்டான ஞானமே திருப்தியாகச் சித்தித்ததாயிருப்பதால், எவர்களுக்குச் சமாதி சாதனமன்றிச் சிரவணமாத்திரத்திற் பிரமாபரோக்ஷ சாக்ஷாத்காரம் அநுபவத்துக்கு வருகின்றதோ, அதே அவர்களுக்கு மனோநாசம். எந்தஅதிகாரிகளுக்குச் சிரவணமாத்திரத்தில் அபரோக்ஷ சாக்ஷாத்காரங் கிடையாமற் சமாதி பலத்தால் மநேத்ரிசத்தின் பேரில் அபரோக்ஷ சாக்ஷாத்காரங்கிடைக்கின்றதோ அவ்விதஅபரோக்ஷ சாக்ஷாத்கார ஞானமே அவர்களுக்கு ஞானம். இருவர்களுடைய மதத்திலும் மனோலயம் ஞானம் இரண்டும் ஒப்பத்தக்கது தான், ஆனால் முக்கிய சாமானாதி கரண்ணிய பக்ஷ

த்தில் மனோநாசம் சூக்ஷ்மமாயும் வாதா சாமானுதி பக்ஷத்தில் மனோநாசம் ஸ்தூலமாயும் ஒப்பப்படுகின்றதெனவும், முக்கிய சாமானுதிகாரண்ணிய பக்ஷத்தில் ஞானம் முக்கியமாயும் மனோநாசம்கௌணமாயும் ஒப்பியதாகக் காணப்படினும், வாதாமாசானுதி காரண்ணியத்தில் முக்கிய சாமானுதி காரண்ணியம் அகத்தியம் ஒப்பத்தக்கதாகவே இருக்கின்றது முக்கிய சாமானுதிகாரண்ணிய பக்ஷத்தில் வாதாசாமானுதி காரண்ணியம் கணமாத்திரமாயினும் சித்தித்ததாகவே இருக்கின்றது. அதிகாரி பேதத்தால் இரண்டும் உபகாரமே படுகின்றது. முக்கியசாமானுதி காரண்ணியம் முக்கிய அதிகாரியைப் பற்றியது. வாதா சாமானுதி காரண்ணியம் மத்திம அதிகாரியைப் பற்றியது. இரண்டதிகாரியினாலும் அடைந்த ஞானத்தில் அபரோக்ஷசாக்ஷாத்காரானந்தரம் பேதங்கிடையாது. சாதனத்தில் விவாதமேயன்றி அடைந்த சாத்தியத்தில் விவாதங்கிடையாது.

முற்றிற்று



## பத்தாவது

### அகண்ட விருத்திசோதனை யுரைத்த பிரகாணம்

ஞாதுரு ஞானம் ஞேயம் இவற்றுள், ஞேயத்தை மூன்று விதமாய் உபாசிக்குந்தன்மை.

சமாதியில் அதிஷ்டான மாத்திரமாகச் சேஷித்து பின்பு விழிக்குங்காலத்தில், நிராகாரமான விளங்குதல் மாத்திரமாய் விளங்கத்தெரிய, அக்காலத்தில் அதை எதிரிடாநின்ற பார்வையின் விருத்தி முக்கிய விளங்குதலைக் கிரகிக்க வல்லமைய

ற்று நிராகாரமாய் வியாபகப்பரவுதலையுடைய, அவ்விருத்தியி
ற் பிரதிபிம்பித்த சைதந்நியத்தை இதுவென்று சுட்டத்
தெரிய அவ்விதமாகச் சுட்டிய இது வென்ற விருத்தியிற் பிர
திபிம்பித்த சைதந்நியத்தைப் பூர்வவாசனையால் அகண்ட
னென்று நாமரூபமுடையதாகச் சங்கற்பிக்க அவ்விருத்தியா
ல் அகண்டமாய்த்தோற்ற, அவ்விருத்தியிற் பிரதிபிம்பித்த
சைதந்நியத்தையும் அவ்விருத்தியையும் முன் இதுவென்ற
விருத்தியையும் அதிற் பிரதிபிம்பித்த சைதந்நியத்தையும்
ஒன்றாக விளங்குவித்திடக் காரணமாய் நின்ற கூடஸ்த விளக்
கத்தைத், அறியவல்லமை யில்லாத நிராகாரசூந்ய விருத்தி
யிற் பிரதிபிம்பித்த சைதந்நியமே ஆவரணவிருத்தியை யு
டைய தனது சக்தியால், தன்னில் உள்ளடங்கிய அகங்கார
ஞாதுரு சக்தியைப், பிந்திய விருத்திக்கு இதுவென்று திரிசி
ய விருத்தியாகக் காண்பிக்க, அவ்வித திரிசியம்போல் விளங்
குகின்ற இது வென்ற ஞான சக்தியே தன்னுள்ளடங்கிய ஆ
வர்ண ஞான சக்திகளால் மனதுக்கு உள்ளபடி தெரிய வல்ல
மையின்றி அகண்டமென்று சங்கற்பிக்க, அவ்வகண்ட விரு
த்தியிற் பிரதிபிம்பித்த சைதந்நியமும் ஆவரண ஞான சக்
திகளால் ஆவரிக்கப்பட்டுக், கூடஸ்தவிளங்குதல் நிராகார சூ
ந்ய விருத்தி அதிற் பிரதிபிம்பித்த ஞாதுரு இதுவென்ற
சமுதாயமுள்ள ஞானவிருத்தி அதிற் பிரதிபிம்பித்த சைதந்
நியமாகிய ஞானம் அகண்டமென்ற விஷயாகார சங்கற்பரூ
ப அகண்டாகார ஞேயவிருத்தி அதிற் பிரதிபிம்பித்த சைதந்
நியம் இவ்வளவும், அகண்டாகாரஞேய விருத்தியிற் சூ
க்ஷ்மமாயடங்கி அகண்டஞேய விருத்தியைப் பாக்க வேறே
தோற்றுதவைகளாகத் தோற்றி ஞேயமாத்திரமாய் விளங்கு
கின்றது. அவற்றை மேற்சொன்னபடி பிரித்துப்பார்த்திடத்
தெளிய வரும்.

முற்றிற்று.

## பதினொன்றாவது

## சரியாதி நிந்தா நிஷேதனப் பிரகாணம்

சருவஞ்ஞனும் சருவ வல்லமையுடையவனும் சருவ வியாபரனும் இடைவிடாத்தன்மையா யெங்குமுள்ளவனும் ஈக்கள் மதுவைப்போல எம்மதத்தோரும் என் கடவுள் என் கடவுளென்று குவிந்து சார்ந்திடத்தக்க ரசக்கடலாயும் என்றும் ஒன்றுபோல் விளங்குகின்றதாயுமுள்ள சருவ நாதனாகிய கடவுளை, சரியை கிரியை யோகம் இம்மூன்றின் சமரசப்பெருமையால் அவனது அநுகிரகத்தை ஸ்துதித்து ஞானானந்தக் கடலில் மூழ்குதலின் விவரம்.

சரியை கிரியை இவ்விரண்டும் கர்மகாண்டத்தில் உப்காரமானதால் அக்கர்ம காண்டத்தில் யாகாதி கிருதுக்களென்ன, ஆலயாதி ஈஸ்வர விஷய கிருதுக்களென்ன, இவ்விரண்டிலும் குண்டமண்டபவேதி முதலாகிய நிருமாணம் சரியாருபமானதால், அச்சரியா விஷயத்திற் கிரியையென்ற உபாசனை சாத்தியமானதால், அவ்வித் உபாசனை ஈசனை முன்னிட்டு விளங்குவதால், அவ்வித ஈசனைத்தெரியச் சீவர்களுக்கு வல்லமையில்லாததினால், அதிமூடமாயுள்ள இந்த ஜகத்திற்கு, அதிலகுவாக ஈசனை அறியும்பொருட்டு அக்கினி லிங்காதிகளிற் சாஸ்திரங்களாற் சர்வ வியாபகமான ஈசனை மந்திராதிகளாற் பாவித்து உபசரித்திட அவனது பிரசாதத்தால் அவனது சுபாவந்தெரியக் கூறுதல்.

இலிங்கம் அக்கினி முதலானவைகள் ஜடங்களாயிருந்த போதிலும், அவைகளிற் பாவிக்கப்பட்ட ஈசன் சித்ரூபனானலால், அவைகளிற் செய்யப்பட்ட உபசாரங்கள் நித்திய திருப்தனாகிய தனக்கு, ஒரு உபகாரமுமில்லாமற் போனாலும், ஜகத்தில் [illegible] பொருந்திய மஹாசக்தியை ராணியவ

ர்களுக்கு ஜகத்தால் ஒரு பிரயோசனமு மில்லாமற் போனலு
ம் ஜடமாயுள்ள அவர்களது மூர்த்திகளுக்குச் சகல இந்து ஐ
ரோப்பியர்களும் வெகுதிரவியச் செலவுடைய உபசாரத்தை
அதிவணக்கத்துடன் செய்ய, அவ்வித உபசாரத்தால் அவர்க
ளது கருணைக்கு இவர்கள் பாத்தியப்படலாமாயின், சருவஞ்
ஞனும் சருவ வியாபகனும் சருவ தயாபரனுமிருக்கின்ற
ஈசனது கருணையின் பொருட்டு, மேற்சொன்ன சிவலிங்காதி
களிற் பாவனையாலுபசரிக்கப்பட்ட ஈசன், அவர்களின் பொ
ருட்டு ஏன் கிருபை செய்யமாட்டான்.

ஈசனையேதெரியாத இந்த ஜகத்துக்கு ஆலயம் யாகசாலை
இவற்றைக்கண்டவுடன் ஈசனது யாது உண்டாவதால், அது
வே மூர்த்திகைகண்ட பிரயோசனம் அப்படி ஈசனதுயாது வ
ரும்போது அவனைச் சருவவல்லமையுடையவனும், தன்னை
ஒன்றுந்தெரியாதவனும் உனக்குள் நானடக்க மெனக்குவிந்
திடும் படிசெய்து அகங்காரத்தை நீக்கியது இரண்டாம் பிர
யோசனம். மேலும், சாஸ்திராதிகளால் விவேகமுடையவர்
களுக்கு மாத்திரம், சர்வ வியாபகமாய் அரூபமானபரம்பொரு
ள் இருக்கின்றதாக அறியப்படும் அவ்வித அறிவாலுள்ள உப
காரம் நாதனெருவனிருக்கிறனென்ற எண்ணத்தை உண்டா
க்குகின்றதைக் காட்டிலும் வேறுபகாரத்தைக் காணவில்லை.
அவ்வித கலைகள் அவனை மறந்திடில் உபகாரப்படுவது போல்
இவ்வாலயாதிகளும் ஈசனைத்தெரிந்தவன் தெரியாதவன் யா
வர்களுக்கும் தங்களது அகங்காரத்தைநீக்கி ஈசனது யாதை
யுண்டுபண்ணிக் குவிந்து வணங்கிடச் செய்விக்கின்றது ஆ
கையால் கல்விகள் வித்வான்களுக்கு மாத்திரம் உபகாரப்படு
ம். ஆலயாதிகள் யாவர்களுக்கும் ஈசனைத் தெரிவிப்பதற்கு
உபகாரப்படும் இது மூன்றும் பிரயோசனம்.

ஈசனைவணங்கிய
அன்றியும் இவ்வித ஆலயாதிதோறும்

பெரியோர்களுக்கு வெகுவித நன்மைகள் கிடைத்திருப்பதால், இப்போதுங் கிடைத்து வருவதால், அப்படியே சாஸ்திரங்களும் வெகுபெருமையாகச் சொல்வதால், அவனைச்சரியை கிரியையாதிகளால் அகத்தியம் வணங்கவேண்டும்.

ஆனால் ஜகத்தாலுண்டு பண்ணப்பட்ட ஆலயாதிகளில் விளங்கிய ஈசனை, நாம் வணங்கவேண்டுவதென்ன, வணங்காவிடில் என்ன தாழ்வு வருமென்னில்? ஒரு அரணியிற் கடைந்த அக்கினி நம்மாலுண்டுபண்ணப் பட்டிருந்த போதிலும் நாமுண்டுபண்ணினது தானேயென்று அவமானிக்க வுபகாரப்படாது. எவ்வாறெனில் உடலைக்கொடுத்தால் எரித்துவிடும், சீதகாலத்தில் அநுசரித்தாற் குளிரை நீக்கும். அப்படிப்போல் நிந்தித்திடில் அவனது கோபத்திற்குரித்தாவான். வணங்கிடிற் கருணைக் குரித்தாவான்.

சாஸ்திரங்களிலே கர்த்தனவன் யோகியர்களுக்கு உள்ளத்திலிருக்கிறனென்றும், ஞானிகளுக்கு எங்குமிருக்கிறனென்றும், பிராமணர்களுக்கு அக்கினியில் இருக்கிறனென்றும் அற்பப்புத்தியாளர்களுக்கு விக்கிரக முதலானதுகளிலிருக்கிறனென்றும் சொல்லியிருப்பதில், விக்கிரகாதிகளை உபாசிக்கின்றவர்களை அற்பப் புத்தியாளர்களென்று சொல்லியிருக்க, நீர் இப்படிக்கூறிய தென்னவெனில்? அக்கினியில் ஈசனது உபாசனை வேத மந்திரங்களின் அப்பியாசத்தாற் சித்திக்கவேண்டுமென்று சாஸ்திரங்களிற் காணப்படுவதால், அவ்விதவேதம் பிராமணர்களுக்கே உரித்தென்று காணப்படுவதால், அக்கினியிற் பிராமணர்களுக்கு நாதனிருக்கிறனெனக் கூறியது. அவ்வித வேதங்களிற் சொல்லிய நாதனை உள்ளத்திலும் அறியுவேண்டுமெனக்கூறிய சாஸ்திரப்படி கரணகலவிகளை யோகத்தாலடக்கி யுள்ளத்தில் ஈசனைத்தரிசிக்க வல்லமையுடையவர்களான யோகியர்களுக்கு அவ்வித வல்லமையிருப்பதால்

அவர்களுக்கு உள்ளத்தில் நாதனிருக்கிறானெனக்கூறியது. ஈசன் எங்குமிருக்கிறானெனக்கூறிய ஞான சாஸ்திரப்பிரகாரம், ஈசன் எங்குமிருக்கின்றதாக அறிய கடவுளது கருணையை அடைந்த ஞானியர்களால், எங்கும் ஈசனை அறிய உபகாரப்படுமானதால், அவர்களுக்கு எங்கு மிருக்கிறானெனக் கூறியது. வேதமந்திரங்களை அப்பியாசிக்க வல்லமையில்லாதவர்களாயும், அதில் அதிகாரமில்லாதவர்களாயும், உள்ளத்தில் ஈசனைத்தரிசிக்க வல்லமையில்லாதவர்களாயும், எங்கும் ஈசனிருக்கின்றதை அறிய வல்லமையில்லாதவர்களாயும், இருக்கின்றவர்களுக்கு விக்கிரக முதலியதில் ஈசனிருக்கின்றதாகக்கூறியதில், அவர்களை அற்பபுத்தியுடையவர்களென்று கூறப்பட்டிருக்கின்றதாக காணப்படுகின்றது. அதின், தாற்பரியம் அக்கினியிலும் உள்ளத்திலும் எங்கும்இருக்கின்ற நாதனை, பிம்பாதிகளில் மாத்திரம் இருக்கின்றதாக ஒப்பிய புத்தியை அபேக்ஷித்தே யன்றி, அவ்விக்கிரகாதிகளில் ஈசனிருக்கின்றானென ஒப்பிய புத்தியை அபேக்ஷித்துக்கூறினதல்ல.

பிராமணர்களுக்கும் யோகியர்களுக்கும் அக்கினியிலும் உள்ளத்திலும் நாதனிருக்கிறானென...க் கூறியதில், பிராமணர்களைத் தவிர மற்றீயர்களுக்கு வேதாபதத்தில் அதிகாரமில்லையெனமாத்திரந் தாற்பரியமேயன்றி, பிராமணர்களுக்கு விக்கிரகாதிகளிலும் உள்ளத்திலும் எங்கும் நாதனை உபாசிக்கக்கூடாதென்ற நிஷேதங்கிடையாது.

யோகியர்களுக்கு உள்ளத்தில் நாதனைத் தரிசிக்க வல்லமையிருப்பதால், அக்கினி விக்கிரகாதிகளை முன்னிட்டு நாதனது உபாசனை வேண்டாவிடினும், அக்கினி விக்கிரகாதிகளில் ஈசனை உபாசிக்கக் கூடாதென்றாவது அவைகளில் நாதன் இல்லை யென்றாவது, அவர்களால் நிஷேதிக்க வுபகாரப்படாது. அவ்வித யோகியர்களுக்கும் உள்ளத்திற் கண்ட-

நாதனை எங்குமிருக்கின்றதாகச் சொல்லிய ஞான சாஸ்திரத்தில் அதிகாரமுண்டு.

எங்கும் ஈசனையறிந்த ஞானிகளும் அக்கினி விக்கிரகம் உள்ளம் இவற்றில் நாதனில்லையென்றாவது, இவற்றால் நாதனை உபாசிக்கக் கூடாதென்றாவது, நிஷேதிக்கத் தக்கவராகார்கள். எவர்களாவது நிஷேதித்திடில் நிஷேதித்தவர்களே அற்பப்புத்தியாளரென நிஷேதிக்கப்படுவார்கள். எதனாலெனில்? எங்கு மிருக்கின்றவன் எங்கேதா னிருக்கத்தகான். மேலும் எல்லாச் சாஸ்திரங்களையும் அப்பியாசித்த போதிலும், நாதனது கருணையன்றி அவனது சுபாவம் வெளியாகத்தகாது; அவனது கருணை கிடைக்க வேண்டுமானால் உறுதியாக அவனை நம்பி வணங்கச் சித்தித்திடும். அவ்வாறு அவனைக்குறித்து வணக்கஞ் செய்யும் விஷயத்தில், சரியை கிரியை யோகம் ஞானங்களில் எந்த மார்க்கமாக உறுதிப்பட நம்பி வணங்கிடிற்றான் கிருபை செய்யத்தகான்.

ஆகையால் சரியை கிரியை யோகம் ஞானமென்னும் நான்கிலும் விசுவாசமுள்ள ... வனான கர்மடன் பக்தன் யோகி ஞானி இவர்களுக்கு அதுகளிற் சொல்லிய நடக்கைக்குத் தக் படி பலன் கி... வேண்டுமானால், ஈசனது கருணையன்றிக் கிடையாது: ஈசனது கருணை கிடைக்கில் எம்மார்க்கத்தாரிலும் எவர் பெரியர் எவர் சிறியர்; ஆகையால் மேற்சொல்லிய சமயங்களில் ஒரு சமயத்தையுந் தீயதென்றுரைக்கத்தகாது.

மேலும் சமயங்களே பலனைக்கொடுக்குமா? ஒரு எஜமானுக்குப் பாத்தியப்படாத ஒரு காட்டில் ஒருவன் வேலை செய்யில், அவ்வேலையே அவனுக்குச் சம்பளங் கொடுக்கத்தகாததுபோல சமயங்கள் தானே பலனைக் கொடுக்கத்தகாது.

ஆகையால் எச்சமயத்தோருக்கும் நாதனே *பல்தாதாவாகக் காணப்படுவதால் எச்சமயத்தோர்களும் அந்த நாதனைக்குறித்து உண்மையுடன் ஸ்துதி செய்யவேண்டுமேயன்றி நாதனடியவராகிய எச்சமயத்தோரையாவது எச்சமயத்தோராயினும் நிந்திப்பார்களாகில் அவர்கள் நாதனையே நிந்தித்தவர்களாவார்கள்.

ஆலயாதிகளில் விக்கிரகாதிகள் மூலமாக ஈசனைப்பாவித்து நம்பி வணங்கி வருவதில், விக்கிரகாதிகள் பின்னப்படும்போது ஈசனும் அழிவுடையவனோ வென்று சங்கிக்கக்காரணமில்லை; விக்கிரகாதிகளையே நாதனாக நம்பியிருந்திடில் அதுசரி. ஒரு அரசனது தேகத்தை முன்னிட்டுச் சகல ஜனங்களுக்கும் அரசனென்ற அதிகாரத்துக்குத் தகுந்த உபசாரஞ்செய்ய நம்பிக்கை வந்திருந்திடினும், அவ்வரசனது தேகம் நீங்கின காலத்து அவ்வரசனது அதிகாரம் மற்றொரு தேகத்தை முன்னிட்டுங் காணப்படுவதுபோல, நாதனது உபாசனையும் மற்றொரு விக்கிரகாதிகளை முன்னிட்டுச் சித்திக்கத்தகலாம்.

வேதங்களுக்கு, எங்கும் ஈசன் இருக்கின்றானெனத் தெரியப்படுத்த வேண்டுவதே, தாற்பரியமானால், அக்கினி விக்கிரகாதிகளில் மாத்திரம் உபாசனை செய்தலை விதிக்க வேண்டுவதேனெனில்? ஈசனையே அறியாதவர்களுக்கு ஈசனைப் பற்றிய யாதுவருவதின் பொருட்டு, அக்கினி விக்கிரகாதியளிற் கூறினபோதிலும், நதி சமுத்திரம் சில விருக்ஷம் சில பக்ஷி சில மிருகம் சில மனிதர் என்னும் இவற்றில், நாதனைப் பாவித்துத் தொழும்படிக்குஞ், சாஸ்திரத்தில் அருளிச்செய்யப்பட்டுத் தானிருக்கின்றது.

எங்கும் வியாபகனாயும் அரூபனாயும் இருக்கின்ற ஈசனை, ஒரு பிம்பாதியில் அடங்கினவனாயும் ரூபமுடையவனா

---

* பலதாதா-பிரயோசனந்தருபவன்.

யும் உபாசிக்க வேண்டுமானல், நிராகாரனுக்கு ஆகாரம் ஒப்பப்பட்டிடில் அதுசரி, நிராகாரனுக்கு ரூபங்கூடாதென்னிலோ? நிராகாரனுயிருக்கிற நாதனுக்கு, இவ்வித நாமரூபங்களுடைய இவ்வித ஜகத்தை உண்டுபண்ண வல்லமை இருக்கிறதாக ஒப்பிடில், இவ்வித ஜகத்தின் பொருட்டு நிக்கிரக அநுக்கிரக வல்லமையுடைய, ஓருடல் தனக்கு உரியதாகக் கற்பிக்க வல்லமையுடையவனுக ஏன் ஆகத்தகான்.

மேலும் சீவர்கள்கூடத் தங்கள் ஸ்தூலதேக வியாபாரத்தை நீங்கி, சொப்பனுவஸ்தைக்குப் போகுங்காலத்தில் நானுவிசித்திரமுடைய ஜகத்தைக் கற்பித்து, தங்களுக்கு உரியதாக ஓருடலையுங் கற்பிக்க வல்லமையுடையவர்களாகக் காணப்படுகின்றூர்கள்; பின்பு சுழுத்தியில் இவ்வித இரண்டடலையும் விட்டு நிராகாரமாயுங் காணப்படுகின்றூர்கள்; அவ்வித சீவர்களே நிராகாரமாயிருந்து சாகாரம்போலத் தோற்றலாமாகில், நிராகாரனுயிருக்கும் ஈசன் தன்னுற் கற்பிக்கப்பட்ட ஜகத்துக்கு அருள்செய்யும் பொருட்டு, ஏன் ரூபமுடையவனுகமாட்டான். அன்றியும் எங்குமுள்ள ஆகாயம் ஒரு ஊசித்துவாரத்திலுமிருக்குமானல், எங்கு நிறைந்திருக்கும் நாதன் ஏன் பிம்பாதிகளில் உபாசனையின்பொருட்டிருக்கத்தகான். சுருக்கமுடையது விஸ்தாரமா யிருக்கத்தகாதே யன்றி விஸ்தாரமுடையது சுருக்கமாய்க் காணப்படலாம். அல்லது, வேதமென்றல் அதின் பொருள் யாதெனில் வேதயத்த வேதமெனப்படும். அதற்கு அவ்வளவு வல்லமை யேதெனில் நாதனிடத்தினின்று முண்டாயிருப்பதினுற்றுன். அவ்வித வேதம் பிராமணர்கள் முகமாக இருக்கு எசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கு வகுப்பாயிருக்கின்ற, இந்த வேதம் ஒன்று மாத்திரந்தான் ஆகுமே யன்றி மற்றமதத்திற்சொல்லிய யாதொரு சாஸ்திரங்களும் வேதமாகத்தகாது. ஏதெனில் மற்றெந்த மதத்திலுஞ் சொல்லிய சாஸ்திரங்கள்

அந்தந்த மதங்களின் கோட்பாடென்ன, அந்தந்த மதவாதியர்களின் தேசங்களிலுள்ள ஜனங்களின் நடக்கையென்ன, அத்தேசத்திலுள்ள பருவதம் நதி விருக்ஷம் மற்றவஸ்துக்களென்ன, இவைகளைச் சொல்லுங்கால் அத்தேசத்திற்றானே சில வஸ்துக்களையும், மற்றொரு தேசத்திலுள்ள மதங்களின் கோட்பாடுகளையும், அவற்றிலுள்ள வஸ்துக்களையும், வெவ்வேறு நாமமுடையவையாகச் சொல்லாததினாலும், உண்மையைத் தெரிவிக்க அச்சாஸ்திரத்தில் வல்லமை யில்லாததினாலும், இந்த வேதத்தில் சகல ஜகங்களையும் அவற்றிலுள்ள சகல வஸ்துக்களையும், சகல மதங்களையும், அந்தந்தக் கோட்பாடுகளோடும் தகுந்த யுக்தி யநுபவங்களோடுங் கூட நிரூபித்து, அந்தந்தச் சாஸ்திரங்களில் அகப்படாத உண்மையையும் இனிவரப்போகிறதும் இப்போதிருக்கின்றதும் முந்தி யிருந்ததுமாகிய மதங்களையும் விவரமாக விளக்கி, அவைகளில் உண்மையில்லாததற்குக் காரணமும் இன்ன இன்ன மதவாதியர்கள் இன்ன இன்ன காரணத்தால் உண்மையற்றவர்களானார்களென்றும், இவ்வேதத்திற் சொல்லிய பொருளை அவரவர்களுக்குரிய பாஷைகளினால் விசுவாசத்தோடுங்கூட விசாரித்திடில், எவர்களாலும் இவ்வேதத்திற் சொல்லிய உண்மையானது யுக்தி யநுபவங்களால் தள்ள வுபகாரப்படாமல் ஒப்பத்தகுமென்றும், சுருதி யுக்தி யநுபவங்களாற் காணப்படுவதால், அப்படிச் சொல்லும் வல்லமை நாதனது வாக்குக் கன்றி மற்றொரு சாஸ்திரத்துக்கும் கூடாததினால், நாதனது வாக்கே வேதமானதால், அவ்வாக்குஞ் சர்வஞ்ஞமானதால், அவ்வித லக்ஷணம் இவ்வேதத்துக்கே யிருப்பதால், இதையே வேதமெனக்கூறத்தக்கது.

இவ்வித வேதத்தி னுண்மையை உள்ளபடி அறியவேண்டிய அதிகாரியானவன், உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம், பிரச்சுரம், முதலாகிய ஸ்வரஞாயமென்ன, அந்த ஸ்வரத்

தை யிட்டுவந்த மாத்திரை, விசர்க்கம், ஸ்தாயிகலா இவை மு தலாகிய ஞானமென்ன, மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந் தோபிசிதம், நிருத்தம், சோதிடம், இந்த ஆறு அங்க ஞான மென்ன, பதம், கிரமம், கனம், ஜடை, இவற்றின் ஞானமென் ன‡ புராணம் பதினெட்டு அதின் * உபபுராணம் பதினெட்டு மநுக்களால் விஸ்திரிக்கப்பட்ட § ஸ்மிருதி பதினெட்டு சிவர கசியம், பாரத, முதலாகிய இதிகாசங்கள் ஈசனுல் மொழிந்த ருளப்பட்ட சைவாகமம் †இருபத்தெட்டு, வைகானசம், பாஞ் சராத்திரம் முதலிய வைணவாகமங்கள், இரண்யகர்ப்பமென்ற

---

‡ புராணம் பதினெட்டாவன-பிரமம், பதுமம், வைணவம், சைவ ம், பாகவதம், பௌஷ்யம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கினேய ம், பிரமகைவர்த்தம், இலிங்கம், வராகம், ஸ்காந்தம், வாமனம், கூர் மம், மச்சியம், காருடம், பிரமாண்டம், என்பனவாம்.

* உபபுராணம் பதினெட்டாவன-உசனம், கபிலம், காளிகம், சனற்குமாரம், சாம்பவம், சிவதன்மம், சௌரம், தூர்வாசம்,நந்தீசம், நாரசிங்கம், நாரதீயம், பராசரம், பார்க்கவம், ஆங்கிரம், மாரீசம், மா னவம், வாசிட்டலைங்கம், வாருணம், என்பனவாம்.

§ ஸ்மிருதி பதினெட்டாவன-மநு, அத்திரி, ஔரிதம், விட்ணு, யாஞ்ஞவற்கியம், உசனம், ஆங்கிரசம், யமம், ஆபஸ்தம்பம், சம்வர்த் தம், காத்தியாயனம், பிரஹஸ்பதி, பராசரம், வியாசம், சங்கலிதம், தக்கம், கௌதமம், சாதானமம், வசிட்டம். இவற்றுள், சங்கலிதம், யுகம் நாலுக்கும் பொது.

† சிவாகமம் இருபத்தெட்டாவன-காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகத்திரம், அஞ்சுமான், சுப்பிர பேதகம், விசயம், நிசுவாசம், சுவாயம்புவம், அனலம், வீரம், இரௌ ரவம் ,மகுடம், விமலம், சந்திரஞானம், விம்பம், புரோற்கீதம், லளி தம், சித்தம், சந்தானம், சருவோத்தம், பாரமேச்சுரம், கிரணம், பேத ம், வாதுளம், என்பனவாம்.

ஆகமம் வார்கஸ்பத்தி யாகமம் இவற்றின் ஞானமென்ன, சாம்பர முதலிய அறுபத்துநாலு கலைஞானமென்ன, இவைகளிலெல்லாம், ஞானமுடையவனும் குருசம்பிரதாயமாகக் கிரகித்தவனும் ஈசனது கருணைக்கு உரித்தானவனும் இருக்கவேண்டும். இவையே முன்சொல்லிய வேதப்பொருளில் அதிகாரியின் இலக்ஷணமாம்.

இப்படிப்பட்ட வேதப் பொருளின் விவரம், பதத்தை யிட்டு வந்த பொருளொன்று வாக்கியத்தை யிட்டுவந்த பொருளொன்று அக்ஷரத்தை யிட்டு வந்த பொருளொன்று வேதம் மந்திர ரூபமானதால், மந்திரத்தை யிட்டு வந்த பொருளொன்று வேதம் யாகசாதகமாயிருப்பதால் பிரயோகத்தை யிட்டு வந்த பொருளொன்று வேதம் சுரரூபமானதால் சுரத்தை யிட்டுவந்த பொருளொன்று இவ்வளவு பொருள்களும் அதிகாரியின் பேதத்தால் சரியை கிரியை யோகம் ஞானம் இந்த நான்கு அதிகாரிகளுக்கும் உபகாரப்படும். இவ்வண்ணமாகப் பொருள்களை அறியவல்லமை யுடையவனுக்குத் தான் வேதங்களின் சுபாவம் வெளியாகும்.

முற்றிற்று



## பன்னிரண்டாவது

## நாமார்த்தவைபவமுரைத்த பிரகரணம்.

க சிவ—என்பதின் பொருள் அழிவில்லாத் தன்மையாயிருந்து விளங்கிய ஆனந்தமாம் மங்களமென்ற பொருளுடைய சச்சிதானந்த மெனப்படும்.

உ மகாதேவ-எ-ன் பூரணத்துக்கும் பூரண மெனவும் இரண்டாம் வஸ்துவை முக்காலத்திலும் உடைத்தாகாத

தானான ஞானைசுவரிய மகிமையால் மகத்தாய்விளங்கிய தெனவும்படும்.

௩ ஈசுவர எ-ள்-முத்தொழிலுக்கும் முதலாய் நின்று முத்தொழிலுக்கும் பாத்தியப்படாத தெனப்படும்.

௪ சங்கர எ-ள்-ஜகமனைத்திற்கும் தன்சந்நிதான விசேஷத்தாற் சுகத்தைக் கொடுத்துச் சுகிப்பித்தும், மற்றொருதவியின்றித் தானுஞ் சுகரூபமாயிருக்கின்ற தெனப்படும்.

௫ நீலகண்ட எ-ள்-உடலாய் விளங்கிய நான்கவஸ்தைகளில் மூன்றுமவஸ்தையாங் கண்டத்தில் அஞ்ஞானமாங் காளகூட விஷத்தைத் தரித்தும், துரிய சுபாவமாந்தான் அவிஞ்சியாய்க்கொண்டு மற்ற மூன்றவஸ்தையாஞ் சிவ சுபாவத்தைத் தன் வல்லமையால் இரக்ஷித்திருந்த தெனப்படும்.

௬ திரிநேத்திர எ-ள்-மூன்றவஸ்தையிலும் மூன்று கண்ணாக விளங்கிய விஸ்வ தைஜஸ பிராஞ்ஞர்களை மூன்றவஸ்தையிலும் மூன்று கண்ணாக உடைய தெனப்படும்.

௭ சந்திரசூட எ-ள்-சமத்காரத்தால் சருவ ஜகத்தையுஞ் சித்துப்போல விளங்குவித்து, சித்தைத் தவிர வேறில்லையென்று ஜகத்தை நிஷேதித்து, விளங்கிய சைதந்நியத்தை முடிவில் தானாக விழுங்கி விளங்குகின்றதே அலங்காரமாக உடையதெனப்படும்.

௮ கங்காதர எ-ள்-சுஷுத்தியிற் சுபாவமாய் உண்மையை அடைந்திருந்திடினும், அடையப்படாததுபோற் றோன்றிய பிராந்தியை நீக்கி, அவஸ்தை மூன்றுக்குஞ் சாக்ஷியாய் விளங்கிய பிரஞ்ஞையை முடிவில் தனக்கு வேறில்லாததாய்த் தரித்திருக்கின்ற தெனப்படும்.

க  கபர்த்தி எ-ள்-திரிபுடியாம் மூன்று முடிச்சுடைய மூன்றவஸ்தை யென்ற ஜடையை, முடிவில் தன்னைத்தவிர வேறில்லை யெனத் தானுய்ச் சேஷித்த ஞானமெனப்படும்.

ல  பகவான் எ-ள்-முத்தொழிலிலும் மூன்றவஸ்தையிலும் பேதமாய் விளங்கிய ஜகமும், மூன்றவஸ்தையுடைய முத்தொழிலும் தன்னைத் தவிர வேறில்லாததாக அறியச்செய்து, தானுகத் தன்னை யறிந்து விளங்கியதெனப்படும்.

லக திரியம்பக எ-ள்-விராட்டு இரணியகர்ப்ப அந்தரியாமி மூவரும் தன்னிற் றோன்றியவர்களெனவும், தன்னைத் தவிர அவர்கள் வேறில்லை யெனவும், தெரிவித்துத் தானுய் விளங்குகின்றதெனப்படும்.

லஉ திரிபுராரி எ-ள்-அதிஷ்டான ஞானமான தனது விளங்குதலாம் மந்த காசத்தால், அவஸ்த்தைகளாந் திரிபுர மெரிக்கப்பட அவைகளுந் தன்னைத் தவிர வேறில்லாதவைகளாகக் கொண்டு, தானுய் விளங்கியதெனப்படும்.

லங காலாரி எ-ள்—அஞ்ஞானம் மாயை காலதத்துவம் இவ்வளவும் அதிஷ்டானமாந் தன்னைத் தவிர முக்காலத்திலும் வேறில்லை யென நிஷேதித்துத், தானுய் விளங்கியதெனப்படும்.

லச கிரீச எ-ள்-பரை பசியந்தி மத்திமை வைகரி இவைகளாய் விளங்கிய நாதங்களைத், தனது சத்தையால் விளங்குவித்து, அவைகளையுந் தன்னைத் தவிர வேறில்லாததாகக் கொண்டு, தானுக விளங்கி நின்றதெதுவோ அதுவெனப்படும்.

லரு மிருகதர எ-ள் பசுத்துவமாய் விளங்கிய சீவர்களைத் தன் சத்தையால் விளங்குவித்து, அவைகளைத் தன்னைத்

தவிர வேறில்லாததாய்த் தரிப்பித்துத் தானாய் விளங்கிய தெனப்படும்.

௧௬ ப்சுபதி எ-ள்-மேற்கூறிய படியே.

௧௭ ஸாம்ப எ-ள்-தானானதன் சக்தியாற் சகலமாய் விளங்கி, அச்சகலமும் தன் சக்தியும் தன்னைத் தவிர வேறில்லாததாகக்கொண்டு, தானே தனக்குச் சக்தியாய் விளங்கிய தெனப்படும்.

௧௮ கிரிச எ-ள்-முன் கிரீச நாமத்திற் கூறிய பரா முதலிய நான்கு பேதமுடைய நாத தத்துவமாம் உபநிடதத்தின் உட்பொருளாய் விளங்கிய தெனப்படும்.

௧௯ நடேச எ-ள்-ஐந்தொழிலுக் குட்பட்ட ஜகங்களைத் தன் சந்நிதானமாம் நடனத்தால் நடிப்பித்துச், சகல நடனமுந் தன்னடனத்தைத் தவிர வேறில்லாததாகக் கொண்டு, தானான தன்னடனமாய் விளங்கிய தெனப்படும்.

௨௰ கௌரீச எ-ள்-இச்சா ஞானக்கிரியை யென்ற தானான தன்சக்தியாற், சகலங்களாய்ப் பவித்து, அவைகளைத் தன்னைத்தவிர வேறில்லாததாகக் கொண்டு தானாய் விளங்கிய தெனப்படும்.

௨௧ கால்வயிரவ எ-ள் தானான தன்கலனா சக்தியால் ஐந்துவித காலபேதமுடைய ஜகத்தாய்ப்பவித்து அவ்விதஜகத்தையுங் கலனாசக்தியையுந் தன்னைத்தவிர வேறில்லாததாகக் கொண்டு தானாய் விளங்கிய தெனப்படும்.

௨௨ உன்மத்தசேகர எ-ள் நான் எனதென்ற அகங்காரமாகு மமதையை நீங்கினவர்களாய் விளங்கிய பிரமவித்தியா குருக்களுக்குங் குருவாய் நின்றிலங்கிய சைதந்நியமெனப் படும்.

௨௯ சரப எ-ள் ஜீவவிளங்குதலையுந் தனது விளங்குதலால் விளங்குவித்து, அவைகளைச் சுவப்பிரகாசமான தன்னைத் தவிர வேறில்லாததாகக் கொண்டு சுவப்பிரகாசமான தான் மாத்திரமாய் விளங்கிநின்றதெனப்படும்.

௩ நாராயண எ-ள் சகலநாமரூபமுடைய ஜகத்தைத்தன் சத்தையால் வியாபித்து, அச்சகத்தையும், அச்சத்தியையும் தன்னைத்தவிர வேறில்லாததாகக்கொண்டு, தானாய்நிறைந்த சைதந்நியமெனப்படும்.

௨ அச்சுத எ-ள் தானேதன்சத்தியால், ஜகத்தாய்த்தோற்றி, அந்த ஜகமிருந்திடினும் நசித்திடினும் ஏற்றக்குறைச்சல் களின்றி ஏகசுபாவமாய் விளங்கிய சைதந்நியமெனப்படும்.

௩ கோவிந்த எ-ள் ஜீவர்களுக்கு நானாவாய்த்தோன்றிய ஜகத்ரூப் சம்சாரத்தை, தனது ஆத்மசுபாவத்தால் இல்லா மற்செய்து, அவர்களையுந் தானாகவிளங்குவித்து, மோக்ஷரூப மாய் விளங்கிய சைதந்நியமெனப்படும்.

௪ பத்மநாப எ-ள் தனது சத்தியாற் சகலஜகத்தையும் சங்கோச விகாசமுடையதா யளவிட்டு, அவ்விதஜகத்தையுந் தனக்கு வேறில்லாததாய்த் தன்னுளடக்கித் தானாய்நின்ற தெனப்படும்.

௫ மாதவ எ-ள் சகல ஜகத்துக்கும் வித்தாகிய மாயைக்கு மேலானவனாயும், தனக்குமேலாக ஒன்றையுங் கொள்ளாதவ னாயும் அந்த ஜகத்தையும் மாயையையும் தன்னைத்தவிர வே றில்லாதவனாகக்கொண்டு, தானாக விளங்கியதெனப்படும்.

௬ மதுசூதன எ-ள் சகலஜகத்தையும் சுகலேசத்தால் ஆண்டிலின் மாம்சத்தால் மச்சங்களைப்போல சகலஜகத்தை

யும் பிரோதம்போலச் செய்யாநின்ற ஆனந்த மயகோசாபிமானியாம் சீவனென்ற அசுரனையும் சகல ஜகத்தையும் தானான தன்னருளாம் அதிஷ்டான வல்லமையால் வென்று இரக்ஷித்துத் தானய்க்கொண்டு விளங்கிய தெனப்படும்.

௭ கேசவ என் தானான ஆனந்தசுபாவமாந் தன்னிடத்தில் சகல ஜகத்தையும் பிரேமையுடையதாய் ஆவரித்து, ஆனந்தசுபாவமாந்தன்னைத் தவிர வேறில்லாததாகக் கொண்டு தானாய் நின்றதெனப்படும்.

௮ அனந்த என் கால தேச வஸ்துபரிச்சேதமில்லாததெனப்படும்.

௯ வாமன என் மூன்றவஸ்தையிலும் முத்தொழிலிலும் வியாபகமாயிருந்துஞ் சகல ஜகத்தாலும் அறியப்படாததாய்ச் சகலத்தையுந் தன்னைத்தவிர வேறில்லாததாய்க்கொண்டு சூக்குமமாய் நின்றதெனப்படும்.

௰ இருஷிகேச என் சகல ஜகத்தின் ஏகாதச இந்திரியங்களைத் தன் சந்நிதானத்தால் விளங்குவித்துத், தன்னைத்தவிர அவைகளை வேறில்லாததாய்க் கொண்டு தானாய் விளங்கியதெனப்படும்.

௧௧ இராம என் புண்ணிய பாவமுடைய சகல ஜகங்களையும் சிக்ஷாரெக்ஷணைகளால் சரியெனமேவச்செய்து, தனதருளால் விஷயசுழுத்தி சமாதி இவைகளில் ஆனந்தமாய் விளங்கிய தானான தன்சக்தியால் சகலங்களையும் ரமிபித்து சகலத்தையும் தன்னைத்தவிர வேறில்லாததாய்க்கொண்டு தானாய் நின்ற தெனப்படும்.

௧௨ திரிவிக்கிரம என் மூன்றவஸ்தைகளையும் முத்தொழிலையும் திரிபுடியையும் தனது சுபாவத்தால் அதிக்கிரமித்து

அவைகளையுந் தன்னைத்தவிர வேறில்லாத தாய்க்கொண்டு தானாய் விளங்கிய தெனப்படும்.

௧௩ கிருஷ்ண எ-ள் ஆனந்த சுபாவமாந் தனதுசக்தியால் சகலங்களையும் புஷ்டிப்பித்து, சகலங்களையும் அதிமோகத்துடன் தன்னிடத்திற் பிரேமை யுடையதாகச் செய்து அவைகளைத் தன்னைத்தவிர வேறில்லாததாக விழுங்கித் தானாய் விளங்கிய தெனப்படும்.

௧௪ ஜனார்த்தன எ-ள் சகல ஜகத்தும் தன்னால் சிருஷ்டிக்கப்படவும் பரிபாலிக்கப்படவும் சங்கரிக்கப்படவும், அனைத்தையுந் தன்னைத்தவிர வேறில்லாத தாகக்கொண்டு தானாய் நின்றிலங்கிய தெனப்படும்.

௧௫ தாமோதர எ-ள் சகல ஜகமும் உண்டாகியும் விளங்கியும் அழிந்தும், தன் வியாபகத்துக்கு வேறில்லாததாகத் தன்னிடத்தில்வைத்துத் தானாயிருக்கின்றதெனப்படும்.

௧௬ பங்கஜாக்ஷ எ-ள் சகல ஜீவர்களையும் சேற்றிலகப்பட்ட பிராணியைப்போல அசைவுக்கிடமின்றிச் செய்யும்படி அஞ்ஞானமாம் பங்கத்தில் முழுகி அறிவில்லாததாய்ப் பவித்தும், விவேகமாந் தனதருளால் ஞானக்கண்ணைஞ் சருவவல்லமையாக அவர்களுக்குத் தன்னைவிளங்குவித்து, அவர்களையுந் தன்னைத்தவிர வேறில்லாததாகக் கொண்டு தானாய்த் தனித்ததெனப்படும்.

௧எ நாரசிம்ஹ எ-ள் அநேக நாமரூபங்களாய்த்தோன்றிய ஜகத்தை இரண்டாமவஸ்தையிற் சிதாபாச ஜீவஞானத்தால் விளங்குவித்து, மூன்றாமவஸ்தையில் ஜகத்தையுந் தன்னையும் அறியவல்லமை யில்லாதவனாய்ப் பவித்த பிராஞ்ஞனைஞ்

சிவபோதத்தைத், தனதருளால் விளங்குவித்து, சாக்ஷியாய் நின்ற தானான தன் ஞானக்கண்ணால் அனைத்தையும் வேறில்லாததாகக்கொண்டு, தானாய் விளங்கியதெனப்படும்.

கஅ வராக எ-ள் சகலஜகத்துக்கும் மோகத்தால் முதலாகவிளங்கிய நானென்ற ஆனந்தமயகோசத்தை அநான்மப்பொருளாகநீக்கி, மேலான ஆன்மப்பொருளாய் விளங்கித் தன்னைத்தவிர அனைத்தும் வேறில்லையெனக்கொண்டு தானாய் விளங்கியதெனப்படும்.

ககூ மத்ஸிய எ-ள் ஜடமான சகலஜ்கத்தையுந் தனது திருவருளாம் பார்வையாற் பார்க்க, அனைத்தும் ஞானவல்லமையுடையதாய் விளங்கிடச் செய்து, அவ்வித ஞானவல்லமையுடைய அனைத்தும், தனது ஞானப்பார்வையாந் தன்னைத்தவிர வேறில்லாததாகக்கொண்டு, தான்மாத்திரமாய்ச் சேஷித்ததெனப்படும்.

உ௦ கூர்ம எ-ள் அதிரிசியமான தானே திரிசியமான அதிவிரிவுடைய சகல ஜகங்களாய் விரிந்து, அவைகளை அதிரிசியமான தனது சக்தியால் அதிரிசியமான தன்னைத்தவிர வேறில்லாததாயடக்கிக்கொண்டு, சூக்குமமான தானாய் விளங்கியதெனப்படும். இந்நாமங்கள் யோகம் அல்லது காரணமெனப்படும்.

உக கர்க்கி எ-ள் சகல இந்திரிய அந்தக்கரணங்களின் வேகமுடைய அடைவுக்கு முன்னமே சலனமின்றி, அவ்விடங்களில் தனது அடைவு இருக்கின்றதாகவே விளங்குவித்து, அவ்வித தனது வேகவல்லமையைத் தவிர அனைத்தின் கமன சாமர்த்தியமும் வேறில்லையெனச்செய்து, அனைத்தும் தானாய்க்கொண்டு விளங்கியதெனப்படும்.

க கஜமுக எ-ள் தோற்றி மறையா நின்ற சகல ஜகங்களின் தோற்றுதலும் மறைதலும் தன் முகமாகச்சித்தித்து, அனைத்துந் தானான தன் முகத்தைத் தவிர வேறில்லாததாகக் கொண்டு, முதன்மையான தான் மாத்திரமாய்ச் சேஷித்த தெனப்படும்.

உ கணேச எ-ள் சகலஜகங்களின் பகிரிந்திரியம் அந்தரேந்திரியமாகிய சமஷ்டி வியஷ்டியான தேவகணங்களைத், தனது சந்நிதானத்தால் நியமித்து, அவைகளைத் தன்னைத் தவிர வேறில்லாததாகக் கொண்டு, தானாய் விளங்கிய தெனப்படும்.

க குமார எ-ள் சகல ஜகங்களின் குச்சிதமாகிய அஞ்ஞானம் மாயை இவற்றைத் தனதருளால் இல்லாததாகச்செய்து அனைத்தையுந் தானாக விளங்குவித்துத், தான் மாத்திரமாய்த் தனித்த தெனப்படும்.

உ சுப்பிரமணிய எ-ள் ஜீவேச பேதத்தோடுங்கூடிய அனைத்தையு முக்காலத்திலும் வேறில்லாமற் கொண்டு, தானாகப் பிரகாசித்த தெனப்படும்.

இவ்வித நாமங்களின் இலக்கணவடிவாய் விளங்கிய நிர்க்குணப்பொருளை, ஜகமறிந்து உய்யும்பொருட்டு அவ்வித சூக்குமார்த்தங்களை ஸ்தூலமாய் அவதாரங்களிற் காண்பித்து, அதை உபாசிக்கின்றவர்களுக்குச் சூக்குமமான தன் சுபாவத்தை அருளிச்செய்கின்ற தெனத்தாற்பரியம்.

சொரூபமே ரூபமாய் விளங்குகின்றது; ரூபமே நாமமாய் விளங்குகின்றது; நாமம் ரூபத்தைத் தெரியப்படுத்தி அந்த ரூபமாத்திரமாய் விளங்கிடும். அவ்வித ரூபம் தன்னைத் தியானஞ்செய்யாநின்ற சாதகர்களின் மனம் தன்னிடத்தில் லயிக்க, தானும் சாதகர்களின் மனதோடும்லயித்துத், தன்னு

தார்மான ஞானசுபாவமாகத் திரிபுடியற்று விளங்கிடும். அப்பொழுது சாதகர்களின் தியான் சாதனமான மனதிற் பிரதிபிம்பித்த சிதாபாசனுஞ் சிவ சைதந்நியம், அதிஷ்டானத்தைத் தவிர வேறில்லாததாகக் கொண்டு அதிஷ்டான மாத்திரமாய் விளங்கி அதிஷ்டானத்தினருளால் விழித்தபின், அதிஷ்டானமான நாமே ரூபமாயும் நாமமாயும் நம்மைத் தியானிக்கும் மனம் சிவன்களாயும் தோற்றி விளங்கினோம் ஆகையால் நம்மைத் தவிர முக்காலத்திலும் வேறில்லையென அருளிச் செய்திடும்.

மேலும் சொரூபத்துக்கு எவ்வளவு மகிமையிருக்கிறதோ, அவ்வளவு மகிமை ரூபத்துக்கும் நாமத்துக்கும் இருக்கவேயிருக்கிறது. அதெப்படியெனில்? ஏக சக்கிராதிபதியான் ஒரு மஹாராஜா தான் அரண்மனையில் தூங்குங் காலத்தில் சொரூப மாத்திரமாயிருக்கின்றான்; அந்த சொருபத்தை மஹாராஜா வென்பதற்குத் தடையில்லை; நான் தூங்கினேனென்று மஹாராஜாவாற் சொல்லப்படுவதால், அவனே விழித்தபின் சிங்காசனத்தில் உடலான ரூபமுடையவனாய் மஹாராஜா வென்று உபசரிக்கப்படுவனாய்க் காணப்படுவதால், அவனது சொரூபத்துக்கும் சொரூபமுடையவனது உடலுக்கும் பேதம் நினைக்கத்தக்கதில்லை: அப்படியே அவனது நாமாங்கிதமாயுள்ள முகர் அல்லது முத்திரைக்கும் பேதம் நினைக்கத்தக்கதில்லை; மூன்றுக்கும் ஒன்றுபோலவே உபசாரஞ்செய்யத்தக்கது தான்.

மேலும் நாமாங்கிதம் முகருக்கு மகிமையதிகமாகவுங் கூறப்படலாம், எப்படியெனில்? அரசனது சுபாவமும் அவனது ரூபமும் ஜகத்துக்குத் தெரியாதிருந்தபோதிலும், அவனது முகரால் அவனது ஸ்திதி அறியப்பட்டு அந்தமுகரை அவனைப்போலவேமானிப்பதாகக்காணப்படுவதால்,முகருக்கு

மகிமை அதிகமெனக்கூறுதலெப்படியோ, அப்படியே தேவர்களுக்குந் தேவராகிய மஹாதேவரது சொரூபமும் ரூபமும் அவரது நாமத்தால் தெரிய வேண்டியதிருப்பதால், நாமத்துக்கும் அவரது ரூபத்துக்கும் அவரது சொரூபத்துக்கும் பேதமில்லையெனவும் அவைகளைத்தெரிய உபகாரஞ் செய்வதில் நாமத்திற்கு ஆதிக்கமெனவும் கூறத்தக்கது. ஆகையால் பரமசிவத்தினது சுபாவத்தை அடையவேண்டுங் கருத்துடையவர்கள், அவரது திருநாமத்திலும் அவரது ரூபத்திலும் அதிக பக்தியுடையவர்களா யாகவேண்டும்.

முற்றிற்று



## பதின்மூன்றவது

## பஞ்சவக்திர விளக்கமுரைத்த பிரகரணம்

பிரமா விஷ்ணு ருத்திர ஈசுர சதாசிவம் என்னும் ஐந்து தத்துவங்களையும், ஈசான தற்புருஷ அகோர வாமதேவ சத்தியோஜாதமென்னும், ஐந்து முகங்களாகத்தரித்து விளங்கிய பரமசிவத்தைத், தனது இருதயகமலத்தில் அநுசந்தானித்து, அவ்வித பரமசிவத்துக்கும் ஜகத்திற்குமுள்ள ஐக்கிய விசேஷத்தால் சுவாநுபவத்தை யடைந்து, சாதுக்கள் விளங்குந்தன்மையாவது.

பஞ்சதத்துவங்களாய் விளங்கிய பஞ்சமுகமுடைய பரமசிவத்தை இருதயத்திற்றியானித்து, அதில் தற்புருஷமுகம் நிவிர்த்தி கலையுடைய பிரமாவானதால், அவ்விதஉபாதியையுடைய அம்முகத்தைச் சகலமான கந்தம்பொருந்திய பிருதுவி தத்துவத்திற்கு அதிஷ்டான தேவதையாக விசாரித்து, ஒரு கண்ணாடியில் பட்டணம் பிரதிபலிக்கின்றதுபோல, அம்

முகத்தில் யாவத்பூமியும் அடங்கி விளங்குவதாய் அநுசந்தானித்து, அவ்விதபூமிக்கும் அம்முகத்திற்கும் அபேதத்தையாலோசித்து, அப்படியே ஜலதத்துவத்தை வாமதேவமுகத்திலும் அக்கினி தத்துவத்தை அகோரமுகத்திலும் வாயு தத்துவத்தைத் தற்புருஷமுகத்திலும் ஆகாச தத்துவத்தை ஈசானமுகத்திலுமாக ஐக்கியஞ்செய்து, அவ்வித பஞ்சமுகமுடைய பரமசிவத்தை அபேதமாய்த் தன்னைத்தவிர வேறில்லையெனப் பஞ்சகோசாதீதனாகத் தியானித்து, தனது பிரகாசத்தினாலேயே தனது பஞ்சேந்திரியங்களும் விளங்குவதாக அறிந்து தனது பஞ்சமுகத்தின் வல்லமையே ஒவ்வொரு இந்திரியங்களின் வல்லமையாய் விளங்குகின்றதென அறிந்து, அவ்வித வல்லமைகளால் பிரமாண்டத்தை வியாபிக்குங்காலத்தில் ஈசானதத்துவமாகிய சுரோத்திரேந்திரிய விருத்தியிற் பிரதிபலித்த தனது சைதந்நியத்தால், வியாபகமுடைய பிரமாண்டத்தில் இடைவிடாத்தன்மையாய் விளங்குகின்ற ஆகாயம் சத்த குணமுடையதாகையால் ஆகாயமிருக்குமிடமெல்லாம் சத்தமிருக்கவேண்டுமாகையாற் சத்தத்தைத் தவிர ஆகாயம் வேறில்லையென நிருணயித்து, அவ்வித பிரமாண்டத்தில் உள்ளும்வெளியும் வியாபித்திருக்கின்றபடி சத்தத்தை அநுசந்தானித்து, அவ்வித பூரணநாதத்தைச் சுரோத்திரேந்திரிய விருத்தியால் வியாபித்து, அவ்வித சத்தத்தை ஆகாய நிஷ்டகாரிய சாந்தியதீதகலையாகவும் அவ்வித சுரோத்திரேந்திரிய விருத்தியை ஈசானதத்துவ நிஷ்டகாரணசாந்தியதீத கலையாகவும், அவ்வாறு இரண்டு விதமாகத்தோற்றிக் காரியகாரணமாய் விளங்கிய சாந்தியதீதசக்தியைத் தவிர சத்தமும் சத்தத்தை விளங்குவிக்கின்ற விருத்தியும் வேறில்லையெனத்தெளிந்து, அவ்வித சக்தியும் சக்தனான நம்மைத்தவிர வேறில்லையென அநுபவிக்க, ஈசானதத்துவமும் அதின் சக்தியான சாந்தியதீத கலையும் நம்மைத்தவிர வேறில்லை

யென அநுபவத்திற்கு வரும்.

அப்படியே தற்புருஷ தத்துவமாகிய தொக்கிந்திரியமும் சாந்திகலையும் சகல பிரமாண்டங்களிலும் உள்ளும் வெளியும் வியாபித்த ஆகாயத்தில் உள்ளடங்கி விளங்கிய ஸ்பரிச குண முடைய வாயு தத்துவத்தை ஸ்பரிச குணமாத்திரமாக அறிந்து அவ்வித வியாபக ஸ்பரிசத்தை உள்ளபடி, அநுசந்தான விசேஷத்தால் அநுசந்தானித்து, தன் தேகத்தில் ஸ்பரிச குணத்தைத் தொக்கிந்திரியம் வியாபித்தறிவதுபோல, நியாபித்த வியாபகமுடைய ஸ்பரிச குணத்தைத், தனது தொக்கிந்திரியத்தால் வியாபித்தறிய, வாயுவில் ஸ்பரிச குணமாய் விளங்கிய காரியரூப சாந்திகலையும் தொக்கிந்திரிய விருத்தி ரூபமாய் விளங்கித் தற்புருடத்தின் காரணரூப சாந்திகலையும் வியாபகமாய் அநுபவிக்க, அவ்வித சக்தியும் சக்தனுன நம்மைத்தவிர வேறில்லையென அநுபவத்திற்கு வரும்.

அப்படியே அகோரதத்துவமான நேத்திரேந்திரியத்தால் பிரமாண்டத்தில் வியாபகத் தன்மையுடைய வாயு தத்துவத்தினுள்ளடங்கிய அக்கினி தத்துவத்தை ரூபகுணமாக ஆலோசித்து, அவ்வித ரூபத்தைத் தவிர அக்கினி வேறில்லையென அறிந்து, அவ்வித ரூபத்தைத் தகுந்தபடி வியாபகமாய் அநுசந்தானித்து, வியாபித்தறிய அவ்வித இந்திரிய விருத்தியில் விளங்கிய அகண்ட ரூபத்தைக் காரியரூப வித்தியாகலையெனவும், அதை விளங்குவிக்கின்ற இந்திரிய விருத்தியை அகோரதத்துவத்தின் காரணவித்தியாகலை யெனவும் அறிந்து, அவ்வித இரண்டு சக்தியும் சக்தனுகிய நம்மைத்தவிர வேறில்லையென அநுபவத்திற்கு வரும்.

அப்படியே வாமதேவதத்துவமான ரசனேந்திரியத்தால் பிரமாண்டத்தை, உள்ளும் வெளியும் வியாபித்த அக்கினி

தத்துவத்திலுள்ளடங்கி விளங்கிய அப்பு தத்துவத்தை, ரச குணமாக நிருணயித்து அவ்வித ரசத்தை, எங்கும் நிறைவு டையதாய் அநுசந்தானித்து, அவ்வித பூரணமாய் விளங்கிய ரசத்தை வியாபித்தறிய அவ்வித இந்திரிய விருத்தியில் விள ங்கிய இடைவிடா நிறைவுடைய ரசகுணத்தைக் காரியரூப பிரதிஷ்டாகலையெனவும், அதை விளங்குவியாநின்ற இந்திரி ய விருத்தியை வாமதேவத்தின் காரணரூப பிரதிஷ்டாகலை யெனவுந் தெளிந்து, அவ்வித இரண்டு சக்தியும் சக்தனை தன்னைத்தவிர வேறில்லையென அநுபவத்திற்கு வரும்.

அப்படியே சத்யோஜாதமான ஆக்கிராணேந்திரியத்தால் ஜகத்தை வியாபித்து விளங்கிய ஜலதத்துவத்தில், உள்ளடங்கி விளங்குகின்றதான பிருதுவி தத்துவத்தைக், கந்தத்தைத்த விர வேறில்லையென நிருணயித்து, அவ்வித கந்தத்தை அநு சந்தான விசேஷத்தால் வியாபகமாய் அநுசந்தானித்து, அவ் வித வியாபக கந்தத்தை வியாபித்தறிய அவ்வித இந்திரிய விருத்தியில் விளங்கிய கந்தகுணத்தைக் காரியரூப நிவிர்த்தி கலையெனவும், அதை விளங்கு விக்கின்ற இந்திரிய விருத்தி யை சத்யோஜாதத்தின் காரணரூப நிவிர்த்திகலையெனவும், அ றிந்து அவ்வித இருகலையாய் விளங்கிய சக்தியும் சக்தனை தன்னைத் தவிர வேறில்லையென அநுபவத்திற்கு வரும்.

இனித் தனது தூலசரீர முதல் சகல தூலசரீரத்தோடு ங்கூடிப் பாஞ்ச பௌதிக பஞ்சபூதங்களாய் விளங்கிய சகல ஜகமும், பஞ்சேந்திரியங்களாய் விளங்கிய ஈசானுதி தத்துவ ங்களைத்தவிர வேறில்லையென்று அவ்வித பஞ்ச தத்துவங்க ளாய் விளங்கிய பஞ்சேந்திரிய விருத்திகளான பஞ்சகலைக ளென்ன, அவ்வித கலைகளில் சக்தனாய் விளங்கிய ஐந்து பே தமுடைய சக்தனென்ன, இவற்றின் ஐக்கிய விவரமாவது.

கந்தகுணமான பிருதுவிரூபமானதாய், அப்பிருதுவி

ஜலத்தினிடமாய் விளங்குவதால், அவ்வித ஜலம் ரசரூபமான தால், அவ்வித ரசத்தைத்தவிர கந்தமும் வியாப்பியமானதா ல், இல்லாததாய்க்கொண்டு ரசத்திலடங்கிட விளங்கும், அ வ்வித கந்தத்தை வியாபித்த காரணநிவிர்த்தி கலையும், அதின் சக்தனன சத்யோஜாதமென்ற ஆக்கிராணேந்திரிய சைதந்நி யமும், ரசத்தோடுங்கூட வாமதேவதத்துவமான ரசனேந்திரி யத்தின் விருத்தியாங் காரணபிரதிஷ்டாகலையையுடைய சக்த னும் இந்திரிய சைதந்நியத்தில் அடங்கி நிற்கும்

அப்படியே காரண சாந்தியாதீதகலைவரையும் அடங்கிட் விளங்கும், இந்திரிய விருத்திகளாங் கலாபேதங்களில்லாததா ய்க்கொண்டு ஜகமும் முக்காலத்திலும் இல்லாததாகவே ஆகி விடும். இவ்வித இந்திரியரூப பஞ்சகாரணகலைகளும், சப் தாதிரூப பஞ்சகாரியகலைகளும், ஜகத்தோடுங்கூட இல்லாவி டில் அந்தக்கரணமும் மனம் புத்தி சித்தம் அகங்காரம் இந் த நான்குக்கும் இந்திரியங்களின் இடமாக விளங்கிய பஞ்ச கலைகளைத்தவிர தங்களுக்கு வேறு வல்லமைகள் இல்லாததி னால்சக்தியற்று அவைகளும் இல்லாததுகளாகவேஆகிவிடும்.

மனம் புத்தி சித்தம் அகங்காரமாகிய நான்கும் இல்லா விடில், அந்தக்கரணம் வியாபார ஈனமாய்க்கொண்டு இல்லா ததாய் நசித்திடும்; நசிக்கவே அபார கருணாசாகரமாகிய தி யானத்தில் அநுபவிக்கப்பட்ட பஞ்சமுகமுடைய பரமசிவ மும், கருணையால் அகண்டசச்சிதானந்த கனமான கூடஸ் தஞான மாத்திரமாய் விளங்கி, தியாதாவைத்தவிர வேறில்லா ததாகவே அநுபவிக்கப்படும்.

பின்பு அதிஷ்டான சச்சிதானந்த ஞானமாத்திரமாய் வி ளங்கிய பரமசிவமாகியதான் விழிக்குங்காலத்தில், முன் உபா சன காலத்திற்கண்ட ஜகம், காரியரூப பஞ்சகலை, காரண

ரூப பஞ்சகலை, அவைகளின் ஐக்கியம் ஐக்கியத்தால் மனோ புத்தி சித்தாகங்காரம் அந்தக்கரணம் இவற்றின் இல்லாமை சகுண தியானகாலத்திலும் இப்பொழுதும் அவைகளின் விளங்குதல், தியானத்தில் சகுணமாய் விளங்கிய பஞ்சமுகப் பரமசிவம், அனைத்தும் அதிஷ்டான ஞானரூபகூடஸ்தவியாபகப்பரமசிவமாம் தன்னைத்தவிர வேறுகாணப்படாததினால், தன்னைத்தவிர வேறில்லையென அநுபவித்து, பெருங்கருணைக்கடலாகிய பரமசிவத்தின் காருண்ணியத்தை பரமாச்சரியத்தோடும் ஸ்துதிக்க அப்படியே நித்தியானந்தத் திருப்தர்களாய் ஆகின்றார்கள்.

முற்றிற்று



பதினான்காவது

## தியானநுபவ மனாந்த பிரகரணம்.

தனதுடலை இரத்தமாங்கிசாதி இல்லாத சருவாவயவங்களோடுங் கூடிய தேகாகார விருத்தி மாத்திரமாகச் சுத்திசெய்துகொண்டு, அவ்வித விருத்தி மாத்திரமாயுள்ள தேகத்தின் இருதயத்தில் எட்டிதழுடைய இரத்தனமய கமலத்தைத் தியானித்து, அதின் மத்தியில் அநேக கோடி சூரியப்பிரகாசமாயுள்ள அபார கருணாசாகரனையும் நீலகண்டனையும் சந்திரசூடனையும் உமையொருபாகனையும் கங்காதரனையும் விளங்குகின்ற நடராசமூர்த்தியை, சத்திய சங்கற்பத்தால் தியானித்து, சோடசோபசாரஞ்செய்து, அவனை சருவஞ்ஞனாகவும் சருவேசனாகவும் சருவ காரணனாகவும் சச்சிதானந்தகனனாகவும் துதிசெய்து, அக்காலத்தில் ஆனந்த பாஷ்பாதியால் மனமுருகி, சுவாநுபவ விசேஷத்தால் விருத்திமாத்திரமாய் தன்னுட

லைத்தவிர மற்றுள்ள சகல பிரமாண்டத்தையும் அதனுள்ளடங்கிய வஸ்துக்களனைத்தையும் பஞ்சபூதாம்சங்களையும் பிரித்து இல்லாததுகளாகச் செய்து, சுத்தஸ்படிக சங்காசமாய் விளங்கிய விருத்திரூபமான வஸ்துக்களனைத்தோடுங் கூடிய பிரமாண்டத்திற் பிரதிபிம்பித்து விளங்கிய நடராசமூர்த்தியை எல்லாவிடத்திலும் தன்னிடத்திற் போல எங்குமுள்ளவனாக அறிந்து, அவனது பிரகாசத்தினாலே சகலங்களும் பிரகாசிக்கின்றதாகவும், தான்முதலிய சகலங்களுக்கும் நானென்றதின் பொருள் அவனெனவும் அவனைத்தவிர வேறில்லையெனவும், அறிந்து அவனது திருநடனத்தில் அதிர்ந்திலங்கும் ஒளியால் தனது தேகமுதற் சகல ஜகமும் மறைபட்டு அப்பிரகாசத்தைத் தவிர வேறில்லாததாகவும் அநுபவிக்கப்பட, மின்னொளியிற் கண்ணொளி பறிபட்டு விளங்காதது போல மனம் அவ்வித பூரணப்பிரகாசத்தை எதிரிட்டுப்பார்க்குந் திறமையில்லாததாகக்கொண்டு அவ்வித பூரணப்பிரகாசத்தில் இல்லாததாகவே லயித்திடும்: மனம்லயித்திடில் திரிபுடியில்லாததினால் முன் உபாசனுகாலத்தில் பூரணப்பிரகாசத்தோடும் விளங்கிய அபார தயா சாகரனுயுள்ள நடராசமூர்த்தியும் தனது கருணையால் அவ்வித பக்தனைத்தவிர வேறில்லாதவனுய்க்கொண்டு அதிஷ்டான ஞானமாத்திரமாகவே விளங்கிடத்தெரிவான்.

பின்பு அவ்வித பக்தனுகிய தான் சமாதிசுகத்தினின்றும் விழிக்குங்காலத்தில் சகல ஜகங்களென்ன, அதுகளில் தனதுடலிற் போல விளங்கிய நடராசமூர்த்திகளென்ன, அதுகளின் பிரகாசத்தில் ஜகம் இல்லாததாக மறைபட்டுப் பிரகாசமாத்திரமாய் விளங்கிய பூரணப்பிரகாசமென்ன, அதில் இல்லாததாகி யொழிந்த மனோலயமென்ன, பின்பு இருக்கின்றது போலுதித்த மனமென்ன, அனைத்தும் சச்சிதானந்தகனமாய்ச் சமாதியநுபூதியில் விளங்கிய அதிஷ்டான ஞானரூப தீர்

க்குண நடராசன் தானாகவே காணப்படுவதால், தன்னைத்தவிர அனைத்தும் முக்காலத்திலும் வேறில்லவே யில்லையெனத்தான் மாத்திரமாய்ச் சேஷித்து இவ்வித பதவியை அருளிச்செய்த நடராசனது கருணையை என்னசொல்லுவோ மென மகிழ்ந்திட சம்புசங்கரவென மொழிதழுதழுத்திட அப்படியே அதிஷ்டான மாத்திரமாய் ஆனந்தக்கடலாடுதல் சித்தித்திடும்.

முற்றிற்று.



## பதினைந்தாவது
## விபூதி மகிமை யுரைத்த பிரகரணம்

விபூதியானது மகத்தெனவும் மத்திமமெனவும் லெகுவெனவும் மூவகைப்படும்: அவற்றில் மகத்தாவது அநேக கோடி பிரமாண்டமாய் விளங்கிய ஜீவேசபேதமுடைய இப்பிரபஞ்சைசுவரியம், எந்தச் சச்சிதானந்த சுபாவமான வஸ்துவின் தானான ஐசுவரியமகிமா விசேஷத்தால், முக்காலத்திலும் நிஷேதியாமல் நிஷேதித்ததாகச் சுயம் விளங்குகின்றதோ? அதுவேயாம்.

மத்திமமாவது முக்கியமெனவும் சாமானியமெனவும் இருவகைப்படும்: அவற்றில் முக்கியமாவது நாநாபேதமுடைய ஜடமான இப்பிரபஞ்சத்தை * ஊர்ணநாபிபோல தானே அபின்ன நிமித்தோபாதானனாய்க்கொண்டு சிருட்டித்து அதில் ஜீவரூபனாயும் அந்தரியாமிரூபனாயும் அநுப்பிரவேசித்து அவ்வித ஜீவசுபாவமான ஜகத்தை அஸ்வதந்திர ஐசுவரியமுடையதாய், அந்தரியாமி ஸ்வரூபமான ஸ்வதந்திரஐசு

* ஊர்ணநாபி-சிலந்திப்பூச்சி

வரியமுடைய தனது ஐசுவரியத்தால் மேவிச், சருவசாக்ஷி யாய்ச் சருவசம்பூரணமாய் விளங்கிய சவிசேஷப்பிரம சைதந்நியமேயாம். சாமானியமாவது பரதந்திரமான ஜாக்கிரசொப்பன சுழுத்தி இவ்வவஸ்தைகளில், அபிமானமுடைய சிவலசதந்நியத்தின் ஐசுவரியமேயாம்.

லெகுவாவது அதிஷ்டானமான பரமேஸ்வரனை அடைந்துய்யும் பொருட்டு சாதனமாக வேதங்களிற் கூறிய விபூதியே யாம்.

* விபூதி யென்றதின் பொருள்(விகெதா + பூதிகி) விபூதி. எவனது ஐசுவரியத்தை அபேக்ஷித்து மற்ற ஐசுவரியங்கள் ஐசுவரியங்களே யல்லவோ? அதுவெனப்படும் (விசேஷேண + பூதிகி) விபூதி. எவனது ஐசுவரியம் எல்லா ஐசுவரியங்களுக்கு மேலானதோ? அதுவெனப்படும்.

இப்பொருளுடைய விபூதியில் சாதனவிபூதி யென்பது சுருதிகள் சொல்லிய மந்திராதி சாதனங்களால் பசுவின் மலத்தை நீற்றி, அதில் நாசமில்லாத சுத்தத்தெளிவான நீற்றைப் பிரமபாவனையாற் பாவித்துத் தரித்திட, சீவன் மோக்ஷமுடையவனுகின்றானெனக்கூறியது. இவ்விபூதி ஸ்தூலம் சூக்ஷமம் காரணம் என்று மூன்று பேதமுடையதாகும்; அவற்றில் ஸ்தூலமாவது பாசுபத விரதம் சிரணவிரதம் சிவவிரதம் விரதம் தவசு, என்று இவ்விதமான அநேக பேதங்களாகப் பிரதி பாதிக்கப்பட்டிருக்கின்றது.

சாதன திரவியத்தின் வாலாறு வேதத்திற் சொல்லிய தெவ்வாறெனில்; கிரியையிற் சொன்னபடி குண்டமண்டபாதி நிருணயம் பண்ணி, அதில் அக்கினிப் பிரதிஷ்டாபனஞ்

* விபூதியெனினும் ஐசுவரியமெனினும் திரவியமெனினும் அமையும்.

செய்து, அதில் எங்கும் இடைவிடாத்தன்மையுடைய பரமசி வந்தை மந்திராதிகளினுற் பாவித்து, அதில் தத்துவ ஓமங்கள் செய்து, அதிற் கோமய பிண்டங்களைச் சீவ பிண்டங்களாக மந்திராதிகளாற் பாவித்து ஓமஞ்செய்ய, அவ்வித சீவபிண்ட த்துக்கும் முன் அக்கினியிற் பாவித்த பரமசிவத்துக்கும் மந் திர விசேஷங்களால் ஐங்கியத்தைப் பரமகுருக்கள் முகமாக விசாரித்து, அவ்விபூதியைச் சச்சிதானந்தகனமாம் பரமசிவ த்துக்கு வேறில்லாததாக வெண்ணி உத்தூளன திரிபுண்டர ங்களாகத் தரித்திட, சகல பாவங்களும் நீங்கி மேலான விபூ தியின் பொருளையடையத்தகுஞ் சித்த சுத்தியுடையவனுய்ப் பவிப்பான் என்பது தான்.

கோமயமென்பது பசுவின் மலமானதால், பசுவென்று ல் உலகத்தில் கோவினிடத்திற் பிரசித்திபோல சீவனுங்கு றிக்கப்படுவதால், சீவனது மலம் அஞ்ஞானமாகையால், அ வ்வித அஞ்ஞானத்தைச் சுட்டிட ஞானசுவரியந்தானுகப் பிர காசிப்பதால், அவ்விதப்பொருளைத் தெரிவிக்கும் பொருட்டு ஸ்தூலமாகக்கூறியது; அவ்வித ஓமத்தின் மந்திரார்த்தம் சரு வசம்பூரணனுக விளங்கிய சவிசேஷப்பிரம சைதந்நியமே மு க்கியமெனப்படும்.

இதின் விவரம் பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாயம், மாங்கிசம் உதிரம் மேதஸ் மச்சை அஸ்தி, சுரோத்திரம் து வக்கு சட்சு சிங்ஙவை ஆக்கிராணம், வாக்கு பாதம் பாணி பாயுரு உபஸ்தம், ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி, விஸ்வன் தைஜஸன் பிராஞ்ஞன், ஆணவம் மாயிகம் கார்மிகம், இவ் வித உபாதிகளையுடைய பசுவான என்மலத்தை நீற்றுவித்து, ஸ்வப்பிரகாசபதியாம் பரமசிவ விளங்குதலைத் தவிர வேறில் லாததாகக்கொண்டு விளங்கும்படி அருள்செய்ய வேண்டுமெ ன்று, ஈசனை வேகவிடப்படி ஓம விசேஷத்தால் வணங்கி

வணங்குவோன் பக்திக்குத்தக்கதா் ஈச்சன் தனது கருணையா ல் அப்படியே அருள் செய்கின்றான்.

இவ்வித விபூதி தாரணவிதி யெவ்வாறெனில்? சச்சிதா னந்த சுபாவமாய் எங்கும் இடைவிடா நிறைவுடைய சருவ தயாபரனை பரமசிவமே விபூதியிற் பாவிக்கப்பட்டிருப்பதால் அதிற் பரமசிவத்தை அபேதபுத்திசெய்து இவ்விதவிபூதியே பஞ்சபூதங்களும் பஞ்சவிஷயங்களும் தசேந்திரியங்களும் சரு வசீவர்களும் சருவமுமெனவும், பரமசிவமாம் விபூதியைத் தவிரச் சருவமும் வேறில்லையெனவும் பாவித்து, அப்பரமசி வம் அகண்டமானதால் நகமுதற் சிரசுவரையிலும் வியாபித் திருப்பதாகப்பாவித்துப், பாவிக்கப்பட்ட விபூதியை உத்தூ ளனஞ்செய்து, அகண்ட பரமசிவத்தில் முக்குணம் மும்மூர் த்தி முச்சிவன் மும்மலம் மூன்று சக்தி மூன்றக்கினி மூன் றொளி மூவுலகம் முத்தொழில் எல்லாந்திரிபுடியுடையதாய் மூ ன்று பேதத்தன்மையாய்த் தோற்றி விளங்குவதால் அவ்வித மான அனைத்தும் ஆதேயமெனவும், முற்கூறிய அகண்ட பரமசிவமே ஆதாரமெனவும், முடிவில் எல்லாம் பரமசிவமா ம் ஞானக்கினியால் நீற்றப்பட்டுப்போவதாலும் அவ்வித நீற் றினால் உத்தூளனத்தின் பேரில் திரிபுண்டரத்தை மேற்சொ ன்ன பாவனைப்பிரகாரம் பாவித்து பக்தியோடுந் தரித்திடவே ண்டும். இது பதினான்கு பேதமுடையதாகலாம் அவைகள் ஜாதி சமயங்களில் உபகாரம்.

மத்திமத்தில் சாமானிய திரவியோற்பத்தியானது சாமா னிய சாமானியமெனவும் சாமானிய முக்கியமெனவும் இரண் டு பிரிவுடையதாகும். அவற்றில் சாமானிய சாமானியமா வது தொண்ணூற்றாறு அங்குலமுடைய சரீரத்தில் மத்தியபா கமாகியமூலாதாரமுதற் சகஸ்திராரம் வரை ஆறாதாரங்களும்

குதத்துக்கு மேல் சிரசுவரை விளங்குவதால், அவ்வித ஆ
தாரங்கள் இடை பிங்கலை இவ்விரண்டிற்கும் மத்தியான சுழி
முனைநாடியைப் பற்றி விளங்குவதால், அவ்வாதாரங்களில்
பிரம விஷ்ணு ருத்திர ஈஸ்வர சதாசிவ விந்து நாதம் பரா சிவ
ம் வரை ஒன்பது. தத்துவம், சூக்ஷ்மாதாரம் மூன்றோடுங்
கூடிய சடாதாரங்களுக்கு, அதிஷ்டான தேவதைகளாய்
விளங்குவதால் இவ்வித தேவதைகளைக் குருமுகமாக மேற்
சொன்ன ஆதாரங்களில் அடையோகசகிததியாக மார்க்கமா
யாவது, கேவலதியாக மார்க்கமாயாவது, உள்ளபடி அறிந்
தநுபவித்து, அத்தேவதைகளையுடைய ஒவ்வொரு தத்துவ
த்தையும் மேலான ஒவ்வொரு தத்துவத்தில் ஒடுங்குவித்து
மூலாதாரத்தினின்றும் மூலாக்கினியை உத்தீபனஞ்செய்து,
அவ்வித அக்கினியினால் பஞ்சபூதங்களையுந் தகிப்பித்துப், பி
ன்பு சொரூபமான பரமசிவமாம் அமுதத்தால் சகஸ்திராரத்
தினின்றுஞ் சிரவிப்பித்து, பஞ்சகோச பஸ்மங்களை ஆப்பிலா
வனஞ்செய்து, அதினின்று ஸ்தூல சரீரோற்பத்திசெய்து
அதிற் சடாதாரம் பொருந்திய சூக்ஷ்ம சரீரத்தோடும் அநுப்
பிரவேசித்து, அச்சிவத்தினின்றுஞ் சீவகலையைப்பிரித்து, ஸ்
தூலசரீரத்தில் வியாபகஞ்செய்வித்து, அவ்வித சீவனை தன
து ஆணவம் மாயிகம் கார்மிகம் என்ற பிரமக்கிரந்தி விஷ்ணு
க்கிரந்தி ருத்திரக்கிரந்தி இவை முதலான சிவதிரோதாயக சக்
திகளை அதிசூக்ஷ்மமாய் அநேககோடி சூரியப்பிரகாசமாய் வி
ளங்கிய குண்டலி சக்தியான சிதகலையாற் பேதித்து, அத்தி
ரோதான நீங்கிய சீவனைச் சகஸ்திராரத்திற் பரமசிவத்தில்
ஐக்கியப்படுத்தி, அச்சக்தியும் அதில் ஐக்கியப்படத் தேகவா
சனை நீங்கித் திரிபுடியற்றுச் சமரசானந்தகனமாய் அநுபவத்
துக்கு வரும்; அவ்வித சிவானந்த விபூதியால் சீவனை தான்
சீவோபாதிநீங்கிச் சிவோபாதியாக விளங்கத்தெரிவதேயாம்.
இதுவேதத்திற்சொல்லியபடியோகசம்பிரதாயத்தைச் சொல்லியது.

சாமான்ய முக்கிய திரவியோற்பத்தியாவது இருபத்து நான்கு தத்துவமுடைய ஸ்தூலதேகத்தைப் பதினேழு தத்துவமுடைய சூக்ஷ்ம தேகத்தில் அடக்கஞ்செய்து, அவ்வித சூக்ஷ்ம தேகத்தை அவித்தையாஞ் சூநியாகார காரணசரீரத்தில் அடக்கஞ்செய்து, அக்காரண சரீரத்தை விட இரண்டு சரீரமும் வேறில்லவே யில்லையென நிஷேதித்து, அக்காரண சரீரமான அவித்தையே ஜீவனென பசுவின் மலமானதால், அக்கோமயத்தைச் சுழுத்தி சாக்ஷியாந் துரியசிவ சைதந்நியாக்கினியால் தகிப்பித்து, அவ்வித தக்தமாம் அவித்தையின் சாரமே சாக்ஷிபோதமாய் விளங்குவதால் அவ்வித சாக்ஷிபோதமாம் விபூதியால் தன்னை விரசனாகவும் விமிருத்நியுவாகவும் விசோகனாகவும் விபாவனாகவும் அறிந்து, பின்பு சரீரத்திரயங்களையுஞ் சாக்ஷிபோத சக்தியால் வியாபித்து, சாக்ஷிபோதமான தன்னிடத்தில் பழுதையிற் சர்ப்பம்போலக் கற்பிதமாயறிந்து, பழுதையைத் தவிர சர்ப்பம் வேறில்லை யென்றறிந்து தெளிவது போல் சாட்சியான சித்தாந்தன்னைத்தவிர சரீரத்திரயம் வேறில்லை யென்ற அநுபவோற்பத்தியேயாம்.

இனி முக்கிய திரவியோற்பத்தியானது முக்கிய சாமான்யமெனவும் முக்கிய முக்கிய மெனவும் இரண்டு பிரிவுடையதாகும்: அவற்றில் முக்கிய சாமான்யமாவது முற்கூறிய சாக்ஷியாந் துரியசைதந்நியத்தைச் சுருதிகள் சொல்லியபடி பரமசிவமாக அறிந்து, அப்பரம சிவத்தில் சகல ஜகங்களும் அம்புதியில் அலை நுரைகள்போலத் தோற்றி விளங்குவதால், அவ்வித சருவ பிரபஞ்சங்களையும் அந்தந்த நாமரூபங்களோடுங்கூட குருபதேசத்தாற் கிடைத்த அநுசந்தான விசேஷத்தால் விஷயீகரித்து, அவ்வித சகலத்திலும் பஞ்ச பூதாம்சங்களை இல்லாதவைகளாகப் பிரித்திடில் தந்தபடம்போல சகலங்களும் தத்தம் நாமரூபமுடைய விருத்திகள் மாத்திரமாய் விளங்கத்தெரியும்: அவ்வித பின்ன பின்ன நானாநாம ரூப

முடைய் விருத்திமாத்திரமாய் விளங்கிய பிரபஞ்சத்தில் அந்த விருத்திகளில் பஞ்ச பூதோபாதி நீங்கிடினும், அவற்றிற் பிரதி பிம்பித்த சைதந்நியம் நாநாபேதங்கள் போலவே விளங்கத்தெரியும்: அவ்வித பிரபஞ்ச சோபாதிக சமஷ்டி பிரமாண்ட விருத்தியினுள்ளடங்கிய நாநா வுபாதியையுடைய சிவ சைதந்நியங்களை வியாபித்து, உள்ளும் வெளியும் ஏகாகாரமாய்ப் பூரணமாய் விளங்கிய சருவ சாக்ஷியானசோபாதிக பிரம சைதந்நியமாகின்ற நம்மிடத்திற் தோற்றி விளங்கிய இப்பிரபஞ்சம் நம்மைத் தவிர வேறில்லையெனத் தெளிந்து, நாமே சகலமுமாய் விளங்குகின்றோம் பின்ன பின்ன திரிபுடியுடைய இச்சிவ சைதந்நியங்களாகின்ற ஆதேய வஸ்துக்களுக்கு, நாமே ஆதாரமென்று எல்லாவற்றிலும் அகண்டாகார விருத்தி சைதந்நியமாக விளங்கிய அநுபூதியின் உற்பத்தியேயாம்.

முக்கிய முக்கியமாவது முற்கூறிய அகண்டாகார சோபாதிக பிரம சைதந்நியத்தில் நாநாகார ஜகத்பேதம் வரக்காரணமில்லாததினால், ஆகார ஆதேய விவகாரம் விருத்தியைப் பற்றியதேயன்றி, அறிவைப் பற்றியதல்ல, அவ்வித ஞானசுபாவமான பூரணதிருக்கில் திரிசியமான பிரபஞ்சவிருத்தி உற்பவிக்க வல்லமை யுடையதாகாது; ஆகையால் அப்பூரண சைதந்நியமாம் பிரமத்தைத் தவிரப் பிரபஞ்சம் முக்காலத்திலும் இல்லவே யில்லையெனப் பிரபஞ்ச சூநியாகாரமாயுள்ள அகண்டாகார ஞானநுபவ வுற்பத்தியேயாம்.

மஹா விபூதியாவது சீவேச பேதங்களுடைய பிரவஞ்சத்தின் ஆரோ பாபவாதங்களை எதிரிடாமல் போதவிருத்தியின் உதவியின்றிச் சுயஞ்சொரூபமாக யாவும் அநுபவியாமலநுபவிக்கின்றதெனப்படும். இவ்வித மஹாபஸ்மாநுபூதியின் பொருட்டு மேற்கூறிய சாதனங்கள் அதிகாரியின் பேதத்தால் அநுக்கிரமம் அங்கீகரிக்கப்படும்.

இவ்வித நிர்க்குண மஹாவிபூதியின் பொருட்டு கேவலம் நீறாகிய பாகிய விபூதியால் என்ன பிரயோசனம்? ஏழையாகிய சிலர் கிரகங்கள் ஜெண்டாக்களே இல்லாதவைகளாயும், வர்த்தகரின் கிரகங்கள் வெவ்வேறு விதமான ஜெண்டாக்கள் கட்டப்பட்ட வைகளாயுமிருக்க, மஹாராஜாவின் அரண்மனை அவன் பெருமைக்குத்தக்கபடி எப்படி மேலான ஜெண்டாவால் அலங்கரிக்கப் பட்டிருக்கின்றதோ, அப்படியே சிலசமயங்கள் புண்டரமே யில்லாதவைகளாயும், சிலசமயங்கள் வெவ்வேறு விதமான புண்டரமுள்ளவைகளாயும், காணப்பட்டிருக்க, இச்சமயம் அதின் மகத்துவத்துக்குத் தக்கபடி விபூதி தாரணத்தாற் சிறந்து விளங்குகின்றது.

ஆனால் ஜெண்டாவில் அரண்மனையைக் காண்பிக்குந் தன்மையிருப்பதுபோல இவ்விபூதியில் என்ன யிருக்கின்றதெனில்? வீடடையும்படி பிரபஞ்சாபிமானத்தை நீக்கும் வல்லமையிருக்கின்றது; எவ்வாறெனில், வீடென்பது பிரபஞ்சாதீதப்பொருள், அது பிரபஞ்சாபிமானிகளுக்குக் கிட்டாது, பிரபஞ்சாபிமானம் நாதனது பிரசாதமின்றி நீங்காது, நாதனது பிரசாதம் வெகு சமயங்களில் அதிகாரிக்குத் தகுந்தபடி வெகு பேதமாகக் காணப்படுகின்றன, வீடடைய வேண்டிய அதிகாரியின் பொருட்டுப் பிரசாதம் எச்சமயத்தி லிருக்கின்றதென் றாலோசிக்கில், இச்சமயத்திலேயே யிருக்கின்றதென்று யாவருந் தெரிந்து, வீடடைவதற்கு இந்த விபூதி உன்னதமான ஜெண்டாவா யிருக்கின்றதென்று வேதங்களில் அருளிச்செய்யப்பட்டிருக்கின்றது.

இதின் றாற்பரியம் சகல பிரபஞ்சங்களும் முடிவினீறத் தக்கவையாயும், எல்லாம் நீறியும் தான் நீறாததாயும், சுத்தமாயும், எல்லாவற்றின் முடிவான வீரியமெனவும், அவ்வீரியமாய் நின்ற பரமசிவம் ஸ்வப்பிரகாச ஜகத்காரணமாய்க்கொ

ண்டு எவற்றினுஞ் சுபாவமாய் விளங்குவதால், அப்பரமசிவத்தைத் தவிர ஜகம் வேறில்லாததாகச் சுருதி யுக்தி யநுபவங்களாற் காணப்படுவதால், அவ்வித அநுபவமாம் வீடு பசுவாஞ் சீவனது அஞ்ஞானமா மலம்நீறியே அடையத் தக்கதாயிருப்பதால் அவ்வித ஜகத்துக்கு அழியுந் தன்மையென்ன, வஸ்துவுக்கு அழியாத்தன்மை யென்ன, சுத்தத்தன்மை யென்ன, பசுவின் மலந் தகிக்கப்படச் சித்தித்திடுதலென்ன, இவ்வளவும் விபூதியைக் கையிலெடுத்த மாத்திரத்தில், விவேகிகளுக்குத் தெரியவரலாம்; ஆகையால் அதற்கவ்வளவு மகிமை கூறியது.

முற்றிற்று



## பதினறாவது

## ருத்திராக்ஷ மகிமை யுரைத்த பிரகரணம்

ருத்திராக்ஷமென்றதின் பொருள். (ருக்கை) சம்சார துக்கத்தை (திரவிப்பிப்பதால்) நீக்குவிப்பதால் (ருத்திரம்) அதுவாயுள்ள (அக்ஷம்) கண் என்னப்படும். இவ்வித ருத்திராக்ஷம் சித்தமென்றும் சாத்தியமென்றும் சாதனமென்றும் மூன்று வகுப்புடையதாகும்.

அவற்றுள் சித்தமாவது முக்காலத்திலும் சீவேசபேத முதலிய இரண்டாம் வஸ்துவை எதிரிடாமல், ஸ்வயமானந்த வடிவாய் விளங்கிய அறிவெனப்படும்.

சாத்தியமாவது பிரதீதியில் ஜனனமரணாதியையுடைய துக்கசாகரத்தில் மூழ்குகின்றவனாய்ச் சீவன் தோற்றப்பட, அவ்வித சீவனை சுருதி யுக்தி அநுபவங்களாற் சோதிக்க, ஜாக்கிரம் சொப்பனத்திலும் சொப்பனம் சுழுத்தியிலுமாய்

அடங்கிநின்ற விடத்தில், சிவன் எவ்வண்ண மிருந்தானெனத் தூங்கி விழித்தபின் ஆலோசிக்க, நான் ஒன்றுந்தெரியாமற் சுகமாய்த் தூங்கினேனென்று காணப்படுவதால், ஒன்றுந்தெ ரியாமை மௌட்டிகமானதால், மௌட்டிகமே சகலருக்குந் துக்கத்தை உண்டுபண்ணுவதால், அவ்வித அஞ்ஞானந்தா ல் நேரிட்ட ஆன்ம திரோதான சுபாவமுடைய தெரியாமை யென்னும் அஞ்ஞான காரியமான சம்சார துக்கசாகரத்தில் மூழ்குகின்ற சிவனுக்கு § ஒன்றுந்தெரியாமற் றூங்கினேனெ ன்ற பிரதீதியோடு சுகமாயென்றொரு பிரதீதியுந் தோற்றுவ தால் அவ்வித ஆனந்தானுபவம் ஜடமாயின் விளங்கத்தகாத தினால் அவ்வநுபவத்தைச் சித்தெனக்கூறலாம்; இருந்ததே விளங்கவேண்டு மாகையால் அவ்வநுபவத்தைச் சத்தென் றுங் கூறலாம். இவ்வஸ்து சச்சிதானந்தமாயிடினும் சுழுத்தி யில் விருத்தியில்லாததினால் விழித்தபின், விருத்தியிடமாய் ஆனந்தசொரூபம் அநுபவத்துக்கு வருவதால், ஒருபொருளை யுமுன்னிலை கொள்ளாமல்விளங்கிய அறிவு சிவனுக்கு வாசனை யிலில்லாததினால், சுட்டிய அறிவையே அறிவெனக் கொண் டிருப்பதினால், விழிக்குங்காலத்தில் ஜகசூநியாகார விருத்தி யிற் பிரதிபிம்பித்த சைதந்நியம், அவ்விருத்தியின் வாசனா ரூபமான ஏகதேசாம்சத்திற் பிரதிபிம்பித்த சிதாபாசனுக்கு ஒன்றுந் தெரியாமையாகிய அஞ்ஞானமாக அபிப்பிராயப்பட அவ்வித அபிப்பிராயமே, ஒரு விருத்தியிற் பிரதிபிம்பித்த கூடஸ்த சைதந்நியத்தை, விருத்தியில் உள்ளடங்கிய வாச னையால் * இருவகையாகக் காண்பிக்கக்காரணமாய்நின்ற, அ ஞ்ஞானமாக விளங்க, இவ்வித சிதாபாசனுக்கு அஞ்ஞானத்

§ ஒன்றுந்தெரியாமலென்றது—சுகானுபூதிதவிர மற்ற யாதொ ரு பிரதீதியுமில்லையென்று குறிப்பதாம்.

* இருவகையென்பது—வாசனையை உள்ளடக்கிய விருத்தியில் விருத்திமாத்திரத்திற் பிரதிபிம்பித்த சைதந்நியத்தை அத்தரியாமி

தால் நேரிட்ட சம்சார துக்கநிவிர்த்தி கிடைக்கும்பொருட்டு ஒன்றுந்தெரியாமற் றூங்கினேனென்ற பிரதீதி பிராந்தியாற் றோற்றியது தானென நிஷேதிக்க வல்லமையுடைய சுகமாயென்ற ஆனந்தாநுபூதி அபாதீதமாய்க் கூடவேகாணப்படுவதால், அவ்வானந்தாநுபூதியால் அஞ்ஞானம் வரக்காரணமில்லையென நிஷேதித்திடில் அம்மறைவு நீங்கிடும்; அம்மறைவு நீங்கிடில் சுகமாத்திரஞ் சேஷிக்கும் ஜடமெல்லாம் அழிவுடையதாகையால், அவையெல்லாம் துக்கசுபாவமுடையதெனப்படும். அழிவில்லாமல் என்றுமொன்று போலுள்ள இயல்பான சித்தே ஆனந்தமெனப்படும்: அவ்விதசச்சிதானந்த சுபாவமாந் திருக்கநுபவத்தைத் தவிர, வேறொன்றுக்கும் சம்சார துக்கத்தை நிவிர்த்திக்கும் வல்லமை காணப்படாததினால், அத்திருக்கையே சாத்தியருத்திராக்ஷமெனக் கூறியதாம்.

சாதனமாவது அவ்வித ருத்திராக்ஷமான தன் சுபாவத்தை அடையவேண்டித் திரிபுர சங்காரகாலத்தில் ருத்திரனது ஞானாக்கினி சுபாவமான நேத்திரத்தினின்றும், ஆனந்தாமிர்த விந்து பூமியில்விழ, அதினின்றும் உண்டானதாகச் சாஸ்திரங்களிற் காணப்படுவதால் அவ்வித ருத்திராக்ஷமேயாம்.

இதின் தாற்பரியம் சகலமான சருவ ஜகங்களின் அவஸ்தாத்திரயங்களான முப்புரங்களையும் தானே சகுணரூபமாயாவது, மானிடச் சட்டைசாத்தியது போற்றோன்றிய குருவடிவமாயாவது, தன் சுபாவமான அருளாலாவது, சருவ

---

யெனவும்; அவ்விருத்தியில் அவ்விருத்திக்கு வேறில்லாததாகக்கொண்டு அதிலுள்ளடங்கிய சருவாகார பீஜநிராகாரமாகிய வாசனைமாத்திரத்திற் பிரதிபிம்பித்த சைதன்யத்தை [illegible] மெனவும் படுவது.

சாக்ஷியான அகண்டாகார திருக்கநுபவத்தாலே சம்சார து க்கநிவிர்த்தி செய்விப்பதாய்க் காணப்படுவதால், அவ்வித அநுபூதியின் பொருட்டு ஒப்பிய ஈசன் குரு இவர்களின் திருவருளார் திருஷ்டியே சாதனமாய்க் காணப்படுவதால், அவ்வித சித்த சாத்தியசாதனமென்ற ருத்திராக்ஷத்தை முமூட்சுக்களுக்கு அடிக்கடி ஞாபகம்பண்ணும் வல்லமை இந்த ருத்திராக்ஷத்துக் கிருப்பதால், இவ்வித ருத்திராக்ஷம் திரிபுர சங்காரத்தின் பொருட்டே ருத்திரனது அக்ஷத்தினின்றும் உண்டானதாய்ப் பிரதி பாதிக்கப் பட்டிருப்பதாலும், சுருதிகளில் மிகுந்த பெருமை கூறப்பட்டிருப்பதாலும் இவ் ருத்திராக்ஷம் ஜடமாயினும், கெடிகாரம் எந்த அவசரத்திலும் நாழிகையை ஞாபகப்படுத்துவது போல இவ்ருத்திராக்ஷமும் தரிக்கப்பட்டதாய்க் கொண்டு உள்ளபடி விவேகமுடைய பக்தர்களுக்கு ஞாபகப்படுத்துவதால், அதைச் சாதன ருத்திராக்ஷமெனக் கூறியதாம்.

இன்னும் சாதன ருத்திராக்ஷம், ஆக்கினேயம் சௌரம் சாந்திரமென்று மூன்று பிரிவுடையதாகும் அவற்றில், ஆக்கினேயம் பத்துப்பேதமுடையது; சௌரம் பன்னிருபேதமுடையது; சாந்திரம் பதினாறு பேதமுடையது. இவற்றின் ஜாதி, பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரனென்று நான்கு ஜாதியுடையனவாம் இவற்றின் வண்ணம், சுக்கிலம் பிராமணவண்ணம், இரத்தம் க்ஷத்திரியவண்ணம், பீதம் வைசியவண்ணம், கிருஷ்ணம் சூத்திரவண்ணமாம். இவற்றின் முகம் ஒன்றுமுதல் பதினான்கு வரையினு முடையனவாம்: இவைகளுக்கு மந்திரங்களும் அதிஷ்டான தேவதைகளும் வெவ்வேறாகும். சருவத்திர அதிஷ்டான தேவதை பரமசிவமாம்: இவ்விதமாய் ருத்திராக்ஷத்தை மந்திராதிஷ்டானதேவதா பாவனையுடன் பாவித்து நித்தியமாய்த் தரித்திடில் எதார்த்த நிலைமையை உள்ளபடி யடையச் சித்த சுத்தியோடுந்

கூடிச் சிவப்பிரசாதத் துக்குரித்தாகி விடுவார்கள். இப்படி இருக்கவும் சில மந்தப்புத்தியாளர் இதெல்லாம் இந்துக்களது சாஸ்திரக் கட்டுப் பாட்டாற் கூறப்பட்டன, இவற்றால் என்ன பிரயோசனம் என்று ஆலோசிக்கின்றார்கள் அவ்வித ஆலோசனை செய்கின்றவர்கள் நாஸ்திகர்களாகில் உத்திரஞ் சொல்லவேண்டிய அகத்தியமில்லை: எம்மதத்திலாவது நம்பிக்கையுடையவர்களாகில் அவர்கள் பொருட்டு உத்திரம்.

சகல சமயங்களையும் தூஷிக்கின்ற சில அதிமேதாவிகள்கூட மதாந்திரங்களிற் சொல்லிய ஞாயிற்றுக்கிழமை முதலிய கட்டுப்பாடுகளை ஒப்பலாமாயின், இது மாத்திரம் என் ஒப்பத்தகாது? மேலும் இந்த ருத்திராக்ஷம் வஸ்துவின் ஞாபகத்தை உண்டுபண்ணுகின்ற நாமமுடையதாய்க் காணப்படுவதாலும் யாவும் வஸ்துவைத் தவிர வேறில்லாததினாலும் அப்படிக் கூறியதே யன்றி வேறு விதமாகக் கூறியதல்ல. மற்றச் சமயங்களின் கோட்பாடுகள் முடிவில் ஒருபொருளைத் தெரிவிக்க உண்மையாய் உபகாரப்படவில்லை; ஆகையால் எச்சமயத்தோர்களும் தத்தஞ் சமயங்களிற் சொல்லிய உபகாரமான சாதன நடத்தையைத் தள்ள வல்லமை யுடையவர்களல்ல: தள்ளிவிடில் ஒரு சமயத்திலும் அவர்களுக்கு விசுவாசத்தன்மை யில்லாமல் கெடுதலுடையவர்களாகவே பவிப்பார்கள்.

மேலும் சருவாவயவ சௌந்தரிய வதியான ஒரு சுமங்கிலி சருவாபரண முடையவளா யிருந்திடினும், திருமங்கிலியமென்னும் ஒரு ஆபரண மில்லாவிடில் அவளெப்படி அமங்கிலியெனப்படுவாளோ? அப்படியே இவ்வித மகிமைபொருந்திய ருத்திராக்ஷ தாரணமில்லாதவர்கள், சிவப்பிரசாதத்துக்கு உரியாகார்கள். அரசன் [illegible] யிருந்திடினும் [illegible] தரிக்கப்படாமல் இராச்சிய வல்லமை செலு

த்த எப்படி உபகாரப்படானோ? அப்படியே ருத்திராக்ஷ தாரண சிரத்தை யில்லாமற் சிவப் பிரசாதமடைய யாரும் உரியராகார்.

ஆனல் ருத்திராக்ஷத்துக்கு அவ்வளவு மகிமை சொல்வதற்கு பிரத்தியக்ஷப் பிரமாணம் ஏதாயினுமுண்டா? உண்டு இப்போதும் அநுபவத்திற் காணப்பட்டேவருகின்றது: உள்ளபடி ஸ்வயம் உற்பத்தியுடையதும் வேதத்திற்சொல்லிய இலக்ஷணத்தோடுங்கூடிப் பெருமை பொருந்தியதுமான ஏகமுக ருத்திராக்ஷத்தை அடியில்வைத்து, அதற்குமேல் எவ்வளவு ருத்திராக்ஷங்களை வைத்திடினும் அது அவ்வளவுக்கும் மேலாக வரக்காணப்படுவதால், அதனது மகிமையை எவர்களாற் கூறக்கூடும்.

அரசன் காணப்படாவிடினும் அவனது முகர் அவனது ஸ்திதியை வெளிப்படுத்துவதுபோல, ருத்திராக்ஷம் சிரத்தையுடன் தரிக்கப்பட்ட விவேகிகளுக்குப் பரமசிவத்தின் ஞாபகத்தை உண்டுபண்ணி உய்யும்படிக்கேசெய்யும்; ஆகையால் மேற்சொன்ன சித்தமுதல் சாதனம் வரையான ருத்திராக்ஷதாரணம், அதிகாரி பேதத்தால் சகலர்களுக்கும் அகத்தியம் ஒப்பவேண்டும். ருத்திராக்ஷ மில்லாத சிவபத்தி கண்ணில்லாத மன்னன் போலிருக்கும்.

முற்றிற்று



## பதினேழாவது

## பஞ்சாக்ஷரமகிமை யுரைத்த பிரகரணம்

பஞ்சாக்ஷரமானது சூக்ஷ்மம் மத்திமம் ஸ்தூலமென்று மூன்று வகுப்புடையதாம். கவது (பஞ்ச) ஷீல்தாரமாகிய

அட்சரம்) நாசரகிதப்பொருள். உவது (பஞ்ச) நாடோறும் பிரத்தியக்ஷ மிருத்துவாய் விளங்கிய சகலஜகத் ஞானரூப சுழுத்தியிற்கூட (அட்சரம்) அபாதீத சுபாவமுடைய நாசரகித ஆன்மப்பொருள் நவது (பஞ்ச) பஞ்ச கர்த்தாக்களென்ன பஞ்சகிர்த்தியங்களென்ன பஞ்சபூதங்களென்ன இருவகைப்பட்ட பஞ்சேந்திரியங்களென்ன பஞ்சாவஸ்தைகளென்ன இவைகளில் (அட்சரம்) ஐந்துபேதமுடையவைபோல பிரதிபிம்பித்து விளங்கிய விருத்தி சைதந்நியம் எனப்படும். இவற்றை உள்ளபடி போதிப்பிக்குந் திறமை ஐந்தெழுத்துக்கிருப்பதால், வாச்சிய வாசகங்களுக்கு அபேதத் தன்மையானதால் இதையும் பஞ்சாட்சரமெனக்கூறியது.

ஆனால் ஜெபகாலத்தில் இப்பஞ்சாட்சரத்தில் அப்பொருளுடைய பரமசிவம் அநுப்பிரவேசித்து விளங்குகின்ற தன்மை அறியப்படுமாயின், அந்த அதிகாரியின் பொருட்டு அதுவே பரமசிவமென்ற திருப்தியை ஏன் கொடுக்க மாட்டாது திருப்தனாகவே செய்விக்கும்

ஜெபகாலத்தில் பரமசிவம் அப்பஞ்சாட்சரத்தில் அநுப்பிரவேசித்து சாதுக்களின் மூலமாய் விளங்குந் தன்மை எப்படியெனில்? ஈசன் இச்சா ஞானக் கிரியா சக்தியுடன் கூடி விளங்குவதால், அம்மூன்று சக்தியுடைய பரமசிவம் சருவ வல்லமையுடைய பரிபூரண அறிவாகையால், அவ்வித அறிவாய் விளங்கிய பரமசிவம் சாதர்களால் பஞ்சாட்சரஉச்சாடன காலத்தில் உச்சாரிதமான ஐந்தெழுத்துடைய பஞ்சாட்சரமாம் சிங்காசனத்தில் எழுந்தருளி வாக்கினு லுச்சரிக்கப்படுகிற பஞ்சாட்சரம் தன்னுடையதும் பிறருடையதுமான செவிகளாற் கேட்கப்பட அவ்வித மகிமை பொருந்திய பரமசிவத்தின் வல்லமை இச்சிக்கத்தக்கதாக அந்தக்கரணத்திற் காணப்படுவதால், அவ்விச்சைப்படி அவ்வருணங்களின் பொருள்

களுடைய பரமசிவமாகவே தியாநித்திடச்செய்து மனந் தெளிவதால், ஒரு திரி அக்கினியின் சம்பந்தமின்றி எப்படி மற்றொரு திரியைப் பிரகாசமுடைய தாக்கி வஸ்துக்களைப் பிரகாசிப்பிக்கும் வல்லமை யுடையதாகாதோ? அப்படியே இந்தப் பஞ்சாட்சர சிரவண மாத்திரத்தால் அப்பரமசிவ மகிமையை இச்சையோடு நாடவே மனசுக்குச் சிவஞானம் உண்டாக வேண்டுமானால் சிரவணாதாரமான பஞ்சாட்சரத்தில் பரமசிவ விளக்கமின்றிக் கூடாது: ஆகையால் பஞ்சாட்சரத்துக்கும் அதை ஆலயமாகக்கொண்டு விளங்கிய பரமசிவத்துக்கும் பேதமில்லையெனத் தெளிந்து பிரேமபத்தியுடன் பஜித்திடுவோர் சிவப்பிரசாதத்துக் குரியராகின்றார்.

ஆனால் எந்த சப்தங்களிலும் இச்சா ஞானக்கிரியா சக்தி மூன்றுங்காணப்படுவதால், இப்பஞ்சாக்ஷரத்தில் மாத்திரம் அவ்வளவு மகிமையுள்ளதாகக் கூறியதென்னவெனில்? உலகத்தில் ஆதித்தனுக்குச் சமானம் வேறொரு பிரகாசம் எப்படி யில்லையோ, கீர்வாணத்துக்குச் சமானம் வேறொரு பாஷை எப்படியில்லையோ, வீடடையும் பொருட்டு வைதீக சைவ சமயத்துக்குச் சமானம் வேறொரு சமயம் எப்படியில்லையோ, மகாராஜனது உக்குமத்துக்குச் சமானம் வேறொரு உக்குமம் எப்படியில்லையோ? அப்படியே இப்பஞ்சாக்ஷரம் பரமசிவத்தினது உக்கும ரூபமாயும் பரமசிவத்தினது யாவத் வல்லமைகளையுங்கூற வல்லமை யுடையதாயும் எந்த் லாக்களும் அரசனது பெயருடைய சயனை ஆசரித்திருப்பது போல, எம்மதங்களின் நூல்களும் எம்மதங்களின் அபிப்பிராயங்களும் இந்துக்களது நான்குவேதங்களும் அதன்மகிமையை ஆசரித்திருந்தே அரசனது பொக்கிஷத்தைக் காவற் சேவகர்போல சாக்கிரதையாய்க் காத்து விளங்கப்படுவதாயுமிருப்பதால், அதற்கு அவ்வளவு மகிமை கூறியதெனக்கொள்க.

பஞ்சாட்சரமென்பது (சிவாயநம) என்னும் ஐந்தெழுத்துக்களையாம். இவற்றின் பொருளுக்கமாவது சகள நிஷ்கள ரூபமாய் விளங்கிய சருவஞ்ஞ பரமசிவத்தின் பொருட்டுச் சிவனுக்கு வணக்கமெனவாம். எவ்வாறெனில்? தேகாபேக்ஷையால் தாசனெனவும், சிவாபேக்ஷையால் கடலினொரு திவலைபோல் அம்சமெனவும் கூடஸ்த புத்தியால் அப்பரமசிவத்தைத்தவிர நானென்பது வேறில்லவே யில்லையெனவும் ஆகின்றன.

தாற்பரியம் வணக்கமென்பது ஒன்றில் மற்றொன்று அடங்குவது. அதாவது மாயையாற் றோன்றிய ஜீவேச பேதத்தை சுருதி யுக்தி அநுபவங்களால் நீக்கி சேஷித்த ஏகசுபாவமாம் சிவஞானமாத்திரமாய் விளங்குதல்தான்.

இனி அவ்வட்சரத்தின் பொருள்விவரம் (சிவ) சச்சிதானந்தம்; அவ்வித சச்சிதானந்த சுபாவமாகிய (ம) எனக்கு (ந) இல்லை கூட்டவும் தள்ளவும் தக்கதான இரண்டாம் பொருள் [ய] பிரயோசனமில்லை இன்னும் [நம] என்பதில் [ந] இல்லை என்ன இல்லை (ம) அஞ்ஞானமாம் சுழுத்திரூப ஆவரணமென்ன அதின் அபிமானியாம் பிராஞ்ஞனென்ன இவைகள் யார்பொருட்டு? சிவாய அகண்ட சச்சிதானந்தமாகிய பரமசிவ சொரூபத்தைத் தவிர வேறு துவிதத்துக்கு இடையில்லாததினால் துரியமான ஆன்மாவின் பொருட்டு என்பதாம்.

சிவமென்றால் உபநிடதங்களில் அத்துவித மென்றும் சாந்தமென்றும் துரியமென்றும் ஆன்மாவென்றும் காணப்படுவதால், ஆன்மாவென்றதின் பொருள் நானென்று சகலர்களாலும் கூறப்படுவதால், நானென்றுந்தெரியாமல் சுகமாய்த் தூங்கினேனென்ற அநுபவத்தில் தூங்கினேனென்ற அநுபூதி சுழுத்திகாலத்தைப் பற்றிவந்த அகம்பொருளானதால்,

அவ்விடத்தில் அகங்காரம் காணப்படாததினால், நானென்ற தின் அகங்காரமில்லாத ஆன்மத்தன்மை யெனவும், தூங்கி னேன் என்றதின் பொருள் வாசனையிற்கண்ட அகங்காரம் அவ்விடத்தில் பிரயோசனமற்று நீங்கியிருந்த தெனவும், ஒ ன்றுந்தெரியாமல் என்றதின் பொருள் துவிதாத்துவித விரு த்தி ஞானம் சூன்யமாயிருந்த தென்வும், சுகமாய் என்றதி ன் பொருள் துவிதாத்துவிதப் பிரதீதி நீங்கிய சுத்த அதிஷ்டா னமாகையால், அவ்வதிஷ்டான சுபாவம் ஸ்வயமானந்தமான தால் அவ்வித அபாதித ஸ்வப்பிரகாசமான அதிஷ்டானஆன ந்தமே விழித்த பின் விருத்தியிடமாய் அநுபவத்துக்கு வரு வதால், அநுபவம் ஞானரூபமானதால் அவ்வித விருத்திப்பி ரதிபிம்பித ஞானனந்தாநுபவத்தை எவர்களாயினும் யூகித்தி டில் ஜடதுக்கமெனக் கூறத்தகாததினாலும், அவ்வித விருத் திப் பிரதிபிம்பித ஞானனந்தாநுபவம் பிரதிபிம்பிக்கு முன்ன மே இருந்ததே பிரதிபிம்பிக்க வேண்டியிருப்பதால், இருக் கும் வஸ்து சத்தாகையால் அவ்வித சத்தும் நாமாகவே சி த்தித்துக் காணப்படுவதால், சத்தானதன்னை எவர்களும் அ சத்தென நிஷேதிக்க உபகாரமில்லாததினால், விழித்த பின் தோற்றிய விருத்தியை அபேக்ஷித்து விருத்தியிற் பிரதிபிம் பித்த ஆனந்தாநுபவத்தால் ஆனந்தமெனவும், அவ்வானந் தாநுபவம் ஞானரூபமாயிருப்பதால் சித்தெனவும், விருத்தி உதயத்துக்குமுன் விருத்தி விஷயமாயில்லாததினால் சத்தெ னவும், முற்கூறிய சிதானந்தாநுபவம் சித்தே ஆனந்தமாயு ம் ஆனந்தமே சித்தாயும் ஒரு பொருளாய்க் காணப்படுவதா ல், அவ்வித சித்தான ஆனந்தம் சத்தைத்தவிர வேறில்லாத தினால், இவ்வித சச்சிதானந்த மென்ற விவகாரப்பிரதீதி வி ருத்தியை முன்னிட்டு கூறினபோதிலும், அவ்விருத்தி யநு பவகாலத்திற்றானே விளங்கிய பிரதீதி விருத்தியில்லாத இட த்தைப்பற்றி வந்திருப்பதால், ஞாதருஞான ஞேயரகித ஸ்வ

யஞ் சச்சிதானந்த தாற்பரிய பூமியான அதிஷ்டானமெனக் கூறியதாம்.

அவ்வித ஸ்வயஞ் சச்சிதானந்த அதிஷ்டானமான தன்னையே பொருளென உபநிடதங்கள் ஆகமங்கள் புராணங்கள் மற்றுஞ் சகலசமயங்களும் அபிப்பிராயப்படுவதினாலும், சிவமான தன்னிடத்தில் சுபாவமாயாவது விருத்திப் பிரதிபிம்பித சிதானந்தாநுபவமாயாவது அநிர்த ஜடதுக்கத் தன்மை நேரிடக் காரணமில்லாததினால், அச்சிவமாம் தனக்கு யகாரத்தின் பொருளான சுழுத்திரூப அஞ்ஞானமாம் ஆவரணை முக்காலத்திலுமில்லை யென நிஷேத்திட, பிராஞ்ஞன் இல்லாதவனாவான்: அவனில்லாதவனாகவே பிராஞ்ஞனும் பசு விவகாரத்தைப்பற்றி வந்த பாச விவகாரமென்ன அப்பசு பாசங்களை யிட்டுவந்த பதிவிவகாரமென்ன இவை யனைத்தும், பழுதையில் மயக்கத்தாற் றோன்றியும் விளங்கியும் விவேகத்தால் இல்லாமல் நீங்கியும் அப்பழுதையைத் தவிர அனைத்துக்குஞ் சத்தை யெப்படியில்லையோ, பழுதையின் சத்தை மாத்திரமாயே எப்படிக் காணப்படுகின்றதோ? அப்படியே தோற்றி மறைதலில்லாத ஸ்வயஞ் சச்சிதானந்த சுபாவமாய் விளங்கிய சர்வாதிஷ்டானமான பரமசிவமாம் ஆன்மாவான தன்னிடத்தில், அநிர்த ஜடதுக்கத்தன்மை பொருந்தியது போற்றோற்றிய இப்பிர பஞ்சம் தோற்றிடினும் விளங்கிடினும் நசித்திடினும் விவேக ஞானத்தால் இல்லாததாய்த் தெளிந்திடினுந் திரிபுடிரகித ஒப்பில்லாத ஸ்வயஞ் சச்சிதானந்த ஸ்வரூபமாம் பரமசிவமாகிய தன் விளங்குதலைத் தவிர யாவும் வேறில்லவே யில்லையெனத் தெளிந்து அதிஷ்டான மாத்திரமாய் விளங்குவதே பஞ்சாக்ஷரத்தின் முக்கிய தாற்பரியமாம்

இப்பொருள் பஞ்சாக்ஷ முலமாகவே விளங்குவதால்

பஞ்சாக்ஷர ஜெபமில்லாத சிவபக்தி உயிரில்லாத வுடலென க்கூறப்படும்.

இனி(சிவ) என்ற இரண்டக்ஷரத்துக்கு மாத்திரம் பொருள் சகாரம் பரமசிவம் இகாரம் பராசக்தி வகாரம் மஹாவிஷ்ணு ஆகையால் சிவ என்றால் சிவசக்தி விஷ்ணு வாத்மமெனக் கூறப்படும். இவற்றில் சக்தி மஹாவிஷ்ணு இரண்டு தத்துவமும் வேத ஆகம புராணங்களில் சக்திகளாகவே கூறப்பட்டிருப்பதால், சக்திகள் சக்தனைத் தவிர வேறு காணப்படாததினால், ஸ்தூல விவகாரத்தினால் சக்தி சக்த பேதமேயன்றி கண்ணும் பார்வையும்போல ஏகமே யெனக்கொள்க.

முற்றிற்று



## பதினெட்டாவது

### சிவலிங்க மகிமை யுரைத்த பிரகரணம்

சிவலிங்கமானது சிவனது லிங்கம் சிவலிங்கமா சிவனே லிங்கம் சிவலிங்கமா? முற்கூறியபடி சிவமென்பது சச்சிதானந்தம் லிங்கமென்பது விளங்குவிக்கும் வல்லமை. ஆகையால் சச்சிதானந்தமாகிய சிவம் வேறொரு குறிப்பால் விளங்கப்படுமாகில் ஜடமாகத்தெரியவரும்: மேலும் இது கடம் இது படம் என்று பரமசிவமே விளங்குவிக்கிறதாக் காணப்படுவதால் சிவனது லிங்கம் சிவலிங்கமெனக்கூறுது; சிவனே லிங்கம் சிவலிங்கமெனக்கூறவேண்டும். இவ்விலிங்கம் அதிகாரிபேதத்தால் மூவகையாம். அவைமேல் விவகரிக்கப்படும்.

மற்றொரு கொள்கையில் லிங்கமென்றது லீனமாகிய

பொருளைப் பிரகாசிப்பிக்கின்றதெனப்படும். லீனமென்றது லயிக்கப்படுவது: எவ்வாறெனில்? ஜாக்கிரத்திற் காணப்படுகின்ற சருவஜகமும் அதின் அபிமானியான விஸ்வ விராட்டு என்னும் சருவேந்திரிய பிரதிபலன சைதந்நியத்தோடுங் கூட சொப்பனதிசையிலே லயிக்கின்றது: அச்சொப்பனமும் அதில் அநுபவிக்கப்படாநின்ற மனோமயமான ஜகமும் அதின் அபிமானியான தைஜஸ இரணியகர்ப்பனென்ற அந்தரேந்திரிய உபாதியையுடைய சைதந்நியத்தோடுங்கூட சுழுத்தியிலே லயமாகின்றது; அச்சுழுத்தி யுள்பட மூன்றவஸ்தைகளில் அநுபவிக்கப்பட்ட சருவ விஷயங்களும் ஜடங்களானதால் அவற்றின் பொருள் யாதோ அது லீனார்த்தமாகும்.

லீனமென்றதின் அபிப்பிராயம் யாதெனில்? ஸ்வயம் பிரகாசித்தலுக்கு வல்லமை யில்லாததெதுவோ அதுவெனப்படும். லீனமென்பதே சூனியமாகும். எப்படி யெனில்? எதற்கு ஸ்வயம் விளங்குதலில்லையோ அதற்கு ஸ்வயமிருப்புமில்லை: எதற்கு ஸ்வயமிருப்பில்லையோ அதற்கு வஸ்துத்தன்மையுமில்லை. எதற்கு வஸ்துத்தன்மை யில்லையோ அதற்கு ஸ்வப்பிரகாசமா யிருக்கின்ற வஸ்துவோடுங்கூடச் சம்பந்தங்கூடாது. இவ்விதமாகில் முக்காலத்திலும் இரச்சு சர்ப்பம்போல பிராந்தியாற் றோன்றுகின்ற மூன்றவஸ்தை முத்தொழில் இவற்றால் சாத்தியமான இந்த ஜகம் காலத்திரயத்திலும் இல்லாததாய் விடும்; விவகார சத்தையால் விளங்குகின்றதுபோ லிருந்தாலும் விவகார சத்தையினாலும் யுக்தி அநுபவங்களினாலும் பார்க்கில் இல்லாததாகவே நிஷேதிக்கப்படுகின்றது. எப்படி யெனில்? விழித்தெழுந்திருந்தவன் நான் * சுகமாய்த் ‡ தூங்கினேன் § ஒன்றுமறியேன் என்ப

---

* சுகமாயென்றது—அனந்த [illegible]ரமான சொரூபத்தன்மையையுடைத்து தான் மாத்திரமாயிருந்ததென்பதாம்.

தில் அகங்கார விருத்தியில் பிரதிபலித்த முந்திய விவகார ச த்தாய்த் தோன்றிய ஆவரணமானது அநுபவிக்கப்பட அதி ற்கண்ட விவகார அநுபவப்பிரகாரம் காணப்படுகின்ற சகல ஜகமும் சுழுத்தியில் இல்லாமையாகக் கிரகிக்கப்படுகின்றது சுழுத்தியில் அகம் விருத்தி இல்லாததினால் ஆன்மாவின் இ ல்லாமையும் வாராதோ வெனில்? சருவ ஜகத்தின் இல்லா மையை அறிந்து அதையும் பிரகாசிப்பிக்கின்ற அதிஷ்டாதா வான ஆன்மா எப்படி இல்லாததாகும்.

அப்படி யாகில் சுழுத்தியில் நின்று விழித்தபின் சுகமா ய்த் தூங்கினேன், ஒன்றுமறியேன் என்பதில் அஞ்ஞானம் அகங்காரம் இவ்விரண்டும் அத்திசையி லிருக்கின்றது போ ற்றோன்றுகின்றதே அவ்வஞ்ஞானம் ஆன்மாவுக்கா அல்லது அகங்கார விருத்திக்கா? ஆன்மாவுக்கெனில்? அதை அறிவ தற்கு ஆன்மாவைத்தவிர வேறில்லாததினால் கூடாது. அக ங்கார விருத்திக்கெனில்? அவ்விருத்திக் [illegible] ழுதும் ஜ டத்தன்மை சுபாவமானதால் கூடா[illegible]ல் காரணமாகை[illegible]ன்மாவுக் கும் வேண்டாம் அகங்கார விருத்[illegible]மாகையா[illegible]ம் அவ் விருத்தியில் அவி வியக்தனென சிதாபாசனுக் கென்னிலோ? அகங்காரவிருத்தியே இல்லாவிடில் அதில் அவிவியக்திக்குந் தன்மை எப்படிக்கூடும். அக்ங்கார அவிவியக்தத்துக்கு அக ங்கார பீஜமான அஞ்ஞான அவிவியக்தனென சிதாபாசனுக் கென்னிலோ? ஞானமில்லாதது அஞ்ஞானம் அது ஞானா பாவமெனப்படும் ஞானமே யில்லாததால் பதார்த்தத்தை வி ஷயீகரிக்கின்ற சாமர்த்திய மில்லாததாய் விடும்; அல்லாமலும்

‡ தூங்கினேனென்றது—சருவஜகத் விஷயமான பேத ஞானமின்றி யிருந்தேனென்பதாம்.

§ ஒன்று மறியேனென்றது—சுழுத்தியில் ஜகமில்லாததால் திருசி யத்தைப் பிரகாசிப்பிக்கின்ற விருத்தி ஞானம் இல்லாதவனாயிருந்தே னென்பதாம்.

ஞானுபர்வ சுபர்வமுடைய வஸ்துவுக்குத் தன் விஷயத்தி
ஞலாவது பிற விஷயத்திஞலாவது அநுபவம் கூடாததினு
ம் அதுவும் சூனியத்தன்மையை யுடையதாதலாலும் இல்லை
யெனப்படும்: அவ்வித இல்லாத வஸ்துவில் ஞானமானது
அவிவியக்தமானுல், அப்படி அவிவியக்தமான ஆன்மாவும்,
அத்தன்மையான சக்திமானுகவே பவித்து, அகங்காரத்தை
விளங்குவிக்குஞ் சாமர்த்தியமுமற்று, அந்தகனுல் அந்தகன்
போல முன்னமே அகங்காரமும் அந்தகமாய்க்கொண்டு அ
வ்வியக்த ஞானத்தாலும் சக்தியில்லாததாய்விடும்; ஆனபடி
யால் அதற்குங்கூடாது. அப்படியானுல் ஒன்றுமறியேனெ
ன்ற விவகாரம் வருகிறதற்குக் காரணமென்ன. அவ்விவகா
ம் அகம் விருத்தியிற் காணப்படுவதால் அகம்விருத்தி ஆரூ
டமான ஸ்வயம் சித்தமாயுள்ள அஞ்ஞானமானது அகங்கா
தற்பணத்திற் பிரதிபிம்பித்த கூடஸ்த சித்சாயாரூபமான சி
தாபாசனமென்ப அகங்காரத்தினுடைய தென்றறியாமல்,
எதார்த்ஸ்வயம் விளங்குனதுபிம்பமான கூடஸ்த பரமான்மா
வில் ஆ எதற்கு ஸ்டைது தான். இப்படித் தோன்றுகின்ற
விவகாரமும அகம் விருத்தியிலிருக்கின்றசிதாபாச அநுபவத்
திற்கண்ட விவகார பலத்தினுலேயேயன்றி மற்றப்படியல்ல.
இவ்விவகார பலத்தாற் றோன்றுகின்ற சருவஜகம் அதைப்
பற்றிவந்த சிருஷ்டி ஸ்திதி சங்காரம் அதினுள்ளடங்கிய அ
வஸ்தாத்திரயங்கள் இவைகளோடுங் கூடச் சுழுத்தி திசை
யில் யில்லையென்றே நிருணயமாம் அத்திசையில் இல்லை என்
றதால் அஞ்ஞான ரூப சுழுத்தியென்று சொல்லப்படவில்லை
வேறே எப்படிச்சொல்லப்படுகின்ற தென்னில் விஷயம் இந்தி
ரியம் அந்தக்கரணம் அவற்றின் அபிமானியான சிதாபாச
னுகிய சகல ஜகத்துக்கும் சுகசொரூபமான உண்மையென்
று சொல்லப்படுகின்றது. [illegible] ஆனந்தம் பிரம்மமெ
னக் கூறுவதால் சொரூபானந்த மாத்திரமான அடையெனக்

கொள்க. இதின் தாற்பரியம் விருத்தி இல்லாத அகர்த்து ருத்துவமான சுகஸ்வரூபமாகிய தனக்கு வேறில்லாததாகக் கொண்டு இருத்தலெனவாம். இருத்த லென்றதின் பயன் முக்காலத்திலும் வேறொரு தன்மையை எதிரிடாத சுபாவ மாகும். இப்படியாகில் லீனம் காலத்திரயத்திலும் கூடஸ்த சுபாவமான ஸஜாதிய விஜாதிய ஸ்வகத பேதமில்லாத அத்து வித பரமான்ம சுபாவமான அருத்தத்தைப் பிரகாசிப்பிக்கின் றதால், சிவமே லிங்கம் சிவலிங்கமெனப்படும்.

மற்றொரு பொருள் ஜகமனைத்தும் அழிந்தும் எது அழி யாமலிருக்கிறதோ அது லிங்கமெனக்காணப்படுவதால், அவ ஸ்தைகள் மூன்றும் தொழில்கள் மூன்றும் அதற்குட்பட்ட ஜகமனைத்தும் அவித்தை மாயையோடுங்கூடப் பரமசிவ சை தந்நியத்தில் இல்லாததாகி லயமாகக் காணப்படுவதால் சிவ மே லிங்கம் சிவலிங்கமெனப்படும்.

மற்றொருபொருள் லிங்கமெனில் காரணமாகையால், பர ம்சிவமொன்று தவிர மற்றனைத்தும் காரியமாகையால், காரிய ப்பொருள் காரணப்பொருளைத் தவிர வேறில்லாததினால் கா ரணமாம் பரமசிவமே லிங்கம் சிவலிங்கமெனப்படும். இது உத்தமாதிகாரி விஷய லிங்கங்களாம்.

மத்திம லிங்கமாவது ஆறாதாரங்களில் விளங்கிய அனே க கோடி சூரியப்பிரகாச லக்ஷியரூபங்களெனப்படும்.

ஸ்தூல லிங்கமாவது இருவகையான லிங்கங்களை, அறி ய வல்லமையற்ற கேவலம் பண்டித பாமர சாதாரணமாயுள் ள உபாசனையின் பொருட்டு சாஸ்திராதிகளால் அநுக்கிரகிக் கப்பட்டுப் பாவனைகளால் பரமசிவப் பிரசாதத்துக்கு உரித் தாகச்செய்யக் காரணமாய் விளங்கிய ஆலயங்களிலுள்ள சிவ லிங்காதிகளெனப்படும். உண்மையில் அவ்விலிங்கம் பரம

சிவத்தைத் தவிர வேறில்லாததினாலும், அவ்விதப்பொருளு டைய லிங்கார்த்தமான பரவசிவத்தை உள்ளபடி விளங்கு விக்கத்தக்க பொருளுடையதாயும் இருப்பதால், சிவலிங்க மெனக் கூறப்பட்டது. அதிகாரி பேதங்களால் மூன்று லிங் கங்களும் அகத்தியம் உபாசிக்கப்பட்டவைதான்.

முற்றிற்று



## பத்தொன்பதாவது

### சாதுசங்க மகிமையுரைத்த பிரகரணம்.

சாதுவெனப்படுகின்றவர்கள் எப்பொருள்கட்கும் அப் பொருள்களாய் விளங்கிய கருணைக்கடலாம் பரம சிவ சை தந்நியம்போல, சகல பொருள்கட்கும் அபயமாய் விளங்கிய சுபாவ முடையவர்களாயும் * ஆப்தகாமனாயும் உத்தமாதிகா ரிகளுக்குத் தரிசனமாத்திரத்தில் அகண்ட பரமசிவானந்தாநு பூதியை விளங்குவிப்பிக்கிறவர்களாயும், தங்களை அநுசரித்த

* ஆப்தகாமாநுபூதியாவது—முதலில் அதிஷ்டானமாத்திரமாய் விளங்கி, அப்பால் பரிபூரண சைதந்நியமாயிருந்துகொண்டு, அப்பரி பூரணத்தில் அசர்க்கியங்களான சப்த ஸ்பரிச ரூப ரச கெந்தாதி விஷயங்களை அபின்னமாய்க் கற்பித்து, ஞானேந்திரிய பஞ்சகங்களை அபின்னமாக அநுசந்தானித்து, அந்த அநுசந்தான பலத்தினால் அகண்டனான சைதந்நிய ரூபமாயுள்ள தனக்குப் பின்னமில்லாமலி ருக்கின்ற பூரணங்களான பஞ்சேந்திரியங்களால் பஞ்சவிஷயங்களை யும் உள்ளபடி அபேதமாய் அநுபவித்து, அவ்வித அநுபூதியுடை ய பரிபூரண ஞான ரூபனான தன்னிடத்தில் அனேக கோடி பிர மாண்டங்களைப் பின்னபின்ன அசர்க்கிய விஷயங்களோடும் விளங் குவிப்பித்து, அவ்வித விஷயங்களையும் விஷயபோகங்களையும் விஷ யபோக்தாக்களான பிரமாண்டங்களையும் விஷய ரூபமாயும் போக

எவ்வதிகாரிகளையும் அவர்களது சித்தபரிபாகத்துக்குத் தகுந்தபடி சாதனங்களை அருளிச்செய்து பரமசிவானந்த சமுத்திரத்தில் குளிக்கச்செய்விக்கிற வல்லமை யுடையவர்களாயும் எப்போதும் எவர்களுக்கும் சல்லாப மாத்திரத்தில் பரமசிவப்பிரேமாவர்த்தர்களாயும், மொழியு மொழிகளாலெல்லாம் துவித வாசனுபிசமான அகங்காரக் கிரந்தியாமிருளைச் சிதையச்செய்யும் பொருட்டுச் சிவஞான சூரியப்பிரகாசத் தன்மையைப் பிரகாசிப்பிக்கிறவர்களாயும், பிராணிகளிடத்தில் யாதொரு அபேக்ஷையுமில்லாமல் அவர்கள் வீடடைந்துய்வதினிமித்தம் கிருபைகூர்பவர்களாயும், கருணை மைத்திரி முதிதை உபேக்ஷை முதலிய சீலம் பொருந்தினவர்களாயும், துவந்துவ விநிர் முக்தர்களாயும், எப்பொழுதும் சுவாநுபூதியில் இரண்டாம்பொருளை எதிரிடாதவர்களாயுமுள்ள பெரியோர்களாம்; அவர்களது சங்கம் சாது சங்கமெனப்படும். இவர்களது சங்கத்தைத்தவிர பிராணிகளுக்கு வீடடையவேண்டியமார்க்கம் வேறில்லை யென்பதே வேதாகமங்களின் முடிவான நிருணயமாம்.

முற்றிற்று.

---

ரூபமாயும் போக்தாரூபமாயும் அநுபவித்து, அவ்வித அநுபோககாலத்திலும் மேற்சொல்லிய மூவித பேதமுடைய ஜகத்தில் சருவவிஷய இந்திரிய சொரூபமான அகண்ட பரிபூரண ஞானமாகிய தன்னை இடைவிடாத்தன்மையா யநுபவித்து, விஷயம் போகம் போக்தா சகலமும் விஷயரூபமாயாவது போகரூபமாயாவது போக்தாரூபமாயாவது கேவலம் ஞானரூபமாயாவது தன்னைத்தவிர வேறில்லையென்று அதிஷ்டான மாத்திரமாய்ச் சேஷித்து அநுபவியாநிலநுபவிக்க, துவித பதார்த்தப்பிராந்தி அதை விட்டோர்ந்த ஜகவசியவான்களாகிய தாரதம்மியமுடைய ஸ்தம்ப முதல் சதாசிவ அனந்தமுள்ளபோக விசேஷப் பிராந்தியும் அதிஷ்டான மாத்திரமாய் நீங்காமல் நீங்கிவிடும். இவ்வநுபூதிமானையே சுருதிகள் ஆப்த காமனெனக் கூறுகின்றன.

சிவத்தைத் தவிர வேறில்லாததினலும், அவ்விதப்பொருளு டைய லிங்கார்த்தமான பரவசிவத்தை உள்ளபடி விளங்கு விக்கத்தக்க பொருளுடையதாயும் இருப்பதால், சிவலிங்க மெனக் கூறப்பட்டது. அதிகாரி பேதங்களால் மூன்று லிங் கங்களும் அகத்தியம் உபாசிக்கப்பட்டவைதான்.

முற்றிற்று



## பத்தோன்பதாவது

### சாதுசங்க மகிமையுரைத்த பிரகரணம்.

சாதுவெனப்படுகின்றவர்கள் எப்பொருள்கட்கும் அப் பொருள்களாய் விளங்கிய கருணைக்கடலாம் பரம சிவ சை தந்நியம்போல, சகல பொருள்கட்கும் அபயமாய் விளங்கிய சுபாவ முடையவர்களாயும் * ஆப்தகாமனுயும் உத்தமாதிகா ரிகளுக்குத் தரிசனமாத்திரத்தில் அகண்ட பரமசிவானந்தாநு பூதியை விளங்குவிப்பிக்கிறவர்களாயும், தங்களை அநுசரித்த

* ஆப்தகாமாநுபூதியாவது—முதலில் அதிஷ்டானமாத்திரமாய் விளங்கி, அப்பால் பரிபூரண சைதந்நியமாயிருந்துகொண்டு, அப்பரி பூரணத்தில் அசார்க்கியங்களான சப்த ஸ்பரிச ரூப ரச கெந்தாதி விஷயங்களை அபின்னமாய்க் கற்பித்து, ஞானேந்திரிய பஞ்சகங்களை அபின்னமாக அநுசந்தானித்து, அந்த அநுசந்தான பலத்தினல் அகண்டனுன சைதந்நிய ரூபமாயுள்ள தனக்குப் பின்னமில்லாமலி ருக்கின்ற பூரணங்களான பஞ்சேந்திரியங்களால் பஞ்சவிஷயங்களை யும் உள்ளபடி அபேதமாய் அநுபவித்து, அவ்வித அநுபூதியுடை ய பரிபூரண ஞான ரூபனுன தன்னிடத்தில் அனேக கோடி பிர மாண்டங்களைப் பின்னபின்ன அசார்க்கிய விஷயங்களோடும் விளங் கிவிப்பித்து, அவ்வித விஷயங்களையும் விஷயபோகங்களையும் விஷ யபோகங்களான பிரமாண்டங்களையும் விஷய ரூபமாயும் போக

எவ்வதிகாரிகளையும் அவர்களது சித்தபரிபாகத்துக்குத் தகுந் தபடி சாதனங்களை அருளிச்செய்து பரமசிவானந்த சமுத்தி ரத்தில் குளிக்கச்செய்விக்கிற வல்லமை யுடையவர்களாயும் எப்போதும் எவர்களுக்கும் சல்லாப மாத்திரத்தில் பரம சிவப்பிரேமாவர்த்தர்களாயும், மொழியு மொழிகளாலெல்லாம் துவித வாசனுபிசமான அகங்காரக் கிரந்தியாமிருளைச் சிதை யச்செய்யும் பெருட்டுச் சிவஞான சூரியப்பிரகாசத் தன்மை யைப் பிரகாசிப்பிக்கிறவர்களாயும், பிராணிகளிடத்தில் யா தொரு அபேக்ஷையுமில்லாமல் அவர்கள் வீடடைந்துய்வதி னிமித்தம் கிருபைகூர்பவர்களாயும், கருணை மைத்திரி முதி தை உபேக்ஷை முதலிய சீலம் பொருந்தினவர்களாயும், துவ ந்துவ விநிர் முக்தர்களாயும், எப்பொழுதும் சுவாநுபூதியில் இரண்டாம்பொருளை எதிரிடாதவர்களாயுமுள்ள பெரியோர் களாம்; அவர்களது சங்கம் சாது சங்கமெனப்படும். இவர் களது சங்கத்தைத்தவிர பிராணிகளுக்கு வீடடையவேண் டியமார்க்கம் வேறில்லை யென்பதே வேதாகமங்களின் முடி வான நிருணயமாம்.

முற்றிற்று.

---

ரூபமாயும் போக்தாரூபமாயும் அநுபவித்து, அவ்வித அநுபோககால த்திலும் மேற்சொல்லிய மூவித பேதமுடைய ஜகத்தில் சகலவிஷ ய இந்திரிய சொரூபமான அகண்ட பரிபூரண ஞானமாகிய தன்னை இடைவிடாத்தன்மையா யநுபவித்து, விஷயம் போகம் போக்தா சகலமும் விஷயரூபமாயாவது போகரூபமாயாவது போக்தாரூபமா யாவது கேவலம் ஞானரூபமாயாவது தன்னைத்தவிர வேறில்லையெ ன்று அதிஷ்டான மாத்திரமாய்ச் சேவித்து அநுபவியாநி லநுப வித்த, துவித பதார்த்தப்பிராந்தி அதை யிட்டவேந்த ஐசுவரியவான் களாகிய தாரதம்மியமுடைய ஸ்தம்பமுதல் சதாசிவ அனந்தமுள்ள போக விசேஷப் பிராந்தியும் அதிஷ்டான மாத்திரமாய் நீங்காமல் நீங்கிவிடும். இவ்வநுபூதிமானையே சுருதிகள் ஜீவந்முக்தனெனக் கூறுகின்றன.

## இருபதாவது

## குருபதேச மகிமையுரைத்த பிரகரணம்.

குருவென்பதின் பொருள் (கு) அஞ்ஞானமாகிய அந்தகாரம் (ரு) அதைத் தகையாநின்ற சைதந்நியப் பிரகாசம் எனப்படும். இப்பொருள் பொருந்திய குருதத்துவம் காரணகுருவெனவும் காரியகுருவெனவும் இரண்டு பிரிவுடையதாகும்.

காரணகுருவாவது காரியகுருவால் அநுக்கிரகிக்கப்பட்ட வேதாகமங்களின் துணிவான நிலைமையாய் விளங்கிய, பிரத்தியகபின்ன பரம சிவாநுபூதியேயாம். காரியகுருவாவது அவ்வித உபதேசத்தால் அநுபூதியாய் விளங்கிய பரமசிவமே அவ்வதிகாரிக்கு அநுக்கிரகிக்கும்பொருட்டு மானுட வேஷம் பொருந்திய குருமூர்த்தியாய் விளங்கிய அவ்வுபதேஷ்டாவாகும்,

இக்காரியகுரு பிரம க்ஷத்திரிய வைசிய ரென மூவகையர்களாம். இவர்களில் வித்தியாதிக்கத்தால் பரஸ்பரம் குருத்துவமுண்டு; உத்தமகுரு பிராமணர்களாம் இக்குருக்கள் சந்நியாசி வானப்பிரஸ்தன் கிரகஸ்தன் பிரமசாரி யென நால்வர்களாம்; இவர்களும் பரஸ்பரம் வித்தியாதிக்கத்தால் உத்தமகுருவின் லப்தம் கிடையாவிடில் பரஸ்பரம் குருக்களாவார்கள்,

ட

இருவகையான இக்காரிய குருக்களிலும் அதிவருணனென்று ஒரு உத்தமோத்தம குருஉண்டு.

சூத்திரர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் குருத்துவங் கிடையாதென்று கூறப்பட்டிருக்கின்றது. இவர்களுக்குக் கிடையாது என்றதின் பொருள் வேதவித்தியா சம்பிரதாய மார்க்கத்

த்தால் கிடையாதென்பதேயன்றி திருவருட்பாங்கால் அவர்களுக்குக் குருத்துவம் கிடையாதென்பதல்ல. இக்குருத்துவம் முக்கிய குருலாபாலாபத்தில் உபகாரப்படும். ஆனால் ஸ்திரி சூத்திரர்களுக்கு குருத்துவம் கிடைக்கவே கிடையாதென் நிஷேதித்திருக்க இப்படிக் கூறியதேதெனில் ஸ்ரீ பரமதயாபரர்களாகிய சங்கராசாரியர்களது வாக்கினாலேயே உத்தமஜாதியில் குரு அகப்படாவிட்டால் எந்தஜாதியிலாகிலும் பரதந்திரவுபகாரப்படுமாகில் குருத்துவம் ஆசரிக்கப்படலாம் என்று மொழிந்திருப்பதுந் தவிர, எவனது அருளால் ஜடமான தேகமுதலனைத்தும் சித்துப்போல் விளங்குகின்றதோ, எவனது சுபாவமாகக் கீடாதிபிரமபரியந்தம் சாக்ஷித்தன்மையாய் விளங்கியதோ, யாதொருபொருள் எல்லாரும் நானென்னுந்தன்மைக்கு ஒரேயியல்பாக உரித்தாயுள்ளதோ, அப்பொருள் யான் எனத்திடாநுபூதி யுடையவர்களாயின் அவர்கள் ஜகதிருஷ்டியில் சண்டாளராய்க் காணப்பட்டிருக்கும் அவர்களைக் குருவெனவே நம்புதல் என்னுடைய கருத்து என்று அவர்களாற்றானே கூறப்பட்டிருப்பதாயுங் காணப்படுவதால், அவர்களது அபிப்பிராயப் பிரகாரம் கூறியதாம்.

முற்கூறிய உத்தம குருக்களான நான்காச்சிரமிகளில் சந்நியாசியென்ற குருத்துவம் உத்தம மெனப்படும்; அது குடிசக வெகுவிதக அம்ஸ பரமாம்ஸமென நான்கு பேதமாம் இப்பேதத்தவர்கள் உத்தரோத்தரம் ஆதிக்கமுடையவர்கள் இவர்களில் வித்தியாப்பியாசத் தன்மையும் ஆச்சிரமத்தன்மையும் காணப்பட்டிருந்திடினும், ஆன்மாநுபூதி யென்பது மாத்திரம் இல்லாவிடில், அவர்களைக்காட்டிலும் எச்சாதியிலேனும் எவ்வருணத்திலேனும் எவ்வாச்சிரமத்திலேனும் எத்தருமத்திலேனும் எத்தொழிலிலேனும் இருந்திடினும், ஆன்மாநுபூதிமானாகில் அவனே சிரேஷ்டனென வேதாகம புராணங்களால் கூறப்படுகின்றது.

உத்தம குருக்களுக்குங் குருவெனப்பட்ட மேற்கூறிய அதிவருணனது லக்ஷணமேதெனில்; எக்காலத்திலும் எவ்வவஸ்தையிலும் எத்தொழிலிலும் எப்பொருளும் ஞாதிரு ஞானஞேய ரகித கண்டாகண்ட நிர்முக்த கேவலம் பரமசிவமாகிய தானாக விளங்கிட, தாங்குகிறவன் கையில்நின்றும் புஷ்பம் நழுவிடுதல் போல், ஜாதி வருண ஆச்சிரமதர்ம குலகோத்திர நீதி முதலிய பேதமனைத்தும் வாசனையால் புத்தி விருத்தியினுதியாமல், சகசமாய் எதுவும் தானாகவேவிளங்குவதுதான் அவ்வாறு விளங்கும் அவனே உத்தமோத்தம குருவாம்.

இனி உபதேசமென்பது † தீக்ஷையாம்; அது சொரூபதீக்ஷை மானததீக்ஷை சாக்ஷுஷிதீக்ஷை ஸ்பரிசதீக்ஷை கிரியாதீக்ஷை என ஐந்து பேதமுடையதாம். இவற்றில் சொரூபதீக்ஷையாவது குருசுபாவசித்தனாயிருக்க, உத்தமாதிகாரியான பரிபாகவிசேஷத்தால் சீடனும் அப்படியே விளங்கிடுதலாம் மானததீக்ஷையாவது அகண்டசச்சிதானந்தமாம் பரமசிவமாக விளங்கிய குருவானவர், தாமே சீடனது மனதில் அநுப்பிரவேசித்து, அவனது உள்ளத்தில் திருவருட்பாங்கைப் பிரசாதித்து, தனக்கு அபேதமாக அவனது சைதந்நியத்தை அடைவிப்பித்துத் தானாக விளங்க அருள்செய்ய, அச்சீடனும் அப்படியே விளங்கிடுதலாம். சாக்ஷுஷிதீக்ஷையாவது அவ்வித அநுபவம் பொருந்திய திருஷ்டியோடும் சீடனைப் பார்த்தருள, அச்சீடனும் அவ்வாசிரியரது அநுபூதியை அடைந்திடுதலாம். ஸ்பரிச தீக்ஷையாவது கிருபைபொருந்திய அநுபவத்தோடும் அஸ்தம் திருவடி இவைகளை முடியிற்

† தீக்ஷை என்றது— க்ஷணத்தில் குருவினது கிருபையால் உள்ளபடி ஆன்மாநுபூதியைக் கொடுக்கின்றதும் அவித்தை மாயைகளை இல்லாமல் நசிப்பிக்கின்றதுமாகிய வல்லமையுடையதென்பதேயாம்.

சாத்தியருள, சிடனும் உள்ளபடி அநுபூதியை அடைந்திடுதலாம். கிரியா தீக்ஷையாவது சிரவண மனன நிதித்தியாசன தியாந தாரண சமாதி இவ்விசேஷமுடைய தொடர்ச்சியால், சிடன் குருபதேசத்துடன் சுவாநுபூதியை அடைந்திடுதலாம். இக்கிரியா தீக்ஷை பத்துவகைப்படும். அவை ஆசாரியாபிஷேகாதிகளை முன்னிட்டு ஆகமங்களிற் சொல்லியதுகளாம். இவ்வித தீக்ஷை கேவலம் தாந்திரியமெனப்படும். மற்ற தீக்ஷையனைத்தும் கேவலம் வைதிகமெனவும், வேதாநுக்கிரக தாந்திரிகமெனவும் படும்.

சொரூப தீக்ஷைமுதலிய நான்கு தீக்ஷாரூபமான குருக்களைக் காரண குருவெனவும்; கிரியாதீக்ஷாரூபமான சிரவண மனன நிதித்தியாசன தியாந தாரண சமாதி விசேஷமுடைய சிடனது தொடர்ச்சியை முன்னிட்டு சுவாத்மாநுபவத்தை விளங்குவிப்பிக்கும் வல்லமை மாத்திரமுடைய குருவைக், காரிய குருவெனவும் கூறுவார்கள். இது குருபதேசரகசியம்.

முற்றிற்று

இருபத்தோன்றவது

## பரமசிவப் பிரசாத மகிமையுரைத்த பிரகரணம்

பரமசிவப்பிரசாத மென்பது அப்பியாசிக்கப்படாதிருக்கும் வித்வசபையில் அஜேயமான வாக்குவிலாசம், சாதிக்கத்தகாததுகளைப் பிரயத்தினமின்றிச் சாதிக்குந்திறமை, அமாநுஷ்யங்களான கிர்த்தியவிலாசம், ஆகாயாதிகமனம், பரகாயப்பிரவேசம், திரோதாநாதி சக்திகள், கர்த்தத்துவ அகர்த்தத்துவ அன்னியதா கர்த்தத்துவ சக்திகள், கேவலம் தயாமா

த்திரத்தில் மஹா ஜனனமரணப் பிரவாகம் பொருந்திய சீவர்களை எப்பொழுதும் அகண்ட சச்சிதானந்த பரமசிவமென அநுபவிக்கச்செய்வித்தல், என்னும் இவ்விலிங்கங்களால் அபார பெருமைபொருந்திய தெனப்படும்: இப்பிரசாதமடையப்பெற்ற மஹான்களுக்குச் சிலது சித்தி விஷயங்களாயிருந்த போதிலும், எல்லாம் பரமசிவமாக விளங்குதலே பெருமை பொருந்திய முக்கிய பரமசிவப்பிரசாதமெனப்படும்.

அவ்வித பிரசாதம் அவர்களிடமாய் விளங்குந் தன்மை எப்படியெனில், இப்பிரபஞ்சங்களிலுள்ள நதி சமுத்திரம் மலை ஆரண்ணியம் விருக்ஷம் பக்ஷி மிருகம் இன்னுமற்றுமுள்ள அனைத்துடன் ஏழைமுதல் அரசன் வரையுள்ள பிராணிகளென்ன, அவற்றின் போக போக்கியமென்ன, இந்திராதிகள் தேவ யக்ஷ கந்தர்வ கின்னராதிகளென்ன, அவர்களின் லோகங்களென்ன, அவர்களின் போகபோக்கியமென்ன, சகல ஜகசிருஷ்டி கர்த்தாவாகிய பிரமாவென்ன, அவரது லோகமென்ன, அவரது போக போக்கியமென்ன, சகல ஜகத்பரிபாலன கர்த்தர்வாகிய விஷ்ணுவென்ன, அவரது லோகமென்ன, அவரது போகபோக்கியமென்ன, சகல ஜகசங்காரகர்த்தாவாகிய ருத்திரனென்ன, அவரது லோகமென்ன, அவரது போக போக்கியமென்ன, சகல ஜகதிரோதான கர்த்தாவாகிய மஹேஸ்வரனென்ன, அவரது லோகமென்ன, அவரது போகபோக்கியமென்ன, சகலஜக அநுக்கிரக கர்த்தாவாகிய சதாசிவமென்ன, அவரது லோகமென்ன, அவரது போகபோக்கியமென்ன, இன்னும் சாருவாக ஆருகத ஜைன நாஸ்திக பௌத்தாதிகளின் மதங்களிற்சொல்லிய தேவதா விசேஷங்களென்ன, அவர்களின் லோகங்களென்ன, அவர்களின் போகபோக்கியமென்ன, பின்னும் கிருஸ்து மதத்திற்சொல்லிய பராபரன் கிருஸ்து முதலிய தேவதைகளென்ன, அவர்களுடைய தான பரமண்டலமுதலிய லோகங்களென்ன, அவர்களின்

போகபோக்கியமென்ன, இன்னும் எம்மதங்களிலுஞ் சொல்லிய எத்தேவதைகளென்ன, அவர்களின் லோகங்களென்ன, அவர்களின் போகபோக்கியங்களென்ன, அந்தந்த மதங்களிற் சொல்லிய பிரசாத விசேஷங்களென்ன, அந்தந்த மதக் கோட்பாடாயுள்ள சாஸ்திரங்களென்ன, மேலும் எம்மதங்களையும் மதங்களெனக் கொள்ளவொண்ணா பெருமையையுடைய அத்துவித சாஸ்திரமென்ற வேதமுடிவின் பொருளாய் விளங்கிய நிர்க்குணப் பிரமமென்னும் பரமசிவமென்ன, அனைத்தும் தானாகவே விளங்கச்செய்தலாம். அந்தப்பரமசிவப் பிரசாதமாம் விளங்குதல் பரமசிவமாம் சைதந்நிய சுபாவத்தைத் தவிர வேறில்லவே யில்லை.

அப்பிரசாதத்தை அடைந்தவர்களெவர்களோ, அவர்களைப் பரமசிவமென நிருணயிக்கத்தடையில்லை. அவர்களது உள்ளத்தில் பரமசிவப்பிரசாதம் விளங்குகின்ற இயல்பைச் சுருக்கமாய்த் தெரிவிப்பதாவது; எம்மதத்தோர்களும் எச்சகங்களும் எவ்வித்தர்களும் எத்தேவர்களும் பின்னுமுன்னா எவர்களும் எவ்விதத்தாலும் நானெனத்தலையெடுக்கவொட்டாமல், யாவையும் தானாக விழுங்கித் தானாதன் வல்லமையாக விலாசிக்கும் வல்லமையுடைய சதுரனென மகிழ்ச்செய்கின்றதே அதின் சுபாவமாக அநுபவிப்பதாகும். சுருதி ஸ்மிருதி ஆகமபுராண இதிகாசங்களாலும் கூறவொண்ணா பரமசிவப்பிரசாதத்தின் மகிமாவிலாசத்தை எவர்களாற்றான் மதிக்கக்கூடும்.

ஆகையால் சகல வித்தியாப்பியாசங்களும் சகல [illegible]யதான தவசுகளும் சகல பக்திகளும் சகல யோகசாதனங்களும் சமாதிமுதலிய சகல தானங்களும் அபாரமகிமைகளைப் பொருந்திய பரமசிவப்பிரசாதத்தை யடையும் பொருட்டேயன்றி, வேறொரு பிரயத்தினத்தின் பொருட்டல்லவென்பது

சகல சாஸ்திரங்களின் உண்மையான அபிப்பிராய மெனக் கொள்ளுதலே, பரமசிவப்பிரசாதத்தை யடைந்த பெரியோர்களின் பெருமையாம்: அப்பெருமையையே பேசாப்பெருமையென ஸ்துதிக்கப்படுகின்றது.

அவ்வித பெருமை பொருந்திய பரமசிவப்பிரசாதியர்களான பெரியோர்களின் மகாபவித்திர தரங்களாயுள்ள பாததுளிகளாஞ் சச்சிதானந்த விலாசங்களுக்குத் திரிகரணங்களாலும் அநேககோடி நமஸ்காரம்.

இவ்விதமாய் நம்புகிறவர்களே அவர்களைப்போல செய்கின்றதே அவற்றிற்குச் சகசமகிமை.

முற்றிற்று.



இருபத்திரண்டாவது

அவிமுக்தஸ்தல மகிமை யுரைத்த பிரகரணம்

அவிமுக்த ஸ்தலமென்னப்பட்ட காசிக்ஷேத்திரத்தில் மரணமடைதலானது, அந்நுவிஞ்ஞானம் எப்படியோ அப்படியே மோக்ஷத்திற்கு முக்கிய சாதனமாக இருக்கின்றது.

ஞானந்தான் மோக்ஷத்திற்கு முக்கிய சாதனமென்று சகல சாஸ்திரங்களும் கூறியிருக்க, காசிமரணம் சாதனமாதல் கூடுமோவென்னில்? காசிமரணத்தால் ஞானமுண்டாய் சகலமும் மோக்ஷத்தை அடைகின்றன வென்று சுருதியிற் கூறப்பட்டிருப்பதால் கூடும்

சிரவணமனன நிதித்தியாசனதியான தாரண சமாதியின்றிக் காசிமரணத்தினால் ஞானம் எப்படி உண்டாகும்? சுருதி

களில் சத்தியசங்கற்பனாய்த் தெரியவருகிற ஈசனே காசியில் மரணகாலத்தில் சகல பிபீலிகாதி பிரமபரியந்தமும் ஞானோப தேசஞ்செய்து, மோக்ஷ ஸ்வரூபமான தன்சுபாவத்தில் ஐக்கி யஞ்செய்கிறேனென்னும் பிரதிஞ்ஞாவானாய்ச் சுருதியிற்கா ணப்படுவதாலும், அவ்வித ஈசன் தன்னாற் கற்பிக்கப்பட்ட ஜகத்தில் பிராணிகளுள்ளத்தில் ஜீவரூபமாயும் கூடஸ்தபிரம ரூபமாயும் அநுப்பிரவேசித்திருப்பதாலும், அவ்வித ஈசன் காசியில் பிராணிகளில் மரணகாலத்தில், அவைகளின் இந்தி ரியவல்லமை மனதிலும் மனதின் வல்லமை புத்தியிலும் புத் தியின் வல்லமை அந்தக்கரணத்திலுமாக ஒடுங்கும்போது, தனது சத்தியப்பிரதிஞ்ஞையாம் அருளால், அந்தக்கரணத்தி ற் சேஷித்துநின்ற சிவனைக் கூடஸ்தனாக விளங்குவித்துத் தன்னைத்தவிர வேறில்லாதவனாகக்கொண்டு மோக்ஷ பதவி யை அருளிச்செய்கின்றான்.

மேலும் ஈசனது திருவருளால் மோக்ஷபதவியை அடை ந்த பிரமநிஷ்டர்கள், தங்கள் பார்வையால் மற்றொரு சிவனுக் கு சிரவணாதி உதவியின்றி மோக்ஷபதவியை அருளிச்செய் யலாமாயின், சருவ வல்லமையுடைய அவ்வீசன், சிரவணா தி உதவியின்றி சிவர்களுக்குக் காசிமரணத்தில் மோக்ஷபத வியை ஏன் அருளிச்செய்யத்தகான்.

ஆனால் விருக்ஷாதிகளுக்கு ஞானமில்லாததினால் தன் னைத்தானறியும்படி அவைகளுக்கு எவ்விதமாய்ப் பிரகாசிப் பிக்கக்கூடுமென்னில்? பிரமநிஷ்டர்கள் தங்கள் சொப்பனத்தி ல் விளங்கிய விருக்ஷாதிகளைக் கண்டு, தங்களால் அவ்வித விருக்ஷங்களாய் விளங்கிய உபாதியில் பிரதிபிம்பித்த சிதாபா சனைக், கூடஸ்தன் மாத்திரமாகச்செய்து, கூடஸ்தனான தா னாகச் சாதனபெலத்தால் விளங்குவிக்கலாமாயின், ஈசனது சத்திய சங்கற்பத்தாற் றோன்றிய விராட் சிதாபாசனிலுள்

அடங்கிய விருக்ஷாதி சிதாபாசனே, அதிஷ்டானமான தானுக் என் அருளிச் செய்யத்தகான். ஈசனது கருணையாற் சித்தி யாததொன்றுண்டா; ஆகையால் காசிமரணத்தில் விருக்ஷ முதல் சகல பிராணிகளும் சுருதிகளின் பயன் பிரகாரம் முக் தர்களாகவே சித்திக்கின்றார்கள். சுருதி யுக்தி அநுபவம் இம்மூன்றுக்கும் மோக்ஷ பதவியின் பொருட்டு ஞானம் எப்படி ஒப்பப்படுமோ, அப்படியே இதுவும் ஒப்பப்பட்டே யிருக்கின்றது. அப்படியே சூதசங்கிதையில் தேவதேவ னுயும் மஹாநாதனுயும் மஹா காருண்ணியனுயும் உள்ள ஈசன் அருளிச்செய்திடில் கீடமுதல் அவனது பிரசாதத்துக் குப் பாத்திபட்டட்ட எந்த ஜெந்துவும் மோக்ஷ பதவியை அடைந்திருக்கின்றதென்று பரமசிவத்தின் மகிமை கூறப்ப ட்டிருப்பதாலும், சகலர்களுக்கும் இகபரசித்தியின் பொரு ட்டு சர்வாதிஷ்டானனுன ஈசனது கருணையே உரித்த யிருக் கின்றது.

முற்றிற்று

ஸ்ரீ சிவாய பரமகுருவே நம:



உ

சிவமயம்

திருநெல்வேலிக் கோடகநல்லூர்

ஸ்ரீ சுந்தரசுவாமிகள்

அருளிச்செய்த

# நிஜாநந்தவிலாசம்

திருவனந்தபுரம்

மேற்படி மாணாக்கர்

சுந்தரம்பிள்ளை M. A.

முன் பதிப்பித்த பிரதிக்கிணங்க

---

திருநெல்வேலி

மேற்படி சுவாமிகள் மாணாக்கர்

மாவடி சிதம்பரம்பிள்ளையால்

பரிசோதிக்கப்பட்டு

---

மேற்படி சுவாமிகள் மாணாக்கர்

பஜனை கெர். சிதம்பரம்பிள்ளையால்

---

திருநெல்வேலி:

நூருல் இஸ்லாம் பிரசில் அச்சடிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.

இதன் விலை அணா 14.

1904.

குரோதி௵

# பிரகரண அட்டவணை.


| எண்கள் | பெயர்கள். | பக்கம் |
| --- | --- | --- |
| க | அவஸ்தாத்திரய சோதன சம்பிரதாயப் பிரகரணம். | க |
| உ | குணத்திக்க ஐக்கிய ஆரோபகருக்கும் நிருபணப் பிரகரணம் | கo |
| ங | பிரம்மேச ஜீவஜக விசேஷ நிருபணம். | உங |
| ச | மாயாலக்ஷண நிருபணம் | ஙஉ |
| ரு | ஈத்தநுபவ நிருபணம். | சஉ |
| சா | சித்தநுபவ நிருபணம். | ருங |
| எ | ஆனந்தாநுபவ நிருபணம். | சாக |
| அ | மனோநாசயார்க்க நிருபணம். | |
| ,, | க வது பாகம் ரோகத்திரயாத்தியாச நிவிர்த்தி. | எஉ |
| ,, | உ வது பாகம் ஆவரணவிட்சேப நிவிர்த்தி. | அஉ |
| கூ | வேதாகம சம்பிரதாய நிருபணம். | கoக |
| ய | மதசங்கேத நிருபணம். | [illegible] |
| ,, | க வது பாகம் நியாயம். | ககச |
| ,, | உ வது பாகம் வியாகரணம். | ககசா |
| ,, | ங வது பாகம் பூருவமீமாம்சை. | கஉரு |
| ,, | ச வது பாகம் நிரீசுரசாங்கியம். | கஙங |
| ,, | ரு வது பாகம் சேசுரசாங்கியம். | கசஉ |
| ,, | சா வது பாகம் பௌத்தமதம். | கருங |
| ,, | எ வது பாகம் சகஜ மதம். | கருஅ |
| யக | உபாஸ்தி நிருபணம். | |
| ,, | க வது நரசிம்மோபாஸ்தி. | கசாரு |
| ,, | உ வது இராமச்சந்திரோபாஸ்தி. | கசாஅ |
| ,, | ங வது சுப்பிரமணியோபாஸ்தி. | கஎங |
| யஉ | பிராணவாருத்தி நிருபணம். | |
| ,, | க வது ஞானமார்க்கம். | கஎ௯ |
| ,, | உ வது யோகமார்க்கம். | கஅ-௯ |
| யங | பஸ்ம மகிமா நிருபணம். | ககூரு |
| யச | மஹா வாக்கியார்த்தப் பிரகரணம். | உoச |


முற்றிற்று.

உ

ஸ்ரீ சிவாயபரமகுருவேநம

# நிஜானந்தவிலாசம்

## பாயிரம்

சொன்மதி சாரத் தூயநற் பொருளின்
றுணைகழ றுதிக்குமா றதித்து
நின்மல மறைக ளித்தமுற் றேடும்
நிஜானந்தோ கம்பதந் தனையென்
புன்மொழித் தமிழாற் சாதகர் பொருட்டுப்
போதகஞ் செயப்புகு தலைப்பார்த்
தென்மதி பென்னை நகைசெயப் பின்னு
மியம்புவா னெழுந்ததோ ரவாவே.

## முதலாவது

### அவஸ்தாத்திரய சோதன சம்பிரதாயப் பிரகரணம்.

சர்வஞ்ஞ கருணாமூர்த்தியாயும் பரமகுருவாயும் விளங்காநின்ற என்பிராணநாதரே! நான் பரகதியடையு மார்க்கத்தை லளிதமாய் மனதுக்கு வரும்படி யுபதேசித்தருள வேண்டுமென்று மாணாக்கன் பிரார்த்திக்க:

ஆசிரியர் ஜீவன் தேகேந்திரிய அந்தக்கரணங்களையும் அவற்றின் அவஸ்தாத்திரயங்களையும் இவற்றிற்பிரதிவிம்பித்த சைதந்நியத்தையும் இவற்றின் அதிஷ்டானமான அக்

—யுதாசீன நித்திய சுத்த புத்த முத்த பரிபூரண கூடஸ்த்பிரமசைதந்நியத்தையும், விவேகமின்மையால் சுயம்வெண்மையான படிகத்தை ஜபாகுசும சந்நிதிவசத்தா லிரத்தஸ்படிகமெனக் காண்பதுபோல, நான் எனது என்றத்நியசித்து விபரீதமாய்க் காணுதலை நீக்கி உள்ளபடி பரமான்மாவான தன்னைத்தரிசித்தால் அஃதே பரகதியாகுமென அருள:

மாணாக்கன்—சுவாமி! வெண்மையான ஒருவஸ்திரத்தில் நிஜமாகக் கருப்புமுதலிய குணபேதமான அழுக்குப் பற்றினால், அதனை மற்றொரு கிரியாதந்திரத்தா லெடுத்து மாற்றலாம். படிகந்தி யில்லாமற் றோன்றி அபேதமாய்க் கலந்துநின்ற இரத்தவன்னம்போல, சேதிக்கத் தகாமலிருப்பதை, பெங்ஙனம் பிரிக்கலாமெனை:

ஆசிரியர்—அங்ஙன மில்லாமற் போனாலும், தேகேந்திரிய அந்தக்கரண சிதாபாச கூடஸ்த பரமான்மா முதலியவற்றின் விவேகாநுபூதியாற் பிரித்தெடுக்கலா மென்றருள

மாணாக்கன்—அவ்விவேகாநுபூதி யெத்தன்மைத்தெனை.

தேகம் இந்திரியம் அந்தக்கரணம் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி, இவற்றின் விஷயமான பாவாபாவ ரூபமாகிய ஜகம் அனைத்தும் ஜடமாகும். அவற்றை பிரகாசிப்பிக்குஞ் சித்து சிதாபாசனாகும். அதற்கும் அதிஷ்டானமாயிருக்குஞ் சித்து கூடஸ்த நித்திய போதமான பரமான்மாவாகும். அவற்றைப் பிரித்தெடுக்கக் கூடாமற்கலந்து தோன்றுகின்ற அத்தத்துவங்களைப் பிரித்துக்காணும் விபரம்—

## சாக்கிரத்திற்பிரித்துக் காட்டுதல்.

உலர்ந்ததொரு சாம்பற்றிரளையில் சிவ்லை ஜலசம்பந்தம்வர, அப்போது அத்திரளையில் எங்ஙனம் ஜலவியாபகந்

காணப்படுகின்றதோ; அப்படியே, ஞானேந்திரிய கர்மேந்திரியங்களையுடைய இத்தூலதேகஞ் சாக்கிராவஸ்தையிற்பாவாபாவரூபமான கடபடாதி ஜகத்தோற்றத்தை முன்னிட்டுக் காணப்படுங்கால், நிவாத தீபம்போல கரணகருவிகளை விசேஷிக்தல் செய்யாமல் நிறுத்தி, சிவபெருமானது கருணைபொருந்திய பரமகுருவின் பிரசாதமுடைய விவேகாநுபூதியாற் பார்க்கில், சப்ததாதுக்களின் கூட்டமானதேகம், இருவகையுடைய இந்திரியம், அவற்றின் விஷயங்களான ஜகம், இவற்றை யந்தவந்த நாமரூபங்களோடும் பின்னபின்னமாகத் தோன்றுவித்து, அவற்றை யுள்ளும் வெளியும் வியாபித்துப் பிரகாசிப்பிக்கின்ற தன்னை ஆன்மாவாயும், அவற்றைத் திருசியமான அனான்மாவாயும், அநுபவிக்கப்படும்.

ஜலசம்பந்தமுடைய சாய்பத்திரனை யுலர்த்திடில், அதில் ஜலசுபாவங் காணப்படாமல் ஜலவியாபகவின்மை யநுபவிக்கப்பட, அத்திரனைக்கும் ஜலத்துக்கும் எப்படிபேதங் கிரகிக்கப் படுகின்றதோ; அப்படியே, ஸ்தூலதேகத்தைச் சாக்கிராதி விவகாரத்திலிருந்து நீங்கி யவ்வான்மசைதந்நியஞ் சொப்பனதேகத்தை யடையுங்கால், இது ஸ்தூலதேகம், இது இருவகையுடைய விந்திரியம், இதுபாவாபாவரூபமான கடபடாதியான ஜகமெனும் ஞானம், என்று இவற்றைக் கண்டநுபவிக்கத் தேகாதிகளுக்கு ஆன்மசைதந்நியம் வேறெனப் பிரிந்தநுபவிக்கப்படும்.

### சொப்பனத்திற் பிரிந்துக்காட்டுதல்.

சொப்பனாவஸ்தையில் சூக்குமசரீரத்தி லிருந்து அவ்வான்மசைதந்நியம் பிரகாசிக்கும்போதும், அப்படியே தன்னாற் கற்பிக்கப்பட்ட தனது தேகமுதலிய சகலஜகத்தைத்

யும் வியாபித்துப் பிரகாசிக்கும்போதும், மேகமண்டலம் நக்ஷத்திரமண்டலம் சந்திரமண்டலம் இவற்றை வியாபித்துப் பிரகாசிப்பிக்குஞ் சந்திர சோதி, சிறிது பெரிது வட்டம் முதலிய வாகிருதி பொருந்திய அம்மேகாதிகளுக்கு அந்நியமா யெப்படி யநுபவிக்கப் படுகின்றதோ; அப்படியே, சொப்பனத்திற் கண்ட தனது தேக முதலிய சகலஜகமுந் தனதான்மசைதந்நிய வியாபகத்திற் றிருசியமாய்க் காணப்படுவதால், அவற்றை யனான்மா வெனவும், அவற்றை வியாபித்துக் கண்டதன்னை யனான்ம விலக்ஷண சொப்பன திருஷ்டாவான ஆன்மா வெனவும், விவேகத்தால் நிதானித்துப் பார்க்க, அங்ஙனமே யநுபூதிக்குவரும்.

அன்றியும், இவ்வான்மசைதந்நிய வியாபகம் அவித்தையெனுஞ் சுழுத்தியாங் காரண சரீரத்தை யடையுங்கால், முற் கூறிய சூக்கும சரீரமும், அதன் விவகாரத்திற் கண்ட சொப்பனப் பிரபஞ்சமும் அவ்வான்மசைதந்நிய வியாபகத்தை நீங்கினதுபற்றி தங்களையுள்ளபடி ஜடங்களாகக் குறித்துக் காணும்படி பவித்திடும். அதனாலும் அவற்றிற்கு ஆன்மா அந்நியனாக வநுபவிக்க வரலாம்.

## சுழுத்தியிற்பிரித்துக் காட்டுதல்.

சுழுத்தியில் அவித்தையாங் காரண சரீரத்தை யான்மசைதந்நிய வியாபகம் அடைந்தகாலத்தில், தான் அந்நியம் என்ற பேதக் குறிப்பு நீங்கி, அபேதமாயுங் குறித்ததாகக் காணப்படாமல் சூநியம் போல விளங்கி நிற்கும், அத்நிசையினும், அவனது பகுதியைக் கண்டநுபவிக்க வேண்டுமென்றருள:

மாணாக்கன்—சாக்கிரஞ் சொப்பனம் இரண்டவஸ்த்

ங்களிலும், ஸ்தூல சூக்கும மென்ற இரண்டு சரீரங்க ளோடு சகலஜகமுந் திருசியமாகக் காணப்பட்டதுபற்றி, இஃதான்மவஸ்து இஃதனான்மவஸ்து, வென்று விவேகித் தறியக் கூடும், சுழுத்திநிலையில் திருசியம் திருஷ்டரு தரி சனம் என்ற பேதம் அநுபவிக்கப்படாததினால், எங்ஙனம் ஆன்மானான்ம விவேகாநுபூதி கூடலாமெனः

ஆசிரியர்—திருஷ்டியிற் காணப்பட்டவொரு இரச் சுவை, இஃதென்று சாமாநிய ஞானத்தாற் குறிக்குங்கால் அதற்கு வேறாகிக் கற்பனையாற் றோன்றிய சர்ப்பம் புத்தி யின் வழியாயநுபவிக்கப்பட, அந்நிலையின் மிருந்த பய முடையவனாகி அப்பழுதையின் மீதில் விழுந்து மூர்ச்சை யடைய, அப்பொழுது கண்வழியே பழுதையைப் பற்றிப் புத்தியினுதித்த இஃதென்ற சாமாநிய ஞானமும், பிராந்தி யாலிரச்சுவிற் கற்பிக்கப்பட்டுப் புத்தியின் வழியாய்ச்சர்ப்ப மாகப் பிரகாசியா நின்ற சர்ப்பஞானமும், ஐக்கியப்பட்டு, அந்நிலையிற் சூனியம் போலப் பகுதிவிவேகத்துக் கிடமின் றி, யிருந்தபோதினும், மூர்ச்சை தெளியுங்கால், இஃது சர் ப்பம் என்ற இரண்டு ஞானமும் பிரத்தியக்ஷத்தை முன்னி ட்டுப் புத்தியின் வழியா யிரச்சுவில்முன்போலுதிப்பதால், உதித்த நிலையைக் கொண்டு விவேகித்திடிற், பேதத்தோ ற்றமற்ற மூர்ச்சைக்கு முன்னும் பின்னுமாகவுதித்த இவ் விரண்டுஞானத்தி, லிஃதென்ற ஞானநுபவம் வஸ்து-தந்தி ரமான பழுதையைப் பற்றிய விவேகஞானமெனவும், சர்ப்பஞானங் கர்த்திருதந்திரமான ஆரோபித சர்ப்ப விஷய விவேகஞான மெனவும், விவேகாநுபூதி யுண்டாகு மாறுபோல்; சுழுத்தியிற் காரண சரீரத்தோடு மைக்கிய ப்பட்டுப்; பேதாபேதத் தோற்றமின்றி, சூனியம்போற் கா

ணப்பட்ட ஞானசொரூபமான ஆன்மவியாபகம், விழிக்குங்
கால் நான் ஒன்றுந் தெரியாமற் சுகமாய்த் தூங்கினேனெ
ன்ற வநுபவமென்ன, அவ்வான்மா சுழுத்தியிலிருக்குங்
கால் அந்நியனுற் சிலசொற்கள் கொண்டு விழிக்குந்தன்
மை யென்ன, இவற்றைச் சோதிக்கில் அத்திசையைப்பற்
றிய ஆன்மவிவேக முதித்திடலாம். அஃதாவது—தூங்கும
வதரத்தில், சில சொற்கள் கேட்கப்படாமலுஞ், சில சொற்
கள் கேட்கப்படவும், அப்பொழுது கரணகருவிகளை
நீங்கிச் சூநியம்போன்றிருந்த அவ்வான்ம வியாபகம்,
யாதொரு கற்பனையையு முன்னிடாமல் தெளிவாயுதிக்
கப், பின்பு மற்றொரு சொல்லால் அதின் பொருளுடை
ய கற்பனையோடுங் கூடிட, அத்திசையை விவேகத்தா லநு
பவித்துப் பார்க்கின், சூநியத்தால் தன்னை யசத்துப்போற்
கொண்ட குறிப்பும் சூநியத்துக்கு வேறாகிக் கற்பனையை
யெதிரிடாமற் சில சப்தவிசேஷங்களாற் கரணகருவிகளின்
சம்பந்தமின்றி சாமாநியமா யுள்ளத்தில் விழித்தல் மாத்திர
மாயுதித்துப் பிரகாசித்தலின் குறிப்பும் பின்பு சில சப்தங்
களாலுண்டாகிய அதன் பொருளான கற்பனையோடுங் கூடி
ப்பிரகாசித்தலின் குறிப்பும், நிதானமாய் விவேகத்துட
னநுபவித்துப் பார்க்கில் சூநியம் போன்ற வசத்துத்தன்மை
யென்ன சாமாநியமாய் விழித்தலின் குறிப்பென்ன, கற்
பனையோடுங் கூடிப்பிரகாசித்தலென்ன, இவற்றிற்கும் இவ
ற்றை திருசியமான வநான்மவஸ்துக் களாகப் பிரகாசிப்
பிக்கின்ற திருஷ்டாவாகிய ஞான சொரூபமான தனக்கும்
பகுதிஞ் ஞாநாநுபூதி யுண்டாகலா மென்பதே.

ஆதலால், ஆகாசத்தி லோரிடத்திற் பதிவாயிருக்கின்
ற சந்திரமண்டலந் திருஷ்டியின் சலநபேதத்தாற் பார்க்கப்
படுங்கால், அந்தவிடத்திற் சந்திரமண்டல மிலதுபோலும்,

நான்குகோணுக் கப்பாலிரண்டு மண்டலமாக வுதித்துப்பிர
காசிப்பதுபோலும், அவற்றினுந் திருஷ்டியின் சலநபேதத்
தாலொருமண்டலங் கண்டுங்காணாததாயும், மற்றொரு மண்
டல் நன்றாக வட்டம்பொருந்திப் பிரகாசிப்பதாய்க் காணப்
படுமளவில், அவனது ஸ்தானத்தி லவனது சூநியமும், மற்
றொரிடத்தின் மண்டலத்தின் குறிப்பின்றி யவனதுதிப்பும்;
வேறோரிடத்தின்மண்டலம்பொருந்திய விசேஷமானவவன
துதிப்பும், ஒருதிருஷ்டியிற் காணப்படுவதுபோல; கரணகரு
விகளோய்ந்து ஆன்மாமாத்திரமாகச் சேஷித்தவிடத்திற்,
சூநியம்போன்ற அவனதின்மைத்தோற்றமும், அதற்குப்
பேதமாகி விசேஷமின்றி விழித்தல்மாத்திரமான சாமானிய
வுதிப்பும், சங்கற்பத்தோடுங் கூடிய விசேஷமானவுதிப்பும்,
எந்த ஆன்மசைதந்நிய வியாபகத்திற் பேதித்துக்காணப்படு
கின்றனவோ; அந்த ஆன்மசைதந்நிய வியாபகத்தை வேறாகக்
கண்டு, அதனை வஸ்துதந்திரமான அகம்பதார்த்தமாக நிர்
ணயமாயநுபவித்து, அவனுக்குத் திருசியமாகத்தோன்றிய
சூநிய சாமாநிய விசேஷக்குறிப்புகளைக்கர்த்திருதந்திரமான
கற்பிதவஸ்துவாயுந் தெளிந்து, அக்கற்பிதங்களும் பேத
மா யநுபவிக்கப்பட்டும், விவேகத்தால் வாதிக்கப்பட்டும்,
இரண்டுகாலத்துந் தனததிஷ்டானத்துக்கு வேறாயிராதெ
ன்று மதித்து, இரச்சுவிற்றோன்றியசர்ப்பத்தை இரச்சுசத்
தைபால் வியாபிந்த, அச்சத்தைபாற்சர்ப்பசத்தை முக்கால
த்திலும் வேறாயில்லாதடங்கி, இரச்சுவின் வியாபகவிருத்
தைக மாத்திரமாய்ப் பிரகாசிப்பதுபோல; ஞானரூபமான
ஆன்மாவின் சந்நிதியால இச்சூநியஞ்சாமாநியஞ் சங்கற்ப
மான விசேஷம், அப்படியே சொப்பனஜாக்ரஸ்தூல தேகத்
துடன் கூடிய சாக்கிரபிரபஞ்சம் இவற்றை வியாபிக்கச்
சாதனமான கருவிகரணங்கள் இவ்வனைத்தையு மநுபவித்த

படி நினைப்பா லொருகாலத்தி லேதிரிடில்; அக்காலத்தில் ஆதியந்தமற்ற ஆன்மப்பிரகாச சமுத்திரத்தில் நாமரூபங் களான அலை குமிழி நுரை முதலான விப்பிரபஞ்சமனைத்து மிதப்பதாக வநுபவத்துக்கு வரும். ஆதலால், காற்றேறப் ந்த வியாபக சமுத்திரத்தி னுதித்த அலை நுரை குமிழிகள் அந்தந்த விடத்தில் ஜலமாத்திரமாயடங்கி வியாபக சமுத் திரமாத்திரமாய்க் காணுவதுபோல்; அநேக நாமரூப விசித் திரங்களான திருசியபேதமுடைய அநேக பிரமாண்ட மண்டலங்களாகத் தோன்றிய ஸ்தூல சூக்குமை காரணங்க ளென்னும் ஜடப்பிரபஞ்சங்கள், வாசனையென்னுங் கற்பனை யாஞ்சலநவாயு வடங்க, அவை தத்தமிடத்திற்றோனே ஆதார விருத்தினான சமுத்திரமாத்திரமாயடங்கிக் காணும்.

அவ்வித விருத்திசமுத்திரத்தை யுற்றுப்பார்க்குங்கால் ஆதிமத்தியாந்த சூனியமாய், ஸ்தூல சூக்குமை காரணாதி பே தமின்றி ஏகாகாரமாய், ஞானானந்தகனமா யநுபவத்துக்கு வரும். அவ்வநுபவமுங் கரதலாமலகம்போற் றனது ஞான ப்பிரகாசத்திற் றிருசியமாய்க் கிரகிக்கப்படுவதனாலும், திரு சியமனைத்தும் அநான்மா வானதினாலும், அதை யகம்பதா ர்த்த மன்றெனவும், அதனை வியாபித்துப் பிரகாசிக்கின்ற சொரூப ஞானவன்னியில் திருசியமான விருத்திக்குசமம் உதிக்கக்காரணமில்லையெனவு நிஷேதித்திட, அதுவுமதீத் டான ஆன்ம சொரூபானமாத்திரமாய் நீங்கிவிடும். இவ் வான்ம சுபாவத்தை யகங்கார விருத்தி சம்மந்தமின்றித்தா னாகப் பிரகாசிக்கிறபடி யநுபவிப்பாயாக வென்றுபதேசித் தருள்:

மாணாக்கன்—அப்படியே ஸ்தூல சூக்குமை காரணங் களாகத் தோன்றிய பிரமாண்ட மண்டலங்களைத், தன்னநு பவத்திற் கண்டபடி, பகிரிந்திரியங்களால் வியாபிக்கப்

பட்டபொருள்களைப், பகிரிந்திரியவியாபாரோப யோகியான
விஷயாதார அகண்டவிருத்தியினும் அந்தரோந்திரியர்களால்
வியாபித்துப் பிரகாசிக்கப்பட்டசூக்குமப்பிரபஞ்சங்களைச்சூக்
கும விஷயக்கிரகண வுபயோகியான விஷயாதார அகண்ட
விருத்தியினும், காரணப் பிரபஞ்சத்தை, வியாபித்துப் பிர
காசிப்பிக்கின்ற காரணப்பிரபஞ்ச விஷயக்கிரகண சாமக்
கிரியையான விஷயாதார அகண்ட விருத்தியினுமாக வியாப்
பிக்க, முன் விக்ஷேப விருத்தியாற் றோன்றிய ஸ்தூலசூக்
கும பஞ்சபூதங்களின் விகாரங்களான, ஸ்தூலசூக்கும சரீ
ரங்களோடுங் கூடிய பிரபஞ்சா பாவமென்ன, அவித்தையா
ற்றோன்றிய பாவாபாவபிரகாசக வான்மப்பிரகாசத்தை,
சூரியப்பிரகாசத்தை மறையாநின்ற விருள் போல மறைக்
கின்ற காரணப்பிரபஞ்சாபாவ மென்ன, இவற்றைத்தனக்
கபேதமாய்க் காட்டிய அகண்ட பரிபூரண விருத்திமாத்திர
மாகத் தனதநுபவத்தில் வந்தபோதிலும், அதையும் ஆசிரி
யரது உபதேசப்படி அதிசூக்குமமாகிய தனது திரிபுடி
சூனிய சொரூபஞானத்தை யவ்விருத்தியில் உள்ளும்வெளியு
மிடைவிடாமனிறைந்து பிரகாசிக்கின்றபானத்தை விருத்தி
சம்மந்தமின்றித் தானாகவநுபவித்திட, முற்கூறிய விருத்தி
யு முக்காலத்திலுமில்லாததாக நீங்கிப், பாவாபாவாத்மக
விருத்திகளில்லாத சொப்பிரகாசமான தனதான்ம சுபாவத்
தைச் சுவாநுபவத் தாலடைந்து, சுவாத்மானந்த சமுத்
திரத்தின் முழுகி மூன்றுபாவனைகளு மற்றவனானான்.

---

# இரண்டாவது
## குணமிக்கஜந்திய ஆரோபகுரோக்ஷமநிரூபணம்
## பிரகரணம்.



மாணாக்கன்—ஆசிரியனை வந்தித்து வணக்கத்துடன் இங்ஙனம் பாவாபாவவிருத்தி சம்பந்தமின்றிய சொப்பிரகாச பரமான்மா, ஆவிர்ப்பாவ திரோபாவமின்றி ஏகமாயெக்காலத்திலும் எங்கும் பிரகாசிக்க, அத்தியாரோபாபவாதங்களுக்கு ஆதாரவாய் நின்ற பிரபஞ்சாத்தியாசம், ஆபாசமாயாவது வரக்காரணமேது? நான் ஒன்றுந்தெரியாமல் சுகமாய்த்தூங்கினேன் என்பதைச் சோதிக்கும் விபரமெப்படி? இவற்றையருள் செய்யவேண்டுமென்று கேட்க:

ஆசிரியர்—நானெனவும் சுகமாயெனவும் ஒன்றுந்தெரியாமற் றூங்கினேனெனவுங் காணப்படுவதில் இஃது சர்ப்பமென்றதிற், பிரத்தியக்ஷமா யநுபவிக்கப்பட்ட இரச்சுவில் இஃதென்ற ஞாஞ்சாமாநியஞானமாயிருந்தபோதிலும், பிரமாநுபவஞானமாவது போல, நானென்ற ஞானஞ்சாமாநியஞானமா யிருந்தபோதிலும் பிரமாநுபவ ஞானமாகும்: பழுதையிற் சர்ப்பமென்ற ஞானம் விசேஷஞானமாயிருந்த போதிலும், விவேகாநுபூதியால் வாதிக்கப்படுவதுபற்றி அப்பிரமாணஞானமாவது போல, ஒன்றுந்தெரியாமற்றூங்கினேனென்ற ஞானம், விசேஷஞானமாயிருந்தும் அப்பிரமாண ஞானநுபவமாகுமென்றுபதேசித்தார்.

மாணாக்கன் அஃதெங்ஙனமெனா:

ஜந்மாந்திரத்திற் சூத்திரனாயிருந்தவன் மற்றொருஜந்மத்திற் பிராமணனாயிருக்குங்கால், சிகா யஞ்ஞோபவீதமு

டைய தனது தேகத்தைக்கண்டு, அதைமறந்து, தன்னைப் பிராமணனாக நிர்ணயமாய்க் கொள்வதுபோல்; சாக்கிராவஸ்தையில் இரத்தமூத்திர மாம்சாதிகளாலுண்டாகிய ஸ்தூலசரீரத்தை நானெனக்கண்ட நினைவு நீங்கிச், சொப்பனவஸ்தையை யடைய, மனோமாத்திரத்தாற் கற்பிக்கப்பட்ட நானெனும் விந்துவில், வாசனையாற்றோன்றிய சரீரங்காணப் பட, அதனையே நானென வநுபவிக்க, பின்பு அந்நினைவு நீங்கிச் சுழுத்தியை யடைய, அவ்விடத்து இந்திரியவாசனை மனோவாசனை இரண்டும் அகங்காரமாம் விந்துவை நீங்கி விட்டதால், ஸ்தூலசூக்குமக் குறிப்பாம் விசேஷமின்மையுங், கரணத்தினுதவி யின்மையால் அவித்தையாந்தகாரத்தால் விழுங்கப்பட்டு சூக்ஷமமாத்திரத்திலதுவும் லயிக்க, இந்தனமில்லாத அக்கினி கணம்போல, அகங்காரப்பிரதி விம்பித ஜீவஞானமுந், தனது விம்பமானகூடஸ்தசைதந்நியத்தில் அதுமாத்திரமா யடங்கிநின்று, பின்பு கர்மவாசனாவசத்தால் நிராகாரமாகியவிருத்தியுதிக்க, அதிற்கூடஸ்தன் சொரூபப் பிரதிவிம்பமாகத்தோன்ற, அவ்விருத்தியிற் பிரதிவிம்பப் பிரகாசத்தால் அவ்வகங்காரமெனும் விந்துபூர்வம்போல அகமெனப்பிரதிபலிக்க, அவ்வகங்கார விருத்தியில் நிராகாரவிருத்தியின் கண் முன்பிரதி விம்பித்த சைதந்நியமே பிரதிவிம்பிக்க, அவ்வான்மப் பிரகாசத்தை யுடைய அகங்காரமும், அக்கணத்திற்றனக்கு விஷயக்கிரகண சாமக் கிரியையாயுள்ள தேகேந்திரியாதிகளின்வாசனை தன்னிடத்தி லுதியாதது கொண்டு, அகமகமெனத் தான்பிரகாசித்தும், அவ்விடத்து நிர்விகாரச விசேஷ கூடஸ்தனுகிய தனது விம்பசைதந்நியந் தனக்காசிரயமாய் விளங்கிக்கொண்டிருந்தும், விவேகமின்மையால் அதனையும், இவ்வகங்காரவிருத்திக்குச் சாக்ஷியாய்க் குறித்தறியச் சாமர்த்திய

மற்று, இவ்வகங்கார விருத்தியிற்பிரதிவிம்பித்துப் பிரகா
சிக்கின்ற தன்மையும், அகங்காரவிர்த்திக்குச் சித்ஜடவிவே
கமில்லாததால், இஃதகங்காரம் தானகங்காரி யெனவுமறி
ய வல்லமையற்று, நிர்விஷயமாய் நிற்க நிர்விருத்திக நிரா
கார கூடஸ்தசைதந்நிய மென்ன நிராகார சுத்தசத்துவவி
ருத்திப் பிரதிவிம்பித சவிசேஷ கூடஸ்தசைதந்நிய மென்
ன, அகங்காரவிருத்திப் பிரதிவிம்பித வகங்காரிசைதந்நிய
மென்ன, இம்மூன்றும் அகங்காரவிருத்தியில் விஷயவாச
னை யுதியாததனால், நிர்விஷயமாயகங்காரமிருந்து மிலதுபோ
லிஃதென்று நிர்ணயிக்கக்கூடாததனால், நிராலம்பமாய் வா
டிமயங்க, அக்காலத்திற் றன்னுள்ளடங்கிய தமோகுணம்
அவ்வகங்கார விருத்தியிற் பிரகாசித்திருக்கின்ற அவ்வகங்
காரசைதந்நியத்தையும், அதற்கு விம்பஸ்தானமா யிருக்கி
ன்ற கூடஸ்த சைதந்நியத்தையும், ஞானமாகக் கொள்ளா
திருக்கும்படி லயரூபமாயிருந்து மயக்க, அத்திசையிலய
ரூபமான தமோகுணத்தா லுண்டாகிய அகங்காரத்தின்
கோரமான மயக்கை, அகங்காரத்திற் பிரதிவிம்பித்த அக
ங்கார சைதந்நியமு மடைந்ததுபோற் பவித்துப்பிரகாசிக்
க, அவ்வகங்காரவிருத்தியி னுள்ளடங்கிய ரஜோகுணம்
தனதுசக்தியால் அதிசூக்கும மாகிய வாசனாரூபமான ஸ்தூ
ல சூக்கிமகருவி கரணங்களென்ன, அவற்றின் விஷயங்க
ளென்ன, அவற்றின் ஸ்பூர்த்தியைப் பிரஞ்ஞாமாத்திரமா
யுதிப்பித்திட, அக்கணத்தி லவ்வகங்கார விர்த்தியினுள்
ளடங்கிய சத்துவகுணம், அகங்காரவிருத்திக்கு விவேகம்
லேசமெனு மில்லாததினால், ரஜோகுணத்தாற் றோற்றிய
அதிசூக்குமங்களான அவ்விஷயங்களை அதிசூக்குமமாகக்
காட்டி, அவற்றையே அஃது அவலம்பனமாக அபிமானித்
து நிற்கச்செய்ய அவ்வநுபூதியில் அவ்வித அவலம்பனமு

டைய அகங்காரம், அச்சத்துவகுணத்தி னுதவியால், அ திசூக்குமமாய் வாசனுரூபபோக போக்கிய போக்துருவெ ன்னுந் திரிபுடியைக் கொடுக்காநின்ற கருவிகரணங்களோ டேங் கூடி, அதினின்றும் முந்தின அநுபவத்தையும், வர்த் தமானத்தி னநுபவத்தையும், பேதமாகக்கண்டு, இவ்வ ர்த்தமானு நுபவத்தின் றோற்றமின்மையே, பூதகாலாநு பவத்தில் ஞானத்தினின்மையாகக் கற்பிக்கப்பட்டு, அக் கற்பனையாற் கூடஸ்த பரமான்ம சைதந்யமாகிய தனததி ஷ்டான சைதந்யமே, ஒருதாணுவே சோரனுகத் தோன் றுவதுபோல, அஞ்ஞானமாகத் தோன்ற, அப்படியே த னது சொரூபஞ் சகஜமாக மறைபட்டு, ஸ்தூல சூக்குமவு பாதிகளில் ஆன்மபுத்தி நடித்து, அந்த அனுன்ம வஸ்துவி ற் றடித்த ஆன்மபுத்தியாற், சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத் தியென்னும் மூன்றவஸ்தைகளிலும், ஆவரணம் விக்ஷேப மென்ற இரண்டு சக்திகளாற், சொரூபஞானப் பிரகாசக விவேகஞ் ஞான மின்றி, பிராந்தன் போற்சுழலுகிறுன்.

இதனை விவேகித்துச் சோதித்து நீக்கும் விபரம்—ஸ் தூலவியாபக அகந்தையை ஸ்தூலத்துக்குவேறுகவும், அப் படியே ஸ்தூலத்துக்கு வேறுயும் சூக்குமத்தை வியாபித்த தாயுமிருக்கின்ற அவ்வகந்தையையே சூக்குமத்துக்கு வே றக்கி, அதனையே அச்சூக்குமத்துக்குக் காரணமாகவும் ஸ் தூல சூக்கும பீஜமாகிய அக்காரணத்தை வியாபித்த அகந் தையை அக்காரணத்துக்கு வேறுகவும், அகம்பதார்த்தமெ னவுங்காணவேண்டும். அங்ஙனங்காணில், அவ்வாவரண வி க்ஷேபசக்திகளும், அவற்றுற்றோன்றிய மூன்றவஸ்தைகளு ந், தனக்கு வேறுகத்தோன்றி, அனுன்ம வஸ்துக்களாக வி க்ஷேதிக்கப்படும். சுரோத்திரத்தினுல் ரூபங்காணப்படாதது போல, ஆவரண விக்ஷேபங்கணீங்கிய ஆன்மதிருஷ்டி மா

த்திரமாக நிற்க, முற்கூறிய வனுன்மவஸ்துக்கள் தோற்று ம் னிராதாரமாக நசித்திடும். அக்காலத்திற் றுவைதவஸ் துவில்லாததால், அகம்பதார்த்த மாத்திரமாக வநுபவத்து க்குவரும்.

அவ்வநுபூதியில், ஸ்தூல சூக்கும காரணமாகிய சகல பிரபஞ்சமும், கூடஸ்தபரமான்ம சொரூபசைதந்யமும், விபாபகசைதந்ய மாத்திரமாக, ஜல புத்புத தரங்காதிகளு டன் கூடிய வொரு விஸ்தாரம் பொருந்திய தடாகத்திற், ச கஜமாகவே யிடைவிடாமனிறைந்த வியாபகாகாய மறைந்து காணினும், தடாகத்திற் பிரதிவிம்பித்த ஆகாயம் பார்க்கப் படுங்கால், ஜலவிகாரமான பேனபுத்புத தரங்காதிகளும், அதற்காதாரமாகியஜலமும், விம்பகாயத்தை மறைக்கும்வல் லமையற்று, அநுபூதியிற் காணப்படாமற், பிரதிவிம்பாகாய சந்தையைத் தனக்கு வேறாகக்காட்டாமல், விம்பாகாயசத் தையே, யெங்ஙன மநுபவிக்கப்படுகிறதோ; அங்ஙனமே ய நுபவிக்கப்படுவதுதான். இங்ஙன மநுபவம்வரில், அத்தி யர்சத்தின்விவரமும்,சுழுத்தியி லான்மானுன்ம விவேகமுதி க்கும் வகையும், லளிதமாய்த் தெரியலாகு மென்றாசிரிய ரருள :

மாணுக்கன்—அகந்தை மூன்றுபாதிகளை வியாபித்த தன்மையையும், அதனை அவற்றிற் கப்புறப்படுத்தும் வகை யையும், விவரமாய் விஸ்தரித்துத்தெரிய வுபதேசித்தருள வேண்டுமென :

ஆசிரியர்—சுழுத்தியினின்று முதித்த வகந்தைதனது சத்துவம் ராஜசு தமசு என்னுமூன்று குணங்களில், தமோ குணத்தா லகம்பொருளை யஞ்ஞானமாகக்கொண்டு, ரஜோ குணத்தா லதிசூக்குமமாக வாசனமயங்களான கருவிகர ணங்களைக் கற்பித்துச், சத்துவகுணத்தால் அவற்றை யவல

ம்பித்து, அவ்வவலம்பப்படி யதிற் பிரதிபலித்த வகங்காரி
சைதந்நியமும், அங்ஙனமே பிரகாசிக்கின்றதென, முன்னமே
நிரூபிக்கப்பட்டிருக்கிறதை, யின்னும் விசாரிப்பிக்கின்றோம்
அஃதாவது-தமோகுணமென்பது, தன்னிற் பிரதிவிம்பித்த
சைதந்நியத்தைத் தெளிவாகக்காட்டாமல், மறைந்ததுபோ
லக் காண்பிக்கும் வல்லமையையுடையது. ரஜோகுணந்
தன்னிற் பிரதிவிம்பித்தசைதந்நியத்தை மறையாமலும், சைத
ந்நியமாகக் காட்டாமலும், நாமரூபங்களாகத் தோன்றுவி
த்துப், பிரகாசிப்பிக்கும். சத்துவகுணம், முந்தின விர
ண்டு குணங்களுக்கு முட்பட்டுப்போனதால், நாமரூப விஷ
யாகாரப் பிரதிபலனங்களையும் ஜடம்போன்ற தமப்பிரதிபல
னத்தையும் அகம் விருத்தியிற் பிரதிபலித்த சைதந்நியத்து
க்குத், தன்னிற் பிரதிபலித்த சைதந்நிய சத்தாபெலத்தால்,
வெவ்வேறாக நன்றாய்க்காண்பித்து, அப்படியே பிரகாசிப்பி
க்கும். அகந்தை, சத்துவத்தின் பெலத்தாற்றன்னிற் பிர
திவிம்பித்த சைதந்நியப்பிரகாசங்கொண்டு, அவற்றை வெவ்
வேறாய்க்காணினுந், தனது சுபாவமான சொந்தத்தன்மை
யென்னுந் தாதான்மிய சம்பந்தத்தால், அவற்றிற் றாதான்மி
யப்பட்டு நிற்கும்.

இம்மூன்று குணங்களாற் கற்பிக்கப்படும் விஷயங்க
ளையும், அவற்றை யகந்தை தாதான்மியப்படு மியல்பையுங்
கூறுவாம். மூன்றுமவஸ்தையினின்றும் அகந்தையுதிக்க;
அதிற் பிரதிவிம்பித்த சைதந்நியப்பிரகாசத்தால், தன்னுள்
ளடங்கிய சத்துவகுணத்தின்பெலத்தால், அகந்தைக்கு வர்
த்தமானத்தி லகமர்த்தஞானமும், பூதகாலத்தி லகமர்த்த
ஞானுபாவமும், அஃதே யஞ்ஞானமுமாகப் பேதித்துக்கா
ணப்படும். அங்ஙனந் தனது ஸ்பூர்த்திக்குப் பேதமாகச்,
சத்துவகுணத்தாற் காண்பிக்கப்பட்ட, தனது ஸ்பூர்த்தி

யபாவஞானரூபமான அஞ்ஞானத்தைத், தனது சுபாவமாகிய தாதான்மியத்தன்மையாற் சம்பந்தித்துத், தாதான்மியப்பட, அத்திசையிற் றனதபாவத்தை, தாதான்மியமாயடைந்த தன்னிற் பிரதிவிம்பித்த சைதந்யமும், அகங்கார நீங்கிய தனது ஸ்பூர்த்திக்கு முன்பான, தனது தாதான்மியத்துக்கு அவலம்பமாயுள்ள, தனததிஷ்டான விருத்தியிற் பிரதிவிம்பித்த சைதந்யம், அவ்விடத்திற் பிரகாசித்துநிற்கவும், அத்தாதான்மிய திசையிலுதித்த லயரூபதமோகுணத்தின் ஆதிக்கத்தா, லதிஷ்டானவிருத்தி பிரதிவிம்பித சைதந்யமும், அதனைத்தாதான்மியமாயடைந்த அகந்தாவிருத்திப் பிரதிவிம்பித சைதந்யமும், அகந்தாவிருத்திக் கத்திசையிற், சத்துவத்தினுதவிதமசால் வாதிக்கப்பட்டு, அத்தமோகுணத்திற் பிரதிவிம்பித்த சைதந்யம் பிரகாசரூபமாயிருப்பினும். அஃதும் அவ்வுபாதி பெலத்தால் ஜடம்போலவே பிரகாசிக்கும். அங்ஙனம் பிரகாசிக்க, அவ்வுபாதியையு மதின்மயமான தன்னையுந் தன்னுற் றனதின்மையாகக் கற்பிக்கப்பட்ட தனததிஷ்டமான விருத்தியையும், அபேதமாகக்கொண்டு, இஃததிஷ்டானம், இஃதிலயரூப தமோகுணம், எனப்பிரித்தறிய விவேகமற்று, லயரூப தமோகுணத்தின் மயக்கத்தான், மயங்கிநிற்கும். இதுவே யகந்தை தாதான்மியப்படு மியல்பாம்.

இனியிஃதை யப்புறப்படுத்தும் விபரங்கூறுவோம். நீ விழித்திருக்குங்காற், சுழுத்திதிசையையடையாமலடைந்து பின்பு அதினின்றும் அகந்தையை யுதிப்பித்து, எங்ஙனம் கடபடாதிகளை யிந்திரியசத்தையால் வியாபித்தநுபவிக்குங்காற் கடபடாதி நாமரூபங்களோடுகூட வநுபவிக்கப்படுவதுபோலவே. யவற்றிற்கு நான்குபாரிசங்களிலு நாமரூபங்களின்றி, நிராகாரமா யொரு வியாபகசைதந்யம், நிர்விஷய

மா யநுபவிக்கப்பட்டு, அதிற் கடபடாதி நாமரூபங்கள் காணப்படாததுபற்றிக் கடப்டாதிகளின்மை கற்பிக்கப்பட்டு, அவ்வியாபக சைதந்யபாநுபவமே, கற்பிக்கப்பட்ட அவ்வபாவ விருத்தியிற் பிரதிவிம்பித்து, அவ்வபாவ விருத்தியை யபாவமாகப் பிரகாசிப்பிக்கக் காணப்படுகின்றதோ; அங்ஙனமே, அவ்வகங்கார விருத்திப்பிரதி விம்பித சைதந்யப்பிரகாச பெலத்தா லவ்வகந்தாவிருத்தி ஸ்புரித்துப் பிரகாசிக்க, அதனைப் பிரகாசிப்பிக்குஞ் சைதந்யம் அதனிலுள்ளடங்கியதாகாமல், அவ்வகங்காரங் கடபடாதிகளைப்போல ஜடமாயுங் கண்டமாயுமுள்ள வியல்பையுடையதானதாற், கண்டமாகிய ஜடத்தை பிரகாசிப்பிக்குஞ் சைதந்யம் அகண்டமானதால் அவ்வகண்ட சைதந்யம், அவ்வகந்தையினுற்பத்திக்கு முன்னு முற்பத்திக்குப்பின்னு முற்பத்தி திசையினுமாகிய சகலபாரிசங்களிலுந், தெரிந்து வியாபித்தநுபவிப்பதினால் அங்ஙனம் வியாபித்தநுபவிக்க, இவ்வகந்தையுதித்ததுபற்றி இவ்வகந்தையினநுபவமும், இவ்வகந்தையுதியாததுபற்றி முந்தியவிடத்தி லிதினின்மையினநுபவமுங் காணப்படும்.

கடாபாவங் கற்பிக்கப்படவேண்டுமானாற்கடத்திற்கற்பிக்கப்படமாட்டாது.கடத்துக்குங் கடத்தினின்மைக்குமாதாரமான பிருதிவியிற்றானே கற்பிக்கப்படும். இங்ஙனமாயின், உதித்தவிடத்தில் இவ்வகந்தையி னிருப்பையு, முதிப்புக்குமுந்தினவிடத்தி லிவ்வகந்தையினின்மையுங்கற்பிக்கப்படவேண்டுமானால், ஒரு ஆதாரத்தைப்பற்றிக் கற்பிக்கப்படவேண்டுமேயன்றி, நிராதாரமாய்க் கற்பிக்கப்படமாட்டாது. என்றிங்ஙன மநுபவதிருஷ்டியினாலாலோசித்து, அவ்வகந்தா ஸ்பூர்த்தியையும், முந்தியதிசையி லவ்வகந்தையின்மையாய்க் காணப்படுவதா லதனின்மையையு, மநுபவதிரு

ஷ்டியினு னிதாநித்து,அவ்வகந்தையி னிருப்பையு, மதினின்மையையும், எந்த ஆதாரத்தினிடமாகக் கற்பிக்கப்பட்டுத் தோன்றுகின்றதெனப் பார்க்கில், இவ்விரண்டுந் தங்களுக் காதாரமான பாவாபாவத்தோற்றமற்ற சூநியத்தைக் காரணமாகக் காண்பித்து நிற்கும், அங்ஙனம் பாவாபாவந்தோற்றமற்ற சூநியா நுபவத்தால் வியாபிக்கப்படில், அச்சூநியமுந் தன்னைப்பிரகாசிப்பியாநின்ற அதிஷ்டானப் பிரகாச சத்தையையே, தனக்காதாரமாகக் காண்பித்து நிற்குமேயன்றி, நிரூபகாரமாயிராது, அங்ஙனம் பாவாபாவத்தோற்றமற்ற சூநியா நுபவமென்ன, அகங்காரவின்மைத்தோற்றத்தி னநுபவமென்ன, அகங்காரத்தோற்றத்தி னநுபவமென்ன, இம் மூன்றும் முற்கூறியபடி பின்னபின்னப்பிரகாரமாக, அணு மேரு இவைபோல திருசியத்தின் பேதத்தையடைந்து, சாக்கிரதிசையிற், பாவாபாவத்திருசியத்தோற்றந் தானகக் காணப்படாமற் றனக்கந்நியமாக்க் காணப்படுவதுபோல, சுழுத்திக்குப் போங்காலத்தும், அதினின்று விழிக்குங்காலத்தும், திருசியரூபத்தையடைந்த அகந்தை, அதனின்மை இவ்விருதோற்றமுமில்லாத சூநியம், இம்மூன்றுந் தானகக் காணப்படாமற் றனக்கந்நியமா யநுபவிக்கப்படும். ஆனல் இம்மூன்று தோற்றமும் அகங்காரத்தின் குணவிகாரமேயன்றி, இந்த மூன்றையும் பிரகாசிப்பித்த ஆன்மசைதந்நியத்தின் விகாரமாகாது.

இதனை யநுபவத்திற் கூறுவாம். அகங்கார மூன்று குணமுடையதானதால், அம்மூன்று குணத்தையும் பிரித்துக்காணில், அவ்வகங்காரஞ் சொரூபமற்று, ஆன்மசைதந்நியமாத்திரமாய், அகம்பதத்தினுண்மைப் பொருளாய்ச் சேஷித்து நிற்கும். அஃதெங்ஙனமெனில் தோற்றினதைத் தோன்றுமற்செய்தல், இலதை யுளதுபோற்றோன்றச் செய்

தல், தோற்றியதைப்பரிபாலித்தல் இம்மூன்றையும், வெண்மை, சிவப்பு, கருப்பு இம்மூன்றையும், ஒரு மிருத்கடத்திற் குணங்களாகக்கண்டு, அவற்றைப் புத்தியினாற் பிரித்தெடுத்திடிற் குணங்களுக்காதாரமான கடமுமழிந்து, அதிலாதேயங்களாய் நின்ற குணங்களும் நிராதாரமாயழிந்து, அக்குணங்களாயு மிருத்கடமாயும் பிரகாசித்த பிரகாசமாத்திரமாய்ச் சேஷித்து, அநுபவத்துக்கு வருவதுபோல: இக்குணங்களுக்காதாரமாய்நின்றஅகங்காரமுமழிந்து,அதிலாதேயங்களாய்நின்ற அக்குணங்களும் ஆதாரமின்றியழிந்து, ஆதார ஆதேயங்களாய் நின்ற அகங்காரம்; அவற்றின் குணம், இவையாகப்பிரகாசித்த பிரகாசந்தானேயாகச் சேஷித்த பானமாத்திரமா யநுபவத்துக்கு வருமென்றருள:

மாணாக்கன்—அப்படியே, அவ்வகங்காரத்தின் வியாபாரபேதத்தால் பிரகாசிக்கப்பட்ட அம்மூன்று குணங்களையும், ஒரு கயற்றிலேறிய திரிதலைப்பிரித்தெடுக்கிறதுபோல, முத்தொழிலையு மதினின்று நீக்க, நிர்வியாபாரமானதாற் குணங்களுந்தாமே ஒழிய, அகங்காரமாகத்தோன்றுதல், இல்லாமன்மறைதல், அங்ஙனமாகப் பிரகாசித்தல், இம்மூன்று நன்மையுமில்லாதவகந்தை நசிக்க,அவ்விதமே ஆதாரமின்றிக் குணங்களும் நஷ்டமாக, அகங்காரமுங் குணங்களுமின்றிய பானமாத்திரமாகிய அநுபூதி, புராதனமான தனது சொரூபமாயிருந்தும்,நூதனம்போலநிரகங்காரமென்னு முபசாந்தபதவியில் முழுகிநின்று விஞ்ஞாபிக்கின்றான். பிராணநாதராகிய பரமகுருவே! நன்றாய்த்தெரிந்தேன். ஒருவனது நாமத்தையுங் குறிப்பையு மற்றொருவன் வேஷமாகப்பூண்டு மோகிப்பித்தல்போல, அகமெனும் நாமமுமகமெனப் பிரகாசித்தலுமான வேஷமாத்திரத்தால், இவ்வகந்தை ஆன்மவஸ்துப்போல மோகிப்பித்தது, இப்போது விவே

கித்து அநுபவமாய்ப் பார்க்கில், ஒரு விருக்ஷத்திற்றோன்றி ப் பிரமராக்ஷசுபோலப் பொய்யாயிற்று. அப்படியே அக ந்தையின் றிரோதானத்தால், அகண்டான்மஞான திரோ தானமாகிய அஞ்ஞானமும், அகந்தையாகப் பிரகாசித்த விபரீதஞானமும், இவ்விருதன்மையாயுங் கூடத்தோற்று மையான சூநியஞானமும், இல்லாமையான இம்முக்குணங் களின் சாம்மிய வைசம்மியங்களாற் றோற்றியதெனவும், இவையு மித்தையேயெனவு மறிந்தேன்; ஆயினும் இல்லாத இவ்வகந்தை, யுளதுபோற்றோன்றி, இல்லாதகுணங்களால் ஸ்தூல சூக்குமங்களான விஷயங்களைக் கற்பித்து, அவற் றைச்சொந்தமாய்க் காண்பிக்குந்தன்மை யெங்ஙனமெனை:

ஆசிரியர்—சுழுத்தியினின் றும்முக்குணங்களாலுதித்த அகந்தை, தான் மாத்திரமாய்த்தனித்து நிற்குங்கால், ஆன் மா அதிருசியனுனதால் அதனைத் தாதான்மியப்பட வுபகார ப்படாமல் வாடிநிற்க, 'ரஜோகுணம் முன்னகங்காரத்தைத் தோற்றிப்பித்ததுபோல, அதிசூக்குமமான வாசனையினல் அவ்வகந்தையில் சப்தக்கிரகணசாமர்த்தியமுடைய சுரோத் திரமெனும் ஒருபிரஞ்ஞையாய்க் கற்பனைப்பட,அதனை அவ் வகந்தை ரஜோகுணத்தின் முந்திய ஸ்தூலவாசன சம்பந்த த்தைத் தாதான்மியப்பட்டு, சஷ்குலிபோலுள்ள இரத்த மாமிசாதிகளாலுண்டாகிய செவியையபிமானித்து, அதன் மத்தியிற்கேட்கும் வல்லமையுடையசுரோத்திரேந்திரியமாக ப்பவிக்க, அதிற் பிரதிவிம்பித்த சைதந்நியப்பிரகாசம், அத ற்குக் கேட்கும் வல்லமையாகப் பிரகாசித்துநின்றது. அப் படியே ரஜோகுணம் அகந்தைக்கு அதிசூக்குமமான வாச ன விசேஷத்தால் ரூபக்கிரகண சாமர்த்தியமுடைய திருஷ் டியாகக் கற்பிக்கப்பட, அதனை ரஜோகுணத்தின் பூர்வ வாசனரூபமான, ஸ்தூலமாகிய இரத்தமாமிசாதிவிகாரமா

யுள்ள, புத்புத துல்லியமான நேத்திரங்களை யபிமானித்து, நான் பார்க்கிறேனெனப் பிரகாசிக்க, அதிற் பிரதிவிம்பித்த ஆன்மசைதந்யப் பிரகாசமும், அதற்குப்பார்க்கும் வல்லமையாகப் பிரகாசித்து நின்றது. இப்படியே இருவகைத்தோற்றங்களான இந்திரியங்களும், ரஜோகுணத்தின் அதிசூக்குமமான வாசனையால் அகந்தையிலுதிக்க, அவற்றைப்பூர்வம்போல் அகந்தை தாதான்மியப்பட, அதனிற் பிரதிவிம்பித்த ஆன்மசைதந்யப் பிரகாசமும், அதற்கு அவ்வவ் வல்லமையாகப் பிரகாசித்துநின்றது. அப்படியே ரஜோகுணத்தின் ஸ்தூலவாசனையை முன்னிட்டு, இந்திரிய கோளகங்களிற் றாதான்மியமுடைய அகந்தைக்கு, ரஜோகுணத்தின் சூக்குமவாசனு விசேஷத்தால் அகந்தையில் ரஜோகுணஞ் சப்தஸ்பரிச ரூப ரசகெந்தாதிகளாகக்கற்பிக்கப்பட, அவை ஸ்தூலமாகக் கோளகத்துவாராபகிர் முகமாக விஷயீகரிக்கப்பட, அவற்றை அவ்வகந்தை இந்திரிய கோளகங்களோடுங் கூடிய ஸ்தூலதேகத்தை விதநாலழுத்தி வியாநானென அபிமானித்தது கொண்டு, மகிப் பானமாத்திரமா அவ்விஷயங்களைத்தான் வியாபித்திருசித்து, அங்ஙனம் அகரேந்திரியகோளகக்குறிப்புக் காணப்படாதிடத்திற் காலத்விஷயமெனத் தாதான்மியப்பட, அவற்றிற் பிரதிவும் யாவு ஆன்மசைதந்யப் பிரகாசமும், அவற்றிற்கு அவ்வித வல்லமைகளாகப் பிரகாசித்து நின்றது, அப்படியே சொப்பனுவஸ்தையிலுமென அறியத்தக்கது.

மாணாக்கன்—ஐயா! ஞானேந்திரியங்கள் சத்துவகுணத்தின் விகாரங்களெனவுங் கர்மேந்திரியங்கள் ரஜோகுணத்தின் விகாரங்களெனவுஞ், சாஸ்திரங்களிற் காணப்பட்டிருக்க, இருவகை இந்திரியங்களையும், ரஜோகுணத்தின் வாசனு விகாரங்களென அருளியது எங்ஙனங்கூடுமென:

ஆசிரியர்—இருவகை இந்திரியங்களினும் முக்குணங்களுமிருக்கின்றனவேயாயினும், இருவகை யிந்திரியங்களாகக் கற்பிக்கப்பட்ட தோற்றங்கள் மாத்திரம் ரஜோகுணத்தின் வாசனமயங்களாகும். தோன்றினவைகளையந்தந்தத் தர்மங்களோடுங்கூடி வெவ்வேறாகப் பிரகாசிப்பித்தல், சத்துவகுணத்தின் வாசனமயமானதாற் பிரதானமானதுபற்றி அவற்றைச் சத்துவத்தின் விகாரங்களாகக் கூறப்படும், அவ்விந்திரியங்களுக்கு, ஒவ்வொரு காலத்திற்றங்கள் தங்கள் வியாபாரஸ்பூர்த்தி திரோதானப்பட அநுபவத்துக்கு வருவதால், நிரந்தரமாயில்லாததுபற்றி, அஃது அப்பிரதானமாயினும் அவைகளிற்றமோ குணமுமுளதேயாகும்.

இங்ஙனமாயின் அகந்தையின் மூன்று குணங்களைப்பிரித்ததுபோல, அகந்தையிலுதித்த மூன்று குணங்களின் வெவ்வேறான சூக்குமவாசனைகளைப் பிரித்திடில், பீஜசக்திப்படாமல் வா[illegible] ஜலாம்சங்களை புத்தியாற் பிரித்திடப், பீஜம், தோற்றிப்பித்தது[illegible]ரமழிந்து, பீஜமாயும் விருக்ஷமாயும் பி[illegible] அவ்வகந்தையில் சப்த[illegible]ன ஆன்மசைதந்யப் பிரகாசமாத்திரமெனும் ஒரு[illegible]பதுபோல: அக்குணங்களென்ன, அவற்றிவகந்தை [illegible]ன்ன, வாசனமயங்களான ஸ்தூலசூக்கும[illegible] ம் வகுப்புடைய தேகேந்திரியாதி விஷயங்களென்னவென்னவையனைத்துமின்மையாகி; இவையெல்லாமாய்ப் பிரகாசித்த ஆன்மசைதந்யப் பிரகாசமாத்திரமாகவநுபவிக்கப்படுமெனவுபதேசிக்க;

மாணாக்கன்—அப்படியே விஷயங்களை யிந்திரியங்களிலடக்கி, அப்பஇிந்திரியங்களின் வல்லமைகளை யவற்றை வியாபித்த அகந்தையோடுங் குணங்களின் சூக்குமவாசன மாத்திரமாக வடக்கி, அவ்வாசனைகளையும் அவற்றிற்காதாரமான குணங்களின் சலனவிசேஷங்களிலடக்கி, அச்

சலனங்களையுந் தங்களுக்காதாரமான அக்குணங்களிலடக்கி நிற்க, நிராகாரமாய் யாதொரு தோன்றிமறைதலு மற்றசகஜமான திருக்கநுபவத்தைப், பூமியின் கண்ணிலேயிருந்து சூரியமண்டலத்தை வியாபித்துப் பிரகாசியாநின்ற திருக்கநுபூதியில், ஊர்த்துவபாகத்திலுள்ள சூரியமண்டலமும் அதோ பாகத்திலுள்ள திருஷ்டிகோளகமுங் கிரகிக்கப்படாவிடில், அவ்வநுபூதி எங்ஙனங் கிரகிக்கப்படுகிறதோ; அங்ஙனமடைந்து அவ்வநுபூதியினின்றும், வெண்மை பொருந்திய ஒருபித்தியில் மற்றொரு நிறத்தையழுத்திடில் அந்நிறம் நீங்கி யிந்நிறமாகவே அநுபவத்துக்கு வருவதுபோலத், திருசியமான முற்கூறியயாவும், அந்தந்தத் தன்மையோடுங் கற்பனைப்படிகண்ட நாமரூபத்தோடுங்கூடிய பிரகாசமாம் பித்தியிற்றனது அநுபவமாகக்கண்ட பஞ்சவன்னங்களும், நெட்டை குட்டை சிறிது பெரிது நீளங் கனம் இவைகளுமின்றி, முன்னிலைப்படாமற் றனுகப்பிரகாசிப்பிக்கும் ஞானநுபவமெனும் ஆன்மாநுபூதியாம் நிறத்தாலழுத்தி வியாபித்துப்பார்க்க, அந்நாமரூபங்கள் நீங்கிப் பானமாத்திரமாயகண்டமாய்ப் பிரகாசித்தபடி யநுபவித்து, அங்ஙனம் அகண்டப்பிரகாசாநுபூதி மாத்திரமான தன்னிடத்திற் காலத்திரயத்தினுஞ், சுத்தியி லிரசிதம்போலப் பிரபஞ்சம் யாவுமில்லையெனத்தெளிந்து, நிர்ப்பயமெனும் பரமானந்தக்கடலாடிநின்றான்.

முற்றிற்று.

---

## மூன்றாவது பிரகரணம்

## பிரமேசஜீவஜ்ஞ விசேஷநிரூபணம்.

ஆசிரியர்—மாணாக்கனை யுச்சிமோந்து ஆலிங்கனம்பண்ணி விஜானந்த வுல்லாச பரவசராகிக்கூறுவார். அகண்

ட பரிபூரணானந்த சுதாசமுத்திரத்தி லில்லாமற்கனாந் த பிரபஞ்சகோலாகலமுடைய நிர்ப்பயமென்னும் பெருமை யடைந்த புருஷஶ்ரேஷ்டரே! கிருதார்த்தனுகிய இம்மஹா பாக்கியோதயம் மற்றயாவர்க்கு மரிதாமெனப்புகழ்ந்து பகிர்முகனாகச்செய்ய; மிகுந்த வணக்கத்துடன் வந்தித்துக் கைகூப்பி வாய்பொத்தி விலகிநின்ற அம்மாணாக்கனை நோக்கிச் சமுசயமின்றி, யுள்ளபடி பிரத்தியக்ஷ அபின்ன பிரமாநுபூதியை யடைந்திருந்திடினும், புத்தி விசேஷங்களா லவ்வநுபவத்தை யுல்லாசித்தநுபவிக்கவேண்டி விசாரிக்க விச்சையிருந்திடின் விசாரிக்கலாமெனவருள:

மாணக்கன்—மேலான பிரியம்பொருந்திய பக்தியுடனே யிவ்வித பெருமைபொருந்திய பிரமாநுபூதியை யடையுமார்க்கம் ஞானரூபமா மொன்றேயாயினும், ஞானசாதனமான வநுசந்தானமும் அதைப்பற்றிய மனனவிசேஷமும் வெகுபேதங்களாக விருக்கின்றமையால், அதனை யேகதேசமாயினும் விரித்துபதேசிக்கவேண்டுமென:

ஆசிரியர்—பிரமம் ஈசன் ஜீவன் பிரபஞ்சம் எனநான்கு விதமாகச் சாஸ்திரங்களிற் கூறப்படும், அவையாவன:—பிரமமாவது நித்திய நிர்விகார அசங்கோதாசீன அகண்டபரிபூரண சச்சிதானந்த வியல்பாய்ப் பிரகாசிக்குநிர்க்குணசைதந்யமாம். ஈசனாவது சர்வஞ்ஞ சர்வசம்பூரண சர்வசக்தியான குணாதார சர்வப்பிரபஞ்சகர்த்தாவான சோபாதிகசைதந்யமாம். ஜீவனாவது புண்ணிய பாப கர்ம வாசனமிச்ர கிஞ்சிஞ்ஞத்துவாதி குணாதார பரதந்திர சோபாதிக சைதந்யமாம். பிரபஞ்சமாவது விசித்திரதர அநேக நாமரூபபேத பின்ன ஜடாஜட குணாதார திருசியவஸ்துவாம். இத்திருசியமாகிய நாமரூபப் பிரபஞ்சந் திருசிய

மாகிய ஸ்தூலபஞ்சபூத பாஞ்சபௌதிக பேதக்குறிப்பையு டையதாயின், அப்பகுதியை ஜடமெனவும்; சூக்குமபஞ்ச பூத பாஞ்சபௌதிக பேதக்குறிப்பை யுடையதாயின், அப் பகுதியை அஜடமெனவும்: இஜ்ஜடாஜடமான விருபகுதியு முதிக்கத்தக்க விடமாயும், ஒடுங்கத்தக்க விடமாயும், ஒடுங் குங்கால் பிரபஞ்சம் ஜீவன் ஈசன் பிரம மென்ற ஞானவுதி ப்பின்றி மஹாகாசம்போன்ற நிராகாரக் குறிப்பையுடைய தாயின், அப்பகுதியை மாயை யெனவுங்கூறப்படும்.

இம்மாயையில் நிர்க்குணப் பரப்பிரம சைதந்நியம் பிர திவிம்பிக்க மஹாகாசம்போன்ற சர்வவியாபக நிராகாரமா க மறைந்திருந்த அம்மாயை, சைதந்நியத்தின் பிரகாசபெல ங்கொண்டு தனதிலக்ஷணமுடையதாகப் பிரகாசிக்கும். நித் திய சுயாவைகுண சீலாளாகிய உத்தம நாயக நாயகிகள் ஏகாந்தத்திற் சந்திக்க அவ்விருவருள்ளமும் பிரியமாத்திர மாய்த்தடித்து விந்துமாத்திரமா யுருகிநிற்பதுபோல; சிரு ட்டியாதியாம் மூர்த்திய அரசாக்ஷியான நாயகனது சௌந்தி ரியவடிவின் மயமான இரதிவிலாசம், பிரியமாய்த்தடித்து சமஸ்காரமாம் விந்துவாயுருகிநிற்கத்,துருத்தியிலடைபட்ட காற்று அதினுட் பிரகாசிக்கின்ற சலநமற்ற ஆகாசம்போல சலநமின்றி நிராகாரமாகி அபேதமாய்க் காணப்பட்டபோ தினும், துருத்தியின் விம்முதலால் ஆகாசத்துக்கு வேறாகச் சலநதர்மமுடைய காற்றின்பேத மநுபவிக்கப்படுகிறதெப் படியோ, அப்படியே அப்பிரகிருதி புருஷ சந்நிதானத்தில் ஜநித்த அச்சமஸ்காரம், பிரகிருதி புருஷாவி யபேதமாய்க் கலந்து நின்றபோதினும், அதிற் பிரதிவிம்பித்து விளங்கிய சைதந்நியப் பிரகாச பெலத்தால், பாணிபாத மத்தக ஆறு முதலிய பரிணாம பேதத்துக்குக் காரணமாய்நின்ற கர்ப்பக் குறிப்பாக அநுபவிக்கப்படுகிறதுபோல, பிரபஞ்சமாதாவா

கிய பிரகிருதியினுதரத்தில், இலக்கமிட அடங்காத வநேக
பாணிபாத மஸ்தக ஆதிமுதலிய பரிணாம பேதத்துக்குக்
காரணமாய்நின்ற பிரபஞ்சாகார கர்ப்பக்குறிப்பாக விளங்
கிநிற்கும்.

அவ்வித பிரபஞ்சாகார கர்ப்பமாகப் பலித்த சமஸ்கா
ரமானவிந்து, ஒரு குக்குடத்தின் விந்து கர்ப்பமாகத் தரிக்
கப்படுங்கால் நன்னாளுண்டாகிய ஜந்துவினுடலாயும், அத
ற்காவரணமான அண்டமாயும், எங்ஙனம் பலித்து நிற்ப
தோ; அங்ஙனமே விராட்புருடன் சரீரமாயும், அதற்காவர
ணமாகிய பிரமாண்டமாயும், பலித்துநிற்கும். அப்பிரமா
ண்ட சரீரத்திற் பிரதிபலித்த சைதந்நியம், பிரபஞ்சத்திற்
பலபோகதிசையைக் கொடுக்கத்தக்க விசித்திரங்களான
கர்மவாசனையை முன்னிட்டு, பிரபஞ்சரூபமான விராட்சரீ
ரத்தைக் கரணங்களின் விகாசத்தோடு டுதிப்பிக்க, அங்ஙன
முதித்த பிரபஞ்சரூபமான விராட்சரீரம், விரிந்த வநேக
அவயவா வயவி பொருந்திய கரணவிகாசத்தி னுதித்தலைய
டைய, அவனது தேசமாக ஆகாயமும், பாதமாகப்பூமியும்,
சுரோத்திரமாக என்திக்குகளும், நேத்திரமாகச் சூரியனு
ம், வாக்காக வைகரிசப்தங்களுட், ரசனையாக அக்கினியும்,
உதிரமாகச் சமுத்திரங்களும்; அஸ்திகளாகப் பர்வதங்களு
ம், நாடிகளாக நதிகளும், உரோமங்களாக விருக்ஷங்களும்
முகம் பாகு ஊரு சரணங்களாக பிரம க்ஷத்திரிய வைசிய
சூத்திர ஜாதிபேதங்களும், கடிதலத்துக்குக்கீழ் சரணம்வ
ரை அதல விதல சுதல ரசாதல தலாதல மஹாதல பாதாள
மென்னு மேழுலகும் கடிதலத்துக்குமேற் சிரம்வரை பூ புவர்
சுவர் மகர் ஜனர் தபர் சத்திய மெனுமேழுலகும், வீணாத்த
ண்டமாம் மகாமேருவும், மனமாகச் சந்திரனும், மற்றுமு
ள்ள கரணகருவிகளாக சாஸ்திரங்களிற்கூறிய தத்துவங்க

ளும், அவனது சரீரத்தினின்றும் பின்னபின்னமாக விகசி
த்து நிற்கும்.

அவ்விதமாகிய மஹாவியாபகம் பொருந்திய விசித்திர
மான விராட்சரீரம், எதின் சம்பந்தத்தையடையாவிடின்
விசித்திரங்களான விஷயங்கள் நிரம்பவிருந்தும், அவற்றை
க்கிரகிக்கச் சாதனங்கள்போன்ற பூதவிகாரங்களாற் செய்ய
ப்பட்ட தேவதிரியக் மானுடாதி ரூபங்களையுடைய புத்திரி
கை முதலியவைகள் நிரம்பிய அவ்விடையங்களைத் தங்களு
க்குச் சுகிக்குப்பொருட் டுபயோகப்படுத்த எங்ஙனம் வல்ல
மைபற்றவையாகுமோ; அங்ஙனமே நிரம்பிய போகங்களைச்
சுகிக்க வல்லமையற்று நிற்கின்றதாயிற்று. அவ்வித பிரப
ஞ்சரூபமான விராட்சரீரத்துக்கு போகத்தின் காரணமா
ன கர்மங்கள், தனது காரியங்களாகிய பலன்களைக் கொடு
க்கவேண்டிப் பக்குவத்தையடைந்திருப்பதால், அக்கர்மப
லதாதாவாகிய மாயாப்பிரதிவிம்பமாம் ஈசன் அதனைக்கண்டு
விசித்திரங்களான பிரபஞ்சங்களையே சரீரமாகக்கொண்டு
இருந்த இவ்விராட்சரீரம் நம்மாலாக்கப்பட்டும் பிரயோசன
மற்றதாயிருக்கின்றது: இஃது பிரயோசனப்படுமாறு செ
ய்விப்பது சர்வ சக்திபொருந்திய நம்மையன்றி மற்றொன்
றினாற்கூடாததுதான்; பிரகிருதிகளுக்கரசன்போல் இப்பிர
பஞ்சரூபமான விராட்சரீரத்துக்கு நாமே நாதனாகவேண்டு
மென் றாலோசிக்க, அவ்வாலோசனையில் சமஸ்காரமுதிக்க
அவ்வகந்தையில் மாயோபாதியுடைய நிரகங்கார சர்வவியா
பக சாக்ஷிசைதந்யமாம் அவ்வீசன் பிரதிவிம்பித்து அவ்வ
கந்தையோடுந் தாதான்மியப்பட்டு, அவ்விராட்சரீரமானபிர
பஞ்சத்தையநுப்பிரவேசித்து வியாபித்துநிற்க,அவ்வகந்தா
ப்பிரதிவிம்ப சைதந்ய சம்பந்தபெலத்தால், பிரபஞ்சவில
க்ஷணமுடைய விராட்சரீரம் நானென வுதித்துப் பிரகாசிக்

ரும். அவ்வகந்தா சைதந்யமாகிய விராட்சரீரிக்கு பிரபஞ்சரூபமான விராட்சரீரம் ஏகமாகக் காணப்பட்டிருந்தபோதினும், சட்சுவில் வியாபித்த அகந்தா சைதந்யத்தின் பெலத்தால் நான் பார்த்தேனெனவும், அப்படியே மற்ற விந்திரியங்களிற்றனது வியாபக சம்மந்தத்தைப்பற்றிக் கேட்டேனெனவும், ஸ்பரிசித்தேனெனவும், பின்னபின்னமாக ஞானம் ஜனித்து, ஒவ்வொரு கோளக வுபாதிகொண்டு அவற்றில் வியாபித்த அகந்தா சைதந்யம் அவ்விடத்து மற்றொரு வல்லமை மறைபட்டு அச்சக்தியை யிழந்திருப்பதுபோல; சமஷ்டிப்பிரபஞ்சமாகிய விராட்சரீரத்தின் அவயவ பேதங்களாயுதித்த வியஷ்டிகளான ஜாதி வர்ணாச்சிரம தர்மநீதியுடைய சரீரங்களின் தாதான்மிய சம்பந்தத்தால், அவ்வவ்விடங்களினுதித்த கண்டங்கண்டங்களானவல்லமை கொண்டு, அவ்வவ்விடத்து அகண்டவல்லமை மறைந்து, அந்தந்த வுபாதிமயமாகப் பின்னப்பட, அவ்வித பின்னோபாதிகளையுடைய அகந்தா பாசங்களிற் பிரதிவிம்பித்த அவ்வகண்ட சைதந்யமே, அவ்வவ்வுபாதிகளின் கண்டசக்திகளாற் கண்டமபோல விளங்கிநிற்பான். அவ்வுபாதிகள் கண்டங்களானதுபற்றித் தங்களது கண்டவல்லமைகளாற் றிரோதானப்பட்ட வவ்வகண்டவல்லமை அச்சிவர்களுக்கு மறைவுபட்டுக் கிஞ்சிஞ்ஞர்கள்போல பவித்துநின்றார்கள். கண்டங் கண்டங்களாகிய விந்திரியங்களில் அபிமானமுடைய அகந்தபாச சைதந்யம், அந்தந்த விடத்திற் கண்டவல்லமையுடையதாக விருந்திடினும், ஸ்தூலசூக்கும காரணங்களையும், அவ்வவ்வவஸ்தைகளையுஞ் சுயம் அகந்தாமாத்திரமான வுபாதியுடைய சைதந்யம் வியாபித்து, அச்சகல வல்லமைகளையுமுடைய வகண்டசக்திமத்தாய்க் காணப்படுவதுபோல, பின்னபின்ன ஜீவராசிகளின் வியஷ்டி யுபாதிக

ளை அவயவங்களாகக் கொண்டிருக்குஞ் சமஷ்டிப்பிரபஞ்ச மான விராட்சரீரத்தைத், அகந்தா மாத்திரமான வுபாதியுட ன் கூடியசைதந்நியம் வியாபித்து, நானெனப் பிரகாசிப்பது பற்றி, அவ்வகந்தையும் அதிற் பிரதிவிம்பித்த சைதந்நியமு ம் அகண்ட வல்லமையுடையனவாயின.

சுருதிகூறிய பிரகாரம், இவ்விதமான பிரபஞ்சம் இங் ஙனந்தோற்றுவதே சிருஷ்டியென்றும், பிரளயம்வரை ய ழியாமற் காக்கப்படுவதே ஸ்திதியென்றும், ஒரு தடாகத்தி னிரம்பிய ஜலம் கோடைகாலத்திற் சோஷிக்கப்படுவது போல, கற்பாந்தத்தில் பிரபஞ்சங்களது சேர்க்கையான விராட்சரீரமும் வாசனாமாத்திர சேஷிதமாக அழிந்து, அவ் வியக்தத்தில் அதுமாத்திர மொடுங்கிநிற்க, அத்திசையில் அகண்டமான விராட்டகந்தையிற்கண்டங்களான ஜீவாகந் தைகளும் வாசனாமாத்திர சேஷிதங்களாயடங்கி, அவ்விரா ட்டகந்தையும் அவ்வியக்தத்தில் அபேதமாய்லயிக்க, அவ்வி யக்தமும் தனததிஷ்டான பிரமசைதந்நியத்துக்குவேறாகத் தோற்றாமல் அதிஷ்டான பிரமசைதந்நிய மாத்திரமாக ம ஹாசூநியம்போ லடைவுற்றிருக்கும். அத்திசையே மஹா பிரளயமென்றுஞ் சொல்லப்படும்.

இவ்வித பிரளயத்தினின்று முன்போல அவ்வியக்த முதல் வியக்தமாகிய பிரபஞ்சரூப விராட்சரீரம்வரை யுதி க்க, கண்டங்களாகிய ஜீவாகந்தைகளும் அகண்டமாகிய விராட்டகந்தையு முதித்துநிற்பதில், ஜீவாகந்தைகள் பின் னபின்னங்களாகையால், அதஇன் சாக்கிராவஸ்தாபோகச மாப்தியை யடையுங்கால், அவற்றின் அகந்தைகளிற் சொ ப்பனவுபபோகத்துக்குத் தகுந்தவையான சொப்பனப் பிர பஞ்சங்கள்வாசனைகளையே யுருவங்களாகக்கொண்டு ஸ்புரி

ந்துநிற்கும். அவற்றை ஸ்தூலசரீராபிமானநீங்கிய அச்சிவ ர்கள், தங்களது அகந்தாசம்பந்தந்தா லகங்கரித்து அவ்வு பாதி மயங்களாக பவித்துநிற்பார்கள். அத்திசையில் அவ் விராட்டகந்தையும், ஒவ்வொரு விராட்டைசுவரியம்போன் ற அநேக விராட்டைசுவரியங்களாக, கண்ட ஜீவோபாதிக ளாம் அகந்தைகளின் வாசனைகளாற் பின்னபின்னங்களாயு தித்த ஸ்வாபனிகப் பிரபஞ்சங்களை வியாபித்து அவற்றைச் சமஷ்டி சூக்ஷும சரீரமாகக்கொண்டு பிரகாசித்துநிற்கும்.

அப்படியே, யச்சிவர்கள் அச்சொப்பனபோகங்கள் நீங் குங்கால், தங்களுக்காதாரமான அகண்ட விராட்டகந்தை யைத் தங்களுக்காதாரமாகிய வுபாதியாகத்தெரியாததுபற் றி அதனையும், ஸ்தூலசூக்ஷுபங்களாகிய தங்களுபாதிகள் தோற்றாமல் மறைந்ததுபற்றி அவற்றையும், அவலம்பியாம ல் நிராதாரமாகலயித்துச், சூநியம்போன்ற சுழுத்தியைப் ப குத்தறிவின்றி யடைந்துவிடுவார்கள். அத்திசையில் அக ண்டவிராட்டகந்தா சைதந்யம், தனதுபாதியாகிய அகண் டாகந்தைக்கு விஷயங்களான வியஷ்டிசமஷ்டிகளாம் ஜீவர் களின் ஸ்தூலசூக்ஷுமவுபாதிகள் முன்னிலைப்படாததுபற் றி, தன்னில் விகசித்துத்தோன்றும் ஞேயஞானமெனுமிர ண்டு சக்திகளைநீங்கி, ஞாதிருமாத்திரமாகச் சேஷித்து, அச் சிவர்களின் சுழுத்தியுபாதிகளாகிய வியஷ்டிகாரண சரீரங்க ளை யகண்டமாயபேதமாய் வியாபித்து விளங்கிநிற்கும்.

இங்ஙனஞ் சுழுத்திமாத்திரமாக லயித்த ஜீவர்கள், த ங்கள் கர்மங்களாற் கொடுக்கத்தக்க சாக்கிரபோகங்களைப் புசிக்குமித்தம், அகந்தைகளோடுங்கூட விழிக்க, முன்போ ல விஷயங்களின் முன்னிலையுதிக்க, அவற்றில் நானெனுந் தன அபிமானமும்பிறக்க, இவற்றின்தோற்றமற்ற முந்தின திசையை முன்னிலைக்கொண்டறிந்தும், அந்த இவ்விகார

மில்லாத நிர்விகாரமான தனது ஸ்பூர்த்தி ஞானத்தை யவ
லம்பிக்க வல்லமையின்றித் தங்களது அதிஷ்டானஸ்பூர்த்தி
களான சொரூபப்பிரகாசத்திற் றெரியாமையையுமாரோபி
த்து, அதன்றா சம்பந்தத்தால் அச்சீவர்கள் கிஞ்சிஞ்ஞர்க
ளாய்ப்பவித்து நிற்பார்கள். அத்திசையில் அகண்டாகந்தா
ப் பிரதிபிம்ப விராட்சைதந்யம், ஈசனது அநுப்பிரவேச
சமயத்தில் மஹாரூபம்போன்ற நிராகார அகண்ட அவ்விய
க்த தத்துவத்தில், அசரீரியாய் அனகங்காரியாய் அனிந்திரி
யனாய்ச் சுயம் பிரஞ்ஞானகனனாக சர்வசாக்ஷியாய் பிரகாசிக்
கும், அவ்வவ்வியக்த தத்துவ வுபாதியையுடைய சர்வஞ்ஞ
சைதந்யத்தினது மஹாவிவேக சமத்காரத்தோடும்
ஈசனால் அவ்வியக்தத்தினுதிப்பிக்கப்பட்டு, அவ்விவேகாநுக்
கிரகத்தைப்பெற்றிருப்பதுபற்றி ஜீவர்கள்போற் கிஞ்சிஞ்
ஞனாகப்பவியாமல், அச்சீவர்களை அவர்களாலறியப்படாத
வல்லமையுடையவனாகக்கொண்டு, அவரவர்களின் கர்மவாச
னாப்பிரகாரம்பலதாதாவாகிய சர்வஞ்ஞவல்லமைபொருந்தி
ப் பிரேரிக்கின்ற பிரேரகமாக விளங்கிநிற்கும்.

சுழுத்திநிலையில் அவ்வகந்தாசைதந்யத்துக்கு அந்த
ரியாமியென்றும், அச்சீவர்களுக்கு அவ்வுபாதிகளின் சம்பந்
தத்தாற் பிராஞ்ஞனென்றும், பெயராம். அப்படியே சமஷ்
டிவ்யாபகமாக சூக்ஷ்மசரீர வியாபகத்துநிலையைப்பற்றி அத்
திசையில், அவ்வகண்டாகந்தாப் பிரதிபிம்ப விராட்சைதந்
யத்துக்கு இரணியகர்ப்பனென்றும், அச்சீவர்களுக்கு அ
வ்வுபாதிசம்பந்தத்தால் தைஜசனென்றும் பெயராம். சமஷ்
டிஸ்தூல சரீரத்தை வியாபித்ததுபற்றி அத்திசையில் அவ்
விராட்சைதந்யத்துக்கு விராட்டென்றும், அச்சீவர்களுக்கு
அவ்வுபாதிசம்பந்தத்தால் விசுவனென்றும் பெயராம். இங்
ஙன மூன்றவஸ்தைகளுக்கும் முத்தொழில்களுக்கு முன்னா
யத்தோற்றி மறையாநின்ற ஸ்தூலமுதல் அவ்வியக்தவ

ளையுள்ள இப்பிரபஞ்சத்தை, அகர்த்தமுதலிய வுபாதிசாத னமின்றிக் கரதலாமலகம்போலசாக்ஷியாகநின்று பிரகாசா ந்தமறிவதனால், அந்நிலையில் அவ்வகண்ட சைதந்யத்துக் கு சர்வஞ்ஞ ஈசனென்றும் பெயராமென அருளியிவ்வித மாக சாஸ்திரங்களாற் சங்கேதிக்கப்பட்டபிரமேசஜீவஜகத் தென்னும் யாவும் நீயே. அதனையுணர்த்தவண்ணம் சோதி த்து அபயப்பிரமப்பிராப்தி யடைவாயென்று கடாக்ஷிக்க; மாணாக்கனும் அவ்வாறே தன்னுடைய சிதேகரஸ அபாரம கிமையைக்கண்டு மனமிறந்துநின்றான்,

முற்றிற்று.

---

## நான்காவது,

## மாயாலக்ஷண நிரூபணப் பிரகரணம்

மாணாக்கன்—சுவாமீ! அகண்டமான வொருவிராட்ட கந்தையும் அதிற் பிரதிவிம்பித்த வொருவிராட்சைதந்ய முமே ஜீவர்களின் மூன்றவஸ்தைகளுக்கும் ஆதாரமெனத் தெளிந்தேன்; ஆனால் பிரளயநிலையின் மாத்திரம் இச்சீவ ர்களுக்காதாரமாகிய விவ்விராட்டகந்தையும், அதிற் பிரதி விம்பித்த சைதந்யமும், அதற்காதாரமாகிய அவ்வியக்தத் துடன்பரமான்மவஸ்துவில் அதுமாத்திரமாயொடுங்கிநிற்க, பிரபஞ்சமனைத்து மாதாரமற்று ஆதேயங்களாகியவவைக ளும் அதுமாத்திரமா யொடுங்கிநின்றதென்றும், பிரளயத் துக்கு முந்தியநிலையில் ஜகதாதாரமான அகண்டவிராட்ட கந்தையும், அதிற் பிரதிவிம்பித்த விராட்சைதந்யமும், அ திறாதாரமான அவ்வியக்தமும் ஒடுங்காமனிற்க, இச்சீவர்க ள்மாத்திரஞ் சுழுத்தியாந் தைநந்தினபிரளயத்தை யடைந் தனர்களென்றும், அருளினதாய்க் காணப்படுகின்றது; அ ஃதெங்ஙனமெனின்,

ஆசிரியர்—ஆதாரமான காரணமழியுங் கார்க்காரியமழியப்படுவதுபோல, காரணமழியாமனிற்கக் காரியமழிந்திடவு மநுபவத்திற் கண்டிருக்கின்றோம்; அஃதுவிரோதமல்ல; மிருத்து அதன்காரியமானகடம் இவற்றை நோக்கிற்றெரியவரலாமெனு:

மாணாக்கன்—ஜீவேசபேதத்துடன் கூடிய ஜடாஜடமானவிர்சகஞ், சங்கோசவிகாசத்துடன் கூடியிருப்பதாற் காரியவஸ்துவாகலாம்: இதற்குக் காரணம் யாதெனு:

ஆசிரியர்—அவ்வியக்தமாகிய மாயையே காரணமாம். அம்மாயையும் ஈசனது திருஷ்டியிற் சொரூபஞ்ஞானமாகவும், ஜீவனதுதிருஷ்டியில் அஞ்ஞானமாகவுந், தோற்றுகிற்கும். ஆதலால் சிருஷ்டிமுதற் பிரளயம்வரையுள்ள சமஷ்டி ஜகத்துக்குக்காரணம் மாயையும், பந்தமுதன் மோக்ஷம்வரையுள்ள சாக்கிராதி ஜீவசிருஷ்ட ஜகத்துக்காரணம் அஞ்ஞானமும் ஆகுமெனக்கூற:

மாணாக்கன்—ஆனல் அவ்வியக்தமாகிய ஒரு மாயாதத்துவந்தானே ஈசனது திருஷ்டியிற் சொரூபஞ்ஞானமாகவும் ஜீவனது திருஷ்டியில் அஞ்ஞானமாகவும் எங்ஙனமாகலாமெனு:

ஆசிரியர்—ஒருதாணுவே பொருவன் பார்வையில் விருக்ஷமாயும், மற்றொருவன் பார்வையிற்றுக்க ஹேதுவான சோரனுயுங், காணப்படுவது போலாகலாமென்மொழிய:

மாணாக்கன்—பிரபஞ்சத்துக்குக் காரணம் யாதெனச் சங்கித்ததற்கு மாயையெனவும், அம்மாயையும் ஈசஜீவர்களது திருஷ்டிபேதத்தால், சொரூபஞ்ஞானமாகவும் அஞ்ஞானமாகவும் ஆகலாமெனவும் அருளியபடி தெளிந்தேன். ஆனல், ஈசசிருஷ்டமாகவும் ஜீவசிருஷ்டமாகவும் இருவித

சிருஷ்டி கூறப்பட்டதில், ஈசனது சிருஷ்டிதான் சாஸ்திரங்களிற் பிரசித்தமாகக்காணப்படுகின்றது. ஜீவசிருஷ்டி எங்ஙனங்கூடும்? அவற்றின் பலன்களின்பேதம் எத்தன்மையுடையதாயிருக்கும்? என:

ஆசிரியர்—அவ்வியக்தமுதல் ஸ்தூலம்வரை ஜடாஜடங்களாகக் காணப்படும் இப்பிரபஞ்சமே ஈசசிருஷ்டமெனப்படும். இஃது ஜீவர்களினிமித்தஞ் சுகதுக்க பலத்தைக் கொடுப்பதாகும். ஆன்மானான்ம விசாரணையின்றி அபிமானங்கொண்டு, அவற்றின் லாபாலாபங்களைப்பற்றிக் காமக்குரோத லோப மோஹ மதமாச்சரிய முதலியவைகளைப்பகிர்முகமாயும் அந்தர் முகமாயுங்கற்பித்து, அவ்வந்தர்முகவாசனையைச் சொப்பனமென்றும் பகிர்முகவாசனையைச் சாக்கிரமென்றும், இவ்விரண்டு வாசனையுநீங்கித் தனதிஷ்டானமாத்திரமாகவிருந்த ஞானசொரூபவான்மாவில், பகிர்முகமாக விருத்தியுதிக்குஞ்சமயத்தில், வாசனைகளின் பீஜாகாரமான கர்மாவிருத்தி அவ்விடத்திற்றன்னாற் கற்பிக்கப்பட, அந்தகாச ஜடமானதுபற்றி அதனையும் பகுத்தறியவல்லமையின்றிச், சொப்பிரகாசமான ஆன்மாவும், ஜடமாகிய வாசனாபீஜரூபதமசும், ஏகவஸ்துவாகக்குறிக்கப்பட, அப்பிராந்திக்குறிப்பினால் அதிஷ்டானமான தன்னிடத்திற்றெரியாமையெனும் அஞ்ஞானங்கற்பிக்கப்பட, அதனைச்சுழுத்தியவஸ்தையென்றும். இவ்வவஸ்தாபேதங்களையுங் காமாதிகளையும் சிருஷ்டித்து, அவற்றின் பலமாகத்துக்கத்தையே சீவனநுபவிப்பான். அப்படியே சுருதியிலிருவகை சிருஷ்டியுங் கூறப்பட்டிருக்கின்றது.

மாணாக்கன்—ஒரு ஜீவன்றானே தன்னாற் கற்பிக்கப்பட்ட, அஞ்ஞானங்கொண்டு அஞ்ஞனாகவும், அக்கற்பனாதிட்டானமாகி விஞ்ஞனாகவும், எங்ஙனங்கூடலாமெனவினவ:

ஆசிரியர்—ஒருவன் தன்னாற் கற்பிக்கப்பட்ட சொப்பனத்தில், அவனை மறந்து பதிகொடுத்த பொருள்களிருக்குமிடந்தெரியாமற் றேடுகிறவனாகவும், அப்படியே யந்தப் பொருள்களைத் தனது சர்வஞ்ஞவல்லமையாலிருக்கு மிடந்தெரிந்து வருவித்துக்கொடுக்கும் யோகியாகவுங் கூடுவது போலும் ஆகலாமென்றருள:

மாணாக்கன்—சுவாமீ! அருளிய பிரகார முணர்ந்தேன் இனி ஈசசீவர்களது பார்வையிற்கண்ட ஞாலஞ்ஞான பேதங்களையுடைய ஜகத்காரணமான மாயை யிலக்கணத்தையும், அதன் காரியமான ஜடாஜடரூபமாகிய பிரபஞ்சத்தினிலக்கணத்தையும், அருளவேண்டுமென:

ஆசிரியர்—மாயையினிலக்கணமாவது, அவிவேகதிசையிற் காணப்படும் பிரபஞ்சத்தைக் காரியவஸ்துவாக நிர்ணயித்ததுகொண்டு, அநுமானத்தால் இதற்கோர் காரணமுளதாகலாமென நிர்ணயிக்கப்பட, அதனையநுசரித்துச் சாஸ்திரப்பிரமாணமும், அங்ஙன நிர்ணயித்த காரணத்தை மாயையெனக்கூறும். அப்படி யிரண்டு பிரமாணங்களாலும் மாயையுளதாக மதிக்கப்பட்டதுபற்றிச் சத்ரூபமாகவும், அப்படியே யம்மதிப்பின் பிரகாரங் காரணமாகப்பிரகாசித்துவருவதுபற்றிச் சித்ரூபமாகவும், சுழுத்தி மூர்ச்சையாதியவசரங்களிற் காரியத்தோற்றமின்றிக் காரணமாயையிலயித்திடத் துக்கங்காணப்படாததனால் ஆனந்தரூபமாகவும் ஆகலாம். விவேகதிசையிலோ, சுருதியுக்தியநுபவங்களாற் சோதித்திட, அம்மாயையினிருப்பு ஜகத்காரணமாகச் சித்திக்கப்படாததனல் அசத்தெனவும், அவ்விடத்தங்கேயில்லாதது கொண்டு அசத்தாயின், இல்லாதது பிரகாசியாதாதலாற் பிரகாசமற்றது ஜடமானதனல் ஜடமெனவும், சுழுத்தி மூர்ச்சை யிவைகளிக்குங்கால், "நான் சுக

மாகத்தூங்கினேன். நான் துக்கத்தோற்றமின்றி மூர்ச்சித்திருந்தேன்" என்றவநுபவம் அகம்பொருளைப்பற்றினதாகக்காணப்படுவதால், அவ்வகம்பொருள் சுருதியுக்தியநுபவங்களால் சித்ரூப வான்மாவாகக் காணப்படுவதாற் றுக்கத்தோற்றத்தினின்மையும், அவ்வடிவான ஆனந்தமும், மாயையினதுவாகாது மேலும், அசத்தாகியும் ஜடமாகியும் நிரூபிக்கப்படின், அவ்வஸ்து எங்ஙனம் ஆனந்தரூபமாகும்? "நீ பசத்து, நீ ஜடன்" என அந்நாமங்களை முன்னிலைக்கொண்டு பிரயோகிக்குங்கால், அப்பிரயோகத்தை மிகுந்த குற்றமாகக்கொண்டு, அகங்காராதிகள் தடித்து, பிரயோகிக்கின்றவன், அப்பிரயோகத்துக்கு முன்னிலையாகவிருக்கின்றவன், இவ்விருவர்களுந் துக்கத்தையே பெறக்கண்டிருக்கிறோம். அங்ஙனம், ஆனந்தமற்றது துக்கரூபமாதலாற் றுக்கமெனவுமாகலாம். இங்ஙனமாயின் விவேகாவிவேகதிசைகளைப்பற்றி, சச்சிதானந்தமாகியும், அசிர்தஜடதுக்கமாகியும், ஜகத்காரணமாகிய வம்மாயை காணப்படுவதால், சத்தெனவும் அசத்தெனவும் இவ்விருதன்மைகளையுடையதெனவும், குறிக்கக்கூடாத விலக்ஷண விலக்கணமுடையதெனவுங் காணப்படுமென்றருள.

மாணாக்கன்—அவிவேகதிசைகளால் அசிர்தஜடதுக்கனாகியும், சச்சிதானந்தனாகியுங் காணப்படுமான்மாமாத்திரம் எங்ஙனம் நிர்ணயமாகச் சச்சிதானந்த விலக்கணமுடையவனெனக் கூறப்படுவான்? அவனுக்கும் இக்குற்றம் நீங்காததாகப்பவிக்குமேயென:

ஆசிரியர்—பாலூறிப்பெருகு முலைக்காம்பில் ஒருண்ணியினாற் பானம்பண்ணப்படும் இரத்தத்தின் ருசிகொண்டு, பாலின்ருசியும் அப்படியாக வேண்டுமென்பதில்லை. ஜகமுதிக்குமிடமாயு மொடுக்குமிடமாயுமுள்ள வொருவஸ்து

வினிலைமையை நிராகிக்கவந்த சுருதியுக்தியநுபவங்களின் கருத்தானது, அதிகாரிகளின் அதிகாரபேதத்தை யநுசரித்து நின்றிடினும், உத்தமாதிகாரியைப்பற்றி வந்தவுண்மையாகிய வுத்தமப்பிரமாணமும், அதன்லக்ஷியமாகிய வுண்மைவஸ்துவின் சுபாவமும், ஒரு காலத்தும் பேதித்திடாது. சுழுத்திபிரளய மிரண்டுநிலையையுஞ் சுருதியுக்தியநுபவங்களாற் சோதிக்குமவசரத்தில், அதிகாரிகளின் பேதங்கொண்டு வஸ்துநிர்ணயம் பேதித்துக்காணப்படுவதைப் பரியாலோசித்தால், பின்னபின்னங்களாகிய வியாதிகளும், அவற்றிற்குரிய பற்பல ஔஷதங்களும், அவற்றின் பலங்களும், சாஸ்திரயுக்தி யநுபவங்களாலுளவாயினும் அவ்வியாதிகளை நீக்கும் அவ்வுபாயங்கள் நீக்கமுடியாத மரணமெனும் பெரும்பிணியைநீக்க வுபாயங்களாகாதவைபோலவும், அம்மரணமெனும் வியாதி நீங்குமுபாயமாகப் பெருமைபொருந்திய மார்க்கண்டேயனெனு மாமுனிக்கு, மிருத்தியுஞ்சயனெனும் பரமசிவம்போலவும். மற்றையதிகாரிகளும், அவ்வதிகாரிகளைவிட்ட பிரமாணங்களும், அவற்றின் பலங்களும், உத்தமாதிகாரியும், அவனைப்பற்றிய பிரமாணமும் அதன்பலமுமாகவிளங்கும். ஆனதால், சத்து அசத்து சதசத்தெனவுமிலக்கணங்கூறத்தகாத விலக்ஷணத்தன்மை மாயைக்கேயன்றி, யான்மாவுக்குக்கூடாததுதான் சத்தெனவும்அசத்தெனவும் சதசத்தெனவுங் குறிக்கத்தகாததென்றது ஆன்மாவைப் பற்றுங்கால், அவ்வுபாதியில்லாத சுயம்வஸ்துவெனவும், உபாதியினாலாவது சுயமாயாவது யாதொரு சொரூபமுமின்மையினால், மாயையைப்பற்றுங்கால், சொரூபமில்லாத அவஸ்துவெனவும் நிர்ணயிக்கப்படுமென்றருள:

மாணாக்கன்—ஆனால் வஸ்துத்தன்மையே மாயைக்கில்லாவிடின், அதனை ஜகத்காரணமென்றும், கூறக்கூடாத வி

லக்ஷணவஸ்துவென்றுஞ் சுருதியில் ஏன்சொல்லப்பட்டது?

ஆசிரியர்—சுருதியிலெல்லாவிடத்திலும் பொருளுடையதாகவே காணப்பட்டிருக்கப், பொருளென்பது வஸ்துவாகையால், அவ்வசனமாத்திரம் எங்ஙனம் பொருளின்றியதாயிருக்கலாம்?

மாணாக்கன்—இருக்கின், அஃது சுருதிக்குக் குற்றமன்றோ?

ஆசிரியர்—அவ்வசனங்களின் பொருளை யுத்தரமுமாகும். "மாயை" என்றால், எது இல்லாததோ அதுவாகுமெனா:

மாணாக்கன்—ஆனால் எவ்விதத்தாலுஞ் சொரூபசித்தியில்லாத அவஸ்துவை ஜகத்காரணமாகக்கூறினது என்னிமித்தம்.

ஆசிரியர்—சொரூபமில்லாத காரணம்போல, காரியமுஞ் சொரூபமற்றதெனவறியும் பொருட்டுத்தான்.

மாணாக்கன்—இங்ஙனமாயின், கர்த்தா கர்மம் கிரியை இவற்றாலலங்கரிக்கப்பட்ட விசித்திரங்களான வெகுவிதநாமரூபங்களையுடைய இகபரமெனு மண்டபிண்ட சராசரமாம் ஜகம், காரணமான மாயையோடும் அவஸ்துவாயின், மலடிமைந்தன், விஸ்தாரமாயாவது சுருக்கமாயாவது சுபாசுபங்களுக்கு ஆதாரவாகிய குணங்களால் வசனிக்கவிஷயமாக எங்ஙனமிலனோ, அங்ஙனமே, இப்பிரபஞ்சமுஞ் சுருதிக்கு விஷயமாகத் தகாது. வாக்காலு மனத்தாலு மடையக்கூடாதென்ற பிரமாணத்தாற், பரமான்மவஸ்துவும் அச்சுருதிக்கு விஷயமாகத்தகாது. இங்ஙனம் இரண்டும் நிர்விஷயப்படக், சுருதியெதனை விஸ்தரித்துக்கூறியது? அதற்கெங்ஙன முக்கியப்பிரமாண்மெனும் பெயருளது?

ஆசிரியர்—பிரபஞ்சமும் பரமான்மவஸ்துவும் நிர்விஷயமாயிருப்பதுபற்றியேதான், சுருதி விஸ்தரித்துக் கூறுவதாகவும், உத்தமப்பிரமாணமாகவும் ஆயிற்று. சுருதியென்பது உபதேசரூபமாதலால், அவ்வுபதேசம் அதீந்திரியமாகிய வஸ்துவையே குறிக்கிறதாயிருக்கும். பிரத்தியக்ஷமாயிருக்கிற கடத்தைக்கண்டவனுக்கு, அக்கடோபதேசமூலகத்திற்காரணமில்லை. தெரியாதபொருளைத் தெரியப்போதிப்பதே யுபதேசத்துக்குப் பெருமை. அவ்வுபதேசத்தால் விவகாரதிசையில் அதீந்திரியங்களான புண்ணியபாவங்களும், அவற்றின் பலன்களும், பரமார்த்ததிசையில் சச்சிதானந்தமாகிய பரமான்மாவும், உபதேசிக்கப்படுமென:

மாணாக்கன்—ஆனால் விவகார பரமார்த்த பேதங்களாலுபதேசிக்கப்படும் பொருளிருவகையாக விருப்பதால், அவை பிரபஞ்சமும் பரமான்மாவுமாகலாம். புண்ணியபாவசம்பந்தம், ஜகத்துக்கே உரித்தாயிருக்கிறதால் இங்ஙனஞ் சுருதியிற்றானே புண்ணியபாவங்களை முன்னிட்டுப் பிரபஞ்சமுபதேசிக்கப்பட்டிருக்க, அதையெப்படி யவஸ்துவெனக்கூறலாம்? மேலும், பரமான்மா வாக்குமனதுக்கு விஷயமாக வில்லாததுபற்றிப் பிரயோசன மற்றதாகுமே. விஷயப்பிரயோசனங்களை நிச்சயியாவிடத்தில், சாஸ்திரப்பிரவர்த்தி யெங்ஙனங்கூடும்?

ஆசிரியர்—விவகாரமென்பது சாஸ்திரப் பிரமாணப்படி கற்பிக்கப்பட்ட சொப்பனத்தில், ஒரு ராஜகுமாரனுக்கு அத்திசையி லரசாட்சிசெய்ய வுபகாரமாக, அவனுக்குத்தெரியாத நீதிகளை அவனது மனோராசியையநுசரித்துபதேசிப்பதுபோல, பிராந்தியாற் கற்பிக்கப்பட்ட விவகாரமெனும் பிரபஞ்சத்தில், இகபரங்களை யரசாட்சிசெய்ய இச்சித்த அ

வனதிச்சையை யநுசரித்துபதேசித்ததாகுமென:

மாணாக்கன்—சாஸ்திரங்களிற் பிரமாண ஞானமென்றும் பிராந்திஞானமென்றும் இருவகையாய்க் கூறப்பட்டு, அவற்றுள் கடஞானம் பிரமாணஞானமெனவும், சுத்திரசிதஞானம் பிராந்திஞானமெனவும், கடத்துவத்தைப் பிரகாரமாயவச்சேதமுடைய கடத்தில், அக்கடத்துவத்தையே பிரகாரமாகவுடைய அக்கடத்தின்ஞானம், பிரமாணஞானத்தின் லக்ஷணமெனவும், இரசிதத்துவத்தைப் பிரகாரமாகவுடையதாயின்றிப அநவபாவத்தையுடைய சுத்தியில், இரசிதத்துவத்தைப் பிரகாரமாகவுடைய விரசிதஞானம், பிராந்திஞானத்தின் லக்ஷணமெனவுங் காணப்படுகிறது. அதற்கு இஃது விரோதப்படுமேயென:

ஆசிரியர்—விரோதப்படாது, அச்சாஸ்திரத்திற்கூறிய பிரமாணங்களின் லக்ஷண மாறக்கூடாதேயன்றி யப்பிரமாணங்களாற் குறிக்கப்பட்ட வஸ்துக்கள் பேதித்திருக்கக்கூடாதென்பதில்லை. பிரமாணங்கள் பிரயோகித்திடுங்கால் அவற்றின் விஷயங்களான வஸ்துக்கள், பேதிக்கப்படாவிடினும், பிரமாணங்களின் விவேகதிசையில் அவ்வஸ்துக்கள் பேதிக்கப்படில், அஃது பிரமாணங்களின்குற்றமாகாது. மிருத்கடமென்ற விடத்தில், மிருத்தெனவும் கடமெனவும் இரண்டு பொருள்களுள்வாம் அவற்றுள் கடமென்றஞானம் பிரமாண ஞானமாயிருந்திடினும், அக்கடத்தை மிருத்தாக விவேகித்தறியுங்கால், முற்கூறிய கடஞானம் பிராந்திஞானமேயாகும். அஃதெங்ஙனமெனில், ஏதேனுமொரு பொருளுளதாகப் பிரமாணஞானத்துக்கு விஷயப்படவேண்டுமேயாயின், அந்தப்பொருள் சொரூப லக்ஷணமுடையதாகவிருக்கவேண்டும். மிருத்தின் சொருபத்துக் கந்யமாய்க் கடத்துக்குச் சொரூபங்காணப்படாததினலேதான்

அப்படியே இஃது கடமென்றவிடத்தில், இதந்தையைப்பிர
காரமாகவுடைய இஃதெனுமொருபொருளையும் கடத்துவ
த்தைப் பிரகாரமாகவுடைய கடமெனுமொருபொருளையும்
பகுத்துக்காணில், கடத்துவத்தைப் பிரகாரமாகவுடைய
தாயின்றிய கடத்துவாபாவத்தையுடைய இஃதென்ற ஞா
னத்தில், கடத்துவத்தைப் பிரகாரமாகவுடைய கடமென்ற
ஞானம், பிரமாணஞானத்தின் லக்ஷணமாகாது. அப்படி
யே ஜடாஜடமாகிய வெந்தப்பிரபஞ்ச விவகாரஞானமும்
இதுவென்ற ஞானத்தைச் சம்பந்தித்தே காணப்படுவதால்
விவகாரஞானமனைத்தும் பிராந்திஞானமேயாகும். ஆயி
னும் அந்நிசையிற் சாமாந்யவதிகாரிகளுக்கு விவகாரவுப
யோகமாக, அவர்களது விவேகத்தையநுசரித்து, அந்த
ஞானம் பிரமாணஞானமெனக் கூறப்படும். ப்ரமான்மா
வாக்குமனசுக்கெட்டாததுகொண்டு, விஷயப்பிரயோசன
மின்றியதாகச் சுருதியெங்ஙனம் பிரவிர்த்திக்கலாமென்ற
நுசரி. ஆயினும் ஜடாஜடங்களாகிய விப்பிரபஞ்சம்போல
விஷயமாகாவிடினும், இப்பிரபஞ்சங்களெல்லாந் திரிசிய
மாகவேயெவனுக்கு விஷயமாகின்றதோ, அவனிப்பிரபஞ்
சத்துக்குவிஷயமாகானென்பது மாத்திரமேயன்றி, அவன்
சொப்பிரகாசனானதுபற்றி, விஷயவிஷயிபாவமின்றிய தன
க்குத் தானப்படியே விஷயமாகவேயிருப்பான். சுருதியும்
உபாதிகளைநீக்கி யவனைக்கரதலாமலகம்போல அதிகாரிக்கு
த்தானாகப் பிரகாசிப்பித்திடுதலாலும், அவ்வித தானனவா
ன்மலாபத்தைத்தவிர மற்றொன்றும் காண பிரயோசனமெனும்
லாபமாகவில்லாததனாலுந்தானே தனக்குப்பிரயோசனமாக
விருப்பதுபற்றி, அப்படியே சுருதியுமான்ம லாபத்தைப்
பெருமையுடையதாகக் கூறுவதாலும், விஷயப்பிரயோசன
ங்களுமுளவேயாம். சுருதியின் பிரவிர்த்தியுங் கூடலாமெ
னவறுள.

மாணாக்கன்—சுயஞ்சித்தமாய் ஆனந்தநித்தியாய் சதோதிதாருக்கனாய் நின்றதன்னையறியாதுழலும் ஜீவர்களை, மாயையை மாயையெனக்கண்டு, தன்னைத் தானெனத் தெரிசிப்பிக்கும் கேவலம் வல்லது சுதந்திரமான வேதமகிமாவை யார் அறிவார்கள்! யார் ஓதுவார்கள்! என ஆனந்தநடனஞ்செய்து, மாயாவிலக்ஷணா சொரூபியாக விளங்கினான்.

முற்றிற்று.

---

ஓர் தாளது

சத்தநுபவ நிரூபணப் பிரகரணம்.

---

மாணாக்கன்—பரமான்மாவொருவனே சச்சிதானந்த சொரூபன். ஜடாஜடங்களாகத் தோன்றிய காரியகாரணமான பிரபஞ்சமித்தை. பிரபஞ்சத்தைச் சுருதிபிரதிபாதிப்பது அதன் முக்கிய கருத்தன்று. பிரபஞ்சாதீத பரமான்மாவைப் பிரதிபாதிப்பதே யதன்முக்கிய கருத்தெனவருளியபடி தெளிந்தேன். ஆயினும் பிராந்திஞானத்துக்கு விஷயமான விப்பிரபஞ்சத்தை யவ்வியக்தம்வா மித்தையென்றவநுபூதியுஞ், சுருதிகூறியபடி விஷயவிஷயிபேதமின்றி யுள்ளபடி பரமான்மா விஷயமாகு மநுபூதியும், அருளவேண்டுமெனப் பிரார்த்திக்க;

ஆசிரியர்—உலகத்தில் கடமிருக்கிறது, படமிருக்கிறது, மடமிருக்கிறது. அவ்வனுபவ மநுபவத்தைச் சோதித்திட வநுபூதிவரும். கடமென்பது கம்புக்கிரீவாதி மத்தாயுள்ள விகாரிவஸ்துவாகும். அப்படியே படமென்பது ஓதம்பிரோதமாகிய தந்துவின் விகாரமுடைய விகாரிவஸ்துவாகும். இங்ஙனமாயின், பரஸ்பரம்பின்னங்களாகிய

விருத்தவஸ்துக்களில் முற்கூறியபிரகாரமிருக்குகை காண
ப்படுவதால்; அஃது இவற்றிற்குப் பின்னமா? அபின்னமா?
பின்னாபின்னமா? பின்னமாயின், அவ்விருக்குகையை யவற்
றினின்று நீக்கிக் காணிலவையில்லாதவையாகும். அபின்ன
மாயின் இருக்குகைக்குப் பின்னமாகாததுபற்றி யவைநாம
ரூபங்களுடைய விகாரிகளாகா. உபபரூபமோ சித்தியா
து. அப்படியே முன்னிலைக்கொண்ட வொரு கடமிருக்கி
றதாகவநுபவிக்கப்பட, அக்கடம் விகாரிவஸ்துவாகவிருந்
திடினும், கலந்தகடுகு சீரகங்களைப் பிரித்துக்காண்பது
போல அதிலிருக்குகையைப் பிரித்துக்காணவேண்டும். இ
ருக்குகை யெவ்விடத்து மிருக்குங்களேயாக வேறுபட்டமர
ட்டாததுபற்றி, விகாரிகளான அவைகளை பின்னங்களாக
ப்பவிக்கும். அவை விகாரியானதா லவற்றிற்குப் பின்ன
மாகிய விவ்விருக்குகை நிர்விகாரியாகத்தகும். அதன் தர்
மமும் நிர்விகாரமாகும். பிரத்தியக்ஷாநுபூதிரூபமான கட
த்தைபநுபவிக்குங்கா லஃதிருக்குந் தன்மையுடையதாக
வேண்டுமானால், கடத்தினிடத்தில் நீக்கமின்றி யெல்லாவி
டத்தும் நிர்விகாரமாகிய வவ்விருக்குந்தன்மை யிருந்தநுப
விக்கப்படவேண்டும். அங்ஙன மநுபவிக்கப்படி னொரு
ம்பின்றண்டம் பிருதிவியிற்கோத்திருக்க, அதனை யெடுத்து
ப்பார்க்குங்கால் அத்தண்டமிருந்த விடமுழுவதிலும்பிரு
திவி பிராததுபோல, நிர்விகாரமாகிய விருக்குந்தன்மைவியா
பித்திருந்த கடமுழுவதிலும் விகாரமுடைய கடத்தின்றன்
மை காணப்படாது. அங்ஙனங் காணப்படாமற் கடவிகா
ரம் நீங்கிடில், விகாரத்தைத்தவிரக் கடத்துக்குச் சொரூப
மவேறில்லாததாற், சொரூபமின்றிக் கடமுமில்லாமனீங்கி
விடும். இங்ஙனநீங்கில், முன்கடமிருந்த வெல்லாவிடத்தி
லும் அதினின்மையுளதாகப்பவிக்கும். இன்மையென்பது

அசத்தாகும். இருக்குகையென்பது சத்தாகும். அவ்வசத்தாகிய வின்மையும் அபாவமானவொரு பொருளாகவிருக்கவேண்டுமானால் அதனிடத்திலும் முன்னிரூபித்தபிரகாரமிவ்விருக்குந் தன்மையத்திசையி லவசியமநுபவிக்கப்படவேண்டும். அப்படியாயின் பிரகாசத்திலிருள் சித்தியாததுபோல, இருக்குகையிடத்தொருக்காலு மில்லாமைசித்தியாது. இவ்வண்ணங் கடத்தையும் கடத்தினின்மையையும், பாவாபாவவிகாரமின்றிய நிர்விகாரமான விருக்குகை பாதிக்கப்படாத் வஸ்துவாகையால், அதனை நிர்விகாரமாகப் பிரத்தியக்ஷத்திலிருக்கிறபடி யநுபவத்தாற்கண்டு, அவ்வநுபவபெலத்தாற் கடம் கடத்தினின்மை யிவ்விரண்டையும், சன்மாத்திரமாக வநுபவிப்பாயாகவென:

அப்படியே மாணாக்கனும் பிரத்தியக்ஷமாகக் காணப்பட்ட கடத்தில் கடத்திற்குப் பின்னமாக வவ்விருக்குகையை நிராகாரமாகக்கண்டு, அதனைக் கடத்தினும், அதற்கோர் கரத்தின் தூரத்திலுள்ள படத்தினும், அவ்விரண்டினுக்கு மந்தராளத்தினும், வியாபித்திருக்கிற விருக்குகையினியல்பைத் தெளிந்து, கடம்படமிவ்விரண்டும் பிரதியோகியாகக் கிரகிக்கப்படாதகாலத்து, அவ்விரண்டின் விகாரமான பாவத்தன்மையாவது, இன்மையாகிய அபாவத்தன்மையாவது அவற்றின் தாளம் அந்தராளமாவது நோக்கப்படாமல் இருக்கையின் மாத்திரமாக எப்படி யநுபவிக்கப்படுகிறதோ; அப்படியே கடத்தையும் கடத்தினின்மையையும் அவற்றினிருக்குகை மாத்திரமானவநுபவத்திற்கு வேறுபடவில்லாம லநுபவித்து, ஜலபானத்துக்குக்கூட வாதரவில்லாதவொரு தரித்திரன், தானிருக்குமிடத்தே மஹாமேருவைநிதியாகவடைந்திடி னெங்ஙனம் அவனுக்கானந்தமுதிக்குமோ, அங்ஙனஞ் சத்தினியல்பையேகாணாத அசத்தி

ன்மயமான விடையமெனுந் தரித்திரநீங்கிபச், சத்தெனும் பெருஞ்செல்வத்தையே யடைந்து சுகக்கடலாடித்திரும்ப வும் விஞ்ஞாபிப்பான்.

கருணைபொருந்திய வுபதேச விசேஷத்தாற், பரமநா ஸ்திகனாகிய அடியேனும் ஆஸ்திகனானேன். இவ்வநுபவத் தால் ஜடாஜடமான விப்பிரபஞ்சத்தை நோக்கின், கற்பூர மலையிற்றீப்பட்டதுபோல, இருக்குந்தன்மையெனு மநுபூ தியாற் பாஞ்சபௌதிகம்பஞ்சபூதம்பஞ்சவிடயமெனும் ஸ் தூலப்பிரபஞ்சந், தசேந்திரிய தசவாயு மனம் புத்தி அகங் காரஞ் சித்தம் அந்தக்கரணம் அஞ்ஞானம் மாயையெனும் சூக்ஷமப்பிரபஞ்சம், ஜடமாகிய விவையனைத்தும், பாவாபா வவிகாரமின்றிய நிர்விகார விருக்குகையின் அநுபூதிமாத்தி ரமாகவநுபவிக்கப்பட்டு, ஜீவேச பேதத்துக்கிடமில்லாத, திரிவித பரிச்சேதமின்றிய, சத்தாமாத்திர மாகத்தெளிந் தேன். ஆனாலின்ன சப்தத்தா லின்னபொருள் போதிக்க ப்படுமென சப்தசக்தி ஈஸ்வரனானியமிக்கப்பட்டிருக்கவும், அப்படியேபிருதிவியென்பது கந்தகுணமுள்ளது;சக்குவால் மாத்திரங் கிரகிக்கத்தக்கதாயுள்ளது ரூபமென அச்சப்தச க்தியாற் குறிக்கத்தக்க பொருள்களின் லக்ஷணமும், அதி வியாப்தி அவ்வியாப்தி அசம்பவமெனு மூன்று தோஷங்க ள் நீங்கியிருக்கவேண்டுமெனவும், அவற்றினிலக்கணமுஞ் சாஸ்திரங்களால் நிரூபிக்கப்பட்டிருக்கவும், பின்னபின்ன ங்களான சப்தங்களின் பொருளாகிய பின்னவஸ்துக்கள் தங்களைக்குறிக்கின்ற சப்தசக்தியோடு மாறுபடாநின்று வ வைகள் கார்த்தமாக பிரகாசிக்கின்ற சத்தாமாத்திரமாக பாதிக்கப்படுவது பிரமாண விரோதமன்றோவென:

ஆசிரியர்—மைந்த! நீசங்கித்தது சரி. ஆனால் பிரமா

ணமென்பது சாஸ்திரமாகும். அச்சாஸ்திரமும் சப்தரூப மாகவிருக்கும். அச்சப்தமும் நாதப்பிரமமென விவகரிக் கப்படும். அவ்விதநாதப்பிரமமாகிய தத்துவமும், பரா பசியந்தி-மத்யமை-வைகரி-யென நான்குபிரிவுடன் கூடியி ருக்கும். அவற்றுட் பரா ஞானிகளாலும், பசியந்தி கே வலம் யோகிகளாலும், மத்யமை தியானவல்லமையுடைய வுபாசகர்களாலும், வைகரி வேதசாஸ்திரங்களைத் தெரிந்த பண்டிதர்களாலும், அநுபவிக்கத்தக்கது. இவற்றுள் மு ன்றுபாகம் அந்தர்முகமாயும், வைகரியெனு மொருபாகம் பகிர்முகமாயுமிருக்கும். அவ்வைகரியானது வெகுவிதமா ன வேதசாஸ்திர பாஷா விசேஷங்களாக விகசித்துநிற்கும் அங்ஙனம் விகசித்துநிற்கு மவ்வைகரி சுயமேகாக்ஷரமாக விருக்கும். உபாதிசம்பந்தங்களால் ஏகமாயும் மூன்றாயும் பதினாறாயும் ஐம்பதாயும் அக்ஷரங்களின் ரூபமாகப்பேதித் துக்காணப்படும். அவ்வக்ஷரங்களை வர்ணங்களெனக்கூறு வார்கள். இவ்வன்பது வர்ணங்களிலும் அவர்ணம் கவர் ணம் லவர்ணமென வர்ணசத்தை யேகமாகக்காணப்படுவத னால், அவ்வேகமாகிய வர்ணசத்தை, தந்தாலு ஓஷ்டமுத லிய ஸ்தலபேதங்களில் இச்சையாற் சலிக்கப்படுங் கிரியாச க்தியின் சம்பந்தத்தால், சர்க்கரை புளி லவணம் ஏலம் முத லிய சம்பந்தங்களால், நிர்க்கந்தமாயும் ஏகரசமாயுமுள்ள ஜலம், வெகு ரசகந்தபேதங்களை யுடையதாய்க் காணப்படு வதுபோல, ஐம்பது பேதமுடையதாகக்காணப்படும். அப் படியே விவகாரத்தின்பொருட்டு பதம் வாக்கியமெனச் சங் கேதிக்கப்படும். அவ்வித சங்கேதமும் ஈசனதிச்சாசக்தி யா னியமிக்கப்பட்டதுதான்.

அங்ஙனம் ஈசனதிச்சா சக்திபொருந்திய வைகரீரூ-

மான சாஸ்திரப்பிரமாணமானது, பிரபலம் சாமாந்நியம் எனவுமிரண்டு பிரிவாகக்கூறப்படும், பிரபலவாக்கியங்கள் அவற்றால் வாதிக்கப்படமாட்டாது. சாமாந்நிய வாக்கியங்கள் வாதிக்கப்படுவதுபற்றி யவற்றைவசனிக்குஞ் சாஸ்திரம் அப்பிரமாணமாகத்தகாது: இங்ஙனம் சாஸ்திரத்திற்றானே பிரபலமான ஏகதேச வாக்கியங்களாற் சாமாந்நியமாகிய ஏகதேச வாக்கியங்கள் வாதிக்கப்படலாமாயின், அந்நீதிகொண்டு உபாதிசம்பந்தங்களால நானாபேதமுடையவைப்பாய்க் காணப்படும் வர்ணபேதங்களும், அவற்றின் சம்பந்த வித்தியாசங்களாற் பதம் வாக்கியமென்ற பேதங்களும், அவற்றினிருபண பேதங்களாற் சாஸ்திரபேதங்களும், அவற்றாற் குறிக்கப்படும் வஸ்துபேதங்களும், பிரபலம் சாமாந்நியமென விருபிரிவுடையதாகி, அவற்றுட் பிரபலமெனுமொரு பிரிவாற் சாமாந்நியமெனு மொருபிரிவு வாதிக்கப்படலாம். முக்காலத்தும் வாதிக்கப்படாமலுபாதிக்கிலதுகலியின்றிச் சுயஞ்சித்திக்கின்ற பொருள் பிரபலமெனப்படும். அதனைப்பற்றிய சாஸ்திரம், அச்சாஸ்திரத்தின் கருத்தையுடைய வாக்கியங்கள், அவற்றின் கருத்தானபொருள்கள், அவைகளும் பிரபலமெனப்படும், மற்றியாவுஞ் சாமாந்நியமெனப்படும். ஏதெனில் சுயஞ்சித்திக்க வல்லமையில்லாததே காரணம்.

இங்ஙனமாயின், •பிரபலமாகவுஞ் சாமாந்நியமாகவும் பிரமாணவாக்கியங்கள் வர்ணங்களின் சேர்க்கை விசேஷமாக வந்த பொருள்களையிட்டுப் பிரயோகிக்கப்படுங்கால் நிர்விகாரமாகிய நாதப்பிரமமெனும் வர்ணசத்தை உபாதிகளின் கிரியாபேதங்களால் அகராதிபேதங்களாக விகாரப்பட, அவற்றை நிர்விகாரமாக வியாபித்த வர்ணசத்தை, அவைகளை அந்தந்த வர்ணங்களாகப் பலிக்கச்செய்து, அவ்வு

பாதிகளின் கிரியை நீங்குங்கால் அவ்வர்ணசத்தா மாத்திர மாகச்சேஷித்து நிற்கும். வர்ணசத்தையென்பது ஞானத் தின் ஸ்பூர்த்திக்குக் காரணமாகவிருக்கும். வர்ணங்களி லேகமான அவ்வர்ணசத்தையைப் பகுத்துக்காணும் விவர மேதெனில், உபாதிகளின் கிரியாசம்பந்தத்தால் நாதம் அ திசூக்ஷ்மமாகத்தொனிக்க, அக்கிரியையின் பேதத்தால் அ த்தொனியில் மாத்திரையின் பேதங்கள்தோற்றி, அந்நாத த்தோடு மபேதமாகக்கலந்து, ஏகாகாரமாக அகாராதி வர் ணங்களாகக் காணப்பெறும். அக்கிரியா விகாரங்களான மாத்திரைகள் அச்சம்பந்த நீங்குங்கால் நீங்கிவிடும். அம் மாத்திரைகள் நீங்குங்கால் அந்நாதமுந் தன்று நாதமாகிய வர்ணத்தின் சத்தாமாத்திரமாக நீங்கிநிற்கும். இங்ஙனஞ், சகல சாஸ்திரங்களாகப் பிரகாசிக்கின்ற வாக்கியபேதங்க ளையுடைய ஐம்பது வர்ணங்களையு முச்சரிக்குங்கால் அவற் றையும் ஒவ்வொரு வர்ணங்களிலுமுள்ள மாத்திரைகளையும் நிதானித்து, ஒவ்வொரு வர்ணங்களில் ஒவ்வொரு மாத்தி ரை கூடவுங்குறையவும் அத்திசையில் அவ்வர்ணங்கள் மா த்திரையின்கூடுதல் குறைதலாலுண்டாகிய வர்ணங்களின் றோற்றியொடுங்குந் தன்மையையுங்கண்டு, அங்ஙனந்தோ ற்றியதாயு மொடுங்கியதாயுமுள்ள மாத்திராபேதங்களையு டைய அந்தந்த வர்ணமிருக்கின்ற வியல்புப்படி அவ்வர்ணத் தினிருக்குகையை யாலோசித்தநுபவிக்கில், கடமாகவிருக் கின்ற விருக்குகை யிருத்தினதுபோலும், படமாகவிருக்கு கைதந்துவினதுபோலும், அகாராதி வர்ணங்களாகத்தோ ன்றிய மாத்திரைகளினிருக்குகை நிர்விகாரமான நாதமாத் திரத்தினிருக்குகையாக விளங்கும். ஒருக்காலும் பிரகா சமிருளாகாததுபோல, அவ்விருக்குகை யொருக்காலு மி ல்லையாகாது. இங்ஙனமாயின் இந்நாததத்துவம் அகா

ரதிவர்ணங்களாகத் தோற்றுங்கால் மாத்திரைகளின் சம்பந்தமுடையதாயும், நாதமாத்திரமாகப் பவிக்குங்கால் மாத்திரைகளின் சம்பந்தநீங்கினதாயும் பவிப்பதில், அந்நாதம் அமாத்திரையாயுஞ் சமாத்திரையாயும், மாத்திரைகளினுபாதியான கிரியாசக்தியின் சம்யோக வியோகங்களாற்பவித்து நிற்குமேயன்றித், தனதியல்பா யங்ஙனமிராது. அக்கிரியா சக்தியின் சம்யோகமே மாத்திரையெனு முதிப்பும் அதின் வியோகமே அமாத்திரையெனு முதிப்புமாகும். மாத்திரையாகவும் அமாத்திரையாகவு முதிக்கக்காரணமாய்நின்ற சம்யோகவியோகங்களை, அக்கிரியா சக்திநீங்கி நாதமாத்திரமாக ஸ்புரிக்கும் ஸ்தலத்திலச்சக்தி மாத்திரமாக விளங்குங்கால், அந்நாத தத்துவமாத்திரம் பிரகாசித்துநிற்கும். அஃது பிரகாசிக்குங்கால் தன்னிடத்தில் மாத்திரைகளின் சுபாவமாவது, அமாத்திரைகளின் சுபாவமாவது, அவைகளின் விகாரங்களாகிய ஐம்பது வர்ணங்களின் சுபாவமாவதில்லாததினால், அவற்றாற்றோற்றுநின்ற பேதமுடைய விஷயஞ்ஞான ஸ்பூர்த்தியின்றி, நிர்விஷயமான ஞானமாத்திர ஸ்பூர்த்தியைக் கொடுத்துநிற்கும்.

அவ்விதநாதந் தனதுபாதியாகிய முற்கூறிய கிரியாசக்தி யிச்சாசக்தியி னுதவிகொண்டே யுதித்தொடுக்குவதால், இச்சாசக்தி விஷயஞான ஸ்பூர்த்தியை முன்னிட்டே யுதிப்பதால், அஃதிவ்விடத்தில்லாததினால் அவ்விச்சாசக்தி நாதத்தினுதரவாகிய கிரியாசக்தியை நீங்கிநிற்கும். அக்கிரியாசக்தியும் அந்நாதத்தின் ஸ்பூர்த்திக்காதரவான வுபாதி ஸ்தலத்தை நீங்கிவிடும். அத்திசையில் அந்நாதமிருக்குந் தன்மையுடையதாக விவரிக்கப்படுவதால், இருந்தே யிருக்கிறதாகத் தோற்றவேண்டும். ஆதலால் நாதமாத்திரமாகத்தோற்றிய அவ்வர்ணத்தை நிதானத்துடனநுபவித்

து, அதனிருக்குகையைப் பிரித்தறிந்து, அவ்விருக்குகை நிர்விகாரமாதலால், அவ்விருக்குகையினுல், விகாரமாகிய கிரியாசக்தியின் சம்பந்தந்தாற்றேன்றிய வுபாதிமயமான நாதாம்ஸத்தை வியாபித்திருந்த வியல்பின்படி கண்டிடின், நாதம் ஸ்பூர்த்திந்திருக்கும்போதே யுபாதியம்ஸங்கள் நீங் கி நிர்விகாரமான சுயந்தனிருக்குகை மாத்திரமாகப் பிர காசிக்கும். கிரியாசக்திபொடுங்குங்கால் அப்படியே நாத த்தின் சுயமிருக்குகையைத் தங்களுக்கு வேருகக்காட்டா மற், றங்களையே அவ்விருக்குகைபோற் காட்டாநின்ற சத் தாகிய அவ்வுபாதியம்ஸங்க ணீங்கிய சுயமிருக்குகை மாத் திரமாகச் சேஷித்துநிற்கும்.

இவ்விருக்குகை அழிவில்லாததுபற்றி, அக்ஷரமென க்கூறப்படும். அவ்வக்ஷரத்தையே வர்ணமெனக்கூறுவார் கள். நாதமுதித்தொடுங்குமிடமாதலால், இவ்வக்ஷரசத்தை யைப் பராவெனவும், இஃதே யுபாதிசம்பந்தத்தால் நாத மாக விகசிக்குங்காற் பசியந்தியெனவும், இந்நாதத்தில் மாத்திரைகளாக வுதிக்குங்கால் மத்தியமையெனவும், அம் மாத்திரையின் சேர்க்கையால் அகராதி ஐம்பது வர்ணங்க ளாகவிகசிக்குங்கால் வைகரியெனவுங் கூறுவார்கள்.

இவ்வைகரியே வேதவேதாந்தங்கள் முதலிய சகலசா ஸ்திரங்களாகியும், வெகுவித பாஷைகளாகியும் பவித்து, இகபரங்களான விஷயங்களைத்தோற்றிப்பித்துப் பகுத்த றிவை ஸ்புரிக்கச்செய்வதாற் சாஸ்திரங்களனைத்தையும், ஐ ம்பது வர்ணங்களாகவும் அவற்றின் சேர்க்கை விசேஷங்க ளாகவுங்கண்டு, சேர்க்கையை வர்ணங்கள் மாத்திரமாகப்பி ரித்து அவ்வர்ணங்களை மாத்திரைகள் மாத்திரமாகப்பிரித் து அவற்றைக்கலந்துநின்ற நாதத்துவத்தினியல்பைத் த னித்துக்காணில், வைகரிமத்தியமையிலும் மத்தியமை பசி

யந்தியினுமாகவடங்கி நாதமாத்திரமாகப் பிரகாசிக்கும். அப்பொழுது சாஸ்திரங்களும் அவற்றாற் கூறப்பட்ட பொருள்களும் கடபடாதியாகக் காணப்பட்ட பிருதிவிவிகாரங்கள் பிருதிவிமாத்திரமாகக் காணப்படுங்கால், அவ்விகாரரூபங்கள் மாறுவதோடு அந்நாமங்களு மந்நாமரூபங்களைபிட்டபேதஞ்ஞானத்தின் ஸ்பூர்த்தியு மாறுபட்டு, பிருதிவி மாத்திரமான வியாபக விளங்குதலையடைவதுபோல சகல நாமரூபங்களும் அவைகளைப்பற்றிய பின்னபின்ன ஞான ஸ்பூர்த்தியுநீங்கி, வியாபகமான பசியந்தியெனுநாததத்துவமும் அதன்பொருளான நிர்விகார வியாபகஞானமுமே ஸ்பூர்த்திவிஷயமாகி அநுபவிக்கப்படும். அங்ஙனம் அநேகபின்னபின்னநாமரூபங்களாகத் தோற்றிய அண்டபிண்டசராசரங்களைப் பின்னபின்னங்களாக ஸ்புரிப்பிக்கக் காரணமாகநின்ற வைகரிமத்திமை, அவற்றின் பொருளாகிய இகபரமெனும் விஷயம், இவைபொன்றேடொன்று உபாதி நீங்குதலைமுன்னிட்டொடுங்கி, நிர்விஷயமாகித் தங்களுக்காதாரமான பசியந்திமாத்திரமாகப்பவிக்கும்.

பசியந்திநாததத்துவமாதலால், நாதத்துவந் தனதியல்புப்படி ஞானத்தைஸ்புரிக்கச்செய்யு மாகையால், தான் பேதமின்றி நிர்விஷயமாகியும் வியாபகமாயுமிருப்பதுபற்றி அப்படியே ஞானத்தை ஸ்புரிக்கச்செய்யும். இங்ஙனம் பசியந்தியினநுபவத்தைநிதானித்து, அதில் அதினிருக்குமகையை முற்கூறியபிரகாரங்காணில், பசியந்தியெனுமந்நாதந் தனதுபாதிவிகாரங்களை நீங்கித்தனதுகாரணமான பரையெனுமக்ஷரத்தின் சத்தமாத்திரமாகச் சேஷித்துநிற்கும்.

இவ்விதமாகியபரை, சகல சாஸ்திரங்களினந்தரங்கமாகிய சர்வஞ்ஞ சத்திபொருந்திய ஞானநிதியாகும். வியஷ்டிசமஷ்டியாகிய பிரபஞ்சசஞ்சிருஷ்டிக்கப்படுங்கால், ஈசனுக்

குச் சர்வவித்தியா ஞானாலயமாகியவிப்பரையே, சர்வஞ்ஞ சக்தியாகவிருந்து, அவரது சொரூபஞ் ஞானத்தையும் பிரபஞ்சஞ்ஞானத்தையுங் கரதலாமலகம்போலக்காட்டி, அவரது சொரூபஞ்ஞானத்துக் கனந்நியமாயவரது சத்தாமாத்திரமாகப் பிரகாசித்திருக்கும். வியஷ்டியில் சீவர்களுக்கவனது சிருஷ்டியாகிய சாக்கிரசொப்பன சுழுத்தியெனும் அவஸ்தைகளுக்கு, ஆதிகாரணமாகிய அஞ்ஞானமெனுமாவரண ஸ்பூர்த்தியாகவும், அவ்வுபாதியுடைய சீவனுக்குக் கிஞ்சிஞ்ஞ சக்தியாகவும், விவேகத்தால் அபரோக்ஷசாக்ஷாத்கார சமபத்தில் அதிஷ்டான சொரூபஞ் ஞானத்துக்கு வேறின்றிய சர்வஞ்ஞ சக்தியாகவும்பவித்து, அவனதிஷ்டான சொரூபசத்தா மாத்திரமாக நின்றிலங்கும்.

ஆதலால், நாதப்பிரமமெனும்பரையாம் அக்ஷரசத்தை சத்ரூபமாகிய வதிஷ்டானப்பிரமத்திற்குவேறாகவிருந்திடின், அசத்தாகிவிடும். பிரமமோ அத்துவிதவஸ்து. அதில் தருமங் கூடாது. ஆதலால், அதிஷ்டான பிரமமே, விவகாரத்தையபேக்ஷித்துப் பரையெனுநாததத்துவமாகவுரைக்கப்படுங்கால், சத்தையெனவும், அவ்விவகாரத்தை நீங்குங்கால்; சத்தெனவுங் கூறப்படும். இவ்விதமாக ஏகாக்ஷரமாமதிஷ்டான பரமான்மவஸ்து, பரையெனு நாதப்பிரம சத்தாமாத்திரமாகச் சேஷித்த பிரபஞ்சத்தைச், சன்மாத்திர அதிஷ்டானப் பிரமத்திற்குவேறாகவில்லாமற், சன்மாத்திரமாகக்கூறிய பிரகாரம் அநுபவிப்பாயாகவெனவருள:

மாணாக்கனும், அப்படியே சமாதிபெலத்தால் வைகரிநாதத்தையும், அதன் பொருளாகிய பிரபஞ்சத்தையும், மத்திமையெனு நாதசத்தையால் வியாபித்து, அவற்றையதற்கு

வேறாகவில்லாம லதுமாத்திரமாகவிஷேநித்து, அம்மத்திய மையெனு நாதசத்தை பசியந்தியெனு நாதசத்தையால் வியாபிக்கப்பட்டு, அஃது மதற்கு வேறாகவில்லாம லதுமாத்திரமாக நிஷேதிக்கப்படப், பசியந்தியும் பரையெனுமக்ஷர சத்தைக்கு வேறாகவில்லாமலகண்டமான பரைமாத்திரமாக அநுபவித்து, அப்பரையெனுமக்ஷரத்தை யதிஷ்டானமாகிய அக்ஷரவஸ்துவான சன்மாத்திரபிரமசொரூபமாகத் தர்மதர்மிபேதமின்றியநுபவித்து, அவ்வித சர்வவித்தியாதிஷ்டான சத்ரூப அக்ஷரமெனும் பிரமம், அவ்வநுபூதியிற்பிரத்தியக்கான தானாகவே பிரகாசிப்பதனால், தன்னை சர்வவித்தியாதிஷ்டானமாகிய அக்ஷரப்பிரமமாகவும் தனது சத்தையாற் சகல சாஸ்திரங்களுஞ் சன்மார்க்கங்களை ஆஸ்திக்கத்துடன் போதிப்பிக்கும் வல்லமையுடையவையானதாகவுங் கண்டு, அச்சாஸ்திரங்களு மவற்றாற்போதிப்பிக்கப்படும்பிரபஞ்சமுந் தனது சத்தைக்கு வேறாக வில்லாததநுபவத்திச், சத்ரூபனாகிய தனக்கு தனது சத்தை யெப்படிவேறாகவில்லையோ, அப்படியே தனது சத்ரூபமான அவைகள் தனக்கு வேறாகவில்லையென, அனைத்துஞ் சத்ரூபனாகத்தானாகவே பிரகாசிக்கு மநுபூதியையடைந்து, ஆனந்தக்கடலாடினான்.

முற்றிற்று.

---

ஆறாவது,

## சித்தநுபவநிருபணப்பிரகரணம்.

மாணாக்கன்—திரும்பவும் மேலான சிரத்தையுடன் ஆசிரியரதுசரணத்துவயங்களையும் வணங்கி இன்னம் பரமான்மாவின் சத்சொரூபத்தை விசாரிக்குங்கால் அனைத்துஞ் சத்சொரூபமாகவே சித்தித்து; சன்மாத்திரமான வநுபூதி

யை யடைந்திருந்தாலுஞ் சித்தநுபவமுமருள வேண்டுமென்று பிரார்த்திக்க:

ஆசிரியர்—பிரத்தியக்ஷமாக வநுபவிக்கப்பட்ட பிரபஞ்சத்திற்குப் பஞ்சபூதத்தைத் தவிர பிரத்தியக்ஷப் பிரமாணப்படி வேறுதாவு காணவில்லை. அங்ஙனமிருக்கின்ற பஞ்சபூதங்களுக்கு சாஸ்திரங்களா லிலக்கணங் கூறுங்கால் பிருதிவி அப்பு தேயுவாயு ஆகாயம் என்றவிவைகள், கந்தம் ரசம் ரூபம் ஸ்பரிசம் சப்தம் என்ற விக்குணங்களைக்கிரமமாகவுடையனவெனவும், அவற்றுள் பிருதிவி தனது குணமொன்றுடன் மற்றக்காரண குணங்கள் நான்கையு முடையதெனவும், மற்றப்பூதங்களுமப்படியே யெனவு நிரூபிக்கப்படும். இவற்றைச் சோதிக்கில் இந்தப்பிருதிவி கந்தகுணமுடைய தென்பதில் கந்தகுண மிலக்ஷணமாகவும் அதனையுடைய பிருதிவி யிலக்ஷியமாகவுமாயிற்று. "இந்தப்பிருதிவி" என்றதனால் இஃதுதான் பிருதிவி யெனப்படும். இஃதென்றால் பிரத்தியக்ஷாநுபூதி விஷயமாகும். இங்ஙனமாயின் அபரோக்ஷமாயுள்ள பிருதிவியெனக்காணப்படுவதால் அதனையுஞ் சோதிக்கில், முற்கூறியபிரகாரம் ஐந்து குணங்களையுமுடைய பிருதிவியானது இது கந்தகுணமுடைய பிருதிவியென்ற வநுபவத்தில் பிரத்தியக்ஷமா? அப்பிரத்தியக்ஷமா? கந்தகுணங்கிராணேந்திரியத்தாலும் ரூபகுணம் நயனேந்திரியத்தாலும் இரசகுணம் ரசனேந்திரியத்தாலும் ஸ்பரிசகுணம் தொக்கிந்திரியத்தாலுஞ் சத்தகுணஞ் சிரவணேந்திரியத்தாலுமாகக் கிரகிக்கப்படும்; இவற்றைத்தவிரபிரத்தியக்ஷாநுபூதி சாமக்கிரியை வேறில்லாததால் பிருதிவி பஞ்சேந்திரியங்களிற்காணப்படாம னிர்விஷயப்படும்; ஆதலாற்பிரத்தியக்ஷவிஷயமாகாது. அத்திசையில் இஃது பிருதிவியென்ற விவகாரபெலங்கொண்டு பிருதிவிதந்து

வம் பாதிக்கப்படினும் இஃதென்றபானம் பாதிக்கப்படமா ட்டாது. அங்ஙனம் பிரதிவிதத்துவம் பிரத்தியக்ஷத்திலி ல்லாவிடின் எல்லாவிடத்துங்குணியாதாரமாயுங் குணமா தேயமாயும் ஆதாரமின்றி ஆதேயமிருக்கத்தகாததாயும்சகல பிரமாணங்களாலுங் காணப்படுவதினூற் பிருதிவி தத்துவ மாங்குணியெனு மாதாரம் பிரத்தியக்ஷத்திற் சித்தியாததை பற்றி அக்குணங்களுஞ்சித்திக்கத்தகாதவைதான். மேலும் பிருதிவி பிரத்தியக்ஷமாகப் பிரகாசித்திடின் அக்குணங்களு ம் பிரகாசிக்கும். பிருதிவிமுற்கூறிய பிரகாரமில்லாததா கொண்டு விஷயப்படாமன் மறைந்திடின் அக்குணங்களு மறைபடவே செய்யும்.

ஆனல் குணி அப்பிரத்தியக்ஷமாயினுங் குணம் பிரத் தியக்ஷமாகவிருப்பது பற்றி குணியும் இருக்கலாமெனில், இஃது பிரதியக்ஷமா? அநுமானமா? பிரத்தியக்ஷமாயின் பிரத்தியக்ஷத்தில் அநுமானங் கூடாதென்ற பிரமாணத்தா ல் "இஃது பிருதிவி" என்ற பிரயோகம் நிஷேதிக்கப்படும். அநுமானமாயின்' பிரத்தியக்ஷாநுபூதியை யிட்ட பஞ்சேந் திரியங்களாகிய ஐந்து சாக்ஷிகளில் ஒவ்வொருகுணமொவ் வொரு சாக்ஷியானிர்ணயிக்கப்படினும், என்னுங்கு சாக்ஷிக ளாற் குணமனைத்தும் பாதிக்கப்படுவதுபற்றிக் குணங்களு ஞ் சுயஞ்சித்தித்தலின்றிக் குணியையுஞ்சாதிக்க வல்லமை யுடையதாகா.

ஆனல் குணியாகிய பிருதிவியாகிப்பும் அநந்தமாதி ய கந்தாதியாகியும் பிரகாசித்தபானமதுபவிக்கப்படுகிறதே; அவ்விதபானம் எவ்வஸ்துவினதாகலாம்? அஃதும் பிருதி வி யதன்குண மிரண்டும் பாதிக்கப்பட்டதுபோல் பாதிக்க ப்படுமா? எனில் இந்தப்பிருதிவி தந்தத்துவமுடையதாகப் பிரகாசிக்கின்றதென்ற பிரத்தியக்ஷாநுபூதியின் பிரகாசமே

ல்ங்கொண்டே ஒருவஸ்து பிரகாசிக்கவும் பிரகாசியாமலி ருக்கவுமாக வேண்டியதாயிருப்பதாற், பிருதிவியும் அதன் குணமும் பாதிக்கப்பட்டதனுல் அவைகளாகப் பிரகாசித்த பிரகாசம் பாதிக்கப்படமாட்டாது. அஃதெங்ஙனமெனில், சர்ப்பமாகப் பிரகாசித்த ரச்சுவில் இது சர்ப்பமென்ற விவ காரங்கொண்டு சர்ப்பம் பிரகாசித்தபோதிலும் விவேக பெலத்தால் இஃது சர்ப்பமன்றெனச் சர்ப்பம் நிஷேதிக்க க்கப்பட்டிடினும் இஃதென்றபானம் ரச்சுவைப்பற்றி நிஷே திக்கப்படாமல் பிரகாசிப்பதுபோல், இவ்விடத்தும் இஃ தென்றபிரகாசம் பாதிக்கப்படாமற் பிரகாசித்து நிற்கும். இஃதென்பது ஞானரூபமாதலாலும் பிருதிவியென்பதும் அதன் குணமென்பதும் ஜடமாதலாலும் சர்ப்பமாகப் பிர காசித்த சர்ப்பபானம் அவ்வாரோபித சர்ப்பத்தை இடை விடாமல் வியாபித்து, அஃதுவாதிக்கப்படுங்கால் இஃது சர்ப்பமன்றென்ற விவகாரத்தாற்றோன்றிய சர்ப்பத்தினின் மையையும் இடைவிடாமல் வியாபித்துப் பிரகாசிப்பித்தும் பிரதீதியினுலவைகளை யெதிரிடாமலிருந்திடின் இஃதென்ற பிரகாரமாத்திரமாகப் பிரகாசிப்பதுபோல்; இவ்விடத்தும் இஃதென்றசிற்பிரகாசமாத்திரமாகப் பிரகாசித்து நிற்கும்.

ஆயின் ரச்சுசர்ப்பம்போல் குணியான பிருதிவியும் அ தன் குணமானகந்தமும் பிரத்தியக்ஷாநுபூதியில் ஆரோ பிதமாகச்சொல்லுவது நீதியாகுமாவெனில்; பிரத்தியக்ஷ த்தால் வாதிக்கப்பட்டும் பிரதீதியிற் காணப்பட்டுமுள்ள வஸ்து ஆரோபிதமென்பது பிரபலநியாயமாகவிருப்பதால், அவ்வித நியாயமெந்தவிடத்திலுளதாகுமோ அவையெல்லா ம் ஆரோபிதமென்பதிற் குற்றங்கிடையாது: ஆதலாற் பிர தீதிமாத்திரமாகத்தோன்றிய பாவாபாவங்களான விஷயங் கள் பிரகாசிக்குங்காலும், நிஷேதிக்கப்படுங்காலும், ஆரோ

பிருமான ஜடாம்ஸந்தோற்றிமறையுமேயன்றி யங்ஙனம்பிர
காசித்த பிரகாசம் இஃதென்ற ஞானரூபமாகவிருத்தலால்
பாதிக்கப்படமாட்டாது. இங்ஙனமாயின் பிருதிவிபாகப்பிர
காசிக்கவேண்டுமாயினும், நிஷேதிக்கப்படுங்கால் அதினின்
மையாகப் பிரகாசிக்கவேண்டுமாயினும் பிருதிவிதத்துவமா
னது தனக்கன்னியமான பிரகாசத்தின் பெலங்கொண்டே
பிரகாசிக்கவேண்டும்; அந்தப்பிரகாசமும் நீக்கமறத்தன்னை
வியாபித்திருக்கவேண்டும். இப்படியே மற்றப்பூதங்களும்
பிரகாசிக்கவேண்டுமாயின்; ஒன்றுக்கொன்று விருத்தங்க
ளான விகாரங்களையுடையதாக விருப்பதனால், அவைகள்
விகாரிகளான பேதமுடையவையாகவும் அவற்றை கலந்து
நின்று பிரகாசிப்பித்த நிர்விகாரமானபானம் ஏகமாகவுமி
ருக்கவேண்டும்.

அப்படியானால் பானம் ஏகமாயும் நிராகாரமாயுமிருக்
கின்றது; பூதங்கள் விகாரிகளாயும் பின்னங்களாயுமிருக்கி
ன்றன; அவைகளெவ்விடத்தும் அணுமாத்திரமேனுந் தங்
களிற் பிரகாச வியாபகமில்லாவிடின் அவ்விடம் பிரகாசி
யாது. அக்கினியின் வியாபகத்தில் அதற்கு விருத்தமான
தமசின் வியாபகஞ் சித்தியாததுபோல, ஜடத்துக்கன
னியமானதுபற்றி சத்ரூபமான சித்பிரகாசம் ஜடமாகிய
பிருதிவியை யிடைவிடாமல் வியாபித்திருக்குங்காற்றனது
விகாரமான ஜடத்தன்மையாம் அந்தகாரமுதிக்கவிடமின்றி
நீங்கிவிடும். ஜடத்தன்மை நீங்கில் அச்சடத்துவத்தைத்
தவிரத்தனக்கு ரூபம்வேறில்லாதலாற் சொரூபமின்றிப் பி
ருதிவியும் பானமாத்திரமாக நிர்ச்சேஷமாய் நீங்கிவிடும்
அதினின்மையு மப்படியே நீங்கிவிடும். அதன்குணமு மப்
படியே யாகும். இங்ஙனம் பிருதிவிதத்துவம் பானமாகவ
நுபவிக்கப்படின் அப்படியே மற்றப் பூதங்களுமாகத்தகும்.

அவ்விடத்தும் இஃது பஞ்சபூதமென்ற விவகாரப்பிரகாச பெலத்தால் இஃதென்ற ஞானப்பிரகாசமாத்திரம் பஞ்ச பூதங்களாகத் தோற்றிய வியாபகத்தையும், அவை வாதிக்கப்படுங்கால் அவற்றின் இன்மையாகத்தோற்றிய வியாபகத்தையும், தனதுவியாபகத்துக்கு வேறின்றித் தனதுவியாபக மாத்திரமாகபிரகாசிக்கு இஃதென்ற ஞானப்பிரகாச மாத்திரம் அகண்ட வியாபகமாகவநுபவத்துக்கு வரும்.

அவ்வித இஃதெனும் அகண்ட சிற்பிரகாசாநுபூதியினின்றும் முன்பிரதீதிமாத்திரமாகத் தோன்றிய திருசியமான பஞ்சபூதங்களையும் அவற்றின் குணங்களையுங் கற்பனையாலெதிரிட, அவைகளும் இதுவெனும் பூரணசிற்பிரகாசத்துக்குள் தோற்றி நிற்கும். அவ்வித பிரதீதியைச் சங்கற்பத்தாலெதிரிடாவிடின், அவைதோற்றுமற் பிரகாச மாத்திரமாகச் சொரூபமின்றி நீங்கிவிடும். தோற்றிய அம் சம்பிராந்தியைப்பற்றியதாகவும் பிரகாசித்த அம்சம் பானத்தைப்பற்றியதாகவும் விளங்கும். பானம் நிர் விகாரசித்ரூபமாதலால் அவ்விதசித்ரூப பானமின்றி மற்றவாரோபிதமாகவெந்தவஸ்துவும் ரூபீகரித்துப் பிரகாசிக்கக் காரணமில்லாதலால் அனைத்துக்குஞ் சித்ரூபபானமே யுண்மையான சொரூபமாகும். இங்ஙனப் பிரகாசிக்கும் ரூபம் எவ்வஸ்துவுக்கில்லையோ அஃதுவந்தியா புத்திரன்போல அவஸ்துவெனப்படும்.

இப்பிரகாரம் இஃதெனுமகண்டசித்ரூப பானத்துக் கன்னியமானயாவும் அவஸ்துவாகப்பவிக்கின் அவஸ்துவை வஸ்துபோற் றோற்றுவிக்கக் காரணமாய்நின்ற பிராந்தியைச்சோதிக்கவேண்டும். பிராந்தியென்பது ஒன்றை மற்றொன்றாகக் காட்டுந்திறமையுடைய மனமெனுங் கற்பனாவிருத்தியாகும், அவ்விமனம் அகண்டமாகிய இதுவெனுமகண்

ட சிற்பானந்தத்தைத்தவிர அந்நியமா? அதுவேதானா? அஃ தெவ்விடத்திநினின் றெவ்விதமாகப் பிரகாசிக்கின்றது? இந் தப் பானத்தைத் தவிர அதற்குவேறிடமில்லாததினால் இதி னின்றே பிரகாசிக்கவேண்டும். அங்ஙனம் பிரகாசிக்கினு ம் பானத்துக்கந்நியமாயின் ஜடமாய் முற்கூறிய பிரகாரம் அவஸ்துவாகும். பானமேரூபமாயின் பானம் நிர்விகாரமா தலாற் கற்பனைக்கிடமாகாது. அதனைக் கற்பனாவிருத்தி யாம் மனமெனவுங்கூறக்கூடாது.

மேலும் அகண்டசிற்பானத்தில், யூகிக்கில் இஃதெனவொருபாதி காணப்படுகிறது. அஃது பானத்தைச் சார்ந்த தா? மனதைச்சார்ந்ததா? பானத்தைச் சார்ந்ததிற்கில், அத னையுஞ் சோதிக்கவேண்டும். இஃதெனப் பிரகாசிப்பதில் இஃதெனச் சுட்டப்படுவதாற் சுட்டப்படுந்தன்மை திருசிய மாகிய ஜடத்துக்கேயன்றி சிற்பானத்துக்குக் கிடையாது. ஆனாற்சிற்பானத்தின் சம்பந்தத்தாற் பிரகாசிக்கிறதெனில் நிர்விகாரமாகிய சிற்பானம் அசங்கியானதால் அதன் சம் பந்தமுமிதற்குக்கிடையாது. இங்ஙனமாயின் அகண்டமாக ப் பிரகாசிக்கின்ற சிற்பானத்தில் இஃதென்றுசுட்டப்படுங் குறிப்பு அகண்டமாகவிருப்பதால் அவ்வகண்டக் குறிப்பே இஃதெனுமுபாதியாகக் காணப்படுவதால் அதனையுஞ்சுய ஞ்சிற் பிரகாசத்தால் வியாபித்துப்பார்க்கின், இதம் விருத் தியில்லாமற் சிற்பானமாத்திரமாகச் சேஷிக்கும். அங்ங னம் நீங்கின் சுயம்பானமானசித்து அகண்டமாயேனுங்கு னம் விவ றிக்கப்படாமல் மஹா மௌனமாகப் பிரகாசிக்கும். விவ காரத்தால் முற்கூறிய இஃதெனும் விருத்தி பிரதிமாத்தி ரமாக வுதிப்பதாயின் சொரூபத்திலிஃதெனும் விருத்தியில் லாததால் இதனின்மையையே சொப்பிரகாசத்தினின்மை யாகக்காட்டும். அதனின்மை சொப்பிரகாசத்தினின்மை

யாகக்குறிக்கப்படின் அவ்விடத்தகமெனுமோரப்பர் தன்மை யைத்தோற்றுவிக்கும். அங்ஙனமுதித்தவகந்தையின் சம் பந்தத்தால் நானெனதெனவிருதன்மையாகும். நானென தெனவுங் கற்பனைவரவேண்டுமானால், அஃதுமனத்தையே சாரத்தகும். ஆதலாற்குறிக்கக்கூடாமற் சூனியம்போன்ற மனதினோர் பாகமாகியவிருத்தி அகங்காரமெனவும் பகிர் முகமாகக்குறிக்கப்படு மொருவிருத்தி இஃதெனவுமாகின் றது. முன் இஃதென்றவிருத்தி சிற்பான மாத்திரமாக நிஷேதிக்கப்பட்டதுபோல சூனியம்போன்ற இதம்விருத்தி யினின்மையான அகம்விருத்தியையும் ஜடமாகக்கண்டு அவ் வித ஜடத்தன்மை சொப்பிரகாசத்தினுதிக்க விடமின்மை யால், அதனை முக்காலத்திலும் அவஸ்துவாக நிஷேதிக்கில் இதம் விருத்தியாகத்தோற்றமும் லயமெனும் அகம் விருத் தியாக வொடுக்கமுமாகக் காணப்பட்டமனஞ் சொரூபம ற்று தோற்றியொடுங்கவிடமின்றி முக்காலத்திலும் அவஸ் துவாகப்பவித்து சொப்பிரகாசத்துக்கு வேறாகவில்லாமனி ங்கிவிடும். இங்ஙனமநுபவிப்பாயாக வெனவருள:

மாணாக்கன்—அப்படியே பஞ்சபூதங்களையுஞ் சொரூ பமில்லாமற்செய்து அதனையுள்ளும்வெளியும் வியாபித்திரு ந்த சொப்பிரகாசபானத்தை பிரத்தியக்ரூபனானதாகக் கண்டு, தன்னில்இஃதெனவும் அகமெனவுமுதிக்கக் காரண மாய்நின்ற அகண்டவிருத்தியா மனதைலயரூபமாகவும் ஸ் பூர்த்திரூபமாகவும் உளதாசநோக்கி, அதனையுந்தனது சொ ரூபத்தானிஷேதித்து, சுயம்பிரத்தியகப் பிரமப்பிரகாசமா கப்பிரகாசித்துக், காலத்திரையத்தினுங் கண்டாகண்டவி நிர்முக்தமாகிய சிற்சோதியசுந்தன்னைத்தவிர இரண்டாம் வஸ்து இல்லையெனச் சிதானந்தசுகாசிந்துவில் மூழ்கினான்.

முற்றிற்று.

ஏழாவது.

## ஆனந்தாநுபவ நிரூபணப்பிரகரணம்.

மாணாக்கன்—பின்பு ஆசிரியரதிருதாளை வணங்கித்தேவரீரது அபாரமகிமை பொருந்திய கருணாகடாக்ஷத்தாலருளிய பிரகாரங் கிருதார்த்தனாயினேன். ஆனந்தாநுபவத்தை யுபதேசிக்கவேண்டுமெனப் பிரார்த்திக்க:

ஆசிரியர்—இந்தக்கடம் எனக்குமிகுந்த விஷ்டமாயுள்ளதென்பதுபோல, புத்திர மித்திர களத்திர க்ஷேத்திராதிகளில் இஃதெனக்கிஷ்டம், எனமிகுந்த பிரியங்காணப்படுகிறது. அதனைச்சோதிக்கில், இப்பிரமாண்டமனைத்துஞ் சுயமானந்தவடிவமாகவே காணப்படும். இகமுதற்பரம்வரை பிரபஞ்சத்திலானந்தத்தின் பிராப்தியானது,விஷயரூபமாகியும் ஆன்மரூபமாகியும் இருவகையாகக் காணப்படுகின்றது. அவற்றுள் விஷயானந்தமானது, இகத்திற்பெண்டு-பிள்ளை-தனம்-தானியம்-யௌவனம்-இராச்சியம்-சிரக்கு-சந்தனம் முதலியவற்றின் போகங்களை முன்னிட்டுதிப்பதுவும், அப்படியே சொர்க்காதிகளிலுள்ள விஷயபோகங்களை முன்னிட்டுதிப்பதுவுமாகும். அதனைத்தெய்வானந்தமெனவும், இகத்திலுதிப்பதை மானுடானந்தமெனவுங் கூறப்படும். விஷயபோகங்களை நீக்கிக்கரணகருவிகளையுமொடுக்கித் திருசியநீங்கிய ஆன்மாபரோக்ஷாநுபவத்தை முன்னிட்டுதிப்பது, ஆன்மானந்தமெனப்படும்.

இவற்றுள் அந்தக்கரணத்தில் ஆன்மானந்தமுதிக்க வேண்டுமானால், அவ்வானந்தம் எவ்விடத்திலிருந்து உதிக்கின்றதெனக்காணில், ஒருவஸ்துவே ஏககாலத்திலொருவனுக்குச் சுகஜனகமாயும் மற்றொருவனுக்குதுக்ககாரியமா,

யும் இருப்பதினாலும், கணபேதத்தால் ஒருவஸ்துவே ஒரு புருடனுக்கு விருப்பு வெறுப்பிற்குக்காரணமாகிறதினாலும் விஷயங்கள் பூர்த்தியாயிருந்துந் தானில்லாவிடிற் பிரகாசிக்கக்கூடப் பிரசக்தியில்லாமையினாலும், விஷயசம்பந்தமில்லாத சுழுத்தியில் தானேசுகமாகவநுபவிப்பதினாலும், விஷயங்களினின்று முதிக்கத்தகாது. ஆன்மாவினிடத்தினின்றுமே யுதிக்கவேண்டும். ஆனால் பரமான்மா எல்லாவிடத்துமெப்பொழுதும் ஏகசொரூபனாக நிறைந்திருக்க, எக்காலத்துமவ்வானந்தந் தோற்றலாமேயென்னில்; ஆனந்தரூபனாகியபரமான்மா எவ்விடத்து மேக்காலத்தும் ஏகரூபனாகவியாபித்திருந்தபோதிலும், கோவினதுக்ஷீரங் கோவின் சர்வாவயவங்களினு நிரம்பியிருந்தபோதிலும் அக்ஷீரத்தின் பிராப்தி மூலத்துவாரத்தை முன்னிட்டே சித்திப்பதுபோல, இவ்வான்மானந்தமும், ஆனந்தமயகோசத்தை முன்னிட்டேயுள்ளத்திற் பிராப்தியாகும். ஆதலால் ஆனந்தப்பிராப்தியின்பொருட்டு ஆனந்தமயகோசஞ் சாத்தியமெனவும், விஞ்ஞானமயகோசஞ் சாதனமெனவும்படும்.

இகபரங்களாகிய விஷயங்களை முன்னிட்டு ஆனந்தம் பிராப்தியாகிறதாகப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தாலுஞ் சாஸ்திரப்பிரமாணத்தாலுங் காணப்பட்டிருக்க, அவ்வானந்தம் ஆன்மானந்தமாக வெங்ஙனங்கூடும்? அவ்வானந்தம் ஆன்மாவினதாயின், பிரபஞ்சத்தில் ஆனந்தப்பிராப்தியின் பொருட்டு கிருஷி-வாணிச்சியம்-இராச்சியம்-தவம்-யாகாதிகள் முதலான இக்கர்மங்களைச் சிரமத்துடன் ஏன்செய்கின்றார்களெனில், அவ்விநசிரயம் அவிவேகத்தாலேயன்றி விவேகத்தை முன்னிட்டன்றெனத் தெளியவரும். அஃதாவது:-ஒருவஸ்து இரண்டு சொரூபமுடையதாகவிராது. ஒருசொரூப முடையதாகவேயிருக்கும், இரண்டு சொரூப

முடையதாகக் காணப்படின் ஒன்று அவிவேகநிமித்தமாகும். இங்ஙனமாயின் பெண்டு-பிள்ளை-பெண் தனமிவற்றில் மிகுந்தபிரியமுடைய ஒருவன் வழிபோகுங்கால், அவர்களுடன் நதிப்பிரவாகத்தைச் சந்தித்துமிகுந்தபிராணபயத்தை யடைந்து, அவைகளையுந் தன்னையுமிரக்ஷிக்கும் பொருட்டாலோசித்து, கையிற்பிடித்திருந்த தனது கன்னிகையைவிட்டுக் கொஞ்சத்தூரஞ்செல்ல, பின்னுஞ் சிரமமுண்டாகித் தோளிலிருந்த குமாரனையும் நீக்கிப்போக பின்னும் பிரவாகவாதையினுன் மற்றொருகைபிற் பிடித்திருந்த தாரத்தையும் நீக்கியேக, பின்னுஞ் சிரமத்தையடைந்து இடுப்பிற்கட்டின கனம்பொருந்திய திரவியத்தையும் "உடலிருந்தாலெவ்வளவோ திரவியஞ்சம்பாதிக்கலா" மென்று நீக்கிச் சென்றான். இப்படிச் சென்றவனுக்கு முந்தியகாலத்திற் சுகத்தைக் கொடுக்காநின்ற அவைகளின் சம்பந்தம், பிரவாகவாதையிற் பிராணஹாநியைச் செய்யத்தக்க அநிஷ்டபதார்த்தங்களாகக்கருதி நீக்கப்பட்டவையாயிற்று.

மேலும் சக்கரவர்த்தியாகிய வோரரசன் சாமந்தவர்ச்சர்களாற் கப்பம்வைத்துக் காணப்படுங்கால், அவர்களது வணக்கத்தாலுந் தோத்திரங்களாலுமிருந்த கௌரவத்தைப்பொருந்தி, அவர்களால் புகழப்பட்டு வெகுநேரம் அவர்களுடன் பெருமையான சல்லாபங்களைச் சல்லாபித்துப், பின்பு அவ்வித மகிழ்ச்சியுடன் அந்தப்புரத்திற்சென்று, அவர்களுடன் கிரீடித்துத் தனதுசக்கரவர்த்தித் தன்மையை மேலான சுகவிலாசமாகநினைத்து சுகித்திருக்குங்கால், சுழுத்தியையடைந்தவனானன். மறுநாள் காலாதிக்கத்தின்பேரிலெழுந்தவனாகி, இஷ்டர்களாலிவ்வளவுநேரஞ் சக்கரவர்த்திகள் நித்திரைசெய்யலாமாவென வினவப்பட, "நேற்று இராச்சியபாரத்தால் அதிகச்சிரமம்நேரிட்டதுபற்றி அவ்வு

கள்நீங்கும் பொருட்டதிகமாகச்சுகமாய் நித்திரைசெய்தேன்" எனக்கூறினன். எல்லோர்களாலுந் தன்னாலுமிருந்து பிரியப்படத்தக்க சக்கரவர்த்தித்தன்மை மேலானசுகத்தைக்கொடுப்பதாயின், அதனை நீக்கவேண்டி சுகமாகத்தூங்கினேனெனச் சக்கரவர்த்தித்தன்மையை யிகழ்ச்சியாகக்கூறவேண்டுவதேன்? அவ்வரசன் தூங்குங்காலுதித்த சுழுத்தியானந்தம், ஒரு சக்கரவர்த்தி யொருதரித்திரனை மதியாததுபோல, சக்கரவர்த்தித்தன்மையைத் துச்சப்படுத்திக்காட்டவேண்டுமானல், அச்சுழுத்தியானந்தம் மேலானதாகவிருக்கவேண்டுமே. அவ்வானந்தத்தை யபேக்ஷித்து சக்கரவர்த்தியானந்தந் துக்கமெனப்படும். சக்கரவர்த்தித் தன்மையின் சொரூபம் ஆனந்தரூபமாயின், ஒரு சமயத்திலுந் துக்கரூபமாகக் காணக்கூடாது. ஆதலால் அவிவேகத்தாற் சக்கரவர்த்தித் தன்மை ஆனந்தம்போலும் அஃதில்லாமை துக்கம்போலுங் காணப்படுகிறதேயன்றி, விவேகித்திடிற் றுக்கரூபமேயாகும்.

அஃதெங்ஙனமெனில, கடககமகுட குண்டலாதிகளைத் தரித்தல் சிர முதலிய அவயவங்களுக்குத் துக்கத்தையே கொடுக்கும். இராச்சியபாரத்தையிட்ட பரியாலோசனைபுத்திக்கு வருத்தத்தையே கொடுக்கும். ஈர்க்கல்களின் கூட்டங்களைக் கட்டன வாரிமலை அபிமானிப்பதுபோல, சைந்நியம் ஆயுதம் ஆடை-ஆபரணம் தனந்-தானியம்-விஸ்தாரமான-பூமி-தனகோசம் இவைகளையிட்ட விதிவிலக்கான வதிகாரம் அகற்காதாரமான சண்டாளர்வீதிபோன்ற ரத்தம்-மாமிசம் சுக்கிலம்--மேதசு--நரம்பு--எலும்பு-தோல்-மலம்--மூத்திரம் கபம்-நகம்-மயிர் இவற்றையே சொரூபமாக வுடைய வெளவனம்பொருந்தியதேகம். இவ்வனைத்தையும்பகுத்தறிவின்றிக்கூட்டிச்சேர்த்து,"நான்சக்கரவர்த்தி, எனதிராச்சியம்"

எனவபிமானிக்க, அவ்வபிமானத்தாற் சுகம்பொற்றேன்
றினும் விவேகித்திடிற்றுக்கரூபமாகவேயாகும்.

சுழுத்திதிசையில் அரசனிறந்தவனாகக்காணப்படவில்லை;
அவ்விடத்தவனெங்ஙனமிருந்தானெனப்பார்க்கில், கடகம
குடாதியாபரணமென்ன, அவற்றைத்தரிக்குந்தேகமென்ன
அவற்றைக்கண்டு மகிழுங்கரண கருவிகளென்ன, அவற்றி
னதிகாரமென்ன, அதற்குவிஷயமாகிய விராச்சியமென்ன,
இவற்றைத்தனதாக வபிமானிக்குமஹாவகங்காரமென்ன,
இவ்வனைத்தையுநீங்கிச், சுககாரணமாக யாதொருசாதனமு
மின்றித் தானேதனக்கானந்தவடிவமாக விருந்தவனாகின்
றான்.

அவ்வித ஆனந்தவடிவமே தனதுவடிவமென விவேக
மில்லாமையால், விழிக்கும்போது நான்சுகமாய்த்தூங்கினே
னென்று தனதுசுகவடிவை யகங்காரத்துடன் கூட்டிக்
கண்டு, அவ்வகங்காரியானதன்னைத் தேகசம்பந்தத்தாற்
றேகவடிமாகப்பார்த்து, மகுடாதியாபரணசம்பந்தத்தாற்
றன்னைக்கிரீடியெனமகிழ்ந்து அப்படியேமற்றவிராச்சியங்
களையும் அபிமானித்து, நான்சக்கிரவர்த்தியென அவிவேக
த்தால் மிகுந்தபிரியவிலாசத்தையடையுங்கால், "நானே
னதிராச்சியமோ! எனதுதிகாரமோ!" எனஅவ்விஷயவடி
வங்களைக்கண்டு, சித்தவிருத்திகொள்ளாமற் சலனமின்றி
யற்பநேரமிருக்க, அத்திசையில் இந்திரியம் விஷயம் இவ
ற்றைமுன்னிட்டு அந்தக்கரணஞ்சத்துவாகாரமாகப் பரிண
மிக்க, அக்கணத்தில் கரணகருவிகளின் சம்பந்தமின்றிய
சத்துவவிருத்தி ஆனந்தமயகோசத்தின் ஆபாசமானதால்
அதிலான்மானந்தம் ஆனந்தமயகோசத்தின்வழியாக வுதி
த்துநிற்கும். அவ்வானந்தத்தை ஆன்மானந்தமெனவறியா

மல், அவ்விஷயமார்க்கமாகவுதித்ததாய்க்கொண்டதனை விஷயானந்தமெனவபிமானிப்பான். விஷய நீங்குங்காலும் விஷயம்விரோதப்படுங்காலும் விவேகமின்மைபற்றி மூடவிருத்தியுண்டாகி, அம்மூடவிருத்தியாற் சத்துவவிருத்தி திரோதானப்படட, அவ்வானந்தமுந்திரோதானப்பட்டு நான்றுக்கியெனவிவகரிப்பான்.

ஆகலால் அவர்களது அவிவேகத்தை யபேக்ஷித்துத், தேகசம்பந்தமாயும் மனேசம்பந்தமாயுமுள்ள விசித்திரங்களான கர்மங்களை, உலகவழக்கத்தாலுஞ் சாஸ்திரப்பிரமாணத்தாலும் விதிக்கப்படும். அவ்வித கர்மங்களைத்தெரிந்து செய்யச்சாதனம் புத்தியைத்தவிர வேறில்லாததனல், அதைக்கொண்டே இகபரமிரண்டுஞ் சாதிக்கப்படுவதுபற்றி விஞ்ஞானமயகோசத்தைச் சாதனமென்றும், இகத்திலாவது பரத்திலாவது ஆனந்தமுதிக்கவேண்டுமானல் ஆனந்த மயகோசத்தினின்று முதிப்பதினல், அவ்வானந்த மயகோசத்தைச் சாத்தியமென்றுங்கூறினேம். இவ்விஞ்ஞானமயகோசஞ் சூக்ஷ்மமாகி எவ்வளவுவிஸ்தாரப்பட்டதோ, அவ்வளவு ஆனந்தமும் விஸ்தாரமாகப் பிராப்தியாகும்.

இங்ஙனமாயின் பஞ்சபூதங்கள் அதன் குணமான சப்தாதிகள் அதன் விகாரங்களாகிய கடபடமுதலான விகபரமெனுமுலகங்கள் இவ்வனைத்துஞ் சத்துவம் இரஜசு-தமசு-என்ற மூன்றுகுணங்களின் விகாரங்களாகும். விஷயாநுபூதிதிசையில் விஷயங்களை யிந்திரியங்களாற் புத்தி வியாபிக்குங்கால், விஷயங்கள் அனைத்தையும் வியாபித்த அந்தப் புத்தியை விஷயாகாரங்களாகப் பேதப்படுத்தி அவைகளில் மோஹத்தால் மயக்கச்செய்ய, அம்மயக்கங்கொண்டு அவ்விஷயங்களையுந் தன்னையுந் தனததிஷ்டானமான ஆன்மாவ

ந்தத்தையும் பகுத்தறிய வல்லமையின்றி சூக்ஷ்மமாத்திரமூர்ச்சித்துநிற்கும். அத்திசையில் விக்ஷேபமில்லாததுபற்றி சத்துவகுணமிருந்து அதன்வழியாக ஆனந்தம் பிராப்தியாகும். விஷயகாரமாகப் புத்தியைப் பேதிப்பித்தது, புத்தியினுடையவும் விஷயங்களுடையவும் ரஜோகுணமாகும். அவ்விஷயங்களையும் இப்புத்தியையும் மோஹத்தாற் பேதப்படுத்தி பேதத்தோற்றமின்றி மூர்ச்சிக்கச்செய்தது, புத்தியினுடையவும் விஷயங்களுடையவுந் தமோகுணமாகும்.

ஆனால் ரஜோகுணத்தாலுந் தமோகுணத்தாலும் விரிதிக்கப்பட்ட புத்திக்குச் சத்துவகுணத்தினுதிக்கங் கிடைக்கக்காரணமேதெனில், இரண்டு குணத்தாலும் புத்திமூர்ச்சிக்கு மவதரத்தில், தனதுவல்லமை விஷயத்தைநாடச் சாமர்த்தியமின்றித் தனது காரணமான சத்துவவிருத்தியிலொடுங்கிநிற்கும். அப்பொழுது ஆனந்தமயகோசத்தின் வழியாக ஆனந்தம் பிரதிபலிக்கும். அவ்வானந்தாநுபவத்தை விஷயமாகக்கொண்டு முன்போற் பகிர்முகமாகவுதித்திடும். அங்ஙனமுதிக்க, அவ்வானந்தத்தைப் புத்தியைக் கலந்துநின்ற தமோகுணமும் ரஜோகுணமுந் தங்கள் சக்தியாற்கலந்து, விஷயாகாரங்களாக அதனைப்புத்திக்குக்காண்பிக்கும். அவ்வானந்தத்தைப்புத்தியும் விஷயானந்தமென மதிக்கும். ஆதலால் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் புத்தியிலும் விடயத்திலுமிருக்கிறபடியறிந்து, அவற்றைநீக்கி யவற்றுள் மறைந்துநின்ற சத்துவகுணத்தோடும், இரண்டுகுணங்களு நீங்கிய புத்தியையும் விஷயத்தையும் ஐக்கியப்படுத்திடில், ஆனந்தமயகோசத்தின்வழியாகவே புத்தியினுதரவால் விஷயங்களிற் பிரதிபலித்த ஆனந்தம் அநுபவிக்கலாகும், அவ்விடத்து விஷயத்தோற்றமில்லாததனால், அவ்வானந்தமாத்மானந்தமென வநுபவிக்கப்

படும்.

விஷயம் புத்தியிரண்டிற்கு மிரண்டு சொரூபங்களிருக்கின்றன. அவற்றுள் ஒன்று விகாரமும், ஒன்று நிர்விகாரமுமாகும். தமோகுணமும் ரஜோகுணமும் விகாரவடிவகளைப்பற்றியிருக்கும். சத்துவகுணம் நிர்விகாரவடிவைப் பற்றியிருக்கும். அதனையறியும் பிரகாரத்தை விசாரிக்கில், "இந்த நமது இராச்சியம் நமக்கு மிகுந்த லாபத்தைக்கொடுக்குந்திறமையுடைய இஷ்டவஸ்து" என விருத்தியுதிக்குங்கால், விசித்திரங்களான குணபேதங்களையுடைய நானவஸ்துக்களுடன் கூடினவிராச்சியம் அவ்விருத்தியில் பின்னபின்னமாகக்காண்ப்பட, அதனைத்தன் புத்தியிலுள்ளபடி சுட்ட, அப்பொழுது இஷ்டவஸ்துவாக இராச்சியம் பிரகாசிக்க, இங்கிது நமதிஷ்டவஸ்துவெனப் பிரியந்தடித்துமகிழ; அப்பிரியத்தால் முற்கூறியபிரகாரம் க்ஷணமாத்திரமூர்ச்சித்து விஷயத்தோற்றமின்றி யானந்தாநுபவமுதிக்க, அஃதுடன் விஷயவிஷயியாக பேதத்தோற்றங்காண, அவ்வானந்தத்தை விஷயங்களிலுணர்ந்து மகிழக்காணப்படுவதால்; நாநு விஷயங்களாகத்தோன்றிய இராச்சியவடிவமான பின்னபின்ன விஷயங்களும் அவ்விஷயாகாரவிருத்திகளுங் கண்டங்கண்டங்களாக விருந்தபோதிலும், அவற்றிற்காதாரமான விஷயமும் அவ்விஷயாகாரவிருத்தியும் அகண்டமாகவிருப்பதாற், கண்டமாயும் அகண்டமாயு மிரண்டுருவங்களை விஷயமும் விஷயாகாரமாகப் பரிணமித்த விருத்தியுமுடையவையாகும். அப்படியேயதனை பிஃது விஷயமென்று சுட்டியபுத்தியுங், கண்டமாயும் அகண்டமாயும் பரிணமித்து வியாபித்துச்சுட்டுவதால், அஃதுங்கண்டமாயும் அகண்டமாயும் இரண்டு ரூபமுடையதாகும்.

அப்படியே யிஃது நமதென வான்மசத்தையாற் கண்டு

மாயும் அகண்டமாயும் அகங்காரம்பரிணமித்து வியாபித்து அவற்றைச் சொந்தமாகக்கொள்ளுவதால், அவ்வகங்காரவு பாதியுடைய வான்மசத்தையும் இரண்டு ரூபமுடையதாகும். இவற்றிற் கண்டங்களாயவுருவங்கள் ரஜோகுணத்தின் விகாரங்களாகும். அகண்டங்களாய் வுருவங்கள் சத்துவ குணத்தின் விகாரங்களாகும். கண்டாகண்டங்களைப் பிரித்துக்காணவொட்டாமல் ஏகாகாரமாகச் சொந்தப்படுத்தி மூர்ச்சிக்கச்செய்தல், தமோகுணத்தின் விகாரங்களாகும்

ஆனதினால் அகண்ட விஷயத்திலுதித்த கண்டங்களான விஷயங்களை நிதானித்து, அவற்றிற் காணப்படுங்குணங்களையு நிர்ணயித்து, அக்குணங்களையும் அக்குணிகளாகும் விஷயங்களுக்கு வேறாக்கண்டு, அவற்றைப் பஞ்சேந்திரியங்களால் விஷயீகரிக்க, அவ்விடத்து விஷயங்களாய்த் தோன்றிய அக்குணிகள் காணப்படாமற் சூனியமாக நீங்கிவிடும். குணிகளாகிய விஷயங்கள் நீங்குங்கால், ஆதாரமற்று அக்குணங்களு நீங்கிவிடும். அக்குணிகளாகிய விஷயங்களுடையவுங் குணங்களுடையவும் அளவைபோன்ற விருத்திகண்மாத்திரம், கண்டாகண்டங்களாக வாகாசத்திற்குறிக்கு மிரேகைகள் போற்றோற்றப்படும். அப்படியேமுன் கண்டங்கண்டங்களாகத்தோற்றிய பௌதிகங்களான விஷயங்களுக்காதாரமாய்நின்ற பூதங்களான அகண்டவிஷயங்களையு மில்லாமனீக்கில், அவைகளுநீங்கி, அவற்றினளவைப்போன்ற ரூபாதிவிகாரமற்ற வியாபகவிருத்தி மாத்திரமாகக் காணப்படும். அத்திசையிற் கண்டமானவிஷயங்களும், அவற்றினாதாரமான வகண்டவிஷயங்களும், பூதபௌதிக விகாரங்களைவிட்டுக் கண்டாகண்டங்களான விருத்திமாத்திரமாக விருப்பதுபற்றி, அவற்றை யிஃதென்று வியாபித்த புத்திவிருத்தியும், பூதபௌதிகவிகாரங்களை

யெதிரிடாமற் கண்டாகண்டங்களாகிய விஷயாகாரங்களா
ய்ப் பரிணமித்து வியாபித்துத், தனது சக்தியால் இஃதெ
னக் குறித்துநிற்கும்.

அப்படியே ஆன்மசத்தையையுடைய அகங்காரமும்
அவற்றையெனதென வியாபிக்குங்கால், கண்டா கண்டங்க
ளான அவ்வாகாரங்களி னளவைபோன்ற பரிணாமத்தை
யடைந்து, அவற்றைவியாபித்துச் சொந்தத்தன்மையாகிய
தனது சக்தியினாற் பேதப்படுத்திநிற்கும். சொந்தத்தன்
மையாகியவகங்காரத்தின்சக்தி ஆன்மாவின்சக்தியாதலால்,
ஆன்மாவே யானந்தவடிவமாகவிருப்பதால், அனைவர்களுக்
கும் ஆனந்தமேயிஷ்டவஸ்துவாகக்காணப்படுவதால், அவ்
விஷ்டவஸ்துவையே சொந்தமெனச்சொல்லுவதால், அவ்
வான்மசக்தியாகிய சொந்தமெனும்பிரியவிருத்தி யவ்வகங்
கார வியாபகத்தோடும் அனைத்துங்கலந்துநிற்கும். அவ்வித
பிரியவிருத்தி ஆனந்தவடிவாகிய ஆன்மாவின் சக்தியாத
லால், அதின்மார்க்கமாக ஆன்மானந்தமும் அவற்றிற்பிரதி
பலித்து உள்ளும்வெளியும்நீக்கமறத்ததும்பிப் பிரகாசிக்
கும்.

இவ்வானந்தத்தையும் இஃதெனும்புத்தி வியாபகத்தையும்
கண்டாகண்டங்களாய விஷயவிருத்திகளையும் வியாபித்து
அபேதமாகக்காட்டிப் பகுதிஞானத்தைமறைத்து மூர்ச்
சிக்கச்செய்தது, அகங்காரத்தின்தமோகுணம் ஆதலால்,
அதனைநீக்கின் கண்டாகண்டமாகிய இவ்வகங்காரமும்,
அதனால் வியாபிக்கப்பட்ட இஃதெனும் புத்திவிருத்தியும்,
அதனால்வியாபிக்கப்பட்டகண்டாகண்டமாகிய விஷயவிருத்
தியும், அவற்றையுள்ளும்வெளியும் வியாபித்து ஆன்மானந்
தத்தையவைகளிற் றதும்பச்செய்து பிரகாசித்தவான்மசக்

தியாஞ் சொரூபத்தன்மையென்னும் பிரியவிருத்தியும்,பருத்தறிவுடனநுபவத்துக்குவரும். அவ்வகைகளுக்கூறியபிரகாரம் நிதாநத்துடனநுபவித்து ரஜோ குணத்தையு நீக்கவேண்டும்.

அதற்குபாயமேதெனில், பின்னபின்னங்களாகத்தோற்றிய விஷயவிருத்திகள் பௌதிகங்களின் அளவைமுன்னிட்டுவந்ததால், அவைகள்நீங்குங்காலவ்வளவையுநீங்கிவிடும் அவைநீங்கியவிடம் அவற்றினின்மையாகவிருக்கும். அவற்றின்மையை யவ்விடங்களிலநுபவித்திட, அவற்றினளவை போன்ற விருத்திகளுமின்மையாகக்கொண்டு கண்டவிருத்திகளனைத்துநீங்கிவிடும். அப்படியேயகண்டவிஷயவிருத்தியையுநீக்கில், அவற்றைவியாபித்த புத்திவிருத்தியும் அதனைவியாபித்தவகங்கார விருத்தியுங்கண்டாகண்டவிநிர்முக்தங்களாகநீங்கிவிடும். அப்பொழுது பாவாபாவத்தோற்றமின்றிக் கண்டமெனவும் அகண்டமெனவுங்குறிக்கக்கூடாமலெல்லையற்று ஆன்மசத்தியாம் பிரியவிருத்திமாத்திரம், ஆனந்தகனமாகவநுபவத்துக்குவரும். அவ்விடத்தில் அவ்வுபாதியைநீக்கில், ஆனந்தமாத்திரமாகச்சேஷித்துநிற்கும். திரும்பவும்பிரியவிருத்தியுதிக்கின், முன்போற்சூக்குமதிரிபுடியுட னநுபவத்துக்குவரும். அதினியல்பைத்தெரிந்து விஷயவிருத்திகளைக் கற்பித்துவியாபிக்க, அவற்றில் இவ்வானந்தமே நீக்கமறப்பரவிநிற்கும். இதனைத்தெரியாமல் அவிவேகத்தால் விஷயானந்தமெனக் கொள்ளுவார்கள். ஆதலால் முற்கூறிய விசாரவிவேகத்தாற் பிரமானந்தமாக வநுபவிப்பாயாகவென்றருள:

மாணாக்கன்—கூறியபிரகார முபாதிகளைநீக்கி, சேஷித்ததன்னையானந்தரூபனாகவநுபவித்துத், தன்னிலாரோபிதமாகியவனைத்தையும். அசத்தெனவும் ஜடமெனவும் துக்க

மெனவுங்கண்டு வாதித்து ஆனந்தரூபனானதான் அவையெல்லாம் வாதிக்கப்பட்டும் வாதிக்கப்படாததுபற்றிச் சத்தெனவும், அவை அவஸ்துவானதாற் பிரகாசியாமல் ஜடமாயினுந்தான் சுயம்பிரகாசிப்பதுபற்றிச் சித்தெனவும், சேஷித்தவிடத்துத் தனக்கந்நியமாக வேறொரு வஸ்துவில்லாததனால் சத்தேசித்து, சித்தேயானந்தம், ஆனந்தமேதானனதால், சுயஞ்சச்சிதானந்த வகண்டைகரசமெனவும், தானானதன்மகிமையையே யிஷ்டவஸ்துவெனவு மகிழ்ந்து சுயமானந்தக்கடலாடினான்.

முற்றிற்று.

---

எட்டாவது.

## மனோநாசமார்க்கநிரூபணப்பிரகரணம்.

### க-வது பாகம் தேகத்திரயாத்தியாச நிவிர்த்தி.



பரமகுருவாகிய என் பிராணநாதரே! சகலசாஸ்திரங்களிலும் ஆன்மஞானமடைந்த பெரியோர்களின் சரித்திரங்களிலும் மனோநாசமின்றி மஹாவுபசாந்த பதவியான அபயப்பிரமப்பிராப்தி கிடையாதெனவும், அம்மனோநாசத்தினிமித்தம் வெகுபெரியோர்கள் மிகுந்த வருத்தத்தையடைந்தார்களெனவும், அம்மனோநாசம் அதிகடினமெனவும் சிலவிடத்தில் அதிலெகுவெனவும் காணப்படுகிறது. ஆனதினால் மனோநாசமடைந்து ஆனந்தம்பெறு மார்க்கத்தை அருளவேண்டுமென மாணாக்கன் பிரார்த்திக்க;

ஆசிரியர்—நீ கேட்டது மிகவுமிரகசியமாயுள்ளதுதான். ஆத்மாவென்பவன் சராசரங்களான அநேககோடிப்பிரமாண்டமண்டலங்களைத் தனது விஸ்தாரமாகிற வியா

* இஃது பரிபூரணானந்தர் சற்றுமுன்னருளியது.

பகத்திலுதித்த மனதின் ஒரணுமாத்திரமாகிய வோர
ம்சத்தில் உளதோ இலதோவென அடக்கிவைத்து
அம்மனதைரச்சுவில் தோன்றிய சர்ப்பத்தைப்போல தன்
னில்தோற்றுவித்தும் தோற்றிவையாமலும் பிரகாசித்துநிற்
பான். இம்மனமானது தனதுசங்கற்பத்தாற்கற்பிக்கப்பட்
டஸ்தூல சூக்கும காரண மென்னு மூன்று சரீரங்களை
ஸ்கந்தங்களாகவுடைய சந்தனவிருக்ஷத்துக்கு அவஸ்தாத்
திரயங்களைச் சாகோபசாகைகளாகவிசைத்து சரீரத்திரயங்
களி லியானெனதெனும் அபிமானங்களாகிற மூன்றுசிரங்
களைப்பொருந்திய அகங்காரமெனுங்கொடிய விஷங்களைக்
கக்காநின்ற சர்ப்பத்தைத்தனதுசங்கற்பத்தால்ஜநிப்பித்து
அதனால் அவ்விருக்ஷத்தைச் சுற்றச்செய்து ஆன்மவஸ்து
வாகிய சர்வாதாரப் பிரமசைதந்நியமென்னும் பெருஞ்செல்
வமான ஆனந்தநிதியைப் புசிக்கவொட்டாமற்றடைசெய்து
நிற்கும். அன்றியும் மஹாமூர்க்கமான விருதலைமணியனெ
னுஞ் சர்ப்பம்போல ஆவரணவிக்ஷேபங்களாகிற குரூரமா
ன விஷயத்தையதிகரித்ததாயுள்ள விரண்டு சக்திகளைத்தன
திரண்டு கோடிகளிலுமிரண்டு சிரங்கள்போலுதிக்கச்செய்
து, அவைகளாலும் அவ்வானந்தநிதியை யாருமணுகவுப
காப்படாமல் விசிரிம்பித்துநிற்கும். அன்றியும் தன்னில்
விக்ஷேபசக்தியின் வல்லபத்தால் சராசரமாகிய வநேககோ
டி பிரமாண்டமண்டலங்களெனும் பிரபஞ்சத்தைக் கண்
ணாடியிற்காணு நகரம்போலக்ஷணமாத்திரத்திற் றோற்றிப்
பித்து, அதற்கு பஞ்சகிருத்தியநடத்திவரும் பிரம விஷ்ணு
ருத்திர மகேஸ்வர சதாசிவர்களென்ற பஞ்சகர்த்தாக்களை
யக்கிருத்தியங்களி லபிமானித்ததுபோலச்செய்து அதனை
நீதிபோனடப்பித்து யாவரையுந்துவைதப் பிரபஞ்சத்தைச்
சத்தியமாக நம்பச்செய்துநிற்கும். அன்றியுந்தனது சங்க

ற்பத்தினுநித்த தூலசூக்குமங்களாகிய பஞ்சபூதங்களை யொருபாகஞ் சுத்தஜடம்போலும் ஒருபாகஞ்சேதனம்போலுங் காண்பித்து, இச்சடாசடங்களான விருவகுப்புக்குஞ் சாக்ஷியாய் சின்மாத்திரனுய்ப் பிரகாசிக்கின்ற சர்வாதிஷ்டான சைதந்யத்தை யிவைகளுக்கந்யமெனத் தெரியவொட்டாமல் நிர்த்தகிபோல நிர்த்தித்துநிற்கும். மேலும் ஆகாசத்திற்சுழன்று வருகிற கொள்ளிக்கட்டைபோல ஜநநமரணமெனு மிருகோடியிற்பிடித்த கொடிய தீயைப்பொருந்திய ஜீவர்களை, சமுசாரமெனும் பெருவெளியினிலையன்றிச் சுழலச்செய்து அவர்களுக்கதனுலுண்டாகிய துக்கங்களைநீக்க மார்க்கந்தெரியாமற் றுக்கிக்கச்செய்யும். ஒருகாலத்தில் இப்பிரபஞ்சங்களை சூநியமாகக்காட்டி, மற்றொருகாலத்தில் ஒருதனுவில் நகமுதற் சிரம்வரையிலுதித்த ரூசிருத்நவிடமின்றி வசூரி யுபத்திரவத்தைப்போல, எவ்விடத்து நாமரூபங்களாகவே நிரம்பச்செய்யும்; காளகூடவிஷத்தினுங் கொடியதாகிச் சகிக்கத்தகாத சுவாலாமாலாகுலமாயுள்ள காலமெனுமொரு தத்துவத்தைதனக்கபேதமான சத்தியாகக்கொண்டு, தேவதிரியக் பசு பக்ஷி மிருகாதிகளாகிய சரவஸ்துக்களென்ன, ஸ்தூலபஞ்சபூதங்களாகிய அசரவஸ்துக்களென்ன, இவைகளை மஹாகாளராத்திரியெனும் மகாந்தகாரம் திருசியங்கள் தோற்றவிடமின்றி விழுங்குவதுபோற், கபளீகாரஞ்செய்வதே சகாத்தொழிலாகக்கொண்டு யாருமூர்ச்சித்து நிற்கச்செய்யும். அன்றியும் தன்னுற் கற்பிக்கப்பட்ட சுருதி ஸ்மிருதி இதிகாசபுராணுகமங்களெனும் சாஸ்திரங்களாற் கூறப்பட்ட புண்ணியபாவங்களெனும் அசனிபாதத்தா லியாருந்தலையெடுக்கவொண்ணுமல் தபிக்கச்செய்துநிற்கும். இவ்விதமாகிய இம்மனம் யார்க்கும்வசமாகி நசித்ததென்ற விவகாரமிறுதான். ஆயி

னுமதனைவென்று அவ்வானந்தநிதியைத் தடையின்றிப்புசி க்குமாறு உபாயங் கூறுவோம்.

அதிவிஸ்தாரம் பொருந்திய பிரமாண்டகோடிகளைத் தனதணுமாத்திரயளவையுடைய சங்கற்பலேசத்திலடக்கி, யுளதோ விலதோவென சங்கிக்குமாறு அளவையில்லாதவி யாபகமகிமையைத்தான் பொருந்தியிருந்திடினும், வேதாந்த சாஸ்திரார்த்தங்களானிரம்பிய கருணாநிதியான சற்குருவி னுபதேச வலிமையாலதனை நோக்கின், அதின் வல்லபம் அங்ஙன மோகிக்கச்செய்யாது. கடபடாதிகளின் சத்தையி ருத்தன்றி யெங்ஙனஞ்சித்தியாதோ, வப்படியே இம்மனத் தின் சங்கற்பசத்தையின்றி முற்கூறிய பிரபஞ்சமிருக்கத்த காது. கடத்தைக்கண் கண்டிடினும் அக்கண்ணை மனந்தெ ரிவதுபோல, இப்பிரபஞ்சமென்ன, அதற்காதாரமான அச் சங்கற்பமென்ன, அஃதுதிக்குமிடமான கேவலம் மனமெ ன்று சொல்லப்பட்ட நிர்விகாரம்போன்ற அளவையில்லாத வியாபகவிருத்தியென்ன, இவைகளெங்ஙனந் தோற்றிவிள ங்குகின்றனவென விவேகாநுபூதியானோக்கின், உள்ளங்கை க்கனிபோல நிச்சமுசயமாய் நோக்குவானுடைய ஞானதி ருஷ்டியில் திருசியமாக நோக்கப்பட்டு, முற்கூறிய திட்டா ந்தப்படி இந்நோக்குவானது ஞானதிருஷ்டியிலடங்கியதா யும் ஜடமாயுந் தன்பிரகாசத்தால் தோற்றிப்பிரகாசிக்கின் றதாயும் கடத்தை மிருத்துவியாபித்து அக்கடமோர்பொ ருள்போல் பிரகாசிக்கினும், அஃது முக்காலத்திலுந்தனக் கு வேறாகத்தன்னில் வாராததுபோல், அத்திருஷ்டியில வை முக்காலத்திலுமிலதாகியும் அநுபவத்துக்குவரும்: அ ங்ஙனம்வரின் அவ்வநுபூதியின் பெலங்கொண்டு இடைவி டாமலவ்வநு சந்தானஞ்செய்து அவற்றைச்சோதிக்கின், வி

யாபக ஞானநிருக்குமாத்திரமாயும் ஒவ்வொருகாலத்துத் தோற்றியொடுங்கிடினும் அவைகளுக்கு சாக்ஷியாகியும் இவ்வான்மஞ்ஞானநுபவம் பங்கப்படாமல் பிரகாசித்துநிற்கும். இவ்விவேகாநுபூதியால் அம்மனத்தை வெல்லவேண்டும்.

அப்படியே ஸ்தூலசூக்ஷம காரணமெனும் சரீரத்திரயங்களைச் சாகோபசாகைகளாக வுடையதாகியுமுள்ள சமுசாரசந்தன விருக்ஷத்தைச் சூழ்ந்த மூன்று சரீரங்களின் அபிமானங்களாகிய முச்சிரங்களைப்பொருந்திய சங்கற்பத்தாற் கற்பிக்கப்பட்ட அகங்காரமெனும் அச்சர்ப்பம், அச்சமுசாரமாகிய சந்தனவிருக்ஷத்தை நீங்கிச்சேதிக்கப்பட்டு அச்சுகநிதியை நிரர்க்களமாய்ப் புசிக்குமாறும் உபதேசிக்கின்றோம். ஸ்தூலதேகமென்பது, ரத்தம்-மாமிசம்-எலும்பு-நரம்பு-தோல்-ஜலம்-மலம்-ரோமம்-தந்தம் கபமிவைகளின் சேர்க்கையின் கூட்டமாயுள்ளது. அதனை விவேகதிருஷ்டியாற்பிரித்து தனக்கெதிராக வோர்கயிறுகட்டினதாகப்பாவித்து அதனிலிவற்றை வெவ்வேறுகத்தொங்கச்செய்து பார்க்கின், தான் அசரீரியான ஞானசொரூப திருக்காயுமுன் சரீரம்போற்றோன்றியதனு முன்தொங்கப்பட்ட அவ்விகாரங்களாகுஞ் சேர்க்கைநீங்கி வெவ்வேறுக அநுபவிக்கப்படுவதுகொண்டு, சரீரமெனும் நாமத்தின் பொருளைநீங்கிநிற்கும். இங்ஙனம் இடைவிடாமல் திடதாரப்பியாசஞ்செய்யின், அஃதொருக்காலுஞ் சரீரமாகத்தோற்றுமல் கடத்தில் நானெனவநுபவ மியாருக்குமுதியாததுபோல, இத்தநுவில் நானென்ற அத்தியாசமுதியாமல் தானேநீங்கிவிடும். அப்படியே யித்திருஷ்டாவும் தன்னிற்றனுசம்பந்தம் காணப்படாததனுல் அசரீரியான திருஷ்டாமாத்திரமாகப் பிரகாசித்துநிற்பான். இவ்வநுபவம் திடதரமாகச்சித்தித்திடின் அவ்வகங்காரமாகிய சர்ப்பத்தின் கொரே

மான ஒருசிரம் விவேகர்களால் வெட்டப்பட்டு நிர்ஜீவனுய் மாளும். அச்சர்ப்பத்தின் மற்றச்சிரங்களுமாளுமாறு உபதேசிப்போம்.

தனுசம்பந்தம் நீங்கி அசரீரியான இவ்வான்மா ஞான திருஷ்டி மாத்திரனுகப்பிரகாசிக்கில், கேள்விவல்லபமுதலியபதினேழு சக்திபொருந்திய சூக்குமசரீரம் அவனையபேதமாகக் கலந்துநிற்கும். பின்னபின்ன லக்ஷணம்பொருந்திய அப்பதினேழு வல்லபங்களையும் ஸ்புரிக்கச்செய்து, அவற்றை ஆகாயத்திற்சிதறிய பின்னபின்ன லக்ஷணம்பொருந்திய நக்ஷத்திரங்களைப்போல் காக்ஷிப்படுத்தி, சூரியனைக்காண்கின்ற திருக்குக்கும் அச்சூரியனுக்குமுள்ள தூரத்தினளவைமதிக்கக் கூடாததுபோல, ஆன்மதிருஷ்டிக்கு இப்பதினேழு தத்துவமும் அதி தூரத்தில் காக்ஷிப்படுமாறு நோக்கில், ஆன்மசம்பந்தத்தைநீங்கி கடாதிகள்போல், அனான்மவஸ்துக்களாகப்பவித்துநிற்கும். இவ்விவேகாநுபூதியால் அநவரதமும் கூறியபிரகார மவைகளைநோக்காநின்ற ஞான திருஷ்டியில் ஆன்மத்துவேனுநுசந்தானமும், அப்பதினேழு தத்துவங்களாகிய காக்ஷிப்பொருள்களில் அனான்மபுத்தியநுபவத்தால் நேரிட்ட அகமத்தியாசநிவிர்த்தியும், திடதரமாகில் அகமத்தியாசமுதியாது. இங்ஙனங்கூறியபடி திடமாகச்சித்தித்திடின்னிவ்விவேகாநுபூதியெனும் வாளால் தறிபட்டு நிர்ஜீவனுய் அவ்வகங்காரமெனும் சர்ப்பத்தின் இரண்டாஞ்சிரமுமாளும்.

அப்படியே அகங்காரமெனும் சர்ப்பத்தின் மற்றொரு சிரமும் மாளுமாறு அனுக்கிரகிப்போம். இப்பதினேழு கருவியைநீங்கி அசரீரியான ஞானதிருஷ்டிமாத்திரமாயிவ்வான்மா பிரகாசிக்கினும், இவ்விலிங்கசரீரம் சுத்தமாய்நீங்கினதுகொண்டு ஒருகாலத்து திரிபுடிசூனியமாய் விருத்தியி

வின்மையாகிற, ஸ்பூர்த்தியில்லாத சுழுத்தியெனு மோரவஸ்தையுண்டாகி, அவ்வித ஞானதிருஷ்டியை இழந்தது போல் தோற்றுவித்துநிற்கும். அஃது மீஷத்துவிகாசமுடைய ஞானதிருஷ்டியின் விழிந்நிலை முன்னிட்டேத்தான். இதனைச் சோதிப்பது பரிபாகமுடைய அதிசூக்கும விவேகம்பொருந்திய அதிகாரியாற்றான் கூடுமாதலால அதனைக் கேட்கக்கடவாய்.

ஒரு தோற்றமுமிலதாகியும் அவ்விடத்தில் ஞானதிருஷ்டியிருக்கிறது. இல்லையென மதிக்கக்கூடாததாயும் அவ்வவஸ்தையிருந்திடினும் யாதொன்றுந்தெரியாமல் சுகமாய்த் தூங்கினேனென்று அஞ்ஞ-இஞ்ஞ-யாவரும் சாதாரணமாய்ப் பிரதீதியில் விவரிக்கப்படுவதால், அப்பிரதீதியின் பெலங்கொண்டு விவேகத்தால் யாதொரு தோற்றுதலுமில்லாத பிரகாரம் அவ்வநுபூதியை உள்ளபடியித்திசையில் விஷயீகரிக்க அங்ஙனமே ஓரநுபவமுதித்துநிற்கும். அவ்வநுபூதியை அதிசூக்குமமான விவேகவிருத்தியநுபவத்தால் நோக்கி அவ்விடத்திற்றானே சங்கற்பசத்தையின் சம்பந்தமின்றி நோக்கிய திருக்கநுபவத்தால் அதனைக்காக்ஷிப்படுத்த அஃது திருசியத்தன்மைபொருந்தி அனன்மவஸ்துவாகிமுன் சூரியமண்டலதிருஷ்டாந்தம் கூறியதுபோல வெகுதூரத்தில் விலகிநிற்கும். அங்ஙனமே இவ்வான்மாவினது திருக்கநுபூதியும் யாதொரு தோற்றமுமில்தாகியும் திரிபுடிசூந்யமாகியும் ஞானதிருஷ்டியிருக்கிறது, இல்லையெனமதிக்கக்கூடாததுமான அவ்வவஸ்தையை, அவ்விரண்டவஸ்தையை திருசியமாகத்தோற்றுவித்து தான் ஞானதிருஷ்டிமாத்திரமாக நின்றதுபோல், மூன்றுமவஸ்தைக்கும் சூக்குமமாய் திரிபுடிசூந்ய ஞானசொரூப மாத்திரமாய்ப் பிரகாசித்துநிற்கும். இவ்வநுபவ மதிசூக்குமமானதால் அதி

னைச் சுவாநுபவத்தால் அவலம்பித்திருப்பது மிகவும் அரி து. ஆயினும் அநிலதற்கபின்னமாய் ஒருசாக்ஷிதர்மத்தை யாரோபித்து முற்கூறிய அவஸ்தாநுபூதி சாக்ஷிப்பட்டது கொண்டும் இஞ்ஞான திருக்கநுபூதி சாக்ஷியாகவிருப்பது கொண்டும் தன்னை சாக்ஷியாகவநுபவித்து, அவனே சாக்ஷிய மான வனன்மாவாகையால் அஃது ஒருக்காலும் அகப்பொ ருளாகாதெனக்காணில் அதிலடிக்கடி ஆத்துமாத்தியாசம் நிவிர்த்தியாகிவிடும்.

அவ்வவஸ்தாநுபூதியாமொன்றுந் தெரியாமையாகிய அஞ்ஞானமே காரணசரீரமாதலால் அஃது இவ்வான்மாவி னது ஞானதிருக்கைமறைத்ததென்பது கூடாது. ஏனெனி லிவ்வஞ்ஞான மெத்தன்மையுடையது? எதனைக்காரணமாயு டையது? எவ்வல்லபத்தால் மறைத்தது? எனவிவேகாநுபூதி யால் நோக்கின், அதற்குக்காரணம், அந்தகாரத்துக்குக்கா ரணஞ் சூரியனாகாததுபோல் சிதான்மாவாகான். அவ்வ ஞ்ஞானமே சகல துவைதப்பிரபஞ்சத்துக்குங் காரணமா யிருப்பதால் அதற்கந்நியமான வெந்தப்பொருளுங் காரண மாகத்தகாது. நிர்ஹேதுகமா யொருவஸ்து சித்தித்திடத் தகாது. அல்லது சித்தித்திடின், அஃது சொப்பிரகாச வஸ்துவாயிருக்கவேண்டும். அங்ஙனம் சொப்பிரகாசமா கக்கூறின், அனைத்தையும் பிரகாசிக்கச்செய்யும் ஆதித்தனி டத்தில் மறைக்கும் வல்லமைபொருந்திய அந்தகாரஞ்சித் தியாததுபோல், ஆவரணரூபமாயுள்ள மறைக்கும் வல்லப ங்கெட்டு தனது நாமத்தின் பொருளைப்பொருந்தாததாகி, ஆத்துமஞானதிருஷ்டிக்கு வேறுயில்லாமல் அவஸ்துவாகி நீங்கிவிடும். அங்ஙனமில்லை; அஃது எதனையும் மறைக்கு ம் வல்லமைபொருந்திய ஜடவஸ்து: ஞானப்பிரகாசத்தினு தவிகொண்டே தனது வல்லபத்தைச்செலுத்தி நிற்குமெ

னில்; கடாதிகள்போலுள்ள இவ்வஞ்ஞானம் மறைக்குந் திறமையுடையதாகப் பவிக்குங்கால், அவ்வல்லபங்களைத் தெரியுமாறு பிரகாசிப்பிக்கின்ற சாதனமான அந்த ஞானப்பிரகாசத்தை மறைக்கவேண்டுமானால், தன்னைப் பிரகாசிப்பிக்கின்ற அதினுதவியிருக்கும்வரை அதனை மறைக்கவுபகாரப்படாது. அவ்வுபகாரத்தை நீங்கினகாலத்து மறைக்கலாமெனில்; அவ்விடத்துத் தனக்கு சுதந்திரமாகவிளக்கமிலதுகொண்டு கடம்போல் தானேயிருக்கிறது—இல்லையென்ற பிரதீதிக்குக்கூட விஷயமில்லாமல் சூநியம்போல் பவித்துநிற்கும். அன்றியும் யாதொரு குறிப்பாலுங்குறிக்கக் கூடாத சுபாவம் பொருந்தியதாதலால் யுக்திக்கு அநர்ஹமானதுபற்றி கர்த்தும் அகர்த்தும் அந்நிதாகர்த்தும் வல்லபமுதலியயாவு மதினிடமாக விளையாடிநிற்கும்: அதனையார் நிர்ணயித்துக்கூறவல்லார்! எனில்; அங்ஙனமாயினுங் கூறிய பிரகாரம் ஓர் இருக்குகை அதற்குச்சித்தியாவிடின் அவஸ்வாகிவிடும். பிரகாசியாவிடினும் அங்ஙனமேயாகத்தகும். இவ்விருதன்மையும் அதிலிருக்கின்றதாகவெவ்வாப்பின் கடமிருக்கின்றது; படமிருக்கின்றது; பிரபஞ்சமிருக்கின்றது; அஞ்ஞானமிருக்கின்றது; அப்படியே இவைகள் விளங்குகின்றது; என்ற விவகாரபலத்தால் சோதிக்குங்கால் பின்னபின்ன விவகாரங்களைப்பொருந்திய இவ்வஸ்துக்கள் அந்தந்த நாமங்களின் பொருள்களாகும். அப்படியே இவைகளிற் காணப்பட்ட "இருக்கின்றது" 'விளங்குகின்றது, என்றசொற்கள் மாறுபடாமலிருப்பதினு லிவைகளின்பொருள் அவற்றிற்கந்நியங்களாகவேண்டும். அங்ஙனமாயின் அவற்றின் விலக்ஷணத்தன்மையைப் பொருந்திநிற்கும். அஃதும் அவை பின்னபின்னங்களான விகாரங்களைப் பொருந்தியிருப்பதா லவ்விகாரத்தன்மைக்கு விலக்ஷணமான நிர்வி

காரத்தன்மையைப் பொருந்திநிற்கும். இந்தப்பிரகாரம் விவேகாநுபூதியாற்கண்டு ஓர் பர்வதத்தில் விஸ்தாரம்பொருந்திய குகையெனும்வெளியில் சிலையின் காடின்னியம் காணப்படாததுபோல், அரூபமாகியும் நிர்விகாரமாயுமுள்ள அவ்விருதன்மையையும் அநுபவத்தாற்பார்த்து அவற்றைய்வஞ்ஞானம் வரையுள்ள முற்கூறியவஸ்துக்களில் கோர்த்துப்பார்க்கின், அவை தனது விகாரங்களையும் தனது ரூபங்களையும்நீங்கி இல்லனவாகப்பவிக்கும். அவ்வின்மைகளையும் அத்தன்மையாகவேபார்க்கின்ஆன்மஞ்ஞாநாநுபூதிக்கு வேருகவில்லாமல் அது மாத்திரமாகவே சேஷித்துநிற்கும். இங்ஙனம் இருக்குகையை அவைகளுக்கொப்பாவிடினுஞ் சத்தையில்லாமையால் அப்படியே அவஸ்துவாகும்.

இப்பிரகாரம் இக்காரண சரீரமாகிய அஞ்ஞானத்தை விவேகாநுபூதியால் அவஸ்துவாக நிராகரித்து, அப்படியே முற்கூறிய அநுசந்தான விசேஷத்தால் தோற்றிய சுழுத்தியாங்காரண சரீரமெனுங் காக்ஷிப்பொருளாகிய அநான்மவஸ்து, ஆன்மசம்பந்தமின்றி வெகுதூரத்தில் முன்னிலைப்பட, அதில் அகமத்தியாசத்தை விவேகாநுபூதியால் திடதரமாகநீக்கி எக்காலத்தும் அதில் அகமத்தியாசமுதியாமலிருக்குமாறுசெய்து, இம்மூன்று சரீரங்களையுங்கடந்து அவஸ்தாத்ரயஸாக்ஷியாய் அவஸ்தாத்ரயத்தைப் பிரகாசிக்கின்ற அத்துவிதீய வஸ்துவான அகம்பதத்தி னுண்மைப்பொருளாகிய சாக்ஷியாமிவ்வான்மஞானத்தில் அகமர்த்தஞானம் எக்காலத்தும் நழுவாமலிருக்குமாறு, விருத்தியினுதவியின்றி விவேகாநுபூதியின் பெலங்கொண்டு இடைவிடாமலப்பியசிக்கின்ற அப்பியாசதார்ட்டியத்தாற்கூறிய சுவாநுபவஞ்சித்திக்கும். அங்ஙனஞ்சித்திக்கின் அவ்விவேகாநுபூதியாம் வாளால் அவ்வகங்காரமாஞ் சர்ப்பத்தின் மூன்றுஞ்சிரமும் வெட்டப்பட்டு நிர்

னில்; கடாதிகள்போலுள்ள இவ்வஞ்ஞானம் மறைக்குந்
திறமையுடையதாகப் பவிக்குங்கால், அவ்வல்லபங்களைத்
தெரியுமாறு பிரகாசிப்பிக்கின்ற சாதனமான அந்த ஞான
ப்பிரகாசத்தை மறைக்கவேண்டுமானால், தன்னைப் பிரகாசி
ப்பிக்கின்ற அதின்றுதவியிருக்கும்வரை அதனை மறைக்கவுப
காரப்படாது. அவ்வுபகாரத்தை நீங்கினகாலத்து மறைக்
கலாமெனில்; அவ்விடத்துத் தனக்கு சுதந்திரமாகவிளக்க
மிலதுகொண்டு கடம்போல் தானேயிருக்கிறது—இல்லையெ
ன்ற பிரதீதிக்குக்கூட விஷயமில்லாமல் சூநியம்போல் பவி
த்துநிற்கும். அன்றியும் யாதொரு குறிப்பாலுங்குறிக்கக்
கூடாத சுபாவம் பொருந்தியதாதலால் யுக்திக்கு அநர்ஹ
மானதுபற்றி கர்த்தும் அகர்த்தும் அந்நிதாகர்த்தும் வல்ல
பமுதலியயாவு மதினிடமாக விளையாடிநிற்கும்: அதனையார்
நிர்ணயித்துக்கூறவல்லார்! எனில்; அங்ஙனமாயினுங் கூறிய
பிரகாரம் ஓர் இருக்குகை அதற்குச்சித்தியாவிடின் அவஸ்
வாகிவிடும். பிரகாசியாவிடினும் அங்ஙனமேயாகத்தகும்.
இவ்விருதன்மையும் அதிலிருக்கின்றதாகவெப்பின் கடமி
ருக்கின்றது; படமிருக்கின்றது; பிரபஞ்சமிருக்கின்றது;
அஞ்ஞானமிருக்கின்றது; அப்படியே இவைகள் விளங்குகி
ன்றது; என்ற விவகாரபலத்தால் சோதிக்குங்கால் பின்ன
பின்ன விவகாரங்களைப்பொருந்திய இவ்வஸ்துக்கள் அந்தந்
ந்த நாமங்களின் பொருள்களாகும். அப்படியே இவைக
ளிற் காணப்பட்ட "இருக்கின்றது" 'விளங்குகின்றது, என்
றசொற்கள் மாறுபடாமலிருப்பதினு லிவைகளின்பொருள்
அவற்றிற்கந்யங்களாகவேண்டும். அங்ஙனமாயின் அவ
ற்றின் விலக்ஷணத்தன்மையைப் பொருந்திநிற்கும். அஃ
தும் அவை பின்னபின்னங்களான விகாரங்களைப் பொருந்
தியிருப்பதா லவ்விகாரத்தன்மைக்கு விலக்ஷணமான நிர்வி

காரத்தன்மையைப் பொருந்திநிற்கும். இந்தப்பிரகாரம் விவேகாநுபூதியாற்கண்டு ஓர் பர்வதத்தில் விஸ்தாரம்பொருந்திய குகையெனும்வெளியில் சிலையின் காடின்னியம் காணப்படாததுபோல், அரூபமாகியும் நிர்விகாரமாயுமுள்ள அவ்விருதன்மையையும் அநுபவத்தாற்பார்த்து அவற்றைய வ்வஞ்ஞானம் வரையுள்ள முற்கூறியவஸ்துக்களில் கோர்த்துப்பார்க்கின், அவை தனது விகாரங்களையும் தனது ரூபங்களையும்நீங்கி இல்லனவாகப்பவிக்கும். அவ்வின்மைகளையும் அத்தன்மையாகவேபார்க்கின் ஆன்மஞ்ஞானநுபூதிக்கு வேறாகவில்லாமல் அது மாத்திரமாகவே சேஷித்துநிற்கும். இங்ஙனம் இருக்குகையை அவைகளுக்கொப்பாவிடினுஞ் சத்தையில்லாமையால் அப்படியே அவஸ்துவாகும்.

இப்பிரகாரம் இக்காரண சரீரமாகிய அஞ்ஞானத்தை விவேகாநுபூதியால் அவஸ்துவாக நிராகரித்து, அப்படியே முற்கூறிய அநுசந்தான விசேஷத்தால் தோற்றிய சுழுத்தியாங்காரண சரீரமெனுங் காக்ஷிப்பொருளாகிய அநான்மவஸ்து, ஆன்மசம்பந்தமின்றி வெகுதூரத்தில் முன்னிலைப்பட, அதில் அகமத்தியாசத்தை விவேகாநுபூதியால் திடதரமாகநீக்கி எக்காலத்தும் அதில் அகமத்தியாசமுதியாமலிருக்குமாறுசெய்து, இம்மூன்று சரீரங்களையுங்கடந்து அவைங்கோதாசீனனாய்ப் பிரகாசிக்கின்ற அத்துவிதீய வஸ்துவான அகம்பதத்தி னுண்மைப்பொருளாகிய சாக்ஷியாமிவ்வான்மஞானத்தில் அகமர்த்தஞானம் எக்காலத்தும் நழுவாமலிருக்குமாறு, விருத்தியினுதவியின்றி விவேகாநுபூதியின்பெலங்கொண்டு இடைவிடாமலப்பியசிக்கின்ற அப்பியாசதார்ட்டியத்தாற்கூறிய சுவாநுபவஞ்சித்திக்கும். அங்ஙனஞ்சித்திக்கின் அவ்விவேகாநுபூதியாம் வாளால் அவ்வகங்காரமாஞ் சர்ப்பத்தின் மூன்றுஞ்சிரமும் வெட்டப்பட்டு நிர்

ஜீவனுய் புனருத்தானத்துக்கேதுவின்றி மாண்டுவிடும்.

அக்காலத்து "ஒன்றுந்தெரியாமல் தூங்கினேன்" என்ற பிரதீதியோடும் "சுகமாய்த்தூங்கினேன்" என்றோரானந்தாநுபவங் காணப்படுவதால், "ஆனந்தமே பிரமம்" என்ற சுருதிப்பிரமாணத்தால் ஆனந்தசொரூபம் அப்பிரமத்துக்கேயன்றி மற்ற எப்பொட்குஞ்சித்தியாது. அங்ஙனமாயினும் விஷயானந்தமென்றுஞ் சுழுத்தியானந்தமென்றுங்கூறப்பட்ட ஆனந்தம், இவ்வாவரண விக்ஷேபசக்திகளால் வாதிக்கப்பட்டதுபற்றி விஷமிசிரக்ஷீரம்போல ஆத்தியந்திக துக்கநிவிர்த்தியைக்கொடாநின்ற நித்தியானந்தமாகப்படுங்கில்லை. இவ்வாவரண விக்ஷேபங்கள் அகங்காரத்தோடும் நீங்கி நிஷ்பிரபஞ்ச அத்துவிதீய ஆன்மசின்மாத்திரமாக மஹாவுபசாந்த பதவியாய்ச் சித்தித்கதுகொண்டு திரிவிதபரிச்சேத சூன்னியமான எக்காலத்துமுள்ள நிஜானந்தமாகவே பிரகாசிக்கும் என்றருள:

மாணாக்கன் உபதேசித்த பிரகாரஞ் சமாதியுற்று தேகத்திரயாத்தியாசம் விட்டுப்பிரகாசித்தான்.

முற்றிற்று.

---

இரண்டாவது பாகம.

## ஆவரணவிக்ஷேப நிவிர்த்தி.

சுவாத்மானந்தரஸாம்புதியின் மூழ்கினவனுயிருந்த மாணாக்கனை ஆசிரியர் ஆலிங்கன விசேஷத்தால் பகிர்முகப்படுத்த, பிரதக்ஷிண நமஸ்கார பூர்வமாய் தனதாசிரியரது பெருங்கருணையைப் பலவிதமாய்ப்புகழ்ந்து சுவாமி! தீனரக்ஷகா! தேகத்திரயாபிமானமாகிய மூன்று சிரங்களுடைய

தாயும் இருதலைமணியன்போல் ஆவரணவிக்ஷேபமாகிய வி
ரண்டு சிரங்களுடையதாயும் வர்ணித்ததில், முன்னுரைத்த
மூன்று சிரசுகளையுஞ் சேதிக்குமுபாயம் அநுகிரகித்தது
போலவே, மற்றவையை நீக்குமார்க்கத்தையும் உபதேசித்
தருளவேண்டுமென்று மாணாக்கன் விண்ணப்பஞ்செய்ய:

ஆசிரியர்—இருதலைமணியனுக்குச்சமானமான விக்ஷே
பஆவரண சக்திகளை இருகோடியிலுமுடைய தனது சக்தி
யால் ஆனந்தநிதியையாரும் அணுகவொட்டாமற்செய்யினு
ம் அதனையும்வெல்ல உபாயமுளது.

இருதலைமணியனெனுஞ் சர்ப்பம் வெகு தூரதிருஷ்டி
யுடையது. அதின் திருஷ்டியிலெந்தவஸ்து எதிர்ப்படினும்
நீறிவிடும். அதனையுமதிகரித்ததாயுங்காளகூட விஷத்துக்கு
மேலான கொடுமைபொருந்திய ஆவரணவிக்ஷேபங்களாகிற
சக்திகள் மிகவுங்கொடியன. அவற்றில் விக்ஷேபசக்தியெ
ன்றது தன்னாற்றோன்றிய தர்ப்பணநகரம்போல் இலக்கமி
டந்தகாத சராசரமான அநேக பிரமாண்டகோடிகளைத்
தோற்றிப்பிக்குமென்றதில், இந்திரஜாலவித்தையால் அநே
க ரதகஜதுரகபதாதிகள் கற்பிக்கப்பட்டு யாவராலும் பிர
த்தியக்ஷமாயநுபவிக்கப்பட்டும், அவ்விந்திர ஜாலக்காரனு
க்கு அஃதுமித்தை எனவும் இந்திரஜாலவித்தையினால் கற்
பிதமெனவுந்தெரிவதுபோல், தன்னால் கற்பிக்கப்பட்ட பி
ரபஞ்சத்தை மித்தையென்றாவது, தன்னாற் கற்பிக்கப்பட்
டதென்றாவது, விவேகமின்றி அதனை விருத்திசெய்ய நாடி
நிற்கும். அதினுபஹிதஜீவ சைதந்நியங்களுக்கு விருத்தியி
ன் விவேகங்களைத்தவிர சொந்தமாக விகாரங்கள் கூடாததி
னால், அவ்விக்ஷேப சக்தியிலுதித்த துக்கசாகரத்தில்மூழ்கி
மூழ்கி சுபாவமாய் அவினாசியாகையால் மரிக்கவிடமின்றி

சகிக்க அசக்கியமாயிளைப்பாற இடமுமின்றிப் புசிக்கின்றான்.

இங்ஙனமிருந்திடினும் இவ்விக்ஷேபசக்தி அளவையில்லாத பிரபஞ்சாகாரமாய்ப் பலிக்கவேண்டுமானல் நிமித்தமாய்ப்பலியாது. அந்நிமித்தத்தை நோக்கின் புறக்கரணங்களின் பஞ்சபூதபாஞ்சபௌதிக பஞ்சவிஷயங்களை முன்னிலைக்கொண்ட சம்பந்தத்தை முன்னிட்டு, அவ்விஷயாகாரங்களாகத்தானே பரிணமித்து, அவைகளை அப்பரிணாமத்தின் வழியாக அந்த அந்த நாமரூபங்களோடுங்கூட நிர்ணயப்படுத்தி, தன்னில் உபஹிதமான பிரத்தியக் சைதந்நியத்தின் பிரகாசபெலத்தாற் பிரகாசிப்பித்துநிற்கும். இங்ஙனமாயின் இப்புறக்கரணங்களுக்கு முன்னிலைப்பட்ட விஷயங்கள் அந்தவந்த நாமரூபங்களோடுங்கூடவிஷயப்படாது. அப்படியே அகக்கரணமாம் விக்ஷேபசக்திக்கும் தனக்குள்ளபடி விவகாரத்திற்கிடைத்த இலக்கணத்தால் அவ்விடயங்கள் விஷயப்படாது. ஆனல் அகக்கரணத்துக்கு சாளீசிநேத்திரத்துக்குப் புஸ்தகாவலோகன விஷயத்தில் உபநேத்திரமுபகாரப்படுவதுபோல, இப்புறக்கரணங்களினுதவியால் இவ்விடயங்கள் விஷயப்படலாமெனில்; அந்தனுக்கு உபநேத்திரம் உபகாரப்படாததுபோல், இவ்விரண்டு கரணங்களும் சடமானதாலுபகாரப்படாது. இவை சடங்களாயிருந்திடினும் சைதந்நியத்தின் பெலங்கொண்டு இவற்றிற்கு விடயங்கள் விஷயமாகலாமெனில், அச்சைதந்நியத்தில் யாவும் விக்ஷேபசக்தியோடுங்கூட உண்மையிற்கற்பிதமாகையால், இரச்சுவுக்கு தன்னிற்கற்பிதமான சர்ப்பத்தின் ஸ்திதிநாசங்கள் எங்ஙனந்தெரியாதோ, அங்ஙனமே முற்கூறியகற்பித்தி ஸ்திதிநாசங்களில்லாததாகையின் அஃதுகூடாது. ஆதலாலிப்பிரகாரமாலோசித்து உதித்த அநேக பிரமாண்ட

ங்களையும் புறக்கரணங்களையும் அப்பிரமாண்டத்தையுதிப்பித்த விக்ஷேபசக்தியையு மிந்திரஜால திருஷ்டாந்தத்தால் கூறிய அதின் விவேகத்தையும் அதின் ஜடத்தன்மையையும்; புறக்கரணம் விக்ஷேபசக்தி பிரத்தியக் சைதந்யம் இவற்றிற்கு முற்கூறியபிரகாரம் கற்பிதப்பிரபஞ்சம் விஷயப்படாமையையும், விவேகாநுபவத்தால் நோக்கிய பிரதீதிதிசையில், முன் சூக்குமசரீரத்தை யனுன்மாவாகும்படி செய்து, அதினின்றும் அகமத்தியாசநிவிர்த்தி செய்யப்பட்டிருக்கிறதுபோல, இவைகள் விவேகாநுபூதியால் பின்னபின்ன லக்ஷணம்பொருந்திய காக்ஷிப்பொருளான அநான்மவஸ்துவாய் ஆன்மசம்பந்தம்நீங்கி வெகுதூரமிருப்பதுகொண்டு அவற்றில் அகமத்தியாசத்தை நிவிர்த்தித்து, பிரத்தியச் சைதந்யத்தில் திடதரமாக விருத்தியினுதவியின்றி அகமநுபவம் சித்தித்திடின், இச்சைதந்யத்துக்கு வேறாகவில்லாமல் தானும் தனதுகாரியமான பிரபஞ்சமும் சேஷித்து, மஹாஉபசாந்தஸ்தானமெனும் விசிராந்திபூமியையடைந்து இச்சீவர்களும் இந்திரஜாலத்திற்கண்ட பொருள்களை மித்தையென இந்திரஜாலக்காரன் கண்டிருப்பதுபோல், தன்னில்முக்காலத்தும் முற்கூறியவையில்லையென அத்துவிதீய நிஜானந்த சுதாசிந்துவாகப் பிரகாசித்துநிற்பார்கள்.

மாணாக்கன்—ஆனால்முற்கூறியலிங்கசரீராதிகளைப்போலல்ல: இவ்வெழு கடல்களையும் ஒருசாதனமுமின்றி திவலை ஜலங்கூடசேஷியாமற் சுழல ஆகாசத்தில்வீசிஎறியவும்அஷ்டகுலாசலங்களும் சப்தமேகங்களும் பஞ்சபூதங்களும் தூளிதூளியாய் ஸ்திதியின்றிச்சுழலவும் சந்திரசூரிய நக்ஷத்திராதிகள் நிலைபேர்ந்து அவசமாய்ச்சிதறவும் இங்ஙனம்செய்யாநின்ற மஹா பிரளயவாதம்போல்; யார்க்கும் பயங்கரமாய்ச்சலிக்கின்ற இவ்விக்ஷேபசக்தியை வெல்வதும் அதின்

அசைவை நிறுத்துவதும் எங்ஙனங்கூடும்? எனவினவ:

ஆசிரியர்—நீ பபந்து சங்கித்தது சரிதான். ஆயினும் ஒருநாசி பரதசாஸ்திரப்பிரகாரம் ராகபந்தஅண்டவுகற்றுத் தாளமுதலியவைபோடும் சபையில் நிர்த்திக்குங்காலத்தில், அவளது நேத்திரம் ஹஸ்தமுதலிய அவயவங்கள் பாவநுச ருநிமித்தம் க்ஷணத்தில் வெகுவக்கிரங்களான சுழல்தலைய டையினும் அதனை நோக்காநின்ற திருஷ்டாவின் திருஷ்டி டந்தமாயாவது அதிவேகமாயாவது சலிக்கக்காரணமில்லை இப்பிரகாரம் திரஞகிவிக்ஷேப சக்தியின் வல்லபத்தை நோக்கிக்கொண்டிருந்திடின், இவ்வான்ம சைதந்யத்துக்கந்நிய ங்கள்போலத் தோற்றிப்பிரகாசியாநின்ற சராசரமாகிய பிர பஞ்சங்கள் அனைத்தையும் நசிப்பித்தும் உதிப்பித்தும் க்ஷ ணத்தில் தானுந் தொழிலின்றி நீங்கிவிடும். விவேகாநுபூ தியால் அவற்றின் கிரமத்தையும் உற்பத்தி நாசங்களையுங்க ண்டு, தன்னை அவிநாசியாகவும் அதின் கொடுமைபொருந் திய சலனசக்தியென்ன சராசரங்களான ஜடவஸ்துக்களின் நலம் தீங்கென்ன இவைகள் தன்னைச் சம்பந்தியாதுகொ ண்டு, அபரோக்ஷமாகத்தன்னை அசங்கோதாசீனனும் நோக்கி ஆனந்தித்து, பிரேதசமானமாய் ஜடமாய் திருசிய மாய் அநான்மவஸ்துவாய் கற்பிதமாயிருக்கிற விக்ஷேபசக் தி முதலானவைகளில் நிச்சேடமாய்க் கூறியபிரகாரம் அத் தியாசம் நீங்கினதுகொண்டு, கடபடாதிகளை மிருத்துதிரு ஷ்டியாய் நோக்கின், அவை காணப்படாததுபோல இவ்வா ன்மதிருக்கா லவையனைத்தையும்நோக்கின், அத்துவிதிய மான அத்திருக்கிலயித்துமிலதாகி அத்துவிதிய நிஜானந்த சொரூபமாகவே யபரோக்ஷமாய்ச் சித்தித்திடும். அக்கா லத்துமனதின் ஒருகோடியை யவலம்பித்த விக்ஷேபசக்தி யாம் ஒருசிரம் வெட்டப்பட்டுமாளும்.

மற்றொரு சிரமாகிய ஆவரணசக்தியென்பது முற்கூறி யவிக்ஷேபசக்தியையும் அதிலுதித்தபிரபஞ்சத்தையும் தன க்கர்மியமாக வில்லாமற்செய்து அந்தகாரம்போன்ற தனது ஆவரணவல்லபத்தால் பிரபஞ்சஸ்பூர்த்தியைக் கபளீகரித்த துபோலஅதிஷ்டானவான்ம சைதந்யத்தின் ஸ்புரணத்தை யுங் கபளீகரித்த பிராயமாக ஜடம்போல்; பிரத்தியக்கை பாரும் நினைக்கும்படி செய்வித்திருக்கும். அங்ஙனமுள்ள ஆவரணசக்தி சுழுத்தி மூர்ச்சை பிரளயமிவை முதலானவ ற்றிற்கூறிய பிரகாரமநுபவிக்கப்படும். அதனைச்சோதிப் பது மிகவுமரிது. சுழுத்தியிலிருந்து உத்தானத்தையடை யுங்கால், "ஒன்றுந்தெரியாமல் சுகமாய்த்தூங்கினேன்" என னச்சொல்லுகிறார்கள். மூர்ச்சை தெளியுங்கால் எந்தப்ப யத்தை முன்னிட்டு மூர்ச்சித்தானோ, அந்தப்பயகம் பரோ தனுதிகளுடனெழுந்திருக்கின்றான். அப்படியே மரணதி சையிலும் ஜீவர்கள் அவ்வாவரண சக்தியிலடங்கி க்ஷணமா த்திரத்தில் பரலோகயாதனை ஜநநமிவைகளுக்காதாரமான கர்மவாசனை உத்தானதிசையோடுண்டாகி, அதற்குத்தகுந் த சுகதுக்காதிகளை அவ்வந்தக்கரண உபாதியில் பிரதிவிம் பித் திருக்கின்றசைதந்யத்தில் கற்பிக்கப்பட்டு, அவ்வாச னுபரம்பரையால் அநேககோடி ஜநநமரணங்களை வெளியில டைவுற்றவன்போல் புசிக்கின்றான், சமாதியின் நழுத்தா னத்தையடைகின்ற மஹாபுருடன் சர்வாதிஷ்டான பிரத்தி யகபின்ன நிஷ் பிரபஞ்ச அத்துவிதீயவான்மசைதந்யபத்தி ல் ஆரோபிதமான சகல பிரபஞ்சங்களையும் விவேகாநுபூதி யால் இல்லாமல் நிராகரித்து, சமாதியை பெய்திபிரகாரம் அவ்விடத்துதிரிபுடியில்லாவிடினு மவ்வநுபூதிமானாக உத் தானத்தையடைகின்றான். இங்ஙனம் அதிவிருத்தமானபின் னபின்னவிசித்திர காரியங்களுக்கு, தான் ஏககாரணமாயிரு

ந்து நடப்பிக்கின்றது. அவ்வல்லபங்களை சுருதியுக்தியநுப வங்களையுடைய சற்குருவின் கிருபையினால் விவேகாநுபூதி கொண்டுநோக்கின், சூரியசந்நிதியில் ஹிமகணங்கள்போல நீங்கிவிடும். (இதில் கீழ்க்கூறிய அவஸ்தைகளில் ஆவரண சக்தியிலயித்து நித்ததாய்க் கூறினும், அதைநீங்கி கூடஸ்தப ரமான்மாவிடத்தில் அயிக்யப்பட்டுப் பின் ஆவரணத்தினிடமாயுதித்ததெனக்கொள்க.) இவற்றைச்சோதிக்கும்விவரமேதெனில், சுழுத்தியவஸ்தையில் கர்த்தாபோக்தாவாகிய ளங்கிய விஞ்ஞானமயவான்மா விஷயக்கிரஹண சாமக்கிரிகைகளான கரணங்களைவிட்டு, தனதுபாதியாகிய விஞ்ஞான விருத்தியையும் நீங்குங்கால் ஞேயம் ஞானமென்ற இவ்வுபாதிகள் அவனிடத்திலின்மையால் ஞாதிருமாத்திர உபாதியுடன் தனிக்க, ஞேயஞானங்களில்லாதஞாதிரு உபாதிதானிருந்துமிலது போலுபகாரப்படாமற்பவித்து, அஃதும் நிராலம்பமாக நீங்கிவிடும். அக்காலத்து அதிலுபஹிதசைதந்யம் தனது சொரூபமாகிய விம்பமான கூடஸ்த பிரமத்தைசைதந்யமாத்திரமாய்ச் சேஷித்து நின்று, பிராரப்தகர்மவசத்தால் ஜாக்கிராவஸ் தையைப், பூர்வமடங்கியநீதிபோலஞாதிரு உபாதி முதல் கிரமமாய் விஷய சாமக்கிரிகைகளானகரணாந்த முபாதிகளையடைந்து நிற்கும். இதனை விவேகாநுபூதியால் நோக்கின் கரணமுதல் ஞாதிருத்துவாந்தமுபாதிகளைச் சம்பந்தித்திடின், சாக்கிரஞ்சொப்பனமெனவும் அவற்றைநீங்கிடின்சுழுத்தியெனவு மாகும். ஆனால் "ஒன்றுந்தெரியாமல் தூங்கினேன்" என்ற பிரதீதியால் ஆவரணசக்தியவ்விடத்துளதாய்க் காணப்படுகின்றதெனில், இவ்வுபாதிகளோடுங்கூடிய நிலையிலநுபவிக்கப்பட்ட விருத்திஞ்ஞானத்தையே ஞானமெனவும், விருத்தியில்லாவிடத்துச்சொரூபஞானஞ்சொப்பிரகாசமா யிருந்தும் அவ்வி

வேகமில்லாததால் அதனை அஞ்ஞானமெனவுங்கொண்டு, வாசனைபாலவ்வாவரணசக்தி யுதித்ததேயன்றிவேறில்லை. மேலும் அவ்வாவரணநுபூதியோடுங்கூட "சுகமாய்த்தூங்கினேன்" என்று ஒரு பிரதீதிகாணப்படுவதால், இரண்டுமொரு திசையைப்பற்றியிருப்பதால், இச்சுகாநுபூதியைத்தவிர மற்றயாதொன்றையுந் தெரியவில்லையென்று ஒன்றுந்தெரியாமையாமாவரண சக்திக்குப்பொருள் கூறவேண்டிவரும், அங்ஙனங்கூறப்படி னிவ்வாவரண சக்திதனதுவல்லபத்தை நீங்கித்தானும் சொரூபமற்று அவ்ஸ்துவாகப்பவிக்கும். அப்படியே அஞ்ஞானநுபூதியை மாத்திரம் ஸ்தாபித்து நிருபிக்கினும், அவ்வஞ்ஞானமாம் ஒன்றுந் தெரியாமையுடன் ஒரு ஞானங்கூட அதனைப்பிரகாசிப்பித்துக்கொண்டு அபாத்தியமானமாய்க் காணப்படுவதால் அதனாலும் தன்வல்லபத்தையிழந்து அவஸ்துவாகவேண்டும். ஆனால் இவ்வாவரணசக்தி அவ்ஸ்துவாயின் யாவராலுமொன்றுபோலநுபவிக்கப்படக் காரணமேதெனில், இவ்வான்ம சைதந்யம் நித்தியநிர்விகார திரிபுடிரஹிதகூடஸ்த சைதந்யமாம். அப்படியே தனுவாதிகருத்திருத்துவார்த்தம் உபாதிகள் திரிபுடி சூந்ய ஜடவஸ்துக்களாகும். இவற்றில் ஆன்மசைதந்யம் பிரதிவிம்பிக்க இவைகளே சேதனவஸ்துபோல் பிரகாசிக்கும். கூடஸ்தனதுசொரூபவிவேக மில்லாததால் இவற்றில் பிரதிபிம்பித்தசிதாபாசன் இவற்றை நீங்கிக் கூடஸ்தமாத்திரமாய் சேஷித்த அளவுதிரிபுடியின்றிய,தால் ஜடம்போற்றோற்றுகின்ற ஆன்ம சொரூபமும்; ஞானமின்றியதுகொண்டு கரணாதிகளுக்குச் சமானம்போல் தோற்றலாமாதலால், உத்தானதிசையில் வாசனாரஹித நிராகாரதிரிபுடி சூந்யவிருத்தியில் ஆன்மசைதந்யம் பிரதிவிம்பிக்க, அவ்விருத்தியில், அதற்குப்பின்னப்படாமல்

அதிசூக்குமமாய் வாசனையுதிக்க, அவ்வாசனு விருத்தியில் சைதந்நியம் பிரதிவிம்பிக்க, அதிவ்பெலத்தால் தனக்குப் பூர்வமான விருத்தியும் உபஹித சைதந்நியாநுபூதி பிரகாசித்துக்கொண்டிருந்தும், அதனையும் அதற்காதாமான நிர்விசேஷகூடஸ்தனையும் விவேகமின்றிய இவ்வாசனுஞானம் அவற்றில் தனதுவிகிர்திசம்பந்தமின்றியதுகொண்டு ஞானுபாவமாம். ஆவரணசக்தியையாரோபித்து, தனதுவிகிர்தி சம்பந்தத்தால்தன்னையே பிரஞ்ஞாரூபமாக அபிப்பிராயப் படுத்தி விசிரம்பிப்பித்துசிற்கும். இஃதே ஆவரணசக்தியின் ஆரோபபீஜமாகும். இஃது அநாதியாயுள்ளது. இஃது சூக்கும் வாசனையால் ஆரோபிக்கப்படினும் தனதுஸ்திதியின்றிய பூர்வாவஸ்தையைப்பற்றிவந்ததினுல், சொப்பனத்தி லுதித்த புருஷன் தனது பிதாவைத் தனது காரணமாகக் கொள்வது போலிவ்வாவரண சக்தியனைத்துக்கும் காரணமாகும். மேலும் வாசனையில் பிரதிவிம்பித்த ஞானம் விகிர்தியுடன் கூடியிருந்திடினும், அதற்கு முந்திய விருத்தியிலுதித்த ஞானம் விகிர்தியை நீங்கியிருந்திடினும், கூடஸ்தபரமான்ம சொரூபஞானஞ் சுத்தசிருபாதிகமாயிருந்திடினும், இவ்வளவிடங்களிலுஞ் சுருதி யுக்தியநுபவங்களால் ஞானசொரூபம் அலுப்தமாகவே யநுபவிக்கப்படுவதால், அதனைக்கண்டிக்க யாரும் வல்லவர்களாகார்கள். ஆதலால் எந்தப்பிரகாரத்தினுலும் விசாராஸஹநீய இவ்வாவரணசக்தி விசாரிக்கப்படின் அவஸ்துவாகவேசித்திக்கும். இப்பிரகாரம் விவேகாநுபூதியால் நிஷேதித்து மலடிமைந்தனிடத்தி லெப்படி யந்நிய புருடனுக்கு நானென்ற அத்தியாசம் வரப்பிரசக்தியில்லையோ: அப்படியே அவஸ்துவாகி இவ்வாவரண சக்தியிலும் அத்தியாசம் வரப் பிரசக்தியில்லை யென அத்தியாசத்தை நீக்கி, அப்படியே யிதனை நிஷேதிக்கக்கா

ணமாகக் கூறிய சோபாதிக்கிருபாதிகஸ்தலங்களிற் கூறிய பிரகாரம் ஞானதிருஷ்டியை யுள்ளபடி யநுபவித்து இவ் வாவரண விருத்தி அயற்சியிற் கூட வுதிக்கவிடமின்றிலயித்து அவ்வநுபவபெலத்தால் நிராவரண்பரப்பிரமசைதந் நிய மாத்திரமாக அகமர்த்தாநுபவம், நீங்காத அநுபூதியாய்ச் சித்தித்திடின், அவ்விவேகாநுபூதியாம் வாளால் வெட்டப்பட்டு புனருத்தான ரஹிதமாக மனமாம் சர்ப்பத்தின் இரண்டாஞ்சிரமு மாண்டுவிடும் எனவருள்;

மாணாக்கன்—சங்கித்துக்கூறுவான். மூர்ச்சைமரணம் பிரளயம் சமாதி இவற்றிலுமவ்வாவரணசக்தியின் பிரவேசமிருக்க, சுழுத்தியாம் அவஸ்தையின் அநுபூதிபெலத்தால் அஃதுமரித்ததென்றதெங்ஙனங் கூடுமென;

ஆசிரியர்—மூர்ச்சாவஸ்தையிலும் அதிபயம்பொருந்திய மனோவாசனை தனது அக்காலத்துள்ள இயல்புடன் யாதொன்றையுமெதிரிடாமல் வாசனுமிகுதி ஞானத்துடன் மூடமாக ஆவரணசக்தியிலயித்து, அவ்விருத்தியும் நீங்கி, சிதாபாசன் கூடஸ்தமாத்திரமாகச்சேஷித்து, உத்தான திசையில் பயகம்பாதிகளைப் பொருந்தினவனாக பூர்வவாசனு விசேஷத்தாற் காணப்படினும், மூர்ச்சாவஸ்தையில் எப்படியிருந்ததெனவினுவ? சுழுத்தியவஸ்தையினநுபூதிபோலவே கூறுவான். அப்படியே பிரளயாவஸ்தையும் மரணவஸ்தையும்பவிக்கும். சமாதியவஸ்தையோ வெனில்; ஆரோபிதமாகிய சகலதுவைதத்தையும் சர்வாதிஷ்டானமாகிய பிரத்தியக பின்னபரமான்மசொரூபத்தில் அதற்குவேருயில்லாமல் லிசேஷதித்து, சொரூபமாத்திரமாகப் பிரகாசிக்குங்கால், அத்திசையில் திருசியத்தோற்றம் விசேஷமிக்குங்கால், அத்திசையில் திருசியத்தோற்றம் விசேஷமி வை யில்லாததினுலும், திரிபுடி யில்லாததினுலும், இவ்விர

ண்டு குணங்களுமிவ்வாவரண சக்திக்கும் அச்சம்பந்தியநுபவ்த்துக்குஞ் சமானமாயிருப்பதினாலங்ஙனங்கூறியதேயன்றி; அவ்வாவரண விருத்திக்கு அவ்விடத்துப் பிரவேசங்கிடையாதென் வருள்:

மாணாக்கன்—சுழுத்திமுதல் முற்கூறிய அவஸ்தைகளில் ஜீவன்முடிவில் கூடஸ்தபிரமத்துக்கு வேறில்லாமலயிக்யப்பட்டானென்றதனால்; ஆன்மப்பிராப்தியாவர்க்குஞ் சரியாயிருக்க, ஞானி ஒருவன்மாத்திரம் பிரம்மப்பிராப்தியடைந்தவனென்றும், அவன் மாத்திரம் ஜநியானென்றும்; மற்றவர்கள் பிரம்மப்பிராப்தியடையாதவர்களாய் ஜநிப்பார்களென்றது எங்ஙனங்கூடுமெனை;

அவ்வவஸ்தைகளில் ஜீவர்கள் பிரமப்பிராப்தியடைந்திருந்தும், பிரம்மஞானத்தாலவர்களது கர்மங்கள் தக்தமாகாததுகொண்டு, விசித்திர சக்திபொருந்திய அக்கர்மவாசனையால் பிரம்மவிலக்ஷணர்களாக அச்சீவர்கள் உத்தான திசையிலுதிக்கின்றார்கள். ஆனால் மரண திசையென்பது உத்தானத்துக்கு எதிரின்றியதால் அவர்களுக்கு எங்ஙனம் ஜநநம் வரலாமெனில் விவகார உபயோகியான உத்தானமில்லாதலால் மரணமெனக் கூறப்பட்டதேயன்றி, லிங்கசரீரம் காரண சரீரமிவைகள் பிரம்மஞானத்தால் நீங்காத அளவு அவ்வுபாதி பொருந்திய ஜீவன், தோர்ந்திரம் போன ஒரு புருஷன் அவ்விடத்து ஜீவித்திருக்க அனேகர்கள் திருஷ்டியிற் காணப்படாமலிருக்க வதனாலவன் எங்ஙனம் மரித்தவனாகானோ, அப்படியேமரித்தவனாகான் இப்பிரகாரம் பிரம்மஞானி யொருவனே முக்தனாவான். இப்பிரகாரந்தெளியென அப்படியே மாணாக்கன் தெளிந்தான்.

ஆசிரியர்—பின்னுஞ் சமுசய முதியாமற் காக்கும் நிமித்தம் சிலரகசியங்களை யருளுகின்றார். மனோ நாசார்த்தமாக பெத்தகங்கணனாய் நிற்கின்ற சுத்தவீரா! முன் விக்ஷேப சக்திபாதிக்கப் பட்டது போல இப்போது ஆவரண சக்தியும் பாதிக்கப்பட்டதால், துவைதப்பிரபஞ்சம் தர்ப்பண நகரம் போலுதித்தல், அதனை யபிமானித்து பஞ்சகர்த்தர்கள் ஐந்தொழில் நீதியாய் நடத்துவதுபோற் காட்டிதுவைதத்தை நம்பச்செய்தல், இவை யனைத்துஞ்சித்தியாது. ஆனால் * நீதியாய் நடத்தி மயக்குகிற சுபாவத்தை சகல சந்தேக நிவிர்த்தியின் பொருட்டு இன்னும் சற்றாலோசிப்போம். சாக்கிரம் நீங்கச் சொப்பனம் அநுபவிக்கப்படவும், இவ்விரண்டும் சுழுத்தியில் மறையவும், பின்பு விழிக்கப்பிரபஞ்சமுதித்து நிற்கவும், காணப்படுவதில், வ்வஸ்தையுளதா? இல்லையா? இம்மூன்றவஸ்தைகளுக்கும் பேதம் ஏது? எனப்பார்க்கில், சாக்கிரம் சொப்பன மிவ்விரண்டினும் மநுபவிக்கப்படும் பொருள்களிற் பேதங்காணப்படவில்லை. ஆனால் அநுபவத்தால் பேதமுள்ளது; சொப்பனத்திலொருதேசத்திற் சென்று அவ்விடத்து சிலர்களாற் சிரக்கு சந்தன முதலியவைகொண்டுபசரிக்கப்பட, அவ்வுடையாளம் விழித்பின் அவனது ஸ்தூல தேகத்தினிடமாய்க்காணாததினால் இவ்விரண்டவஸ்தைகளுக்கும் பேதஞ்சித்திக்கலாமெனில்; சொப்பனம் வாசனாமயமானதால் வாசனை யென்பது சாக்கிராநுபூதியின் தாரட்டியமான தாலஃது சத்தியமாகாது. ஏனெனில் ரத-கஜ-துரக பதாதிகள் முதலிய வஸ்துக்கள் சொப்பனாவஸ்தையி லநுபவிக்கப்பட்டு உத்திரகாலத்தில் திரோதானப்படுகின்றன, நன்றாயாலோசிக்குங்கால் கற்

---

*நீதியென்பது விவஸ்தையை ஸ்தாபித்து நியாயவிரோதமில்லாமலிருப்பது.

பனு மாத்திரமேயன்றி சத்தியமாகாது. அசத்தியமாகிய வஸ்துக்களினநுபவத்தை யோரவஸ்தையாகக்கூறுகின்றது நீதியாகாது. இச்சொப்பனவஸ்தை அசத்தியமும் சாக்கிரா வஸ்தை சத்தியமுமானதுகொண்டு இவ்விரண்டவஸ்தைகளுக்கும் பேதத்தைக்கொடுக்கின்றதெனக் கூறலாமெனினும், சாக்கிராவஸ்தை உண்மையாய் சத்தியமாகச் சித்திக்கின் அஃதுசரி. சித்தியாவிடின் பேதமும் சித்தியாது. அஃதெங்ஙனமெனில் சாக்கிராவஸ்தையி லநுபவிக்கப்பட்ட பொருள்கள் சொப்பனவஸ்தையிற்கண்ட பொருள்களைக் காட்டிலும் பின்னப்படாததினால் பதார்த்தபேதஞ் சித்தியாது. அநுபவபேதஞ் சித்திக்கலாமெனில், அநுபவமென்பது எதின்வியாபாரமெனப்பார்க்கின், கேவலம் புறக்கரணங்களுடையதுமல்ல. அகக்காரணங்களுடையதுமல்ல இரண்டின் சம்மந்தபலத்தினாலெனில், இவ்வனைத்தும் ஜடமாதலால் ஆன்மப்பிரகாசத்தை யபேக்ஷித்தே முற் கூறிய வநுபூதி சித்திக்கவேண்டும். அவனோதிருஷ்டா மற்றியாவுந்திருசியம், திருசியமெலாங்கடதுல்லியமானதால் கடத்துக்கெங்ஙனஞ் சாக்கிராதியவஸ்தைகள் கிடையாதோ வங்ஙனமே யிவற்றிற்குங் கிடையாது. திருஷ்டாவுக்குளதாகலாமெனில் அவஸ்தைகளைக்கடந்து சாட்சியாய் நின்றவனை யெங்ஙனஞ் சம்பதிக்கும்? மேலுமிவ்வவஸ்தைகள் சுழுத்தியிற்காணப்படாததினால் ஆன்மசம்பந்தமிலதாகும். இவ்வான்ம சம்பந்தத்தை நீங்கி யெவ்வஸ்துவு மெவ்விடத்துமிருப்பதாகச் சித்திக்கமாட்டாததினால் அவஸ்துவுமாகும். அதுவொதோற்றியுங் காணமல்மறைந்தும் விவேகத்தாற் பாதிக்கப்பட்டு முள்ளது. அதிஷ்டானத்துக்கு முக்காலத்தும் வேறுபடாமலதிஷ்டானமாகவே சித்தித்திடும். சொப்பன திருஷ்டாவாகிய ஆன்மாவைத்தவிர சொப்பனவுத்தா

ன சமயத்திற் சொப்பனபிரபஞ்சம் யாவுமெங்ஙனம் வே
றுபடாமல் அவன்மாத்திரமாகவே சேஷிக்கின்றதோ, அங்
ஙனமே அவஸ்தாத்திரய சாக்ஷியாகிய திருஷ்டாவைத்தவிர்
அவஸ்தாத்திரயங்கள் யாவும் வேறுபடாமல் திருஷ்டாவி
ன் திருக்கு தருமமாத்திரமாகச்சேஷித்து நிற்கும் பூர்வமீ
மாம்சகர் மதத்திற்கூறிய சொர்க்காதிபலஹேதுவான அபூ
ர்வமும் இத்திருக்கு தர்மத்திலடங்கி சாக்கிர சொப்பனாவ
ஸ்தைகளுக்குப் பேதத்தைக்கற்பிக்க வல்லமையற்று நீங்
கிவிடும். ஆதலால் விவேகித்திடின் இத்துவைதப்பிரபஞ்
சத்தையும் மனமாகிய தன்னையும் மித்தையென நம்பச்செ
ய்து நிற்கும். அப்படியே மிருத்திகை, மிருத்திகையில்
பதித்த லோஷ்டம், இரத்தினம் இவ்விரண்டும் எத்தன்மை
யினாலும் சமானமாயில்லாமற் பின்ன பதார்த்தங்கள்
போற்றோற்றிடினும் மிகுந்த தெளிவுகொண்ட ரத்தினம்
விவேகபுத்தியிற் பிரதி விவகாரத்துக்கு வேறாக மாட்டா
தது போல், அஜடமாகி ஒருபாகமுந் திருசியப் பகுதியில
டங்கியனன்மவஸ்துவாகக்கொண்டு விவேக புத்தியில் ஆன்
மா இவைகளுக்கன்னிய மெனத்தெரியுமாறுவ்புரிந்துநிற்கும்

அப்பிரகாரமே ஜீவர்கள் சற்குரு கிருபையாற் கிடை
த்த விவேகத்தாற் கர்மகாண்டத்திற் கூறிய புண்ணிய பா
வங்களைப் பொருந்திய அநேக கோடி ஜநநமரணங்கள் ஜீவ
னைப் பொருந்தி யிருந்ததாகச்சொல்வதில், அவஸ்தைகளை
ப்போல ஜநநமரணங்களும் நிலையின்றி வந்துபோனவையா
யிருக்க, அவற்றைப் பொருந்திய ஜீவன் அவினாசியாயும் அ
வற்றின் சம்பந்தவியோகங்களால் விகாரமின்றியவனாயும்
அவற்றிற்கு சாக்ஷியாயுமில்லாவிடி னவனுமவைகளைப்போ
லொரு வஸ்துவாகிக்கெடுவான். அங்ஙனமாயின் அவை
களும் ஜீவனும் சித்தியாமல் நீங்கிவிடும். அந்நேர கரு

யுக்தி யநுபவமூன்றுக்கு மொவ்வாது. அங்ஙமித்தம் அவ்
வனை முற் கூறிய பிரகாரமொப்பிடின் ஆகாயத்திற் பெய்கின்
ற வருஷத்தாலும் தகிக்கிற சூரிய கிரணதாபத்தாலுமெவ்
வனமாகாசத்திற்கு சீதோஷ்ண சம்பந்தங்கிடையாதோ, அ
ங்ஙனமே யிவ்வாத்மாவுக்கு முற்கூறிய சம்பந்தங்கிடை
யாது. தோற்றுகிறதேயெனில் அளவில்லாத பிரவாகம்
போற் காணப்படினும்மருமரீசிகாப்பிரவாகத்தால் பூமியெ
ங்ஙனம் நனையாதோ, அங்ஙனமே இவைகளின் சம்பந்தம
ஆன்மாவுக்குக் கிடையாது. இங்ஙன மாலோசிக்கின் ஜ
நமரணங்கள் நீங்கி மோக்ஷமார்க்கம் ஜீவர்கட்கு வெளிப்
படும்.

அப்படியே கரையின்றியசமுத்திரம் காற்றின சலனவி
சேஷத்தால் அலை நுரை குமிழி முதலியவைகளால் விகார
ம்பெருந்தினதாகவும்அதுநீங்கினவிடம் நிர்விகாரமாகவுங்
காணப்படினும், ஜலம் ஜலமாகவே சித்தித்திருப்பதுபோ
ல விக்ஷேபம் விக்ஷேபத்தினீக்கம் சாக்ஷிசைதந்யத்துக்கு
க் கிடையாதென வாலோசிக்கின் நீங்கிவிடும். காலதத்துவ
ந்தனக்கந்நியமாகிய பிரபஞ்சமியாவையு மளவைப்படுத்தி
வதுகொண்டு பிரபஞ்சத்துக் கந்நியமாகியும் சாக்ஷியாலே
யே பிரகாசிப்பதநால் சித்விலக்ஷணமாகியும் சர்வசம்ஹார
மாக விருப்பதுகொண்டுதனது சம்ஹாரசக்தியால் பிரபஞ்
சத்தை வியாபிக்குமளவில், அனைத்தும் அதின்பரிணமத்
தை நீங்கி பாவாபாவஸ் பூர்த்தியில்லாதமஹாசூந்யம்போ
ன்ற மஹாகாலதத்துவத்துக்கு வேறில்லாமனீங்கிவிடும். அ
ங்ஙனஞ் சருவசம்ஹாரகாலதத்துவத்தி னநுபோகவிருத்தி
யுதிக்குங்கால், தன்னிலுதித்த மஹாகாலதத்துவத்தின்சம்
ஹார சக்திகொண்டு பிரவேசிக்குங்கால், கற்பூரமலை தீப்
பட்டாற்போல வஸ்துக்கள்பாவும் அங்ஙனமங்ஙனமழிவ

துடன், இவ்விதமெனச் சொல்லத்தகாத விதையையும்விச
னத்தையும் பயகம்பாதியையுமடைந்து அப்படியே யழிந்
து, காலதத்துவமாகிய தனதநுபூதிக்குவேறில்லாமனீங்கி
விடும், அவ்வநுபூதியினின்றுஞ் சருவசம்ஹார காலதத்து
வம் பிரபஞ்சவிலக்ஷணமாகியும் சைதந்யபத்துக்கந்யமாகி
யும் சருவசம்ஹார சக்திபொருந்தியதாகியும் அநுபூதியிலு
தித்தபடி நோக்கப்படின் அவ்வனமுதித்தவநுபூதிவிருத்தி
யின் குணத்துக்கு வேறில்லாததாகியுப் ஜடமாகியும்பவித்து
முற்கூறிய பிரகாரந்திருக்குதரூபத்தி லடங்கி அதற்குவே
றில்லாமல் நீங்கிநிற்கும். அவ்வான்ம திருஷ்டியே காலத்
தைக் கடந்திருப்பதினால் காலகாலனாகியபிரத்தியக்ஷைகா
லதத்துவ மொருக்காலுஞ் சம்பந்தியாது இவ்வனம் விவே
கித்தநுபவிக்க துவைதமனைத்தையும் சம்ஹரித்து ஆன்ம
சொரூபத்திலதற்கந்யமாகவில்லாமல் அவ்வான்மதிருக்கா
ற்புசிக்கப்பட்டு அஃதுமாத்திரமாகச் சேஷித்து நிற்கும்.
அவ்விடத்து அன்னத்திரளை போன்றதுவைதப்பிரபஞ்ச
மும் உபகரணம் போன்ற காலதத்துவமும் பட்சிக்கப்பட்
ட வளவில் பிரத்தியக்கேகரசமாக விலாசிக்கும். அவ்வநு
பூதி நிலைமையை யார்மதிக்கவல்லார்! யார் நோக்க வல்
லார்! இவ்வனங் காலதத்துவத்தைவென்றிடின் அவ்விடத்
தில் திரிபுடியில்லாததினால் மனமும்நசித்துவிடும். அதனா
ல் வந்தஜநநமரணாதி சகலதுக்கமு நீங்கிவிடும். அப்படியே
சகல விதி நிஷேதங்களாகிய சாஸ்திரங்களாற்கூறிய வெகு
விதமாகிய புண்ணியபாவங்கள், சொர்க்கநரகாதிகள் உச்ச
நீசங்களான ஜநநாதிகள், இன்னும் சம்பத்து தாரித்திரம்
பிணி முதலியவைகளியாவும் கருமத்தின் பலமாகக் கருத்
தாவைச் சம்பந்தித்ததாகக் கூறப்பட்டபோதிலும்; அவை
கள் ஜாதி வருணாச்சிரமதர்மநீதி குலகோத்திராதிகளுக்கா

சிரயமாகியபிரேதமானசரீராத்தியாசத்தைமுன்னிட்டுசேத்தி த்திருப்பதனுல், சரீராத்தியாச நீங்கிடின் கருமபந்த நீங்கி விடும். கருமபந்தம் நீங்கிய கருமபோதகமாகிய அதிபயங் கர சாஸ்திரத்தின் நிமித்தமான பயமுநீங்கிவிடுதலால், கும் பீபாகாதி நரகமென்ன அசிபத்திராதி கோரவனங்களென் ன பிரம்மாதி தம்பாந்தமுள்ள யோனிகளில் ஜநநமென்ன இவ்வனைத்தும் தேகாத்தியாசத்தைநீக்கி தேகசாக்ஷியாகிய பிரத்தியக பின்னபரமான்ம சொரூபத்தை அந்நியமாகவநு பவிக்க, அவ்வான்ம சொரூபம் ஜாதிகுணக்கிரியா சூந்நிய மாய் திரிவிதபரிச்சேத சூந்நியமாய்சஜாதீய விஜாதீய சுகத பேதரகிதமாய் அத்துவிதமாய் சின்மாத்திரமான அகன் டைகரச அபரோக்ஷ சாக்ஷாத்காரமாய்ப் பிரகாசிப்பதனுல், ஆகாயத்தில் பேடுபள்ளம்போற் சொரூபத்தி லிப்பிரபஞ்ச மிப்பிரபஞ்சகற்பகமானமனம் யாவுமுக்காலத்து முதிக்க விடமில்லையென வான்மாநுபூதியுண்டாயக்கணமே மனோ நாசஞ்சித்திக்கும். இஃதே முக்கியாதிகாரிகளின்மனோநாச த்தின் மார்க்கநிரூபணம்.

மத்திமாதி காரிகள் மனோ நாசமடையும்படி அடை யோகங்களி னிமித்தமாகும். இவ்விருமார்க்கங்களாலன்றி மனோ நாச நிமித்தமாகமார்க்காந்தரமில்லை. ஆன்மா தானுக விருப்பதுபற்றி மனோஜயஞ் சுலபமாகவும் முமுக்ஷுவாலா ன்மாசிரவண முதலிய சாதனங்கொண்டு மறப்புடன் தே டுவதால் மனோஜயங்கடினமாகவு மாயிற்று. இப்பிரகாரந் தெளிவாயாகவென.

மாணுக்கனும் அங்ஙனமே ஆசிரியரது கருணை நோக் கமெனும் வாளாயுதத்தை விவேக மெனுங்கையிற்றாங்கி. ஞானசூரனுய் அகமுகப்பட, தேகத்திரயாத்தியாசமாகிய

மூன்று சிரமும் ஆவரண விக்ஷேபமென்றஇருதலையும்அவை
களையுடைய மனமெனும் மூர்க்க சர்ப்பமும் ரச்சு சர்ப்ப
ப்போற்காணாதொழிய ஓகோ! நினைக்கினுந் திடுக்கிடத்தகு
ந்த மனமெங்கே? உலகமெங்கே? காலனெங்கே? மாதா
வினுதரமெங்கே? என்ன ஆச்சரியம்! ஆச்சரியம்! என்று
மகிழ்ந்து மனோஜயத்தையடைந்து நிஷ்டையடைந்து பின்
பகிர்முகனாகி ஆசிரியரை வணங்கி சச்சிதானந்தவகண்டை
கரசமாகிய எனக்கு வேறாகி யொன்றுங் காணவில்லை. ரச்
சுசர்ப்பமாகிய மனம் என்னை யெங்ஙனந்தீண்டும்? நானே
யெக்காலத்திலுமுளன்; என மாணாக்கன் ஆனந்தபரவச
னாகி நிற்க: பிரதிபந்ததொம்சார்த்தமாகவோ, பிரமானந்த
லகிரியினாலோ, கருணாதிக்க விசேஷத்தாலோ ஆசிரியர் திரு
ம்பவும் மேலருளியவற்றின் சாரத்தையதிசங்கிரகமாகவரு
ளுவார்.

திருசியந்திருக்கென விரண்டுபொருளுளவாகும். அ
வற்றுள் திருசியம்ஜடமெனப்படும். திருக்கு சித்தெனப்
படும். ஜடமாகிய திருசியமுந்திருக்கினுபாதியாகவும், தி
ருசியத்தினுபாதியாகவுமிருபிரிவுடையதாகப்பவித்து, ஆ
ன்மானான்ம வஸ்துக்கள் போற்றோற்றி நிற்கும், அவ்வித
திருக்கினுபாதியும், கருத்தா போக்தா ஞாதா சுகி என்ற
ஜீவோபாதிகளாகவும், அசங்கவுதாசினசாக்ஷிகூடஸ்தபிர
ம்மபரமான்மாவென்ற பிரத்தியக்பிரம்மவுபாதிகளாகவும்,
பவித்து நிற்கும். கண்டாகண்டங்களாகிய பிரபஞ்சங்களை
ப்பகிர்முகமாயாவது விஷயீகரிக்குங்கால் விஷயாகாரங்க
ளாகப் பரிணமித்துத் தோற்றிய விருத்திகள் பலமெனச்
சொல்லப்படும். அவற்றுடன் கூடி கடம்படமடமென்ற
கற்பனையுடன் விஷயங்களைச் சுட்டியபுத்தி சிதாபாசவிருத்

தியெனப்படும். இப்பலசிதா பாசவிருத்திகளுதித்தும்மறை ந்தும் அவைகளைக்குறியாமற் பிரகாசிப்பிக்கக் காரணமாய் நின்றநிர்விகார விருத்தி சாக்ஷிவிருத்தியாகும். இச்சாக்ஷிவி ருத்தியிற் பிரகாசிப்பதுகொண்டுபரமான்மாவைசாக்ஷியென வும், கற்பனாவிருத்தியிற் பிரதிபலித்ததுகொண்டு சிதாபா சனெனவும் பலவிருத்தியிற் பிரதி பலித்ததுகொண்டு விஷ யமெனவும், சிதா பாச விருத்தியுதிக்குங்காலும் அதற்கா தாரமாய் நின்ற நிராகாரசாக்ஷிவிருத்தியிற் பிரதிபலித்தசை தந்யத்தைத்தனது சொரூபமாகக்கொண்டு தனது சாக்ஷி சுபாவ மறைந்ததுபற்றியந்தரியாமியெனவும், தனது மறை வால் அவன் காணப்படாததுபற்றி யவ்வந்தரியாமியாகியஈ சன்பரோக்ஷனெனவும், விவேகாநுபூதியால் அவனைத்தானு கவநுபவிக்கத்தானே யபரோக்ஷமான பிரம்மசொரூபமெ னவும், சுருதியுக்திகளை நீங்காதவநுபவமாகக் கூறலாகும்.

இங்ஙனமறிந்து பந்தமோக்ஷ விவகாரத்துக்காதாரமா னதுவைதாத்துவைத விகாசபேதமெல்லா முற் கூறிய விரு த்தி பேதத்தைத்தைத்தவிர வேறில்லாததால் அவ்விருத்தி யுங் கற்பிதமானதுபற்றியுண்மையிலில்லாததனாற்கடபடமு தலிய இகபரங்களாய்ப் பரிணமித்தபலவிருத்தியை அதை ச்சுட்டா நின்ற சிதாபாசவிருத்தியிலும், அதனை யதிலுந் தும் மறைந்தும் அதை யறியா நின்ற சாக்ஷிவிருத்தியிலுமா க லயிப்பித்து சாக்ஷி விருத்தி மாத்திரமாய் நிற்க, திருசி யங்களனைத்தும் திருக்காகவேகாணும். அத்திருக்குபாதி யில் திருசிய நீங்கியிருந்திடினும் அவ்விடனுதிக்கும் விவே கத்தால் அத்திருக்குபாதி திருசியமாகி நிருபாதிக திருக்கு மாத்திரமாய்ச் சேஷித்து சுயந்தானாகப் பிரகாசிக்கும். இ துவே சகல வேதாந்தங்களின் சுருக்கமாகும்.

துவைதந் திருசியமாகும். திருக்கேயத் துவைதமாகும். அஃதே சுயம்வஸ்து. ஆன்மாவை நாடினும் ஜகத்தை நாடினும் சுயம் வஸ்துவாய் நாடில்பிரத்தியக பின்ன பிரமமாங் கூடஸ்தனாகிய தானாகவே யனைத்தும் பிரகாசிக்கும். அஃதெங்ஙனமெனில், சுயங் கோபுரமென்றவிடத்தில் அதிற் காணப்படும் பொம்மைகளைக் கோபுரமன்றென நிஷேதித்திடில், அவ்வுபாதியை நீங்கி நிற்கும். அப்படியே ஒவ்வொரு பாதிகளையும் நீக்கிக்காணில் நிருபாதிகமாகி திருசியா திருசியதோற்றமின்றிப் பேதிக்கப்படாத சுயந்தானாகவேபிரகாசிக்கும். அப்படிசுயம்ஜகத்தெனப்பார்க்கில்இச்சகமுந் தன்னுபாதிகளை நீங்கி திருசியா திருசியத்தோற்றமின்றி சுயந்தானாகவே பிரகாசிக்கும். ஆதலால் நீ நான் அஃது இஃது ஜகம் ஈசன் ஜீவன் குரு சிஷன் பந்தம் மோக்ஷம் முதலிய பேதம், இவைகள் நீங்கிய அபேதம், இவ்வனைத்துந் தன்னைத்தவிர வேறில்லை. தானே திரிவித பரிச்சேத்ரகித அசகாய சூரனான சுயம் பிரகாசமாம் சுயம்பெருமையாகிய சுயம்பிரபுவாதலால், இப்படிப் பிரகாசிக்கிறவனுக்கு இனி யென்னவுபதேசிக்கததக்கதெனவருளி, இருவருந் தானாகவே சுயமாய் விளங்கி நின்றார்கள்.

சுத்தாத்துவைதபாகஞ்சம்பூரணம்.

---

ஒன்பதாவது.

## வேதாகமசம்பிரதாயநிருபணப்பிரகரணம்.

---

மாணாக்கன்—கிருதகிருத்தியனாகிய ஆப்தகாமனாயிருந்திடினும், திருஷ்டிருதெரிசனந் திருசியம் என்னுந்திரிபுடிகடந்து நின்ற சொப்பிரகாச அவாங்மானஸகோசர நிஜா

தியெனப்படும். இப்பலசிதா பாசவிருத்திகளுதித்தும்மறை ந்தும் அவைகளைக்குறியாமற் பிரகாசிப்பிக்கக் காரணமாய் நின்றநிர்விகார விருத்தி சாக்ஷிவிருத்தியாகும். இச்சாக்ஷிவி ருத்தியிற் பிரகாசிப்பதுகொண்டுபரமான்மாவைசாக்ஷியென வும், கற்பனாவிருத்தியிற் பிரதிபலித்ததுகொண்டு சிதாபா சனெனவும் பலவிருத்தியிற் பிரதி பலித்ததுகொண்டு விஷ யமெனவும், சிதா பாச விருத்தியுதிக்குங்காலும் அதற்கா தாரமாய் நின்ற நிராகாரசாக்ஷிவிருத்தியிற் பிரதிபலித்தசை தன்யத்தைத்தனது சொரூபமாகக்கொண்டு தனது சாக்ஷி சுபாவ மறைந்ததுபற்றியந்தரியாமியெனவும், தனது மறை வால் அவன் காணப்படாததுபற்றி யவ்வந்தரியாமியாகியஈ சன்பரோக்ஷனெனவும், விவேகாநுபூதியால் அவனைத்தானு கவநுபவிக்கத்தானே யபரோக்ஷமான பிரம்மசொரூபமெ னவும், சுருதியுக்திகளை நீங்காதவநுபவமாகக் கூறலாகும்.

இங்ஙனமறிந்து பந்தமோக்ஷ விவகாரத்துக்காதாரமா னதுவைதாத்துவைத விகாசபேதமெல்லா முற் கூறிய விரு த்தி பேதத்தைத்தைத்தவிர வேறில்லாததால் அவ்விருத்தி யுங் கற்பிதமானதுபற்றியுண்மையில்லாததனாற்கடபடமு தலிய இகபரங்களாய்ப் பரிணமித்தபலவிருத்தியை அதை ச்சுட்டா நின்ற சிதாபாசவிருத்தியிலும், அதனை யதிலிருந் தும் மறைந்தும் அதை யறியா நின்ற சாக்ஷிவிருத்தியிலுமா க லயிப்பித்து சாக்ஷி விருத்தி மாத்திரமாய் நிற்க, திருசி யங்களனைத்தும் திருக்காகவேகாணும். அத்திருக்குபாதி யில் திருசிய நீங்கியிருந்திடினும் அவ்விடனுதிக்கும் விவே கத்தால் அத்திருக்குபாதி திருசியமாகி நிருபாதிக திருக்கு மாத்திரமாய்ச் சேஷித்து சுயந்தானகப் பிரகாசிக்கும். இ துவே சகல வேதாந்தங்களின் சுருக்கமாகும்.

துவைதந்திருசியமாகும். திருக்கேயத்துவைதமாகும். அஃதே சுயம்வஸ்து. ஆன்மாவை நாடினும் ஜகத்தை நாடினும் சுயம் வஸ்துவாய் நாடில்பிரத்தியக பின்ன பிரமமாங் கூடஸ்தனாகிய தானாகவே யனைத்தும் பிரகாசிக்கும். அஃதெங்ஙனமெனில், சுயங் கோபுரமென்றவிடத்தில் அதிற் காணப்படும் பொம்மைகளைக் கோபுரமன்றென நிஷேதித்திடில். அவ்வுபாதியை நீங்கி நிற்கும். அப்படியே ஒவ்வொரு பாதிகளையும் நீக்கிக்காணில் நிருபாதிகமாகி திருசியா திருசியதோற்றமின்றிப் பேதிக்கப்படாத சுயந்தானாகவேபிரகாசிக்கும். அப்படிசுயம்ஜகத்தெனப்பார்க்கில்இச்சகமுந் தன்னுபாதிகளை நீங்கி திருசியா திருசியத்தோற்றமின்றி சுயந்தானாகவே பிரகாசிக்கும். ஆதலால் நீ நான் அஃது இஃது ஜகம் ஈசன் ஜீவன் குரு சிஷன் பந்தம் மோக்ஷம் முதலிய பேதம், இவைகள் நீங்கிய அபேதம், இவ்வனைத்துந் தன்னைத்தவிர வேறில்லை. தானே திரிவித பரிச்சேதரகித அசகாய சூரனான சுயம் பிரகாசமாம் சுயம்பெருமையாகிய சுயம்பிரபுவாதலால், இப்படிப் பிரகாசிக்கிறவனுக்கு இனி யென்னவுபதேசிக்கததக்கதெனவருளி, இருவருந் தானாகவே சுயமாய் விளங்கி நின்றார்கள்.

சுத்தாத்துவைதபாகஞ்சம்பூரணம்.

---

ஒன்பதாவது.

## வேதாகமசம்பிரதாயநிரூபணப்பிரகரணம்.

---

மாணாக்கன்—கிருதகிருத்தியனாகிய ஆப்த காமனாயிருந்திடினும், திருஷ்டிருதெரிசனந் திருசியம் என்னுந்திரிபுடிகடந்து நின்ற சொப்பிரகாச அவாங்மானஸகோசர நிஜா

னந்தமகிமையெனுஞ் சிங்காசனாதிபதியாகிய பரமகுரோ! திருவாய்மலர்ந்தருளிய கருணைமொழி யுபதேசத்தாலினிச் சம்சயாதிகளுக்கு இடமின்றி ஞானநிர்ப்பயனாகினேன்: ஆனாலும் விசித்ரதரங்க மாலாஸமாந்தோளித தவளதர அதிசிதள கங்காப்பிரவாகத்தினுவமைகடந்தநிஜானந்தானுபூதிகேளீ விலாசமான வாணிப்பிரவாக மாதுரியரசபானத்தை சுரோத்திரமெனும் மதுகரம், புசிக்க விடமின்றி மதுரசபானமுடையதாயினும் நீங்கவிச்சையற்றது போல் இச்சையுடையதாகிவிகசிக்கின்றது; கடாக்ஷிக்கவேண்டுமென:

அநேககோடிஜன்மங்களில் ஈசுராராதன புத்தியாநுஷ்டித்த எஞ்ஞதானதபசு எனும் நிஷ்காமகர்மத்தால் பரிசுத்தாந்தக்கரணத்தையுடைய அதிகாரிகள், சிரவண மனன நிதித்தியாசன தாரணதியான சமாதி விசேஷங்களால், திரிவிதபரிச்சேதசூன்ய பிரத்தியகபின்ன பரமான்ம சொரூபமாகக் கேவலங்கருணையாற் பிரகாசிக்கத்தக்க பரமசிவத்தின் அபரோக்ஷசாக்ஷாத்காரமடைந்த பிரம்மஞானிகளாகிய இவர்கள் சர்வத்திர துவேஷ மற்றவர்களும் சர்வத்திரவுதாசீனவுள்ள முடையவர்களுமாயிருப்பினும் பவித்திரதரசிதபவிதவுத்தூளன திரிபுண்டர உருத்திராக்ஷதாரண சிவநாமபஜன லிங்கார்ச்சன சாந்திதாந்தி காசி சிதம்பராதி க்ஷேத்திர வாசங்களான அவசியம் பாவியாயுள்ள உத்தமப் பிரம்மஞான சாதனங்களாகின்ற வைதிகசின்னங்களை யெதிரிடின், தத்தபடநியாயமாயாவது, பரவசமாய் ஆனந்த பாஷ்பவுரோமாஞ்சங்களால், எங்ஙனம் முதிதாந்தக்கரணர்களாகப் பவிக்கின்றார்களோ, அங்ஙனமேபிரத்தியக்ஷவைக்கியசிரவண பரவசமாகப்பவிப்பது, சாதுக்களுக்கியல்பாகவேயிருக்கத்தக்கதுதான். ஆதலால் அறியவேண்

டிய வற்றையுல்லாசமாய் விசாரிக்கலாமெனவருள:

மாணாக்கன்—இந்த அத்துவைதத்துக்கு அந்நியம் போற்றோன்றுகின்ற மதங்களினியல்பையும், அம்மதஸ்தர்கள் இதனைத்தெரியாவிடினும் இதனையேயநுசரித்திருப்பதற்கு யுக்தியநுபவமும், அங்ஙனமொப்பாவிடில் அவற்றிற் குற்றமும், அந்நூல்களுக்கிந்நூல்கள் விரோதப்படுதலும், அவிரோதப்படுதலும் வைதிக சிகாமணிகளின் கருமபக்தி யோகஞானாநுஷ்டான சம்பிரதாயமும் அவசியமுபதேசித்தருளவேண்டுமெனப்பிரார்த்திக்க:

ஆசிரியர்—மைந்தா! சாமாநியமெனவும், விசேஷமெனவும், சாஸ்திர மிருபிரிவுடையதாகும். அவற்றுள் சுருதியொன்று மாத்திரஞ்சாமாநியமெனவும், மற்றச் சிவாகமமுதலிய ஆகமங்கள்விசேஷமெனவுங், கூறப்படும். சாமாநியமென்பது, கர்மபத்தியோகஞான மார்க்கங்களையுந் தேவதாகுணைசுவரியங்களையும். உள்ளவாறபிமானமின்றிப் போதித்துக், குறித்துப்போதிக்கக்கூடாதவிடத்து இனைப் பாறிநிற்கும். மநுவாதி மிருதிகளும் அங்ஙனமே கூறிநிற்கும். விசேஷமென்பது, பொதுநூலிற்கூறிய ஒவ்வொரு வகுப்புகளையும் ஒவ்வொருதேவதாபரமாக ஆக்கிப் பொது நூலையநுசரித்து மநுசரியாததுபோல, விசேஷவகுப்புடையதாய்க்குறித்து நிற்கும். இதில்விசேஷ நூலைச்சார்ந்தவர்கள், அந்தந்த விசேஷநூலையபிமானித்துப், பொது நூலைச்சாமாநிய மெனநிஷேதிப்பார்கள். அங்ஙனநிஷேதிப்பது, அச்சமயிகளின் அவிவேகமேயன்றி வேறன்று. எதனில், பொது நூலொன்றுதவிரமற்றச்சமயநூல்களனைத்தும், பரஸ்பரம் விசேஷ நூல்களாகக்கொண்டு வாதிகளாய் வாதிக்குங்கால், உனக்கத்தேவன் கடவுள், எனக்

கித்தேவன் கடவுள், எனப்பலதேவர்களையுங் கடவுளாய்ச் சாதிப்பது நீங்கலாக சமாதானமின்றிப்பெருங்குற்ற முடையவர்களாய்ப்பவித்து, மனச்சூடுசகியாமற் பொது வாரிடமாய் வாதந்தீர்த்துக்கொள்வதுபோலப், பொது நூலாகிய சுருதியினிடமாகவே யவர்களது மதவாதந்தீர வேண்டிவரும். அப்படித்தீர்த்துக் கொள்ளாதவிஷயத்தில், மதவாதிகளுக்குள் நேரிட்ட கடவுள்விஷயமான மயக்கநீங்காது. பொதுநூலை யபேக்ஷித்திடில்அம்மயக்க நீங்கிவிடும்.

ஆனல் இம்மயக்கை நீக்கும்படியான நீதியென்னவிருக்கிறதெனில் சேதனமென்றும் அசேதனமென்றும் இரு வகுப்புடையது இப்பிரபஞ்சம். அவற்றுள்சேதனமெனும் ஒருவகுப்பு, அகமெனுமொரு விளக்கத்திலடங்கிநிற்கும் அசேதனமெனு மொருவகுப்பு இஃதெனுமொரு விளக்கத்திலடங்கிநிற்கும். இவ்விதவிளக்கம், அகமெனும் இஃதெனு முபாதிவிகாரங்களைநீங்கிநிற்கின் சுத்தபரவஸ்துவாகும். அந்நூல்களாற் பொதுநூலிற்கூறிய அப்பரவஸ்துவையே, அகமெனுஞ்சேதனவுபாதியை யுடைய விசேஷநூலிற்கூறியஅந்தந்தத்தேவர்களினுமரூபங்களை முன்னிட்டுக்கடவுளெனக்கூறப்படும்.

ஆனல், நரபசுபக்ஷிமிருகாதிகளான சேதனமாமக முபாதிகளிலும் பரவஸ்துவேயிருக்க, விசேஷநூல்கள், சேதனமாமக முபாதியையுடைய சிலதேவர்களின் நாமரூபங்களை மாத்திரமுன்னிட்டு, ஈசுரத்தன்மையை நிரூபிக்கக் காரணமேதனில்;

குணசக்திவைசித்திரியங்களோடுங்கூடிய அகமுபாதி, தாரதம்மிய முடையதாகப் பேதிக்கப்படும். அப்படி

பேதிக்கப்படின், நரர்முதலான சேதனர்களையபேக்ஷித்து
இந்திராதிதேவர்களும், அவர்களையபேக்ஷித்து பிரமனும்
அவரையபேக்ஷித்து நாரணனும், அவரையபேக்ஷித்து உரு
த்திரனும், அவரையபேக்ஷித்து மஹேசுரனும், அவரை
யபேக்ஷித்து சதாசிவனும், அவரையபேக்ஷித்து சர்வஞ்ஞ
த்து வாதியுபாதிபொருந்திய மாயிபெனும் பரமேசுரனும்,
உத்தரோத்தரங்குண சக்தி வைசித்திரியங்களினதிக்கியத்
தைப்பொருந்தி நிற்பார்கள். ஆதலாலந்தந்த விடத்து அவ்
விசேஷநூல்கள் அங்ஙனங் கூறுவனவாம்.

ஆனால் குணசக்திவைசித்திரியங்கள் இவ்விதந் தார
தன்மியமுடைய வையாயிருக்க, அத்தார தன்மியங்களைக்
கூறாமல், அந்தந்தவிடத்தில் அவ்விசேஷநூல்கள் முடிவா
கக்கூறி நிற்கக்காரணமேதெனில்;

பொதுநூலையுணர அதிகாரமில்லாதஅதிகாரிகளுக்கு,
இவ்விசேஷ நூல்கள் ஆதிகாரிகதேவர்களை விசேஷப்படுத்
திக் கூறி, அந்தந்தவிடத்து அவ்வதிகாரிகளைத் தன் வழி
நடப்பித்ததுகொண்டு, அவர்களுக்கு விசேஷநூலிற் கூறிய
தெய்வ சம்பத்தாகிய தாரதன்மியமுடைய அபூர்வலாபத்
தைக் கிடைக்கச்செய்து, ஒருவிடத்தேனும் ஆஸ்திக்கியத்
தை யவர்கள் நிலை பெற அடைந்து நிற்பதைக்கண்டு மகிழ்
ந்து, முடிந்ததே யாகும். மேலும் இவ்வதிகாரிகள் பிர
பஞ்சத்தையே சத்தியமாகக் கொண்டு அப்போகங்களை ய
டைய முயற்சி செய்வதைக்கண்டு, இவ்வர்த்தங்களை ய
டையாமலிருத்தற்காக, இப்பிரபஞ்சத்தை சத்தியமாக
வும், அநித்தியமாகவுந், துன்ப நிறைந்ததாகவுங் கூறி, அந்
தந்த தெய்வலோகங்களை சத்தியங்களாகவும்; நித்தியங்க
ளாகவும் விசேஷ நூல்களுரைப்பதில், பொது நூலிற்

கூறிய பரஜீவர்களையுங்கூறுகின்றன. அங்ஙனங் கூறினும், முற்கூறிய துவைதத்தைப் பேதியாமல் இவர்கள் கருத்துக் கிசைவாக நிரூபிக்கின்றன.

ஆனால் விசேஷ நூல்களை யுடையவர்கள் அந்நூற்படியே நடக்கின்றவர்களா? அல்லது பொது நூலையுமடைந்திருக்கின்றவர்களா? எனில்:

சைவ சாக்தவைஷ்ணவர்கள் முதலான பிராமணர்கள், கர்ப்பாதானமுதற் பிரத்தியாப்திக சிரார்த்தம் வரை, பொது நூலாகிய சுருதி ஸ்மிருதிகளினுஞ்ஞையையும், தீக்ஷா சமஸ்காரத்தின் பின் தினந்தோறுமநுஷ்டிக்கத்தக்க பொது நூலினநுஷ்டானத்தையும், அநுஷ்டித்துப், பின்பு விசேஷ நூலிற்கூறியவநுஷ்டானத்தையுஞ் செய்கின்றவர்களாவார்கள். இங்ஙனம் பொது நூலநுஷ்டானமில்லாவிடில், அவர்கள்பிராமண்ணியத்தைநீங்கித்தீக்ஷா சமஸ்காரமுடைய சூத்திராதியர்கள் போலப் பவிப்பார்கள். தீக்ஷாசமஸ்காரமுடைய மற்றவர்களும் தர்மாதர்மங்கள் பாத்தியாபாத்தியங்களியாவும், பொதுநூன்மார்க்கமாகவும், அவற்றுள் கிஞ்சித்விஷயம் விசேஷ நூலின் மார்க்கமாகவு முடையவர்களாவார்கள்.

இப்பொது நூலார்களோவெனில்: கர்ப்பாதானமுதற் பிரத்தியாப்திக சிரார்த்தம்வரையுள்ளகர்மங்களைப்பற்றியாவது, காமியநிஷ்காமியங்களென்ற கர்ம தான தவங்களைப்பற்றியாவது தேவர்களினுபாசனையைப் பற்றியாவது, பரவஸ்துவின் பிராப்தியைப்பற்றியாவது, விசேஷ நூல்களின் றுதவியன்றிப் பொது நூல் மார்க்கத்தாலேயே, யுள்ளபடி மயக்கின்றிக் கதியையடைகிறவர்களாவார்கள். ஆனாலிவ்விரு நூலார்களில், விசேஷ நூலார்களுக்கு மாத்திரஞ் சில

வாசாரக்கிரியா நாமங்கள் மத்தியில் வேறுபட்டிடினும் ஜாதிவருணாச்சிரம நீதிதர்ம குலகோத்திராதிகள் வேறுபடாவாம்,

இவ்விருவர்களுக்கும் லிங்கபேதங்களுளவாம். அவை, யாவன, விபூதி குங்குமஞ் சுவேதமிருத்திகை கோபி சந்தன முதலியபுண்டரங்களும், உருத்திராக்ஷத் துழசிமாலை முதலிய தாரணங்களும், மிருகடங்கபாசாங்குச சங்கு சக்கரங்களின் தப்தமுத்திராங்கனங்களுமாகும். பொதுநான் மார்க்கர்களுக்குஞ் சிவாகமத்தர்களுக்கும் விபூதியினாலாத் தாளன திரிபுண்டரங்களும், உருத்திராக்ஷதாரண முமே யாகும். ஊர்த்து வசிரோதசு அதசிரோதசு என்ற சிவாகமப் பிரிவுடையவர்களில், அதசிரோதவான்களில் சிலருக்குமாத்திர மிருகாதி முத்திராங்கனமுளவாம். சாக்தர்களுக்கு விபூதி உருத்திராக்ஷ தாரணத்துடன் குங்குமதிலகமுளவாம். அஃதும் முன்போலிரு பிரிவுடையதாகி, ஒரு பிரிவில் சுமிச கலாபேதமுடைய ஒருகலாவான்களுக்கு மாத்திரம், பாசாங்குசமுத்திராதாரண முளதாம். வைஷ்ணவாகமத்தர்களுக்கு சுவேத மிருத்திகையினால் சித்திரபுண்டரதாரணந், துழசிகாஷ்டாதிதாரணம், சங்கு சக்கிராதிமுத்திராங்கனம், இவை யுளவாம். அஃது மிருவகுப்புடையதாய் வைகானசமெனு மொருவகுப்பில் கர்ப்பாதானத்தில் முத்திராங்கனம் செய்யப்பட்டிருக்கிறதென்ற கருத்தினால்அதுநீக்கப்பட்டிருக்கும்.இவ்விசேஷநூல்களிற்கூறிய புண்டரங்களைப்பற்றிய தாரதன்மிய விசாரணரூபமான விவாதநேரிடிற்: பொது நூலிடமாகவே தீரவேண்டிவரும். அப்படியேஅர்ச்சனை தியாகமுதலியவைகளும், பொதுநூலை யபேக்ஷித்தே தீரவேண்டும், பொதுநூலி லிந்நூலர்களுக்

குள் பிராமணர்களுக்குத் தேவன் சம்புவெனவும், சிவலிங்
கத்திலர்ச்சியாமற் புசித்திடிற் கிருமிபுக்குக் களெனவும்
பொது நூல்கூறியதேவர்களனேகர்களாயிருந்திடினும், சிவ
னொருவனே பிரதானமாகத் தியானிக்கத் தக்கவனெனவும்,
மற்றவர்கள் அப்பிரதானமாகத் தியானிக்கத்தக்கவர்களெ
னவுங் கூறுவதுடன், அத்தேவர்களைக் கடவுளெனத்துதிக்
குங்கால் இச்சிவனையேகருத்தில்வைத்து மற்றத்தேவர்களை
முன்னிலைக்கொண்டுதுதித்தோமென்று, பொது நூல் கூறு
கிறபிரகாரம்பொது நூலினுளார்கள் எத்தேவனையெந்தவிட
மாயர்ச்சித்திடினும்,தியானித்திடினும், குணசக்திவைசித்தி
யமுடைய யாதினும் மேலானஅகமுபாதியுடையதாயும், யா
தோ ரூபாதியு மில்லாததாயுமுள்ள சிவனே, அர்ச்சிக்கவுந்
தியானிக்கவும் படுபவனெனக்கொண்டு, அவ்வத்து வைதலா
ன்மாவினது அர்ச்சனை தியானம் ஆத்ம விசாரணை இவற்றாற்
பரவஸ்துவை அவன் கருணைகொண்டடைகின்றார்கள்.

ஆனால் பொதுநூலிற்பரவஸ்துவாகிய பிரம்மமே கூற
பபட, நீர்விசேஷநூலிற் கூறிய சிவனைப் பரவஸ்துவாகக்
கூறுவதேதெனில்: அஃது குற்றமல்ல. சிவம்-பிரம்மம்-எ
ன்ற சொற்கள், கடம்-கலசம் என்ற பரியாய நாமங்கள்
போலவேயன்றி, வேறுபொருளுடையவையன்றும்.

நாராயணாதி நாமங்களும் அங்ஙனமாகாதோவெனில்:
பிரபஞ்சத்தை உள்ளும் வெளியும் வியாபித்ததுகொண்டு
"நாராயணன்" எனவும் யாதோரூபபாதியுமில்லாம லிங்
கித்திரிவித பரிச்சேதமின்றி ஞானைசுவரியமான தன்
னிற்றான் பிரகாசிப்பதுகொண்டு "மஹாதேவர்" எனவும்,
அந்தரப் பிரஞ்ஞை, வெளிப்பிரஞ்ஞை, இரண்டின் பிர
ஞ்ஞை, பிரஞ்ஞைஞ் அப்பிரஞ்ஞை, சத்து அசத்து, இவ்

வளவுபாதிகளு மில்லாததாகியும், துவைத மின்றிய தா கியும், அதனுலேயே சாந்தமாகியு, மூன்றவஸ்தைகளுங்கட ந்ததாகியு முள்ளது "சிவம்" எனவும், அவனே ஆன்மாவெ னவும், அதனையே விசாரிக்க வேண்டுமெனவும், அடிக்கடி பொதுநூல் கூறுவதனுலும், பிர்ம்மசப்தமுந் திரிவித பரிச் சேத மின்றிய பொருளையன்றி வேறுபொருளைக்குறியாதத னுலும், பிர்ம்மத்தையே பிரத்தியகான்மாவாக வுபதேசிப்ப தனுலும், நான்கு வேதங்களுக்கும் பாஷியஞ் செய்தபொ துநூல் ஆசிரியரான வித்தியாரண்ணியசுவாமிகளால், சிவ மஹாதேவ பிர்ம்மமென்ற நாமங்கள், சர்வாதிஷ்டானமா கிய பிரஞ்ஞைபி னுமங்களெனவும், முற் கூறிய மற்றநாமங் கள் ஆதேயபப்பிரஞ்ஞையி னுமங்களெனவுங், கூறியிருப்ப தனுலும், அங்ஙனமாகாதெனக்கூறியதாம்.

ஆதலாலிப்பொதுநூலினநுவாதங் களாகிய விசேஷ நூலில், இஃது பிரதி பாதிக்கப்பட்டது பற்றி, அந்நூல் களுக்கோர் விசேஷமுளதாகலாமே யன்றி, அந்நூல்களுக் குளிப்பொது நூலிற் கூறிய பொருள் ஒருக்காலும் அம்மத ச்சார்புடைய தாகாது.

ஆனல் விசேஷநூலைச் சார்ந்தவர்கள் துவைதத்தைய பிமானித்துப், பொது நூலின் கருத்தான பிரத்தியக் பர மைக்கிய ஞானத்தை நிஷேதிப்பதில், ஒரு பிரயோஜனமு மடைகின்றவர்களன்று. ஏனெனில், அந்நூல்களில் அந்தந்த் தேவர்களது தியாகம் விதிக்கப்பட்ட பிரகாரந் தியாகஞ்செ ய்யத்தக்கதில், அவர்களுளத்தில் தியேய மூர்த்தியினுவிற் பாவம், இவர்களது சாஸ்திரசமஸ்காரசுத்தசிவாதிதேவதா காரமான புத்தி பரிணுமமாகும். அப்படியே, அவ்விடத்து உபாசகனுகிய ஜீவனது தர்மமும் புத்திபரிணும மாகும்.

இங்ஙனமாயின், அப்புத்தி பரிணாமத்தையே ஈசனென வு பாசிக்கின்றார்களா? அல்லது, அதில் ஈசனைப்பாவிக்கின்றார் களா? அப்பரிணாமத்தையே ஈசனெனில், புத்திக்குவேறாக ஈசனில்லாதவனாவான். பாவனையெனில், அப்பாவனைக்கு அந்நியனாகியும் அதின் பலதாதாவாகியுமுள்ள ஈசன், அப் பாவனா மூர்த்தியிலிருக்கின்றானா அல்லது, வேறிடத்திலிரு ந்தே யிதிற்பாவிக்கப்படுகின்றானா? இருக்கில், பாவிப்பதனு வசியம். அந்நியத்தலத்திருக்கில், பூரணத்துவபங்கம். அ ன்றியும், பாவனையிற்கூடஒரு புத்தியின்பரிணாமமே ஜீவேச பேதத்தையடைந்துந் தன்னேகத்துவ நீங்காதிருக்குமாயி ன் இவ்விகற்பமற்றவுண்மைப்பொருளில் எங்ஙனம் துவைவ தாகமன நேரிடும்?

விசேஷ நூல்களும் உபாசனை கூறுகிறதில், பாஹ்ய மெனவும் ஆந்தரமெனவும் இருவகையாகக் கூறி, அவற் றுள் ஆந்தரத்தையும், அதனினும் லயத்தையும், அதனினு ம் ஞானத்தையும், சிலாக்கியமாகக் கூறுகின்றன இவற்றை யாலோசிக்கின், துவைதத்திற் பராமுகப்படுவதையே, பெ ருந்தன்மையென லக்ஷியப்படுத்துகின்றதாய் நிரூபிக்கப் படுகின்றது. அன்றியும் ஆதியில் பராக்குவஸ்துபரவசர் களாகிய பரிச்சின்ன திருஷ்டியுடைய அதிகாரிகளையநுசரி ந்துத், துவைதத்தைச் சத்தியமாகப் போதித்து, அதிற்று க்கத்தைக்காட்டி, அது நீங்குமாறு அந்தரமுகமாகத் து வைத பராமுகத்தை யருளித், துவைதத்தோற்றநீங்கியிரு ந்தவிடத்துத் துன்பமற்ற பரானந்தத்திலிருத்தி வைக்கின் றன. பொது நூலோவெனில், அவ்விததுவைதத்தை வி யாவகாரிக சத்தியமெனவும், அதனை முற்கூறிய தாரதன் மியமுடையதாயாவது, பிரம்மதிருஷ்டியாயாவது, தன்வழி

பொழுங்குப்படிகாமியமாகவும், நிஷ்காமியமாகவும், கர்ம பக்தியோகங்களால் உபாசிக்கச்செய்து அப்பயனை அவர் களையடையச்செய்து, வேண்டல் நீங்கிய நிஷ்காமனையுடன் மூன்றுமார்க்கங்களா லுபாசித்த உபாசனையால் பரிசுத்தா ந்தக்கரணமுடைய அவர்கள், வைராக்கிய முதலான நான் குசாதனம் நிரம்பிய வுத்தமாதிகாரிகளாகப் பவிக்க, அவ்வி சப் பிரசாதமுடைய அவர்களுக்கு, இப்பிரபஞ்சத்தைப் பிராதீதிகமெனவும், பிராதீதிகமெல்லா மிரச்சுசர்ப்பம் போல மித்தையெனவும், அஃதும் அதிஷ்டானமான பரவ ஸ்துவுக்கு வேறில்லாத தெனவும், எப்போதுமுளது பர வஸ்துவேயெனவும், உபதேசித்து; அத்துவைதமாம் பிரத் தியக பின்னபரமான்ம வஸ்துவில் உபசாந்தியுடனிலைப் பா றச்செய்வித்து நிற்கும்,

இங்ஙனமாயினும், விசேஷ சாஸ்திரங்களிலித்துவைத பராமுகத்தன்மைபேதமுடையதாகும். அதெங்ஙனமெனி ல், வைஷ்ணவமென்னும் விசேஷநூல், விஷ்ணுலோக நீங்க மற்ற வுலகங்களிற் பராமுகப்படுத்தி ஸசரீரமாகவே பரஜீ வர்களின் பேதத்தோற்றத்துடன் பரமுத்தியை விதிக்கும்; சிவாகமமெனும் விசேஷநாலில், அசரீரமாகவும், பரஜீவத் தோற்றமற்றதாகவும், பரஜீவபேதமே யின்மையதாகவும், இருவகுப்பாகப் பரமோக்ஷம்விதிக்கும். இத்தப்பிரகாரம் பொதுநாலிடமாக விசேஷநூல் மார்க்கர்கள்,புண்டரமுதற் பரமோக்ஷம் வரையுள்ள தாரதன்மியங்களையும் உண்மைக ளையும் நிர்மச்சராளாகத்தெளிந்து, கலகநீங்கியுபசாந்தராக வேண்டுவதால், பொதுநூல் யாவர்களாலும் மானிக்கத்தக் கது. விசேஷநூல்கள் அம்மதத்தர்களால் மானிக்கத்தக் கதெனவருளை:

மாணக்கன்—அருளியபடி தெளிந்தேன். கருமாநுஷ்டானுதியையும் அநுக்கிரகிக்கவேண்டுமெனப் பிரார்த்திக்க;

ஆசிரியர்—ஜோதிஷ்டோம முதலிய அத்துவரங்களை விஷ்ணுதத்துவமாகவும், அவ்வத்துவரத்தால் யஜிக்கத்தக்க அத்துவராதிபதி பரமேசுரதத்துவமாகவும் அறிந்தும், தியேயவஸ்துவை தியாநிக்கத்தக்க தியாநாகாரமானமானஸ எக்கியத்தை விஷ்ணுதத்துவமாகவும், அவ்வித தியாநகர்த்தாவை 'யுருத்திரதத்துவமாகவும், தியேயவஸ்துவைப் பரமேசுர தத்துவமாகவும் அறிந்தும், பாஹியமாயும், ஆந்தரமாயுமுள்ள அத்துவரங்களைச் செய்யவேண்டியது.

அப்படியே ஞேயப்பிர்ம்மத்தைப், பிரத்தியக்கானவகம்பொருளாக அறியச்சாதனமான சிரவணுதி ஜநிதவநேககோடி பிரமாண்ட மண்டலங்களினுள்ளும் வெளியும் வியாபித்துப் பிரகாசிக்கின்ற தரிசனவுபாதியுடைய விஞ்ஞானமயமாம் பிரஞ்ஞையெநாரணனெனவும், இவ்வித பிரஞ்ஞைபிறுதிப்புக்காதாரமாயும் இதின் லயாகாரமாயுமிருக்கிற ஞேயம் ஞானம் இவற்றின்றோற்றமின்றி அகண்டஞாதுருபாதியாம் ஜீவனை உருத்திரனெனவும், இவ்விதவகண்ட ஞானஞாதுருவில்லாவிடம் இவற்றிற்கு வியக்தமாகத் தகாததனுற், பரவஸ்து அவ்வியக்தமாகி ஜகத்காரணமாகப் பரோக்ஷப்பட, அதனையே உபநிடதங்கள் பிரத்தியகான்மாவான அபரோக்ஷப்பிர்ம்மமாக உபதேசிப்பதாலும், அவ்வித பரோக்ஷமான அவ்வியக்தவுபாதியுடைய சைதந்நியம், ஞாதுருஞானவுபாதிகளின்றிக், கண்டாகண்டங்களாகத்தோற்றுகின்ற ஞாதருஞானங்கள், அவற்றின் விஷயங்களான பிரமாண்டகோடிகள், அனைத்தையுந் தன்சந்நிதியிற் பிரகாசிக்

கின்றவையாகச்செய்வதனுலும், அதைக்காட்டினும் ஜகத்காரணவஸ்து வேறில்லாததனுலும், தனதியல்பு ஞாதருஞானங்களுடன் பிரபஞ்சத்தோற்றம், அதனின்மை, இரண்டுமில்லாததாயும், அதனுலவ்வியக்தமெனப்படின் அவ்வியக்தவுபாதியுடையதாயும், அவ்வுபாதியினல் ஜகத்காரணமானதுகொண்டு சர்வஞ்ஞுமுமாயும், அவ்வுபாதிப்பிரகாசகசைதந்யம் பிரத்தியகான்மாவாகி அபரோக்ஷப்படுங்கால், அவ்வியக்த ஜகத்காரண சர்வஞ்ஞசைதந்யமாகவே, பிரத்தியகான்மா அபரோக்ஷிக்கப்படுவான். அவ்வுபாதியான அநுபவவிருத்தியை ஈசனெனவும், அவ்விதவபரோக்ஷுன பிரத்தியக்கெனும்பரன் சொப்பிரகாசனுனதால் அவ்வநுபூதியில் அவ்வியக்தத்தன்மையுண்மையாயிலதாதலாற் கற்பிதமாகி, மூன்றுபரிச்சேதமுமின்றிய பிரத்தியக் பிர்ம்மசைதந்யமாய்ச் சேஷித்திடும்; அங்ஙனஞ்சேஷித்திடில்மிருத்தின்றிய கடம்போல,ஞாதருஞான்ஞேய மிவையான காரியப்பிரபஞ்சமுங் கற்பிதமாகி, ரச்சுவின் அவ்வியக்ததன்மையான ரச்சுவாவரணத்தோடும் சர்ப்பம் ரச்சுமாத்திரமாகப் பிரகாசிப்பதுபோல, முக்காலத்தும் ஈசன் ஜீவன் ஜகம் என்றபேதமின்றிய பிரத்தியக்பரவைக்கியமென்னுஞ் சொப்பிரகாச வகன்டைகரசம், நிருபாதிகநிர்விசேஷசுத்தசின்மாத்திரமாக அபரோக்ஷமாகும்: அதனையே பிர்ம்மமெனவும், பிரத்தியக்கெனவும், சிவனெனவும், மஹாதேவனெனவும். பரமான்மாவெனவும், சச்சிதானந்தமெனவும், கூறியுங்கூறக்கூடாமற் சுருதியுபசாந்தமாகமுடியும். ஆதலால் பரவஸ்துவினுண்மையை யாருரைக்கவல்லார்! யார் கேட்கவல்லார்! என அருள, இருவரும் ஒன்றாய் மதாதீதசிவானந்தசாசிந்துவாகப் பிரகாசித்தார்கள்.

முற்றிற்று.

## பத்தாவது
# மதசங்கேத நிருபணப்பிரகரணம்;



## க–வது பாகம் நியாயம்.



மாணாக்கன்—பரமகுருவினின்சரணத்துவயங்களை வணங்கி விசேஷநூல்களில் ஊர்த்துவசிரோதசு அதசிரோதசு என்று சொல்லப்பட்ட சிவாகமம் பொதுநூலிற்கூறிய சருவாம்சங்களும் பொருந்தியிருப்பதனால் அதனை மிகவும் உத்தமமெனத்தெளிந்தேன். ஆனால் தர்க்கம் நியாயம் பொருந்திய அருத்த சாஸ்திரமாயும்,வியாகரணம் சப்தசாஸ்திரமாயு மிருப்பதனால் அவற்றின் கருத்தும் மற்ற சாஸ்திரங்களின் கருத்தும் துவைதமா? அத்துவைதமா? என நிருணயித்து நிருபிக்கவேண்டு மெனப்பிரார்த்திக்க.

ஆசிரியர்—தர்க்கம்வியாகரணம்பூருவமீமாம்ஸைநிரீசுரசாங்கியம் சேசுரசாங்கியம் பௌத்தம் இவற்றினபிப்பிராயத்தையும் மற்றத்துர்ப்பலமாகிய சிலமதக்கோட்பாடுகளையும் ஸ்தூலமாகப்பார்க்கின் துவைதமென்பார்கள். சூக்குமதிருஷ்டியாற் பார்க்கின் அத்துவைதமேயாகும்.

அஃதெவ்வணமெனில் நியாயமென்பது கடம்-படம் என்றது முதலான சொற்களின் பொருளான விப்பிரபஞ்சத்தை யேழுபதார்த்தமாகப்பிரித்து, அதற்கு மூன்றுகுற்றமின்றி யிலக்ஷணத்தைவிதிக்கும். அதனைச்சோதிக்கின், கடமென்ற வசனம் "கம்புக்கிரீவாதி" மத்தானகடமென்ற பொருளைப்போதிப்பதில், கம்புக்கிரீவாதி ஆதேயமும் கடமாதாரமுமாகும். பிரத்தியக்ஷத்தில், கம்புக்கிரீவாதி யநுபவிக்கப்பட்டிடினும், கடங் காணப்படாததனாலும், ஆதார

மின்றி ஆதேயமிராததனுலும், ஆதேயத்தோற்றத்தால் ஆதாரம் பிரத்தியக்ஷப்படாவிடினு மிருக்கலாமெனில், பிரத்தியக்ஷத்தில் மிருத்தாதாரமாயிருக்க, "அதிககற்பனம் அந்நியாயம்" எனப்படலாம். நையாயிகர்களொப்பிய ஏழுபதார்த்தங்களில், ஆறுபதார்த்தங்கள் பாவவஸ்துக்களெனவும் ஒருபதார்த்தம் அபாவவஸ்துவெனவும், பாவவஸ்துகளுண்டாவதற்குமுன் பிராகபாவமும், நசித்ததன்பின் பிரத்துவம்சமுங்கூறப்படுவதில், உற்பத்தி ஸ்திதி நாசமிவைகள் விரோதிகளானதால், கணபேதங்களை யாதாரமாகக்கற்பித்து பாவாபாவ விவஸ்தை கூறப்படுகின்றது. இங்ஙனமாயின், கணத்திற் பாவத்தன்மையிருக்கக்கூடாது. அப்படிப்பாவத்தன்மை முதற்கணத்திலும் நாசமிரண்டாங்கணத்திலுமுண்டாகுமானுல், வாரணுசியில் ஒருவஸ்துவிருக்க, அதன் தொம்சம்மதுரையி லுண்டாகலாமெனவரும். அஃதோ ஒருக்காலுஞ் சித்தியாது. அல்லாமலும், ஒருகணத்திற்றுனே பொருபொருளின் பாவாபாவங்கள், தமப்பிரகாசங்கள்போல, சித்தியாது. அப்படியே, ஹேதுதெரிசனமுதல் அநுமானம்வரையுள்ள ஞானங்கள், காரணகாரியங்களாக விதிக்கப்பட்டு, முற்கூறியபிரகாரங் கணபேதங்களில் அவைகளுக்கு உற்பத்தி ஸ்திதிநாசங்களை யந்தந்த வரிசைப்படி கூறுவதால், அவைகளிலுமிந்த நியாயம் வியாபித்தில், அநுமானுதி சித்திக்கத்திறமின்றிப் பிரமேயபிரமாணபிரமாதிருவிவகாரஞ் சித்தியாமல், அசம்பவதோஷமுண்டாகி துவைதஞ்சித்திக்க வல்லமையற்று அத்துவைதமாக வேமுடியும். ஆதலால் எந்த சாஸ்திரங்களும் கருத்தில் அத்துவைதத்தை நீங்கியிராது. ஆதலால் இந்தப்பிரகாரம் சுருதி யுக்தி யநுபவங்களால், மூன்றுபரிச்சேதமில்லாதஅத்துவைதப்பிரம்மமாம் "உன்னைத்தவிர ஒன்றுமில்லை";

என்றருள:

மாணாக்கன்—அப்படியே பரியாலோசித்து, "கம்புக்கிரீவாதி" ஆகும் தர்மம் பிரத்தியக்ஷப்படுவதேயொழிய, அத்தர்மத்தையுடைய கடமாகின்ற தர்மியநுபவத்திற்காணாது நீங்குவதுமன்றி, அநுமானத்தால் கிரஹிக்கலாமெனின் பூர்வம்பாகசாலையில் அக்கினியும்தூமமும் ஒன்றுபடக்கண்டிருந்தாலொழிய, தூமங்கண்ட பர்வதசிகரத்திலும் அக்கினியுளதென்று அநுமானிக்கக்கூடாததுபோல, ஓரிடத்தேனும் தர்மதர்மியின் கூட்டுறவு பிரத்தியக்ஷமாகாதவிடத்தில், அநுமானங்கூடாது. பிரத்தியக்ஷப்பட்ட தர்மமாகிலும் உளதோவெனின், தர்மமும் ஆதேயமாதலால், ஆதாரமின்மையால் ஸ்தாபிக்கவுதவாது. ஆதலால் தார்க்கிகர்கள் சொல்லுகின்ற பதார்த்தங்கள், அவிசாரதிசையில் உள்ளனபோற்றோன்றிப்பின்மறைவதால், வேதவசனப்படி அத்துவைதமாம் என்னிடத்திற் கானல் ஜலம்போலத்தோன்றும் கற்பிதங்களேயெனத் தெளிந்து, மஹாவிவேகிகளாகிய நையாயிக சாஸ்திரகர்த்தர்கள் பூர்வபக்ஷமாக இங்ஙனம் ஸ்தாபித்ததேயன்றி அவர்களுட்கருத்து அஃதன்றெனவருள, தர்க்கமதசந்தேகம் நீங்கினேன்.

முற்றிற்று.

---

## இரண்டாவது பாகம்—வியாகரணம்.



மாணாக்கன்—நியாய சாஸ்திரத்தின் அந்தரங்கத்தாற்பரியம் அத்துவைதமேயெனத் தெளிந்தேன். வியாகரணத்தினுட் கருத்தையும் அருளவேண்டுமெனப் பிரார்த்திக்க:

ஆசிரியர்—நியாயசாஸ்திரம் அர்த்தத்தை லக்ஷணப்படு

த்திக்கூறியதுபோல், வியாகரணம் சப்தத்தினிலக்கணத்தைக் கூறுவதாயிருப்பதினால், சப்தத்தை பிரயோகிக்குங்கால், அவர்கள் கோட்பாட்டின்படி, சப்தமென்பது வர்ணம்-பதம்—வாக்கியமென மூன்று பிரிவுடையதாகும். அவற்றுள் பதம்-வாக்கியம்-இவ்விரண்டும், அநேகாக்ஷரங்களைப்பொருந்தியிருக்கும். அங்ஙனம் பொருந்துங்கால், பூர்வம்பூர்வமான வர்ணங்கள், உத்தரோத்தரங்களாகப் பிரயோகிக்கத்தக்க வர்ணங்களுக்குக் காரணமாகும். இக்காரியகாரணங்கள், பூர்வோத்தரங்களான வர்ணசமுதாயத்தைப் பொருந்தியிருப்பதனால், காரியமுண்டாகும் பூர்வக்ஷணத்தில், காரணம் அவசியம் இருக்கவேண்டும். ஓர் கணத்துண்டாய், ஓர்கணமிருந்து, ஓர்கணம் நசித்து, மற்றோர்கணத்துக் காரியப்படத்தக்க வோர்வர்ணத்துக்கு, மற்றோர் வர்ணம் காரணமாகவேண்டுமானால் முன்னையாயிகமத கண்டனமாக நிரூபிக்கப்பட்ட, ஓரிடத்துள்ளவன் மற்றோரிடத்திலிறக்கின்றானென்றும் விரோதமான நியாயமிதிலும், பிரவேசிக்க, வர்ணங்களுக்குக் காரியகாரணத்தன்மை சித்தியாது.

மேலும் அவர்கள் சங்கேதத்தில், வெகு வர்ணங்களைப்பொருந்திய வாக்கியம் பிரயோகிக்கப்படுங்கால், அந்திய உச்சாரணகாலத்தில் முந்திய வர்ணங்களியாவும் தொம்சப்பட்டதால் சகல வர்ணங்களாலும் காரியப்பட்ட வாக்கியம் அர்த்தத்தைப்போதிப்பிக்கும் திறமையுடையதாகவேண்டுமானால், எங்ஙனங்கூடும்? என்ற சங்கைக்குச் சமாதானமாகக், கண்டமெனவும், அகண்டமெனவும், ஸ்போடம் இருவகையாக ஒப்பப்பட்டிருக்க, அக்குற்றம் அதிற்பிரவேசியாதெனக்கூறலாம். இங்ஙனம் கூறினும், அக்கண்டமாகி

ய ஸ்போடம் அவர்களுள் ஏகதேசிகளின் அபிப்பிராயமாகும். அகண்ட ஸ்போடமென்பது, அவர்களுக்குள் ப்ரௌடர்களது அபிப்பிராயமாகும். அம்மஹா ஸ்போடம், வாக்கியத்தின் பூர்வோத்தரங்களாகிய காரணகாரிய வர்ணங்களில் வியாபித்து, அவ்வர்ணங்கள் நசித்திருந்தும் அவ்வாக்கிய சக்தியைப் பிரகாசிப்பிக்கும் திறமையுடையதாமென ஒப்பியதனால், பொருளைப்போதிப்பிக்கும் திறமையுமுடையதாகலாமென்றது சரி. ஆனால் அதிலக்காரிய காரணங்களான வர்ணசமுதாயமுடைய வாக்கியத்தை ஸ்போடம் வியாபித்திருந்து, அர்த்தபோதகமாகப் பலிப்பதில், அவ்வாக்கியத்தின் அந்தியவர்ண உச்சாரணசமயத்தில், வர்ணசமுதாயமுடைய வாக்கியம் அந்தியவர்ண மாத்திரமாகவுளதா? அல்லது வர்ணசமுதாயமாகவுளதா? வர்ணசமுதாயமே வாக்கியமாகவிருக்குமானால், அந்தியவர்ணோச்சாரணசமையத்தில், நசித்ததுகொண்டு வர்ணசமுதாயம் சித்தியாததனால், வாக்கியத்தன்மையும் சித்தியாது. அந்தியமாகிய ஓர் வர்ணமோ,ஓர் காலத்தும் வாக்கியமாகாது. வாக்கியமே சித்தியாவிடில்,அதனை ஸ்போடம்வியாபித்திருந்ததென்பதுகூடாது.

மேலும் ஸ்போடமென்பது காரணகாரியங்களாகிய வர்ணசமுதாயங்களை வியாபிக்குங்கால், பூர்வபூர்வங்களான வர்ணங்கள் நசித்தபின்னுண்டாகத்தக்க உத்தரோத்தரங்களான வர்ணங்கள் அக்காலத்து இன்மையால், ஸ்போடம் நிராதரவாகி ஆசிரயமின்றி சித்தியாது. அந்நிமித்தமாக ஓர் ஆசிரயம் அவ்விடத்துக் கற்பிக்கவேண்டும். அவ்வாசிரயமும் சத்தாகவிருக்கவேண்டும், இங்ஙனமாயின், நசித்தவர்ணங்களும் ஜநியாதவர்ணங்களும் அச்சமையத்துளதாதற்சித்தியாது. சித்தியாவிடின் வாக்கியமுஞ் சித்தியாது.

வர்ணசமுதாயம் வாக்கியமிரண்டுஞ் சித்தியாதவிடத்து, ஸ்போடம் வர்ணசமுதாயமான வாக்கியத்திற்கு அக்கியமான ஆசிரயத்தைப் பொருந்தவேண்டும். அங்ஙனமாயின் அப்பொருளையே பிரகாசிப்பிக்குமன்றி வாக்கியப்பொருளைப் பிரகாசிப்பிக்கத் திறமையுடையதாகாது. ஆனல் பூர்வங்களான வர்ணங்கள் நசிக்குங்கால், அவை வாக்கியத்தின் சமுதாய வர்ணங்களானதால், அவ்வர்ணசக்திகளைத்தனது ஸ்போடத்தினிடமாகச் செலுத்தியவை நசிப்பதனல், அச்சக்திகொண்டும் மேலுச்சரிக்கத்தக்க வர்ணங்களின் சக்தியையும் இப்பிரகாரமே யடைவதுகொண்டும், ஸ்போடம் வாக்கியார்த்தபோதகத் திறமையுடையதாகப் பலிக்கலாமேயெனில், சக்தியென்பது ஆதேயமானதனல், அஃதுதன்னாதாரத்தையே பற்றியிருக்கவேண்டுமானதால், தனதாதாரமான வர்ணம் நசிக்கத், தான் எங்ஙனஞ்சித்திக்கும்? உஷ்ணப்பிரகாசமுடைய அக்கினி, தனது உஷ்ணப்பிரகாசங்களை காஷ்டத்தினிடமாக ஆதேயப்படுத்தி, அதனிடமாக அச்சக்திகள் பிரகாசிப்பதுபோலாகுமெனில்; காஷ்டத்தினிடமாக ஆதேயப்படுத்திய உஷ்ணபிரகாசங்கள், காஷ்டத்தையாதாரமாகப் பிரகாசித்தகாலத்தும், தனதாதாரமான அக்கினியை நீக்கி காஷ்டத்தினிடமாகப் பிரகாசியாததுபோல, வர்ணசக்தி ஆதாரமான வர்ணங்கள் நசித்தபின், ஸ்போடத்தினிடமாக, ஆதேயப்பட்டுப் பிரகாசிக்கமாட்டாது. வர்ணசக்திக்கு ஸ்போடசம்பந்தங் கிடையாததனல், நிராதாரமாகித் தன்னாலுந் தனது சம்பந்தமின்றிய ஸ்போடத்தாலும், உத்தரவர்ணங்களுக்குக் காரணப்படாமல், நீங்கிவிடும். காரணமின்றிக் காரியமின்மையால் அவைகளுங் காரியப்படாது. இங்ஙனங் காரணகாரியமாகிய வர்ணசமுதாயத்தைத்தவிர, வாக்கியமென்பது வேறில்லா,

ததால், இச்சக்தியும் இதனையே சாதிக்குமேயன்றி வேறில்லாததாகும்.

மேலும் வர்ணசக்தியென்பது எவ்விலக்கணமுடையதெனப்பார்க்கின், வாக்கியத்தின் சமுதாயவர்ணங்களுக்குக் காரண காரியத் தன்மையை கொடுக்கும் திறமையுடையதாகவும், ஸ்போடசம்பந்தத்தால் வாக்கியத்தின்பொருளைக் கொடுக்கத்தக்கதாகவும் ஆகவேண்டும். வாக்கியத்தின் பொருளைக் கொடுக்கத்திறமை யுடையதாயிருக்க வேண்டுமானல், பொருளைத்தெரிவிப்பது ஞானத்திற்கே யன்றி, அதற்கந்நியமாகிய ஜடவஸ்துவுக்குச்சித்தியாது. இச்சக்தி ஞானத்திற்கந்நியமாயின், தனது இலக்கணத்தை நீங்கித் தானுஞ் சித்தியாது. ஞானரூபமாயின் ஜடமாகிய வர்ணத்தின் சக்தியாகாது. மேலும் இவ்விடத்து வாக்கியார்த்தம் ஜநிக்கவேண்டியே இவைபொப்பிடப்பட்டிருப்பதால், அஃது ஞானத்திடமாகச் சித்திக்கின், அந்த ஞானத்தையே வாக்கியார்த்த போதகமாக அ..ாதாரணகாரணமாக ஒப்பவேண்டும்.

அவ்விதஞானம்இவ்வாக்கியத்தினிடமாக அர்த்தபோதகப்படுங்கால், அவ்வாக்கியதீனமா இஞ்ஞானம்? அல்லது இஞ்ஞானதீனமா அவ்வாக்கியம்? முன்னதுவாயின், வாக்கியமேசித்தியாது. ஏதெனில், ஞானஹீனவாக்கியம் பிரயோகிக்க உபகாரப்படாது. பின்னதுவாயினும், அப்பிரதானமாகக்கொண் டிவ்வாக்கியம் அர்த்தபோதகமாகத்தகாது. அப்பிரதானமாயினும், வாக்கியத்தினிடமாகவே அர்த்தபோதகமுண்டாவதாகப் பிரதீதியிற் காணப்படுவதாலதனையநுசரித்து விவகாரரீதியாய் வாக்கியத்திற்குப் பிரதானங்கிடைக்கலாமெனில், அங்ஙனங்கிடைக்கினும் வாக்கி

யத்தினிடமாகஉண்டாகுந்திறமையுடையதாகாது. ஞானம் ஓர்வஸ்துவைப் பிரகாசிப்பிக்குமேயன்றி யுண்டாகச்செய்யாது வாக்கியமோ முன்னியாயப்பிரகாரம் வர்ணம்-அதன் சக்தி அதன்சம்பந்தமுடைய ஸ்போடம்-இம்மூன்றினுஞ் சித்திக்கத்திறமற்றதானதுபோல, ஞானத்தினிடமாகவும் அங்ஙனமேயாகின்றது. இலது உளதுபோற்றோற்றியதே பிரதீதியெனப்படுவதால் பிராந்தியினாலேயே சித்தித்திடவேண்டும் ரச்சுவின் ஆரோபிதமான சர்ப்பத்தை சர்வாவயவங்களோடும் வியாபித்து ரச்சுசத்தை பிரகாசிப்பதுபோலும், அதனுதவி யன்றித்தானே அசகாய சூரமாய்ப் பிரகாசிப்பதுபோலும், இஞ்ஞானந்தன்னிடத்திற் பிரதீதியாற்கண்ட பிரபஞ்சவியாபார நிமித்தமானதன்னில் ஆரோபிதமாயுள்ள இவ்வாக்கியத்தை இவ்வர்ண சமுதாயமுடையதாகக்கொண்டுவியாபித்துப் பிரகாசிப்பிக்கவும், அதனுதவியன்றித்தானேஅசகாய சூரமாய்ப் பிரகாசிக்கவும், ஞானஞ்சித்தித்திடவேண்டும். அங்ஙனஞ்சித்திக்கின், உபாதியினால் பின்னம் பின்னம்போலும், தனது சொரூபத்தால் ஏகமாகியும் பிரகாசிக்கின்ற இஞ்ஞானம், இச்சாஞானக்கிரிகையென்ற தொழில்களைமுன்னிட்டுதித்தஇவ்வர்ணங்களாச் சமுதாயமாகப் பொருந்திய வாக்கியத்தில் சயம்ஞானசொரூபமாகவியாபித்து, அவ்வாக்கியோபாதியினால் விவகாரோபயோகியான பின்னபின்னப்பொருள்களைப் போதிப்பிக்கும் பின்னபின்ன ஞானமாகப்பிரமையால் தோற்றுகின்றது.

வாக்கியமென்பதுவர்ணத்தின் சமுதாயமாகும். அதன் சக்தி யென்பது வர்ணசமுதாயத்தின் தோற்றத்திற்கும், அவ்வுபாதிகொண்டு உதிக்கத்தக்க அர்த்தபோதகமான ஞானத்திற்கும் நிமித்தமாகும். ஸ்போடமென்பது, ஜநித்து நசித்ததாயும், ஜநிக்கத்தக்கதாயுமுள்ள வர்ணசமுதா

யத்தை வாக்கியப்படுத்துவதும், அதன் பொருளை அகண்ட மாத்ரோற்றப் படுத்துவதுமாகும். இவற்றுள் சமுதாயத் திற்கு வாக்கியம் அந்நியமாயின், சொரூபமற்றுவாக்கிய மேயிலதாகும். இவ்விரண்டு மொன்றாயின், வர்ணம்வாக்கிய மென்ற பேதஞ்சித்தியாது. வர்ணசமுதாயமான இவ்வாக் கியத்திற்கு ஸ்போடம் அந்நியமாயின், இவ்வாக்கியத்தினி லக்கணத்தை நீங்கிநிற்கும் வாக்கியமென்பது சப்தரூபமா னதால், இச்சப்தத்திற்கு விலக்ஷணமான ஸ்போடம், இத னைவியாபிக்குங்கால் இதற்கு விலக்ஷணமான தனதுசொ ரூபலக்ஷணத்தை நீங்காமலே வியாபித்து நிற்கவேண்டும். இதனுல் ஸ்போடம் அசப்தமெனப்படலாம். தொக்கிந்தி ரியத்தால் கிரகிக்கக்கூடாமையால் அஸ்பரிசமுமாகும். அப்படியே மற்றக்கருவிகளாலுங் கிரகிக்கக்கூடாமையால், அரூபம்-அரசம்-அகந்தமெனவும் பிரத்தியக்ஷத்தில் வாக்கி யத்தைவியாபித்து அர்த்தபோதகமான ஞானத்தை வெளி ப்படுத்து நிமித்தமாகவிருப்பதால், அவ்வாக்கியார்த்த போ தகமான ஞானத்தின் உபாதியுமாகலாம். ஆனதனுல் தன் னில் விவர்த்தமான வாக்கியத்தை வியாபித்த ஞானோபாதி யையே, அம்மதத்தர்கள் ஸ்போடமென வாக்கியசத்தையா க சங்கேதப்படுத்தியதேயன்றி, ஸ்போடமென்பது இதற் கந்நியமாக வேறில்லை. இதனையே யுத்தரமீமாம்சர்கள் வாக் கியத்தையுள்ளும் வெளியும் வியாபித்து, அர்த்தத்தை தெ ரிப்பிக்குந் தொனியெனுஞ்சுரமே, அர்த்தபோதக வாக்கிய நிர்வாஹகமாக விருக்க, அதீந்திரியமாய் ஸ்போடமொப்பி யது அனுவசியமெனக்கூறுகின்றார்கள். அவர்களொப்பிய அத்தொனியும் இவ்வாக்கியாதாரமான வர்ணசமுதாயங்களை வியாபித்திருந்திடினும், வாக்கியத்திற்கு வர்ணசமுதாயமா தாரப்படுவதுபோல, இவ்வர்ணங்களுக்குத் தொனியாதார

மாயினும், அத்தொனியை உள்ளும் வெளியும் வியாபித்த ஞானோபாதியைநீங்கி வாக்கியநிர்வாஹகமாகவும் அர்த்தபோதகமாகவும் பலியாது. ஆயினும் பிரதீதியிற்கண்ட வாக்கியத்தின் திறமை நிரூபிக்கப்படுங்கால், இத்தொனிவாக்கியத்தையுள்ளும் வெளியும் வியாபித்தநுபவிக்கப்படுவது பற்றி, வாக்கியம்-வர்ணம்-இவைகள் விகாரமுடையவையாயும், இவற்றையபேக்ஷித்து இத்தொனி நிர்விகாரமாயுமிருப்பதைத் தெரியப்படுத்தவேண்டி, இங்ஙனம் அவர்கள் கூறியது அத்தொனி பிரதீதியில் அர்த்தபோதகமான ஞானத்தின் நிமித்தமேதான். உபாதியென்பது, ஞானோபாதியெனவும் ஜடோபாதியெனவும் இருபிரிவுடையதாகும். எந்தவிடமாய் ஞானம் பிரகாசிக்கவேண்டிவரினும், தனதுபாதியை முன்னிட்டே பிரகாசிக்குமன்றி, மற்றோர் உபதியாற் பிரகாசியாது. ஆதலால் தொனியென்பது வர்ணவாக்கியங்களைப்பற்றிய ஜடோபாதியாதலால், அதில் ஞானஞ்சாக்ஷாத்தாகப்பிரதிபலித்து, அதனைப்பிரகாசிப்பியாது. அதனை ஞானோபாதிவியாபிக்க அதனிடமாகத்தான் பிரதிபலித்து, அத்தொனியையும், அதனால் வியாபிக்கப்பட்ட வர்ணசமுதாயம்பொருந்திய வாக்கியத்தையும், அதனால் சங்கேதிக்கத்தக்கபொருளையும், பிரகாசிக்கச்செய்யும். அப்படியே ஸ்போடமென்பது ஜடமாயின், தன்னில் ஞானம் ஸ்புரிக்கவிடமின்றி ஞானோபாதியை யபேக்ஷித்துநிற்கும். ஆனதால் கடகுலசமென்ற பரியாய நாமம்போல ஞானோபாதியின்பரியாய நாமமாகும். ஆதலால் இந்தஸ்போடம் அவர்களால் சங்கேதிக்கப்பட்டதின் கருத்து; இப்பிரமசத்தையை மனதில்வைத்து விவகார சமர்த்தனத்தின்பொருட்டு அதற்கு ஸ்போடமெனப் பேரிட்டனர்.

இங்ஙனநுபவம் பூர்வோத்தரங்களான ஒருவாக்கியத்தி

ன் ஸ்பூர்த்தியையுள்ளபடி நிதானித்து அதிலுண்டாயிலயித்ததாகியும் உண்டாகத்தக்கதாகியுமுள்ள வர்ணங்களின் இயல்பையும் நிதானிக்க, அந்த அர்தப்பிரகாரம் அநுபவத்திற் காணப்படலாம். அங்ஙனம் காணில், அவ்வர்ணசமுதாயமுடையவாக்கியம் சப்தரூபமாய் விஷயீகரிக்கப்பட்ட அதனையுள்ளும் வெளியும் வியாபித்த ஞானோபாதியெனும் பத்திரத்திற்கண்டு, அதில் சில வர்ணங்களை ஜநித்து நசித்ததாகவும், யாவும் பொருந்தியவாக்கியமாகவும் காணில், அவ்விருத்தியாம்பத்திரத்தில் அர்த்தபாகம் சூக்ஷ்மமாகவும் அர்த்தபாகம் ஜநிக்கத்தக்கதாகவிருப்பினும், அக்காலத்தில்லாததுகொண்டு சூக்ஷ்மமாகவும் காணப்படும். அச்சூக்ஷ்மவிருத்தியிற் பிரதிபலித்த ஞானத்தால், அவ்விருத்தி நோக்கப்படின் வர்ணசமுதாய சூக்ஷ்மமும், அதில்வர்ணசமுதாயம் பொருந்திய வாக்கியம் ஸ்புரித்துக் கிரகிக்கப்படின் அதனைவியாபித்த ஞானசக்தியால் வாக்கியமாகவுந்தெரியவரும். அங்ஙனம் ஸ்பூர்த்தமாகியும் சூக்ஷ்மமாயும் இருவகுப்புடைய அவ்வாக்கியம், சொல்லியபிரகாரம் அநுபவத்துக்குவர, ஸ்பூர்த்திப்பிக்கின்றதாயும் நசிப்பிக்கின்றதாயும் இருக்குங்காலத்தில், அதை வியாபித்ததாயுமிருக்கின்ற விருத்தியில் பிரதிபலித்தஞானம், சர்வவியாபக சர்வாதிஷ்டானமான கூடஸ்தசொரூப ஞானமேயாதலால், வாக்கியோபாதிபேதத்தால்ஞானோபாதி பின்னப்பட்டு, அதனால் ஞானமும் பின்னப்பட்டதுபோல், பிரமையால் தோற்றுவதுமன்றி, பின்னபின்னமாகப் பிரகாசமுடைய சத்தாரூபமான வாக்கியஸ்போடம் உளதுபோலவும், அச்சாஸ்திரத்திற் காணப்படும். அதனை. சூக்ஷ்மமாய் விசாரிக்கின், அவர்களது சங்கேதரீதிப்படியே சித்திக்கத்திறமையற்று, அதிஷ்டான பிரமசத்தாபானத்துக்கு வேறாகவில்லாமல் நீங்கிவிடும். ஆதலால் அச்ச

ங்கேதம் அவிசார ரமணீயமேயன்றி வேறில்லை யெனவருள:

மாணாக்கன்—ஸ்போடவாதமூலமாயும் வாக்கியத்தின் காரணகாரியவிசாரணைமூலமாயும் சப்தஞானத்தைக்கூறு கின்றவியாகரணசாஸ்திரத்தின் அந்தரங்கமான கருத்தும் இவ்வத்துவைதமே தானெனத்தெளிந்தேன். பூர்வமீமாம் ஸையின் கருத்தையும் சூக்ஷுமமாயருளவேண்டுமென விஞ் ஞாபித்தான்.

முற்றிற்று.

## மூன்றுவதுபாகம்—பூர்வமீமாம்ஸை.

ஆசிரியர்—பூர்வமீமாம்ஸர்கள் மதத்தில் ஜீவனைக்கர்த் தாவாகவும், கர்மத்தைப் பலதாதாவாகவும் அச்சிவன் அர் த்திசமர்த்தோ வித்வான் என்ற அதிகாரம் பொருந்தினவ னாகி யெஜிக்கவேண்டுமென்ற விதிவாக்கியப்படி. கர்மங்க ளைச்செய்ய அக்கர்மபலத்தைத் தேகவியோகானந்தரம் பு ஜிக்கின்றான் எனவும் கூறி, சகல அதிகாரமும் பொருந்திய அவ்வதிகாரி யக்கர்மஞ்செய்யுங்கால், எத்தேவதையினிமி த்தமாக ஹவிசுகிரகிக்கப்படுகிறதோ, அத்தேவதையைத் தியானித்து எஜிக்கத்தக்கதெனக் காணப்படுகின்றவிடத்து, வேதார்த்தத்தை விதிக்கவந்த அவர்களது நியாயசங்கேத த்தால், தேவதாவாசகமான அச்சப்தத்துக்கு தேவதாபர மான அர்த்தமின்றி, மந்திரார்த்த சத்திரூபமாக நிர்ணயிப் பதில் உத்தரமீமாம்ஸர்கள் ஹவிசுகிரகிக்குங்கால், அந்நிமித் தமான தேவதையைத்தியானித்து யெஜிக்கவேண்டுமென்ற விதிவாக்கியப்படி நியமித்த தேவதையின் தியானநிமித்தமா

௪ அத்தேவதையை நிரூபிக்குங்கால், "வஜ்ஜிரக்கையன்புரந்தரன்" என்ற மந்திரத்தால் தேவதாலக்ஷணங் கூறப்பட்டிருக்க, அச்சப்தத்திற்கு வஜ்ஜிரபாணியாகிய இந்திரனை நீக்கி, மந்திரார்த்தசக்தி வசமாகச்சொல்லுவதில் ஏதுலாபமென வினவ:

ஏககாலத்தில் அநேக தேசங்களில் அநுஷ்டிக்கப்பட்ட யக்ஞிய சமையத்தில் அவரவர்களாற் கொடுக்கப்பட்ட அத்திரவியங்களைக் கிரஹிக்கவேண்டி, அநேக இந்திரர்களை யபேக்ஷிக்காமையே தானெனச் சமாதானங்கூற:

ஒருயோகியே தனது யோகவல்லமையாற் கற்பிக்கப்பட்ட விஷயவுல்லாசங்களை புஜிக்கவேண்டிய காலத்தில், அநேக சரீரங்களையெடுத்துப் புஜிக்கலாமானல், ஜென்மசித்தமாகிய காமரூபக்கிரஹணசக்தியுடைய இந்திரனுக்கு அவ்வல்லபமேன் கூடாது? மேலும் வியாசாசாரியாள் முதலிய மஹான்கள், அத்தேவர்களைக்கண்டு சல்லாபித்ததாகக்காணப்படுவதால், அதனாலும் அவர்கள் உளரேயாகலாம். அன்றியும் தேவர்கள் சேதனர்கள். மந்திரார்த்தசக்தி அசேதனம். அஃது எங்ஙனம் அக்காலங்களைத்தெரிந்து அப்பலிகளைக்கிரஹிக்க வல்லமையுடையதாகுமென அவர்கள் பின்னும்வினவ அவ்விஷயத்தில்பூர்வமீமாம்சர்கள், கர்மாநுஷ்டான காலையில், அவ்வவ்விடத்து உச்சரிக்கத்தக்க மந்திரங்கள் உச்சரிக்கப்படுங்கால், அம்மந்திரத்திற்கூறிய பொருளைப் பிரகாசிக்கச்செய்யும் வல்லபம், அம்மந்திரவாக்கியங்களிலிருப்பதால், அப்பொருட்பிரகாரமே அச்சக்தியவ்விலக்கணம்பொருந்திய தேவதாபரிணாமத்தையடைந்து, அப்பலியைக் கிரஹிக்கின்றது எனவுரைக்க:

இவ்விஷயத்தில் வஜ்ஜிரபாணியாகியும் புரந்தரனென்

றநாமத்தால் தேவலோகாதிபதியாகியுமுள்ள அப்பரிணாம த்தையடைந்த அம்மந்திரார்த்தசக்தி, தனதுவல்லபத்தால் அங்ஙனம்அங்கீகரித்திடினும், இஃதுயாகக்ர்மம்; இஃது அவிசு நமது நிமித்தமாயுள்ளது: இதனையிப்பிரகாரம் நாம் கிரஹிக்கவேண்டும், எனக்கிரஹித்தல், ஜடமாயின் அதற்குச்சித்தியாது. சித்தாயின் அம்மந்திரார்த்த சக்தியில் பிரதிபலித்த அச்சைதந்யமே தனது, உபாதியாகிய அத்தேவதாபரிணாம ரூபமாம் மந்திரார்த்தசக்தியை நியமித்து, அதனைக் கிரஹிக்கும் வல்லமையுடையதாகக் கூறவேண்டுமென உத்தரமீமாம்சர்கள் மறுமொழி கூறுகின்றார்கள்.

இங்ஙனமாயின்இம்மந்திரத்தின்பொருள்வல்லபமாகிய இப்பரிணாமமும், அப்படியே தேவலோகாதிபதியாகிய இந்திரனும், அம்மந்திரார்த்தத்தின் வல்லபத்திற்கு ஒரே தன்மையாயிலக்ஷியப்படுவதால், ஒன்றேதானாகும்.

இவ்விரண்டு மொருபக்ஷமாயின், உத்தரமீமாம்சர்கள் பூர்வமீமாம்சர்கள் இவ்விதம் வாதிக்கின்றார்களெனப் பிரித்துக்கூறியது எந்நிமித்தமெனில். விவகாரதிசையில் உள்ளபடி தேவர்களிருக்க அவர்களை நிஷேதிப்பது நீதியல்லவெனவும், ஜடவஸ்து கிரஹிக்கவும், புஜிக்கவுந்திறமையுடையதல்லவெனவும். அப்படியே யத்தேவரிடமாயாவது, இச்சக்தியினிடமாயாவது, கிரஹித்தல் புஜித்தல் சைதந்யத்தை முன்னிட்டே சித்திக்கவேண்டுமெனவுங்கூறி, எவ்விடத்தும் யாதும் சைதந்ய திருஷ்டியையடைவதே சாஸ்திரங்களின் உட்கருத்தென்பதைத் தெரியப்படுத்தும் பொருட்டேதான்.

அப்படியே இம்மந்திரத்தால் அநுஷ்டிக்கப்பட்ட யாக

ரூபகர்மம் காரணமாகியும், சொர்க்காதிபோகம் பலமாகியும், இக்கர்மகர்த்தா போக்தாவாகியும் பவிக்கும். இதில் வித்வானென்றவிசேஷணத்துக்குக், கர்மம் பலம்-கர்த்தா-இம்மூன்றையும்பற்றிய பரிஞ்ஞானமே பொருளாகும். அஃதாவது ஜாதிவர்ணாசிரமதர்மநீதிகுலகோத்ரங்களைப் பொருந்திய கர்மாநுஷ்டான அதிகாரமுடையவன் அதிகாரியாவான். அவன் தேஹமா? தேஹியா? தேஹாபிமானியா? என ஆலோசிக்கின், தேகம் நீங்கினபின் அக்கர்மபலத்தை புஜிக்கக்கர்த்தா அந்நியனாய்ச் சித்தித்திருக்கவேண்டியதால், தேகமன்று எனவும்; தேகத்திற்கு அந்நியனாகக் கர்த்தாவொப்பப்படில், ஒருவன் செய்தது மற்றொருவனையடையத்தகாததுபோல, தேகத்தாற் செய்தகர்மம், தேகத்திற்கந்நியனாகிய ஆன்மாவைச்சாராது, அப்படியே ஜாதிமுதலிய-அதிகாரமும், ஆன்மாவையடைய வல்லபமற்றுநீங்கும். அதிகாரமில்லாதவன் அதிகாரியாகான். ஆதலால்தேஹியுமன்று எனவும்; கர்மத்தாலுண்டானதாகியும் கர்மசாதனமாகியுமுள்ள அதிகாரம்பொருந்திய தேகத்தையத்தேஹி, அந்நியமாயபிமானிக்க அவன் அதிகாரியாகின்றான்எனவும்: அவன் செய்யுங்கர்மம் பலபோகத்தை முன்னிட்டிருப்பதனால் அப்பலமும்; தேகம் நீங்கினதின்பின் அநுபவிக்கத்தக்கதாயிருப்பதனால் தேகத்தில் கர்மஞ்செய்யவேண்டித்தாதான்மியாபிமானமுடையவனெனவும்; தேகம் அநித்தியமானதுபற்றிக் கர்மபலபோக்தாவாகிய கர்த்தா தேகத்திற்கு அந்நியனெனவும்: தேகத்திற்கந்நியனாயினுங் அவன் அக்கினியும் உஷ்டணமும்போல பிரிக்கத்தகாத கர்த்தாருத்தன்மையை சொரூப லக்ஷணமாகவுடையவனெனவும்: அவன் எக்காலத்தும் வேதவிதிப்படி தவறாமற் கர்மத்தைச்செய்யவேண்டுமென்ற சோதனையென்னும் சுருதியின் ஆஞ்ஞை

யில் அடங்கினவனெனவும்; காணப்படலாம். அப்படியே கர்மம் க்ஷணிகமானதாயினுங் காலதீர்க்கத்தின்பேரி லுண்டாகத்தக்க சொர்க்கபலமாகிய காரியோற்பத்திக்குப் பூர்வகாலத்தில் கர்மமாகிய காரணம் இருக்கத்திறமற்றுக் காரணத்தன்மை நீங்கிவிடும். ஆதலாற்கர்மமாகிய காரணம் அபூர்வமெனுமோர் பதார்த்தத்தை ஜநிப்பித்துநசிக்கும். அவ்வபூர்வம் அதீந்திரியமாகியும் ஆன்மாவையாசிரயித்ததாகியும் பலித்துப்பலத்தைக் கர்த்தாவுக்குண்டாக்கிவிட்டு விக்கும், எனக்கர்த்துருகர்மங்களின் பரிஞ்ஞானவுற்பத்தியுடையவனுமுள்ள தெல்லாமறிவதுதான் வித்வானென்ற பதார்த்தபரிஞ்ஞானம்.

இதனைச் சூக்குமமாயாலோசிக்கின் அவர்களது கருத்தும் இவ்வத்துவைதமே தானெனவிளங்கும்.

கர்த்தாவென்பவன் கர்மத்தைச்செய்கின்றவன். தேகநீங்கினகாலத்து அக்கர்மத்தின் பலத்தைபவனே புஜிக்கின்றவன். அப்படியே தன்னாற்செய்யப்பட்ட கர்மத்தின் ஏகதேசமான பாகத்தின் பலங்கொண்டு, சரீரத்தைபதன் காரியமாகவடைகின்றவனுமாகின்றான். இங்ஙனமாயின் இக்கர்த்தாவுக்குக் கர்மத்திநிமித்தமாக அதிகாரஞ்சித்தி க்கவேண்டின், சரீரசம்பந்தமின்றிக்கூடாது. சரீரஞ்சித்திக்கவேண்டின் கர்த்தாவினிடமாய்க் கர்மஞ்சித்தியமற்சித்தியாது. ஆதலால் இதனை நிரூபிக்கின் ஆன்மாசிரயம் அந்நியோந்நியாசிரயஞ் சக்கரகாபத்தி-அனவஸ்தாப்பிரசங்கம் என்னும் பெருங்குற்றங்களுண்டாய்க்கெடும். எங்ஙனமெனில் கர்மமென்பது சலனரூபமானதனால், க்ஷணிகமாயினுமாகிய சலனசக்தி பொருந்தியகர்மம், வெகுபிரகாரமுள்ளது. அதில் ஜோதிஷ்டோமமென்னும் ஒரு யாகஞ்செய்தி

ரூபகர்மம் காரணமாகியும், சொர்க்காதிபோகம் பலமாகியும், இக்கர்மகர்த்தா போக்தாவுமாகியும் பவிக்கும். இதில் வித்வானென்றவிசேஷணத்துக்குக், கர்மம்-பலம்-கர்த்தா-இம்மூன்றையும்பற்றிய பரிஞ்ஞானமே பொருளாகும். அஃதாவது ஜாதிவர்ணாசிரமதர்மநீதிகுலகோத்ரங்களைப் பொருந்திய கர்மாநுஷ்டான அதிகாரமுடையவன் அதிகாரியாவான். அவன் தேஹமா? தேஹியா? தேஹாபிமானியா? என ஆலோசிக்கின், தேகம் நீங்கினபின் அக்கர்மபலத்தை புஜிக்கக்கர்த்தா அந்நியனாய்ச் சித்தித்திருக்கவேண்டியதால், தேகமன்று எனவும்; தேகத்திற்கு அந்நியனாகக் கர்த்தாவொப்பப்படில், ஒருவன் செய்தது மற்றொருவனையடையத்தகாததுபோல, தேகத்தாற் செய்தகர்மம், தேகத்திற்கந்நியனாகிய ஆன்மாவைச்சாராது, அப்படியே ஜாதிமுதலிய அதிகாரமும், ஆன்மாவையடைய வல்லபமற்றுநீங்கும். அதிகாரமில்லாதவன் அதிகாரியாகான். ஆதலால்தேஹியுமன்று எனவும்; கர்மத்தாலுண்டானதாகியும் கர்மசாதனமாகியுமுள்ள அதிகாரம்பொருந்திய தேகத்தைத்தேஹி, அந்நியமாயபிமானிக்க அவன் அதிகாரியாகின்றான்எனவும்: அவன் செய்யுங்கர்மம் பலபோகத்தை முன்னிட்டிருப்பதனால் அப்பலமும்; தேகம் நீங்கினதின்பின் அநுபவிக்கத்தக்கதாயிருப்பதனால் தேகத்தில் கர்மஞ்செய்யவேண்டித்தாதான்மியாபிமானமுடையவனெனவும்; தேகம் அநித்தியமானதுபற்றிக் கர்மபலபோக்தாவாகிய கர்த்தா தேகத்திற்கு அந்நியனெனவும்: தேகத்திற்கந்நியனாயினும் அவன் அக்கினியும் உஷ்டணமும்போல பிரிக்கத்தகாத கர்த்ருத்தன்மையை சொரூப லக்ஷணமாகவுடையவனெனவும்: அவன் எக்காலத்தும் வேதவிதிப்படி தவறாமற் கர்மத்தைச்செய்யவேண்டுமென்ற சோதனையென்னும் சுருதியின் ஆஞ்ஞை

யில் அடங்கினவனெனவும்; காணப்படலாம். அப்படியே கர்மம் க்ஷணிகமானதால், காலாந்தரத்திற்பேரி லுண்டாகத்தக்க சொர்க்கபலமாகிய காரியோற்பத்திக்குப் பூர்வகாலத்தில் கர்மமாகிய காரணம் இருக்கத்திறமற்றுக் காரணத்தன்மை நீங்கிவிடும். ஆதலாற்கர்மமாகிய காரணம் அபூர்வமெனுமோர் பதார்த்தத்தை ஜனிப்பித்தொழிக்கும். அவ்வபூர்வம் அதீந்திரியமாகியும் ஆன்மாவையாசிரயித்ததாகியும் பலித்துப்பலத்தைக் கர்த்தாவுக்குண்டாக்கியூட்டுவிக்கும், எனக்கர்த்தருகர்மங்களின் பரிஞ்ஞானவுற்பத்தியுடையவனுமுள தெல்லுணர்வதுதான் விந்தையென்ற பதார்த்தபரிஞ்ஞானம்.

இதனைச் சூக்குமமாயாலோசிக்கின் அவர்களது கருத்தும் இவ்வத்துவைதமே தாமெனவிளங்கும்.

கர்த்தாவென்பவன் கர்மத்தைச்செய்கின்றவன். தேகநீங்கினகாலத்து அக்கர்மத்தின் பலத்தையவனே புஜிக்கின்றவன். அப்படியே தன்னாற்செய்யப்பட்ட கர்மத்தின் ஏகதேசமான பாகத்தின் பலங்கொண்டு, சரீரத்தைப்பதன் காரியமாகவடைகின்றவனுமாகின்றான். இங்ஙனமாயின் இக்கர்த்தாவுக்குக் கர்மத்நிமித்தமாக அநிகாரஞ்சித்தி க்கவேண்டின், சரீரசம்பந்தமின்றிக்கூடாது. சரீரஞ்சித்திக்கவேண்டின் கர்த்தாவினிடமாய்க் கர்மஞ்சித்தியாமற்சித்தியாது. ஆதலால் இதனை நிரூபிக்கின் அன்யாசிரயம் அந்நியோந்யாசிரயஞ் சக்கரகாபத்தி—அனவஸ்தாப்பிரசங்கம் எனனும் பெருங்குற்றங்களுண்டாய்க்கெடும். எங்ஙனமே னில் கர்மமென்பது சலனரூபமானதனால். க்ஷணிகமானதா யியாகிய சலனசக்தி பொருந்தியகர்மம், வெகுபிரகாரமுளா அ. அதில் ஜோதிஷ்டோமமென்னும் ஒரு யாகஞ்செய்யி

ன்; அதன் சமுதாயமாகிய அநேக கர்மங்கள் பிரயோகபே தத்தால் ஐந்துதினம் அபவிருதாந்தம்முடியின் ஓர் யாகயா கும். இவ்வளவு சேர்ந்து யாகமாகவேண்டுமானல், வாக் கியத்திற்கு நிரூபித்தகுற்றம் இதினும்வியாபித்துக் கர்மஞ் சித்தியாதநாகும். அந்தந்தக் கணங்களில் அவையவங்க ளாகிய கர்மசந்திகள் நசிக்கினும், அபூர்வமெனுமோர் வஸ் து அதற்குளதானதுபற்றி, அதனல் சித்திக்கலாமெனில், அவ்வபூர்வமும் ஏகரூபமா? அம்சாம்ச பாவத்தையுடைய தா? ஏகமாயின் அபவிருதாந்தம். கர்மஞ்சித்திக்கில் அபூர் வம் அக்காலத்துண்டாகிச் சித்திக்கும். அம்சாம்ச பாவ மாபொப் பிடில், அம்சையினிடமாய் அம்சம் ஆசிரயித்திருக் கும் அம்சையில்லாவிடின் அம்சமென்ற வார்த்தையே சித்தியாது.

மேலும் இவ்வபூர்வமென்பது அதீந்திரியமாக ஒரு பொருளாயிருந்து காலாதீதத்தில் பலத்தைக்கொடுக்கத்தி றமுடையதாயின், அவர்கள் மதத்திற் சேதனணுகிய சர்வ ஞ்ஞ ஈசன் பெந்தாவாகியும் பலதாதாவாகியும் அங்கீகரியா ததால், இவ்வபூர்வமே பலதாதாவாகப் பவிக்கின்றது. சி த்தாயின் அஃதபூர்வமெனப்படாது. ஜடமாயின் காலபாக த்தைத்தெரிந்தப்போகத்தை யவனுக்கூட்டிவைக்கத்திறமு டையதாகாது. அன்றியும் அவ்வபூர்வத்திற்கு இப்போக த்தை யூட்டிவைக்குந்திறமின்றிச் சொரூபலக்ஷணம் வேறெ ந்தவிதத்திலும் நிரூபிக்கத்தகாததாலும் அத்திறமை இதற் குச்சித்தியாததனுலும் சொரூபலக்ஷணமற்று இல்லாததே யாகும்.

இவ்வபூர்வம் ஆன்மாவை யாசிரயித்திருந்து காலதீர்க் கத்தில் போகத்திற்குப் பலமாகப்பவித்து ஊட்டிவைக்கு

மென்பதில், முற்கூறியபிரகாரம் அவர்கள் மதக்கோட்பா
ட்டின்படி கர்த்தாவாகிய ஜீவன் சேதனனானதால் அவனை
இஃது எத்தன்மையாய் ஆசிரயித்திருந்ததெனப்பார்க்கின்,
தனக்கந்நியமாகிய வஸ்துக்களுக்கு விலக்ஷணத்தன்மையை
த்தனது லக்ஷணமாகவுடையதாகித் தான சித்திக்கவேண்
டும். அவ்விலக்ஷணம்பொருந்திய தனக்கு மற்றவைகள்
போல இக்கர்த்தாவாகிய ஆன்மாவும் அந்நியமானதால் கர்
த்தா-கர்மம்-பலம்-இவற்றிற்கந்நியமாய்ப் பிரகாசித்துநிற்
கும்-அப்படிநிற்க அஃதான்மாவையாசிரயித்து, கர்த்தாவுக்
குக் காலத்திற் பலத்தையூட்டுவிக்குந்திறமை, குருடனுக்
குக்குருடன் வழிகாட்டுவதுபோல், தனக்குச்சுதந்திரமாக
ஞானவல்லபமின்றி, யூட்டிவைக்கிறதாயின், நியமந்தவறித்
தானும் அத்திறமையையிழந்து நிற்கும். ஞானவல்லபத்
தோடூட்டிவைக்கிறதெனில், அஃதும்சர்வஞ்ஞசேதனனா
கப்பவித்து ஈசனெனுஞ் சங்கேதத்தையடையும். அல்லது
கர்த்தாவைப்போல அஃதும் ஓர் சேதனனாகவேனுங் கூறி
க்கப்படும். அப்போது அவ்வபூர்வம் தன்னையுபாதியாகக்
கொண்ட ஞானத்தின் ஆதீனமாகி அசுவதந்திரமாய்ப் பவி
க்கும். அப்படிப்பவிப்பதோ அம்மதத்திற்குச் சம்மதமன்
று. இதும் நீங்கிநிற்கின் அம்மதமே சித்தியாது ஆதலால்
விவகாரதிசையில் பிராந்திஜந்நியப்பிரதீதி மாத்திரமாயுள்
ள கர்மாநுஷ்டானத்தை முன்னிட்டு வாசனாரூபமான ஞா
னோபாதியையே யபூர்வமெனப் பெயரிட்டு அஃது அக்கர்
த்தாவையாசிரயித்துப் பிரகாசிக்கின்றதெனக் கொள்ளத்த
க்கது.

இவ்வண்ணமாயின் வாசனாரூபமான அபூர்வமெனுங்
கர்மபலகாரணோபாதியில் நிபந்திருந்தர்மமுடையதாகிச், சர்
வசாக்ஷியாய்ப் பிரகாசிக்கின்ற சைதந்நியமே தனது பாதி

யுடன் அதிற் பிரதிவிம்பித்த அதனையுள்ளபடி விளக்குகின்றான். அப்படியே கர்த்தா, கர்த்திருத்தன்மைக் கந்யமாயில்லாத தனது சொரூபலக்ஷணத்தைப் பொருந்திப் பிரகாசிக்கின்றானென்பதில், அக்கர்த்தா கர்மசிருவாஹகனைப் பவிக்குங்கால், தன்னைக்கர்த்தாவாகியும் கர்த்திரு லக்ஷணமுடையவனாகியுங்கொண்டு கர்மஞ்செய்கிறவனாகின்றான். அங்ஙனமாயின் தேஹாபிமானத்தை முன்னிட்டு ஜ திவர்ணாசிரம தர்மநீதிகுலகோத்திர முதலியவற்றைத், தன்னிற் சித்தித்ததாகக் கண்டு, அப்படியே கர்மத்தைச்செய்யத் தான் அதிகாரியெனமதித்துச், செய்யத்தொடங்குவான். அவ்விடத்துத்தன்னைக் கர்த்திருலக்ஷணமுடையவனாய் மதிக்கவேண்டுமானால், கர்த்திருலக்ஷணம் திருசியமாகவும் தான் திருஷ்டாவாகவும் பவிக்கவேண்டும். அங்ஙனமில்லாவிடில், தனக்குக் கர்த்திருத்துவம் சித்தித்திருக்கின்றதெனநிர்ணயம்பிறவாமல் அதிகாரத்தை நீங்கிவிடுவான், அதற்காக அங்ஙனம் ஒப்பின், தேஹாதிகளுக்கு அந்நியனாகிப்பவித்ததுபோற், கர்த்திருத்தன்மையுந் தனக்கந்நியமாகக் கொண்டு, தான் கர்த்தாவாகியதனதுசொரூபலக்ஷணத்தை நீங்கிச்சின்மாத்திர சொரூபலக்ஷணமே பொருந்துவான்.

ஆதலால் வேதம் பூர்வகாண்டமெனவும் உத்தரகாண்டமெனவும் இருபிரிவாகி, பொருஜீவனுக்கே திசாபேதத்தால் நித்தியகர்த்திருத்துவத்தையும் நித்தியசித்திருத்வத்தையும் நிரூபிப்பதில், சர்வசம்சயங்களையும் விலக்கி சகலருக்கும் விஷயானந்தமுதல் பிரமானந்தம்வரை தன் வருதியில்நின்று புஜிப்பிக்கும் சர்வஞ்ஞகற்பமான சுருதி விரோதமுடையதாக வோர்காலத்தும்வசனியாது. ஆதலால் விவகாரதிசையைப்பற்றி நித்தியகர்த்திருத்துவமும் பரமார்த்ததிசையைப்பற்றி நித்தியசித்லக்ஷணமும் பிரத்தியக்குக்கு

க்கூறியபடியேயன்றி வேறில்லை. வியாவகாரிகதிசையென்பது அவித்தியாதிசையெனப்படும். மற்றது விவேகதிசையெனப்படும். ஆதலால் சுருதியின் கருத்தையுள்ளபடி தெரிந்தவர்களாகிய இருவகுப்புடைய மீமாம்சமதத்தர்கள் அவ்வண்ணம் ஸ்தாபித்துக் கூறியதேயன்றி, இருவர் திருஷ்டியிலும் இவ்வத்துவைதமேயுள்ளதாகும். ஆதலால் இப்பிரகாரம் இவ்வபூர்வமெனும் ஜடோபாதியை முற்கூறியபிரகாரம் ஆன்மாவை யாசிரயித்தவிடத்து அதனியல்பைத்தெரிந்து அதிலுள்ளும் வெளியும் வியாபித்து சித்துபாதியாற் பிரகாசிக்கின்ற சித்தைத்தானாகக்காணின், தானே கர்மம் அதன் பலதாதாவாகிய அபூர்வம் அதன் பலமாகியபோகம் இவ்வனைத்திற்கும் நியந்தாவாகியும், ஊட்டிவிப்பானாகியும், புஜிப்பானாகியும், இவ்வனைத்தும் தன்னிற்கற்பிதமெனவும் தெரியவரும். இப்பிரகாரமநுபவிப்பாயெனவருள:

மாணாக்கன்—அங்ஙனமேயுள்ளபடி அநுபவத்தையடைந்து இப்பூர்வகாண்டத்தின் கருத்தும் அக்கோட்பாட்டை விசாரிக்குங்கால் அத்துவைதமாகவேயிருக்கின்றதெென விஸ்ரமித்தான்.

மூ ற் றி ற் று.

---

## நான்காவதுபாகம்—நிரீசுரசாங்கியம்.

---

மாணாக்கன்—பின் நிரீசுரசாங்கியத்தின் அந்தரங்கத்தாற்பரியத்தையும் இங்ஙனமே வெளிப்படுத்தியருளவேண்டுமெனப் பிரார்த்திக்க:

ஆசிரியர்—சத்துவாதியாகிய முக்குணங்களின் சமுதாயம்பொருந்திய பிரதானம் பிரகிருதி எனவும், விஷமசலன

யுடன் அதிற் பிரதிவிம்பித்த அதனையுள்ளபடி விளக்குகின்
றான். அப்படியே கர்த்தா, கர்த்திருத்தன்மைக் கந்நியமா
யில்லாத தனது சொரூபலக்ஷணத்தைப் பொருந்திப் பிர
காசிக்கின்றானென்பதில்; அக்கர்த்தா கர்மநிருவாஹகனைப்
பவிக்குங்கால், தன்னைக்கர்த்தாவாகியும் கர்த்திரு லக்ஷண
முடையவனாகியுங்கொண்டு கர்மஞ்செய்கிறவனாகின்றான்.
அங்ஙனமாயின் தேஹாபிமானத்தை முன்னிட்டு ஜ திவர்
ணாசிரம தர்மநீதிகுலகோத்திர முதலியவற்றைத், தன்னிற்
சித்தித்ததாகக் கண்டு, அப்படியே கர்மத்தைச்செய்யத்
தான் அதிகாரியெனமதித்துச், செய்யத்தொடங்குவான்.
அவ்விடத்துத்தன்னைக் கர்த்திருலக்ஷணமுடையவனாய் மதி
க்கவேண்டுமானால், கர்த்திருலக்ஷணம் திருசியமாகவும் தா
ன் திருஷ்டாவாகவும் பவிக்கவேண்டும். அங்ஙனமில்லாவி
டில், தனக்குக் கர்த்திருத்துவம் சித்தித்திருக்கின்றதென
நிர்ணயப்பிறவாமல் அதிகாரத்தை நீங்கிவிடுவான், அதற்
காக அங்ஙனம் ஒப்பின், தேஹாதிகளுக்கு அந்நியனாகிப்ப
வித்ததுபோற், கர்த்திருத்தன்மையுந் தனக்கந்நியமாகக்
கொண்டு, தான் கர்த்தாவாகியதனது சொரூபலக்ஷணத்தை
நீங்கிச்சின்மாத்திர சொரூபலக்ஷணமே பொருந்துவான்.

ஆதலால் வேதம் பூர்வகாண்டமெனவும் உத்தரகாண்
டமெனவும் இருபிரிவாகி, பொருஜீவனுக்கே நிசாபேதத்
தால் நித்தியகர்த்திருத்துவத்தையும் நித்தியசித்திருத்வத்
தையும் நிரூபிப்பதில், சர்வசம்சயங்களையும் விலக்கி சகலரு
க்கும் விஷயானந்தமுதல் பிரமானந்தம்வரை தன் வருதியி
ல்நின்று புஜிப்பிக்கும் சர்வஞ்ஞகற்பமான சுருதி விரோத
முடையதாக வோர்காலத்தும்வசனியாது. ஆதலால் விவ
காரதிசையைப்பற்றி நித்தியகர்த்திருத்துவமும் பரமார்த்
ததிசையைப்பற்றி நித்தியசித்லக்ஷணமும் பிரத்தியக்குக்கு

க்கூறியதேயன்றி வேறில்லை. வியாவகாரிகதிசையென்பது அவித்தியாதிசையெனப்படும். மற்றது விவேகதிசையெனப்படும். ஆதலால் சுருதியின் கருத்தையுள்ளபடி தெரிந்தவர்களாகிய இருவகுப்புடைய மீமாம்சமதத்தர்கள் அவ்வண்ணம் ஸ்தாபித்துக் கூறியதேயன்றி, இருவர் திருஷ்டியிலும் இவ்வத்துவைதமேயுள்ளதாகும். ஆதலால் இப்பிரகாரம் இவ்வபூர்வமெனும் ஜடோபாதியை முற்கூறியபிரகாரம் ஆன்மாவை யாசிரயித்தவிடத்து அதனியல்பைத்தெரிந்து அதிலுள்ளும் வெளியும் வியாபித்து சித்துபாதியாற் பிரகாசிக்கின்ற சித்தைத்தானுகக்காணின், தானே கர்மம் அதன் பலதாதாவாகிய அபூர்வம் அதன் பலமாகியபோகம் இவ்வனைத்திற்கும் நியந்தாவாகியும், ஊட்டிவிப்பானுகியும், புஜிப்பானுகியும், இவ்வனைத்தும் தன்னிற்கற்பிதமெனவும் தெரியவரும். இப்பிரகாரமநுபவிப்பாயெனவருள:

மாணுக்கன்—அங்ஙனமேயுள்ளபடி அநுபவத்தையடைந்து இப்பூர்வகாண்டத்தின் கருத்தும் அக்கோட்பாட்டை விசாரிக்குங்கால் அத்துவைதமாகவேயிருக்கின்றதெ ன விஸ்ரமித்தான்.

முற்றிற்று.

---

## நான்காவதுபாகம்—நிரீசுரசாங்கியம்.

---

மாணுக்கன்—பின் நிரீசுரசாங்கியத்தின் அந்தரங்கத் தாற்பரியத்தையும் இங்ஙனமே வெளிப்படுத்தியருளவேண்டுமெனப் பிரார்த்திக்க:

ஆசிரியர்—சத்துவாதியாகிய முக்குணங்களின் சமுதாயம்பொருந்திய பிரதானம் பிரகிருதி எனவும், விஷமசலன

முடைய குணங்கள் விகிர்திஎனவும், அவ்விகிர்தியின் ஏக தேசத்தால் சிருஷ்டியும் ஏகதேசத்தால் ஸ்திதியும் ஏகதே சத்தால் சம்ஹாரமும், விகிர்திபாவத்தை நீங்கிய பிரகிருதி மாத்திர ஸ்திதியால் பிரளயமும் பிரகிருதிவிகிர்திரூபமான ஜகத்தை யவிவேகத்தாற் றாதான்மியப்படுத்தலே பந்தமெ னவும், விவேகத்தால் அதனைநீக்கி மறந்திருப்பதே மோ க்ஷமெனவும், அவிவேகவிவேகங்களால் பெத்தர்களாகவு முத்தர்களாகவும் உள்ள ஆன்மாக்களெனவும், அவர்கள் இயல்பாகவே அநேகர்களாகியும் பூரணர்களாகியும் சச்சி தானந்த சொரூபமுடையவர்களாகியும் உளர்களெனவும் நிரீசுரசாங்கியர்கள் கூறுகின்றார்கள்.

இந்நிரூபணத்தில் பிரதானம் ஜடமாதலால் அஃது தன து பிரகிருதி விகிர்திபாவங்களால் சிருஷ்டிமுதல் பிரளயம் வரை யொழுங்காகச்சாதிக்க வல்லமையுடையதாகாது. ஆ னால் சத்துவத்தின் மிகுதியில் ஞானம் சுகம் இரண்டும் பெ றப்படுமென்ற சாஸ்திரவசனபலத்தால் விகிர்திகளான தங் களில் இரண்டைநீக்கிச் சத்துவமாகிய ஓர்பாகம் ஆதிக்கத் தையடைய, அதுகொண்டு பிரதானம் சர்வஞ்ஞமாகும்; அப்படியே ஒரோர் விகிர்திபாகமும் காலபேதத்தால் ஆதிக் கத்தையடைய சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரங்களுண்டாய்ப்பூர ணமாய் விகிர்தியம்சங்கள் நீங்குங்கால் பிரளயமும்பவித்து நிற்கும் எனக்கூறலாம்.

இங்ஙனமாயின் சேதனனுதவியின்றி பிரதானமேயிப் படிப்பவிப்பதில், பிரகிருதியே விகிர்திப்படுகின்றதா? அவ் விகிர்தியாய்ப் பவிக்குங்காலத்தும் பிரகிருதிக்குச்சொந்த மாகவொரு தன்மையிருகின்றதா? விகிர்திபிரகிருதிப்படு ங்கால் இதற்குப்பிரகிருதி பாவத்தைத்தவிர அந்நியமாயொ

ருதன்மை யிருக்கின்றதா? எனப்பரியாலோசிக்கின் வேறு படத்தன்மையில்லாவிடின் பிரகிருதிவிகிர்தி பாவஞ்சித்தியாது அத்தன்மையிருந்திடில், பிரகிருதிமாத்திரமாயிருக்குங்காலத்து அவ்விடத்தும் இவ்விகிர்திதன்மையிருப்பதனால், அஃது சித்தியாது. அங்ஙனமே இவ்விகிர்திக்கும் பவிக்கத்தகும். மேலும் பிரகிருதியாயாவது விகிர்தியாயாவது ஓர்பொருள் பவிக்கவேண்டுமானால், இவ்விரண்டாகிருதிக்கும் அந்நியமாய்ச் சித்திக்கவேண்டும். அங்ஙனமாயின் பிரகிருதிவிகிர்தியிரண்டும் அதனவஸ்தைகளாம். விஷமாவஸ்தை விகிர்தியும் சாமியாவஸ்தை பிரகிருதியும் எனக்கூறின், பிரகிருதிக்குக் காரணத்தன்மையும், விகிர்திக்குக் காரியத்தன்மையும் சித்தியாததுமன்றி, பிரதானம் குணத்திரயசமுதாயத்தைப் பொருந்தியதென்பதில் சமுதாயம் தருமமாகவும், பிரகிருதி தருமியாகவும், பவித்துநிற்கும். அவ்விடத்தும் பிரதானம் இப்பிரகிருதி விகிர்திகளுக்கு அந்நியமாகவேயிருக்கவேண்டும்.

இப்பிரகிருதி விகிர்திகளான அவஸ்தைகளை வியாபித்துநின்ற இவைகளுக்கந்நியமாகிய அப்பிரதானம் யாதெனஆலோசிக்கில், குணசாமியவைசம்மியங்களுக்கு விலக்ஷணமாகி, அவ்விலக்ஷணத்தன்மையே சொரூபலக்ஷணமாயுடையதாய்ப் பவித்துநிற்கும். அஃது ஜடமாயின் தானே பிரகாசியாது. சித்தாயின் அதனை ஜடத்தன்மை பொருந்திய பிரதானமெனலாகாது. இவ்விவகார சித்தியின்பொருட்டு சுத்தமெனவோர் தத்துவமுள்ளது. பிரதானம் ஜடமாயினும் கடாதிபோலன்று. சுயம்பிரகாசித்தல் அதற்குளதாகும். ஜாதிகுணக்கிரியையின்றிய பிரமவஸ்துவுக்கு சிருஷ்டிநிமித்தமாய் சாக்ஷணதருமம் ஆரோபிதமாய் எங்ஙனம்

ஒப்பப்பட்டிருக்கிறதோ, அங்ஙனம் இதற்கும் ஞானநிருவா ஹகதருமமுள்ளதாகுமெனில், நிர்க்குணமாயினும் பிரமம் சிருஷ்டிநிமித்தமாய்க் கற்பிதமான வீக்ஷணதருமத்தையு டையதாகும். இது அங்ஙனம் பலியாது. எதெனில் பிர காசமின்றிய சிந்துவில் சூரியன் பிரதிவிம்பிக்க, அப்பிரதி விம்ப சூரியனிடத்திற் பிரகாசிக்கின்ற பிரகாசமும் சூரியத் தன்மையும் கற்பிதமாயிருந்திடினும், விம்பமாகிய சூரியன் பிரகாசவடிவமானதாற்கூடும். நிர்க்குணமாயினும் பிரமம் ஞானவடிவமானதால் உபாதியிற் பிரதிவிம்பிக்க, அப்பிரதி விம்பசக்தி விம்பத்தின்ஞானசக்தியாகவே பிரகாசித்திடும். ஓரந்தகாரம் தர்ப்பணத்திற் பிரதிவிம்பித்திடினும் பிரகாசி க்க வல்லபமற்று பிரதிவிம்பித்ததுகொண்டு தன்னிடத்தில் நவமாகப் பிரகாசலக்ஷணத்தைப் பொருந்திய ஓர்வடிவம் சித்தியாததுபோல, பிரதானத்திற்கு ஞானநிருவாஹகதரு மம் சித்தியாது.

சத்துவத்தின் மிகுதியால் முற்கூறிய வசனப்பிரம் மாணத்தை முன்னிட்டு சர்வஞ்ஞத்துவத்தைப் பிரதானம் அடையுமென்றதில், சத்துவமிகுதியால் ஞானஞ் சுகம் இர ண்டும் அதனைத்தனது சொந்தவுபாதியாகக் கொண்டு, உள்ளபடி திரோதானமின்றிப் பிரகாசிக்குமென்பதேயன்றி சத்துவகுணமே ஞானமென்றுவது சுகமென்றுவது சொல் ல உபகாரப்படாது. நீதியின் ஒழுங்காயோர் பொருள்விக சிக்கவும் விகாரத்தை நீங்கிநிற்கவும் அக்காலத்து நடத்த வேண்டுவதை யொழுங்காய் நடிப்பிக்கவுமாகி யிருக்க வேண்டுமானால், அஃது ஞானசந்நிதியின்றிச் சித்தியாது. ஆதலால் பிரகிருதி விகிர்திபேதங்களாகப் பிரகாசிக்கின்ற பிரதானம், முற்கூறியபிரகாரம் இவ்விரண்டவஸ்தைகளி ன் சம்பந்தமில்லாத சித்துபாதியாகும். அஃது உபாதியா

னது கொண்டு ஜடமேயாம். அதிற்பிரதிபலித்த சைதந்நிய சம்பந்தத்தாற் பிரகிருதி விகிர்தி பாவமில்லாத சைதந்நியம்போல தப்தாயபிண்ட நியாயங்கொண்டு பிரகாசிப்பதனால், அதற்கு ஞானநிருவாஹகதருமம் அவர்களானுபசாரமாயொப்பப் பட்டிடினும், அது அவர்களது அந்தரங்கத் தாற்பரிய மாகாது.

அஃதெங்ஙனமெனில் பிரகிருதி விகிர்திகளுக்கு விலக்ஷணமாகியும் பிரகிருதி விகிர்திகளை வியாபித்ததாகியும் ஜடத்தன்மை கூடின சர்வஞ்ஞதர்மம் பொருந்தினதாகியும் பிரதானமிருக்குமானாற்றன்னில் ஜடத்தன்மையையும் முற்கூறிய பிரகாரம் விலக்ஷணத்தன்மையையும் சர்வஞ்ஞத்தன்மையையும் தெரிந்து, அப்படியே தனக்கந்நியமாகிய வஸ்துக்களின் தன்மையையும் தெரிந்ததாகப் பவிக்கவேண்டும். அங்ஙனம் பவிக்கின் ஜடத்தன்மை ஜடோபாதியாகியும் சர்வஞ்ஞத்தன்மை ஞானோபாதியாகியும் விலக்ஷணத்தன்மை பிரபஞ்சாதீத உபாதியாயுமாகி, யதனையுள்ளும் வெளியும் வியாபித்துப் பிரகாசிக்கும் சைதந்நியம் அப்பிரதானத்திற்கந்நியமாகி அதிகாரியினுள்ளத்தில் அபரோக்ஷமாகக் காணப்பட்டு, அவ்விடத்து அப்பிரதானமெனு முபாதியைத் திருசியமெனவும் அதனைப்பிரகாசிப்பிக்குஞ்சைதந்நியம் சுயந்திருக்கெனவுந்தெரியவரும்.

மேலும் அம்மதத்திற் பிரதானபுருஷர்களை லக்ஷணத்துடன் அதிகாரிக்கு நிரூபிக்கவேண்டுமாயின், அந்நிரூபணத்தால் அவ்வதிகாரி அவைகளையுள்ளபடி சாதனத்தால் அநுபவிப்பவனாவான். அங்ஙனமாயின் கூறியபிரகாரம் அவனது அநுபவத்தில் பிரதானமநுபவிக்கப்பட அவ்வநுபூதியில் அப்பிரதானத்திற்குப் பிரகாசகன் தானெனவு

ம் பிரகாசியம் அஃதெனவும், வெகுநிக்ஷணமாயிருந்திடி னும் ஓர் சத்தி சத்துரு மித்திராதிகளைத் தெரிந்து சேதன னது உதவியின்றி வதைக்கவும் ரக்ஷிக்கவும் எங்ஙனம் வல் லபமுடையதாகாதோ, அவ்வண்ணமே அப்பிரதானமுமெ னக்கண்டுமகிழ்ந்து, கடத்தைவியாபித்த மிருத்தின் திரு ஷ்டியால் கடஞ்சொரூப லக்ஷணமில்லாமல் பாதிக்கப்படு வதுபோல, எவ்விடத்தும் சித்தின் திருக்குவியாபகம் நோக்கப்படின் திருசியமாகிய பிரதானம் அங்ஙனமேயில் லாமல் நீங்கிவிடும்.

அப்படியே ஜீவர்களின் லக்ஷணத்தையாலோசிக்குங் கால், ஆன்மா ஏகனாயிருந்திடில் பெத்தனாகிய ஆன்மாவி ன் பந்தத்தை முன்னிட்டு முத்தனுக்குப் பந்தமும், முத்த னது மோக்ஷத்தை யபேக்ஷித்து பெத்தனுக்குமோக்ஷமும் வரும். அஃது கூடாமையால் ஆன்மா அநேகத்துவத்தை யொப்பினர், ஆனால் ஆன்மா ஏகனென்றதன்கருத்து, சொ ரூபத்தைப் பற்றினதாயும் பந்தமோக்ஷ விவஸ்தையுபாதி யைப்பற்றியதாயுமாயின், உபாதி வெகுவானதால் அது கொண்டு அவ்விவஸ்தை சித்திக்க அஃதொழிந்து, அதன் நிமித்தமாய் அநேகாத்மவாதமொப்பியது, சொருபமே தங்கொண்டேதான். அங்ஙனமாயின் ஜீவர்கள் முற்கூறிய லக்ஷணம்பொருந்திய அநேகர்களாயிருக்கில், பிரதான மும் ஜீவர்களும் வியாபித்து அவர்களும் இஃதும் நிரம்பி நின்ற தன்மையையாலோசிக்கில், எவ்விடத்துமெச்சீவர்க ளுமிருக்க அவர்களுக்கு அவிவேக விவேகங்களானுண்டா கிய பந்தமோக்ஷத்தைக் கொடுக்காநின்ற பிரதான சம்பந் தம், எவ்விடத்தும் எச்சீவர்களுக்குங் கலந்திருப்பதனால், முற்கூறியகுற்றம் அவர்களுக்கே யுளதாய்ப்பவிக்கும். சீ

ப்படியே புண்ணியபாவங்களும் விவஸ்தையின்றிச் சம்பந்திக்கும்.

அன்றியும் இச்சிவர்கள் பந்தமோக்ஷ திசைகளைப்பற்றி வந்த பிரபஞ்சஸ்மிருதியும் அதன் அஸ்மிருதியும் அவர்களுக்குள தாய்ப்பவிக்கின், பெத்தஜீவன் சாத்தியமாகிய பிரபஞ்சத்தைத் யவிவேகத்தாற் சம்பர்தித்துப் புஜிப்பதுபோல, விவேகத்தால் முத்தஜீவன் அதனைபபிமானியாமல் மறந்து நிற்பான், இங்ஙனமாயின் அபிமானித்தலும் அபிமானத்தை நீங்கி முன்னிலைக்கொள்ளாமலிருப்பதுந் தொழிலாகையால், அஃது ஜடமாகி அஃதே இச்சிவர்களுக்கு சொருபலக்ஷணமாயின், இவர்களும் ஜடமாய்விடுவார்கள். அங்ஙனமிலதாயின் அஃது தனக்கந்நியமான வுபாதியின் லக்ஷணமாகி அத்துவைததத்வத்தைச் சார்ந்துவிடுவர்கள்.

இப்பிரகாரம் ஆலோசிக்கின் பிரகிருதி விகிர்திபாகிய பிரதானமும் அகண்டபரிபூரண சச்சிதானந்தமாகிய பின்ன ஜீவர்களும், அச்சாஸ்திர சங்கேதப்படி யநுபவத்தில் நோக்கப்பட்ட ஜீவர்களின் பின்ன பின்ன ஆகிர்தியின நுபவமென்ன, அங்ஙனமே பிரதானத்தின் அநுபவமென்ன இவைகளுள்ளபடி இவனநுபவத்திற் பிரகாசித்து நிற்கும். அங்ஙனம் பிரகாசிக்கில் ஜீவர்களுக்கந்நியமாகிய பிரதானத்தின் பேதமும் தனக்கந்நியமாகிய ஜீவர்களின் பேதமும் அவைக்கந்நியமாகிய தனது பேதமும் நோக்கப்பட்டு அப்பேதமெத்தன்மையதென ஆலோசிக்க ஜீவர்களும் சித்துருபர்களும் பேதம் ஜடமுமாகையால் திருஷ்டாவாகிய ஆன்மாவுக்கந்நியமாகிப் பிரதானத்தையே சார்ந்து நிற்கும் ஆன்மாக்களைச்சாராமல் நீங்கிவிடும். மேலும் குமேயன்றி, ஆன்மாக்களைச்சாராமல் நீங்கிவிடும் என்றவும் ஆன்மசொருபம் திருஷ்ட்ரு தரிசனம் திரிசியம் என்றவும்

பாதிவிகாரமின்றிய நிர்விகாரஞானமேயாயின் உண்மையா ய்ப் பெத்தமாயு முத்தமாயும் அவ்வான்மதத்துவங் கூறவு படாதப்படாது.

அப்படியேயவனே இபபிரதானஞ் சுதந்த்ரமாய்ச் சம் பந்திக்கவுமுப்காரப்படாது. அவன் சந்நிதி பெலத்தால் சம்பந்திக்கவும் நீங்கவும் வல்லபமுடையதாகுமெனில், இ தற்கோர்வல்லபம் அதினிடமாகச் சித்திக்கின் பிரகாசத் தைவாதிக்கின்ற இருள்போல, அதனை வாதிக்கின்றதாகா து. ஆனல் முற்கூறிய ஆன்மபேதம் ஜடமன்று: விசேஷ ம்பொருந்திய சித்துரூபங்களாற் சித்திலக்ஷணத்தை விசே ஷமாகப் பொருந்தியதனுல் ஜீவர்கள் பின்னசொரூபர்களா கின்றூர்களெனலாம். அங்ஙனமாயினும் ஆன்ம சொரூபமே விசேஷமா? அல்லது விசேஷத்தையுடையதா? விசேஷம் சித்திக்கில் அஃது சித்திக்கும். அப்படியே தானே தனக் கு விசேஷமாகியும் பலிக்கத்தகாது. இவ்வாதத்தில் ஆன் மாசிரய தோஷமுதல் அனவஸ்தைவரை நீங்காக்குற்றமா கப் பலித்துக்கெடும். மேலும் அப்பேதம் விசேஷரூபமா கவொப்பில் அதற்கோருபகாரமுளதாகவேண்டும். அஃ தும் பின்னப்படுத்திக் காட்டிவைப்பதைத் தவிர வேறுகா து. இங்ஙன்மாயின் விசேஷம் நோக்கப்பட்டு ஆன்மதத் துவத்தை நீங்கிமுன்போற் பிரதானத்தைச்சார்ந்துநிற்கும்.

ஆதலால் முத்தர்களின் அநுபூதியில் நிர்விகற்பமா கிய பிரதானவுபாதி பெலங்கொண்டு பிரபஞ்சந்தோற்று மையும், விகிர்தியாகிய வுபாதியின் பெலங்கொண்டு பெத் தர்களுக்குப் பிரபஞ்சத்தோற்றமும் பார்ப்பதேயன்றி, அ வம் ஞானசொரூபமாகி ஆன்மதத்துவத்தின் இயல்பாக ஆன்மபேதம்-அப்பேதமாகிய விசேஷம்—பிரபஞ்சம்-பிரதா

னம்-அதனாலுண்டாகிய சம்பந்தம்-அதை முன்னிட்டுதித்த பந்தமோக்ஷம்-இவ்வனைத்தும், தன்னிலுபாதி நீங்கி நின்றவிடத்துக் காணப்படாததால், அதனை யதிகாரியின் புத்தியையனுசரித்துப் பிரகாரபேதமாய்க் கூறியதேயன்றி யிவ்வத்துவிதத்திற் கந்நியமாக அம்மதத்தர்களின் கருத்து இலதேதான்.

அஃதெங்ஙனமெனில் பிரதீதியிற்கண்டபடி ஜடசித்துக்களைப்போக்கிய போக்தர்களாக நிரூபித்து, போக்கியசம்பந்தம் போக்தர்களுக்கு அவிவேகமூலமென்றும், அதனை நோக்காதுநிற்றல் அவர்களுக்கு விவேகமூல மென்றும், பிரதீதியிற்கண்ட ஜீவபேதங்களை பந்தமோக்ஷ விவஸ்தா நிமித்தமாகக் கற்பித்து அவர்களுக்குப் பரிச்சின்னத் தன்மை-கர்த்துருத் தன்மை-போக்திருத்தன்மை பெத்தத்தன்மை இவைகள் ஆன்மாவின்ம அவிவேக மூலமெனவும், அபரிச்சின்னத்தன்மை-அகர்த்துருத்தன்மை. முத்தத்தன்மை—சச்சிதானந்தத்தன்மை-இவைகள் ஆன்மாவுக்கு சுவாபிகமெ பீகமெனவும் அப்படியே பின்னத்தன்மையும் சுவாபிகமெனவும், பிரதான ஜீவர்களுக்கந்நியமாக தத்பதத்திற்குவாச்சியார்த்தம் வெளிப்படையாய் நிரூபியாதது கொண்டு, அதில் லக்ஷியார்த்தமாகிய பரவஸ்துவின் லக்ஷணத்தை இத்துவம்பத லக்ஷியார்த்தத்திற்றானே யமைத்துக்கூறினார்களெனத் தெரியவரலாம். அன்றியும் சுருதிகூறிய மஹாவாக்கியத்தின் பொருளாகிய இவ்வுபதேசலாபங்கூறப்படுங்கால் உபக்கிரம வுபசங்காரமெனும் லிங்கநியாயங்கொண்டு, அம்மஹாவாக்கியத்தின் பொருளை யாலோசிக்க, வுபக்கிரமவாக்கியத்தில் காரணம் சித்தெனவும் உபசங்காரவாக்கியத்தில் அது நீயாகின்றாயெனப் பிரகாசித்த அவ்வாக்கியத்தில்

ஷயத்தின் பொருளான சேதனனான சுவேதகேதுவுக்கு
ஜடத்தன்மை சித்தித்து விடும் எதனில் அவர்களின்
கோட்பாட்டில் ஜடமாகிய பிரதானங் காரணமானதால்,
அஃது அவ்வுபக்கிரமம் உபசங்காரமெனும் லிங்கத்தாற்
கெடுக்கப்படும். சேதனன் ஓர்காலத்தும் எம்மதக்கோட்
பாட்டின் உபதேசத்தானும் ஜடனாகத்தகான். பின்னங்
களாகிய ஜடசித்துக்களுக்கு அபேதம் எவ்வுபதேசத்தா
லுஞ் சித்தியாது. ஆனால் அவர்கள் கருத்து இவ்விஷயத்
தில் யாதெனப்பார்க்கில். முற்கூறிய லக்ஷணமுடைய பிர
தானம் சர்வகாரணமாகவும் ஜடமாகவுங் கூறியதனால், ஜ
டவஸ்துவுக்குத் திரிபுடியின்மை சுபாவமானதால் அத்தி
ரிபுடியின்றிய காரணவஸ்து நீயாகின்றாயென்ற உபதேசங்
கிடைக்க, அப்பிரகாரமே யவ்வதிகாரி அவ்வநுபூதியைய
டைய அக்காலத்து அங்ஙனம் பிரகாசிக்கின்ற அவ்வநுப
வம் சித்ரூபமான தானாக விளங்குவதால், அதனையாரா
லுங்கெடுக்கக்கூடாமையால், அங்ஙனம் அநுபூதியையடை
ந்து பார்க்கின் இச்சாங்கியர்களுக்கும் இவ்வத்துவிதமே
கருத்தென்று வெளியாகலாமென;

அப்படியேமாணாக்கனும் அவ்வண்ணம் அவ்வநுபூதி
யையடைந்து இந்நிரீசுரசாங்கியர்களின் கருத்தும் அத்து
விதமேதானென்று தெளிந்தான்.

முற்றிற்று.

---

## ஐந்தாவது பாகஞ்சேசுர சாங்கியம்.

---

மாணாக்கன்—பரமகருணாநிதே! இங்ஙனஞ்சேசுரசா
ங்கியத்தின் கருத்தையும் உபதேசித்தருளவேண்டுமென்
று அபேக்ஷிக்க;

ஆசிரியர்—பிரகிருதியெனவும் புருஷனெனவு மிரண்டு தத்துவமுள அதில் பிரகிருதிதத்துவம், தனதுசுபாவத்தானுந் தனதுவிகிர்தியான வேர்பாகத்தாலும் இருதிறமையுடையதாகி, அதில் முதற்பாகத்தால் அசங்கவுநாசின சர்வஞ்ஞபரமேசுரனைச் சம்பந்தித்து, அவனது ஆதினமாகியும் அவனுந்தானுங் குணசக்தி விசேஷங்களால் வேறுபடத்தோற்றாமல் அவனது வடிவை நீங்காத ஆனந்த நிதியாய் வெளிப்படுத்தி சேவிநிற்கும். புருஷதத்துவம் அநாதிசித்தமாய் இருபிரிவுடையதாய் அதிலொருபிரிவு எக்காலத்தும் ஏகமாகியும் நித்தியமுக்தமாகியும் நிபந்தாவாகியும் அபரிச்சின்ன சச்சிதானந்தாதியியல்புடையதாயுமுளதாகும். மற்றொன்று நிர்லேபமாகியுங் குணத்திரயமான்விகிர்தியால் பேதப்பட்டு கருத்தா போக்தாவாயுங் குணத்திரயங்களை சாதனத்தால் நீக்கிப்பரதத்துவத்தில் ஐக்கியப்படுங்கால் முக்தமாகியும் பவித்து நிற்குமென்றும், அதில் ஏகதேசியர்கள் புருஷன் கருத்தாவாகினும் போக்தாவாகானெனவும், மற்றும் ஏகதேசியர்கள் அவன் போக்தாவாகினுங் கருத்தாவாகானெனவும், அதிற்பௌடர்கள் கருத்தாபோக்தாவென்பது குணபெந்தத்தை முன்னிட்டேயன்றி அவன் நிர்லேபனானதால் அவனை முற்கூறிய விருதன்மையும் பொருந்தாவெனவுஞ் சங்கேதித்துக்கூறுவார்கள்.

இவர்கள் மதப்படி பிரகிருதிகுணத்தை வாதித்திடின் ஆனந்தம்பிராப்தமாக அப்பரவஸ்துவில்லயமே மோக்ஷமெனப்படும். அஃதெங்ஙனமெனில் தமசு-ரஜசு-சத்துவம்-சுத்தம் எனக்குணபேதம் நான்குவகுப்புடையதாகும். அவற்றுள் தமசென்பது கரணாதிகளுக்குச் சோம்பல் நித்திரையாதிகளைக் கொடுத்து, சாதனங்களைமறைத்து, பாவ

விருத்தியில் புத்தியைச்செல்லச் செய்யும் ரஜசென்பது பகிர்முகமாகவும் அந்தர்முகமாகவும் அதி வியாபாரங்களைக் கொடுத்துத் தநுகரணாதிகளை அதிற்பிரவர்த்திக்கச் செய்யும். சத்துவமென்பது முற்கூறிய இரண்டையும் மிகுதிப்படாமல் பரியாலோசனையுடன் அடக்கிப், பகிர்முகமாகியும் அந்தர்முகமாகியும் லோகசாஸ்திர விவகாரத்திலும் நீதியுடன் தவத்திலுமுயன்று பிரவிர்த்திக்கச் செய்துநிற்கும். சுத்தமென்பது முக்குணங்களின் தொழில்களையும் சம்பந்தியாமல் பரவஸ்துவில் ஆனந்தோதயம் பிராப்தமாகும்படி கலக்கச்செய்து பிரகாசித்துநிற்கும். ஆதலால் தமோகுணத்தை ரஜோகுணத்தாலும் அதனை சத்துவத்தாலும் நீக்கி, அதனையுஞ் சுத்தத்தால் நீக்கவேண்டும்; இச்சுத்தத்தாலேயே பரவஸ்துவின் பிராப்தியுண்டாகும்.

இக்குணங்கள் நீங்கும் கிரமமேதெனில் அந்தர்முகமாகியும் பகிர்முகமாகியும் தநுகரணாதிகள் தமத்தின்வழியால் பந்தப்படுங்கால், இருவழியாகியும் ரஜசின்பெலங்கொண்டு தநுகரணாதிகள் பிரேரிக்கப்பட்டு, வியாபாரமிகுதியையடைய அதின் வலிமையால் சோம்பல் நித்திரை முதலிய துற்குணங்களும் அப்படியே விவகாரமிகுதியின் நிமித்தமாக நீதிவிரோதமான அதிபாவச்செய்கைகளும் நீங்கிவிடும். அங்ஙனம் நீங்கில் விவகாரமிகுதியில் எப்படியேனும் பாவஞ்சம்பவிக்குமாதலால், இவ்விரஜோகுணத்தை நீக்கும்பொருட்டு சத்துவத்தினதிக்கத்தால் பிரவர்த்திக்கின், அவ்விடத்து விவகாரமிகுதி நீங்கி அதின்வழியே சம்பந்தியாநின்ற துக்கமும் நீங்கியொழிந்தலுடன் தவமுதலிய நன்மார்க்கமுண்டாய் அதனால் ஆந்தரமாகியும் பாகியமாகியும் உள்ள மறதியும் விக்ஷேபமும் அதன் பயனாகிய

முற்கூறிய விஷயங்களும் நீங்கிவிடும். அங்ஙனம் நீங்க நிர்வியாபாரமான வுபேக்ஷையைப்பொருந்திய விவேகசாதனமான அச்சத்துவங்கிடைத்தபடி முற்கூறிய இரண்டு குணங்களுஞ்சாராமல் அவைகளைச் சேதித்து, பின்பு புருஷார்த்தத்தையடையுமாறு வைராக்கியாதி யுத்தமசாதனங்களை அதன்வழியே வர்த்திக்கச்செய்து அவ்விவேகத்தால் விஷயங்கள் பெந்தகாரிகளெனவும் நிர்விஷயம் மோக்ஷகாரியெனவும் அஃது சுத்தத்தின் வழியாகவே பிராப்தமாகுமெனவும் அஃதுஞ் சத்குருவின் கிருபாநோக்கத்தாலேயே சித்திக்கவேண்டுமெனவும் யூகத்தை யுண்டாக்கி யவரை ஆசிரயிக்கச்செய்து, அவரால் உபதேசிக்கப்பட்ட வுபதேசத்தால் புருஷார்த்தத்தை சுத்தத்தின் வழியாகவடைவிப்பித்து நிற்கும்.

அவ்வுபதேசக் கிரமமாவது—கீழ்க்கூறிய சாதனங்கள் பொருந்திய மாணுக்கன் சத்குருவின்சரணகமலங்களில் சரண்புகுந்து இரக்ஷிக்க வேண்டுமென, ஆசிரியர் நிர்ப்பீஜமெனவும் சபீஜமெனவு மிரண்டுதாரணையுள. அத்தாரணையால் குணபெந்தம் நீங்கி முக்தனுகலாம். அவற்றுள் சபீஜமென்பது தொண்ணூற்றாறு அங்குலம் பொருந்தியவித்தேகத்தில் ஆஞையெனுமோரிடமுள்ளது. அவ்விடத்து பரமான்மா எங்கும் பூரணமாயினும் விசேஷித்துப் பிரகாசித்து நிற்பான். அதனை திவ்விய சற்குருவினல் தரிசிப்பிக்கின்றேமெனத் திருக்கண்சாத்த; அப்படியே மாணுக்கனும் அநேககோடி சூரியசங்காசமாகிய அங்குஷ்டமாத்திரஜோதிர் லிங்கத்தைக்கண்டு முற்கூறிய சாதனத்தால் அதில் பரவசனு யிலயிக்க, இவன் திருஷ்டா-இஃது திருசியம்-இஃது தரிசனமெனத்தோற்றம் நீங்கி லக்ஷிய மாத்திர

மாகச்சேஷிக்க, அக்காலத்து சுத்தத்தின் மிகுதியால் ஆனந்தம் பிராப்தமாக பின்பு அதினின்றும் பகிர்முகனாகி, "நான்கிருதார்த்தனானேன். உமது கிருபையால் ஆனந்தரூபனானேனென" விஞ்ஞாபிக்க; ஆசிரியர் நமது பார்வையால் வஸ்து நிலைமை ஆனந்தரூபமாய் பிராப்தமாயினும், அது நிர்ச்சேஷமாய் குணபெந்தத்தைநீக்காது. ஆதலால் சாவதான சித்தத்தோடும் குணத்திரயங்களும் உதிக்கவிட மற்று அனலிற்காய்ந்த அயம்போல லக்ஷியத்திற்குவேறாகாமல் அதுமாத்திரமாகவே நிற்பாயாகவென; அப்படியேயானாக்கனும் அங்ஙனம் நிற்பதற்குபாயம் ஏதென வினவ;

ஆந்தர்முகமாயாவது பகிர்முகமாயாவது ஒரு தொழிலுதிக்கவேண்டுமோனால், பிரயோசனத்தை முன்னிலைக்கொள்ளாமல் உதிப்பதில்லை. ஆதலால் இவ்விலக்ஷியத்திற்கு அந்நியம் யாவும் குணத்திரயங்களின் விகாரமானதானுந் துக்கத்தையே கொடுப்பதாயிருப்பதினாலுஞ் சர்ப்பத்தை சர்ப்பமெனத்தெரிந்தவன் அநர்த்தகாரியான அதனை ஓர்காலத்தும் அணுகாதது போல, இருவகையாய்க் கூறிய தொழிலையும் அங்ஙனமே விவேகத்தால் நீக்கின், அவைகள் உதியாமல் நீங்கும். அங்ஙனம் நீங்க லக்ஷியஞ் சுத்தத்தினுதவியால் இச்சாதகனுக்கு வேறாகப்பவியாமல், அங்ஙனமே பிரகாசிக்கும். அங்ஙனம் பிரகாசிக்க ஆவரண விக்ஷேபங்களில்லாமையால் திரிபுடியின்றிய சுத்தத்தின் தன்மை மேன்மேலும் விருத்தியாய் நிற்கும். அவ்விடத்து பிரதிபந்தமின்மையால் ஆனந்தம் லக்ஷியாகாரமாகவே அபரோக்ஷப்படும். இச்சாதகனும் அவ்வடிவை மேலான நீங்காப் பயனாகக்கொண்டு தன்மயமாகவே பிரகாசித்து நிற்பான். ஆனந்தமயமாகப் பிரகாசிக்க முற் கூறிய லக்ஷியத்தின்ஐக்

கியம் நீங்கி, ஆனந்தமாத்திரமாக வேயநுபவத்துக்கு வரு ம். பின்பு அவ்வதிகாரி அவ்வானந்த வடிவையே லக்ஷிய மாகக்கொண்டு முற்கூறிய விலக்ஷியத்தையே முன்னிலைப் படாமல் நிற்கவேண்டும். அங்ஙனம் நிற்கில் ஆனந்தாநு பவத்தை வெளிப்படுத்தா நின்ற அச்சுத்தமும் முன்னுரை த்த இலக்ஷியத்தை நீங்கியானந்த மயமாகச்செய்ததுபோல், இப்போது அவ்வானந்தத் தன்மையை நீங்கி தானும் அத் தன்மையோடு நீங்கி நிற்கும். அக்காலத்து இச்சாதகன் ஆ னந்த மாத்திரமாகவே சேஷித்து நிற்பான்; அவ்விடத்தும் வாசனா வசத்தால் சுத்த முதிக்க அதனிமித்தமாகச் சத்து வம், அதனிமித்தமாக இராஜசு, அதனிமித்தமாகத் தமசு, இ வைகள் பரம்பரையாய் சூக்ஷமமாகியுங் காரணமாகியுமுள் ள திரிபுடி ரூபமாய்ப் பவித்து நிற்கும். அதற்கவசரமின்றி அதிசாவதானமாய் ஆனந்தமாத்திரமாக நிற்கவேண்டுமெ ன ஆசிரியர் உபதேசித்தார்.

அப்பிரகாரமே மாணாக்கனும் நிதானத்துடன் அந்நிலை மையினின்று பரிசோதிக்குங்கால், ஆசனருடனுகி லக்ஷியத் தைப்பொருந்தி சுத்தத்தின் மிகுதியால் ஆனந்தமயனுப்ப வித்து, அப்படியே அத்தன்மையையும் நீங்கிஆனந்தமாத்தி ரமாக சேஷித்து, அதில்வாசனையால் ஆனந்தத்தன்மையை அதிசூக்ஷுமமாய்க்கண்டு, அதனை புசித்திருக்குங்கால் அதி லுதித்த ஆனந்தத்தன்மையை முன்னிலைக்கொள்ளாமல் நு சுத்தம், திரிபுடியின்றிய திரிபுடியாதலால் அதின்ஞேயம் ஞானமிரண்டுமதனை நீங்குங்கால் ஞாதரு வெனும் தமோ பாதி மேலிட சொரூபப்பிராப்திக்குச் சரியான நேர்மை யுடைய லயமுண்டாய் சுழுத்தியையடைந்து விடுவனென நிரணயித்து, அதற்கு நிமித்தமும் சமாதியில் தமசின் விருத்

ப்தியுள்ள தாயின் ஆசனத்திலுடல் அசுவாதீனமாய்ப் பவிப்பதே தான் என நிச்சயித்தான்.

அப்படியே அணுமாத்திரமேனும் அந்நிலைமை யந்நிதிசையில் காக்ஷிப்படுமாறு நோக்குதல்ஜநிக்கில், அஃது சத்துவத்தின் ஸ்பந்தமெனவும், அஃது சமாதிக்குபகாரமாயினும் அதனை பூரணமாகப் பவிக்கச் செய்யாததால் விரோதியாகுமெனவும் அதற்கும் இஃது குறிப்பெனவும் அறிந்தான். அக்குறிப்பின் தன்மையாவது ஸ்பந்தமென்பது சலநமாதலால் ஓர் சலநமுமில்லாத அநுபூதியில் முன்னிலைக்கேதுவாகிய காண்டல் உண்டாக வேண்டுமானால் சலநமின்றிக்கூடாது. அச்சலநம் பொருந்திய சத்துவம் அச்சலநசக்தியால் காண்டலின் வாட்டத்தைப் பொருந்த ஆதாரமாகிய வஸ்துவையும் அடையாமல் அப்படியே லக்ஷியத்தையும் பொருந்தாமல் முற்கூறியதமசையடைந்து விழிக்குங்கால் நிலைமையைத்தவறின குற்றம் பொருந்தினவனாகச் செய்ய, அதன் மூலமாய்த் துக்கமுதித்து நிற்கும். அப்படியே முற்கூறிய காண்டலால் லக்ஷியம் காக்ஷிப்படுத்திக்கக் காண்டல் காண்பான் இவ்விருதன்மையையு மறைத்து காட்சியை மேலாக மேவச் செய்து அக்காண்டல் நிமித்தமாகவே ரஜசின் ஜலநாதிக்கத்தால் லக்ஷியத்தின் குறிப்பையும் குணசக்தி வைசித்திரியங்களையும் அறிவித்து, அத்திசையில் சலநாதிக்கத்தாலுண்டாகிய ராஜசு அச்சலநத்தை க்ஷணமாத்திரம்ஸ்தம்பிக்கச் செய்து அதனிமித்தமாகச் சொப்பனவஸ்தையை யுண்டாக்கி லக்ஷியச்சுதி வருவித்து நிற்கும். ஆதலால் காக்ஷி காண்டல் காண்பான் எனும் தன்மை பொருந்திய முக்குணங்களையும் அவற்றினியல்போடுங் கண்டு வஸ்துவை காட்சிப்படுத்தாமலும் தன்னைக் கர்த்

த்தாவாகக் குறியாமலும் காண்டலுதியாமலும் லயத்தின் மீ
குதியால் ஆசனச்சுதிவராமலும் பாவனை நீங்கி நிற்பதுவே
சமாதிசித்திக்கு மேலான சாதனமெனத்தெளிந்து அவ்வா
றே அச்சாதனங்கொண்டு ஆனந்தாநுபூதியை நிலைபெற அ
டைந்து அதனை அடைந்தவாறே யாசிரியரிடமாய் விஞ்ஞா
பிக்க அருளுவார்.

இங்ஙனம் அநுபூதி அடைந்திருப்பினும் முற்கூறிய
குண சலநமாம் பிரதிபந்தமுதிக்க நிமித்த முளது. பஞ்ச
விஷயங்கள் சமாதி திசையில் கருவிகளின் வழியாகக் குண
ங்களை யெடுத்து அவைகளைச் சலிக்கச்செய்து லக்ஷியச்சுதி
வருவித்து நிற்கும். ஆதலால் கருவியின் வழியே பாஹ்ய
குணங்களாகிய சப்தாதி கிரகிக்கப்படாமல் நிற்கும் பொரு
ட்டு புத்திரிகையின் செவி முதலிய கோளகங்களை விஷ
யக்கிரகண சாமார்த்திய மறச்செய்யவேண்டுமென அருளா
மாணாக்கன் அப்படியே சமாதிக்குத் தொடங்குங்கால் கரு
விகோளகங்களின் சப்தாதி கிரகணசாமர்த்திய நிக்கிரகம்
இரு பிரிவுடையதாயிருக்கின்றதெனத் தெளிந்து வியாக்
கிரத்தை முன்னிலைக்கொள்ள மரணபய நிமித்தமாம். அ
ங்ஙனமே மூர்ச்சிக்க அக்காலத்து பிராணசலநத்தோடும்
கருவி வல்லமையும் ஒடுங்கி பிரேத சமானமாகப் பனிப்பது
போல், இவ்விடையங்களின் முன்னிலை யித்தன்மையதென
அதனை மரணத்திற்கு மேலான மிருத்யு வெனவுநிக்கும்
தீவிர விஷய தோஷ தரிசனம் திடதரமாயின் அஃது ஓர்
பிரிவாகுமென்றும், அப்படியே சலநமின்றி கருவிகளின்வி
ஷயக்கிரகண வல்லபம் சித்தியாததால் அச்சலநம் பிராண
வாயுவினிடமாகியும் மனத்தினிடமாகியும், பனிப்பதனால்
அக்கோளகத்தானங்களினின்றும் பிராணசம்பந்தத்தினை

யும் சூக்ஷ்மசலசுரூபமான மனதில் அடக்கி யதனையும் வரிசையாகவே குணங்களிலடக்கி யவைகளை சுத்தத்திலடக்கி யதனை ஆனந்தத்தன்மையிலடக்கி ஆனந்தமாத்திரமாகச் சேஷிக்கச்செய்து அவ்வானந்தமாத்திரமாக முற்கூறியபிரகாரம் நிர்வாசனைபர்ய்ப் பிரகாசிப்பதே மற்றொரு பிரிவாகுமென்றும் கண்டு விஷய கிரகண சாமர்த்தியத்தை வேரோடும் வெட்டி ஆனந்தமான அந்நிலைமையை அழியா அநுபூதியாய் அடைந்தான்.

சபீஜ யோகத்தால் நிலைமையுற்ற அம்மாணாக்கனுக்கு நிர்ப்பீஜ யோகத்தையும் ஆசிரியர் அருளுவார். சாதகன் ஆசனாரூடனாகப்பவித்து கருவிகளின் விஷயங்களை நீங்கிமனமும் நிர்வியாபாரமாகப் பவித்து யாதொன்றையும் முன்னிலைக்கொள்ளாமல் நிற்க, அத்திசையில் கருவிகளில் பாஹ்ய விஷயங்கள் கிரகிக்கப்படாததால் ஜாக்கிரமுமன்று: மனம் ஓர் பொருளையும் முன்னிலைக்கொள்ளாததால் சொப்பனமுமன்று: ஆசனாரூடனாயிருப்பதால் சுழுத்தியுமன்று: இவ்வாறு மூன்றவஸ்தையும் நீங்கியதாயும் சூனியமாக முன்னிலைப்படாததாகியும் பவிக்க, அவ்விடத்து லக்ஷியமாகிய பீஜமிலதுகொண்டு நிர்ப்பீஜமெனப்படும். அங்ஙனமாயினும் அஃது அநுபவமாகச் சித்தித்திருப்பதால் அச்சம்பந்தங்கொண்டே நிர்பீஜயோகமெனப்படும். இங்ஙனம் தாரணை செய்ய முக்குணங்களுமுதிக்க வல்லபமற்று நசித்து விடும். சுத்தத்தின் மிகுதியால் ஆனந்தம் அபரோக்ஷமாக அநுபவத்துக்கு வரும், அதனையும் முன்னிலைக்கொள்ளாமல்நிற்கின் அவ்வானந்தத்தன்மையும் உதிக்கவிடமின்றி சுத்தத்தோடும் நீங்கிவிடும். அவ்வானந்தமிருந்து பிரகாசிப்பதிகொண்டு சச்சிதானந்தஸ்வரூபமாகும், இவ்வநுபவம் எக்

காலத்தும் நீங்காமல் பலிக்குமாறு இத்தாரணை மென்மேலும் ஆசிரயிக்கத்தக்கது. குணங்கள் விஷயங்கள் இவைகள் பிரதிபந்தமானதால் அஃது உதியாமலிருக்கும் பொருட்டு சபீஜயோகத்திற் கூறிய குண முதலிய நிராகரணம் இவ்விடத்தும் சம்மானம் என அருளிய பிரகாரம் அடைந்து மாணாக்கன் கிருதார்த்தனாகினான் என்பது இச்சாஸ்திர சம்பிரதாயம்.

இதில் பிரகிருதி அதன் குணம் இவைகளின் சம்பந்தத்தையுடைய புருடர்களின் பரன் பிரகிருதி சம்பந்தத்தால் நித்திய முக்தனெனவும் மற்றொருவன் நிர்லேபனாயினுங்குணபெந்தத்தால் பெத்தனெனவுஞ் சமாதி சமஸ்கார விஷேசத்தால் குணபெந்தம் நீங்கில் முக்தனெனவுங் காணப்படுவதில்; அக்குணபெந்தம் நிர்லேபனாகிய அப்புருடனை யெங்ஙனம் பெந்தப்படுத்தியதென நோக்கில், நிர்லேபமாகிய ஆகாசம் ஓர் *குணங்கொண்டு பெந்தப்படவுபகாரப்படாததுபோலநிர்லேபனாகிய இப்புருடனும் அங்ஙனமாகத் தகான். குணமெனுங் கயிற்றால் ஆகாசம் பெந்தப்படாவிடினும் சப்தமெனுமோர் குணத்தால் சம்பந்தமுடையதாகிக்குறிக்கப்படுவதுபோல இவனும் அங்ஙனமாகலாமெனில் சப்தம் ஆகாசத்தின் குணமாதலால் அஃது கூடும். அவை பிரகிருதியின் குணங்களாதலால் இவனைச்சம்பந்தியா. ஆன்மாவின் குணமாயின் ஆகாயம்போல் ஜடமாவான். அங்ஙனம் ஆயின் குணபெந்தத்தால் துக்கமும் சமாதிசமஸ்கார விசேஷத்தாற் கிடைத்த ஆனந்தப்பிராப்தியும் ஜடமாகிய கடத்தையணுகாமைபோல் அவனை நீங்கி நிற்கும். அப்படியே குணங்களை பெந்தப்படுமாறு சம்பந்தித்தல்

*குணம்—கயிறு.

அதனை நீக்குமாறு சாதனத்தையடைதல் அதன் பலத்தா ல் பெந்தம் நீங்கி முக்தியடைதல் இவ்வனைத்தூர் தொழிலா னதால் ஜடமேயாகும் சித்தன்றி மற்றொன்று நிர்லேபமா யிராது. மேலும் முக்தி பெந்தம் இவ்விரண்டும் சித்திக்கு ங்கால் அவைகளுக்கு இப்புருடன் அந்நியனாகவிருந்துநோ க்கவேண்டும். அங்ஙனம் நோக்கின் எவன் ஆதீனமாயிவ் விரண்டும் கடாதிகள் போல் அசுவதந்திரமாய்ப் பிரகாசிக் கின்றவோ இவைகள் திருஷ்டாவாகிய அவனை யெங்ஙனஞ் சம்பந்திக்கும்.

இப்பிரகாமே புருஷபேதமும் சித்திக்க வல்லமையற் று ஓர் புருஷதத்துவமாகவே பவிக்கும். ஆதலால் சாதகா கள் சாதனங்களை வருத்தத்துடன் சாதிக்கவேண்டுமென்ற கருத்துக்கொண்டு இக்குணபெந்தத்தை யுண்மையாகவே நிர்லேபனாகிய ஆன்மாவைச் சம்பந்தித்ததெனக் கூறியதே யன்றி வேறில்லை.

மேலும் கர்த்தாவாகினும் போக்தாவன்றெனவும் போ க்தாவாகினும் கர்த்தாவன்றெனவும் கூறியதில், தன்னைக் கர்த்தாவாய் நோக்கித் தன்னில் போக்துருத்தன்மையை நீக்கவேண்டும். அப்படியே மற்றொரு பாகமுமாகும். இங் ஙனம் ஆகின் கிரகிக்கப்படவும் நீக்கப்படவுங்கூடிய கர்த்தி ருத்துவ போக்திருத்துவங்கள் ஜடமாகிச் சம்பந்தியாமல் நீங்கும். அன்றியும் புருடன் கிருத்தாவாயாவது போக்தா வாயாவது இருக்கின், அத்தன்மை அவனது சொரூப லக்ஷ ணமாய் மோக்ஷதிசையிலும் நீங்காமலிருப்பதாய் அந்நிலை யைக் குற்றமுள்ளதாகச் செய்யும் ஆதலால் நிர்லேபனாகிய சித்துரூபபுருடனிடமா யாதொன்றுஞ் சம்பந்திக்க நிலை பெறாது.

புருடனை சம்பந்தித்து பெந்தப்படுத்தாவிடினும் இத்துவைதஞ் சத்தியந்தானோவெனில், அங்ஙனமாயின் இத்துவைதப் பிரபஞ்சம் எதினிடமாயுதித்துப் பிரகாசித்தொடுங்குகின்றதெவ ஆலோசிக்கின், இச்சித்து ரூபனாகிய புருடனைத்தவிர வேறாசிரயமில்லை. அவனிடத்து இப்பிரபஞ்சமுதியாது; உதிக்கில் காரிய காரணத்துவம் நிரூபிக்கவேண்டும்: அஃதோ கூடாதென்பதில் வஸ்து நிர்க்குணமென்பதே யசனிபாதம்போலக்கர்ஜித்து நிற்கும். ஆ! ஆ! இத்துவைதந்திரும்பக்காணவிடமின்றி புருடார்த்தத்தை யடைவிக்க வந்த இச்சாஸ்திரத்தின் கருத்து, துவைதத்தை சத்தியமாக உறுதிப்படுத்த தன்மையுடையதாமோ? ஆகாது. ஆதலால் இச்சேசுரசாங்கியத்திற்குஞ் சூக்குமமாக ஆலோசிக்கின் இவ்வத்துவைதமே தான் கருத்தென: அவ்வாறே மாணாக்கனுஞ் சபீஜ நிர்ப்பீஜ யோகங்களாலும் அடைவது தன்னையே யெனக்கண்டு இம்மதமும் அத்துவிதா விரோதமெனத்தெளிந்தான்.

முற்றிற்று.

---

## ௬—வதுபாகம் பௌத்தமதம்.

---

மாணாக்கன்:—ஆசிரியர் உரைத்தருளிய பிரகாரம் மேற்கூறிய மதங்கள் சங்கேத பேதத்தால் வெகுபேதமுடையவையாய்த் தோன்றினும் ஆராய்ந்தறியுங்கால் அத்துவைதசித்தாந்தமாகிய வொன்றேயவற்றின் உட்கருத்தெனவோர்ந்து புறமதங்களின் கொள்கையும் அறிய அவாவுற்று பௌத்தமத சம்பிரதாயத்தை அருள் செய்யவேண்டுமென்றடிபணிய;

ஆசிரியர்—பஞ்சஸ்கந்தமெனவும் க்ஷணிகவிஞ்ஞானமெனவும் ஆலய விஞ்ஞானமெனவுஞ் சில சங்கேதமிம் மதத்திலுண்டு. பஞ்சஸ்கந்தமென்பது ஞானேந்திரியபஞ்சகமாகும். க்ஷணிகவிஞ்ஞானமென்பது க்ஷணே க்ஷணே உண்டாய் மறையா நின்ற புத்தியாகும். ஆலய விஞ்ஞானமென்பது தீபத்திலுண்டாகிய சுவாலைகள் கணந்தோறும் உண்டாய் நாச மடைவதாயினும் அந்த இந்த தீபச் சுவாலையெனப்பிரதிதிகாணப்படுவதால் அந்நீதி கொண்டு ஜாத்திக சுபாவத்தால் நித்தியமே யாதலால் அவ்விஞ்ஞானத் தன்மையேயாகும். இக்ஷணிக விஞ்ஞானமாகிய ஓர் பாகமே பஞ்சஸ்கந்தமெனும் பரிணாமத்தையடைந்து அப்படியேயதன்வழியாய்த்தோற்றமுடைய ஸ்தூலபிரபஞ்சமாகிப் பரிணமித்து நிற்கும் ஆதலால் பிரபஞ்சங்காரியமாகும். க்ஷணிக விஞ்ஞானத்திலுள்ள வுற்பத்தி நாசங்கள்கணபேதத்தால் சித்தித்திருப்பதுபோல, இப்பிரபஞ்சமும் க்ஷணந்தோறுங்கிரமமாய் உற்பத்திஸ்திதி நாசங்களைப் பொருந்தி நிற்கும். இவ்விஞ்ஞானமே யான்மாவெனப்படும். விஞ்ஞானமாகிய புத்தியே எவர்களுக்கு ஆன்மாவோ அவர்கள் பௌத்தர்களெனப்படுவார்கள்.

அங்ஙனம் பிரபஞ்சம் க்ஷணபங்குரமாகிய அநித்திய வஸ்துவாதலால் அதனை யபிமானித்தல் பந்தமெனவும் அதனை நீங்கிசரம விஞ்ஞானஸ்புரணமாகிய ஸ்திதியின் பிராப்தியே மோக்ஷமெனவும் பஞ்சஸ்கந்தங்கள் விடயங்களை முன்னிலைக்கொள்ள க்ஷணிகவிஞ்ஞானமாகிய புத்தி யதன் வழியே பிடகநீதி விரோதமாய் விடயங்களைப்புசித்தல் பாவமெனவும் நீதியாய்ப்புசித்தல் புண்ணியமெனவும்இவர் கள் கூறுவதில் கணந்தோறும் பங்குரப் படுகின்ற விஞ்ஞா

ணபின்னஸ்வோத்தரமாய் இல்லாத சரமவிஞ்ஞானமாத்திர ஸ்திதியையடைவதே முடிந்ததில்லை. அதின் பிராப்தியின் பொருட்டு இப்புத்தியின் சுபாவமான உற்பத்தி ஸ்திதி நாசங்களை பெதிரிடாமலிற்கில் அவைகள் அவ்விடத்துப்பரிணும வல்லபத்தை நீங்கிவிடும். அஃது நீங்க அக்காரணமாகிய க்ஷணிகவிஞ்ஞானம் விஞ்ஞான சந்ததையிலடங்கி நசித்திடும். அங்ஙனமே யதன்பரிணுமமாகிய குண குணியான பிரபஞ்சரூபகாரியமுங் காரணகுணம் நசித்ததுபோல நசித்துவிடும். அப்படியே பஞ்சஸ்கந்தமும் நசித்துவிடும். இங்ஙனங்காரண காரியமாகிய விஞ்ஞான பரிணுமம் நீங்கின் இன்மையை பெதிரிடாமலும் இனிமேல் உதிப்பு விஞ்ஞானரூபமாக வருமாறு நேரிடாமலுமுள்ள ஸ்திதி அநுபவமாயிருப்பதால் அவ்வநுபூதியேஜாக்கிரக சுபாவமான சரமவிஞ்ஞானநுபூதியாகும். அவ்வநுபூதி நீங்காமலிருப்பதே மோக்ஷமெனப்படும்.

இங்ஙிலையை யிவ்வாறே படைந்துபார்க்கின், அவ்விதம் பிரகாசிக்கின்ற விருத்திக்கு அந்நியமாய் ஒரு திருஷ்டாவாகிய சித்தை நிரூபித்து நிற்கும். மேலுந் தனக்கந்நியமாகியுந் தனக்காதாரமாக வொரு விஞ்ஞானமிலதாகியுமுள்ள சரமவிஞ்ஞானத்தின் ஸ்திதியே புருஷார்த்தமாயின்; அவ்வாறே அவ்வநுபூதி யுண்டாகுங்காற் கூறிய லக்ஷணப் பிரகாரம் நிஷேதஞ்ஞானப்பிரதியோகிகமாகவே சித்திக்கும் அவ்விதசப்பிரதியோகிகஞான லக்ஷணம் பொருந்திய அவ்விஞ்ஞானமுள்ளபடி யநுபவத்துக்குவரக் காட்சிப்பட்டு,பிரபஞ்சம் போல அநித்தியத்தன்மையைப்பொருந்தித் தனக்கொரு காரணத்தை அபேக்ஷித்து நிற்கும். அங்ஙனமாயின் எக்காலத்தும் விகார நிர்விகாரத் தன்மைகளை பெதிர்டாத

ஒன்று போற் பிரகாசிக்கின்ற சுயஞ்சித்தைத்தவிர அவ்விடத்து வேறு காரணமில்லாததால், அச்சித்தையே சாதகர்களுக்கு வெகு வாய்ப்பிராப்தியாகும் பொருட்டு சரமவிஞ்ஞானமெனுமோர் பதவியைநிருபித்து அதனையேபரகதியாகக் கூறினார்கள்

மேலும் இச்சரம விஞ்ஞானமென்றது இக்ஷணிகவிஞ்ஞானத்தின் ஆரம்பமுதல் அவசானம் வரையுள்ள பின்ன பின்ன மாகியஸ் பூர்த்திகளில் ஒன்றா? அல்லது அவற்றிற்கந்நியமாகி அவசானசமையத்தில் பவிக்கின்றதா? அல்லது முன்னமேயிருக்கின்றதா? எனப்பார்க்கின், இக்ஷணிகவிஞ்ஞான பரம்பரைக்கு ளொன்றா யிருக்குமாகில் மற்றவை தனது காரணமானதால், அக்காரணகுணத்தை இஃதும் பொருந்தி யநித்தியமாய் நிலைபெறாமல் நீங்கிவிடும். அந்நனம்நீங்கில்தனக்குக்காரணமாயுள்ளஓர் விஞ்ஞானம் நசிக்கத்தான் உற்பவித்ததுபோல அக்குணம் பொருந்திய தனதுநாசம்நேரிடமற்றொரு விஞ்ஞானமும்அவசியமுதிக்கவேசெய்யும் மேலும் க்ஷணிக விஞ்ஞான பரம்பரைகளுக்கு வேறாகி அவசானத்தில் பவிக்கின்றதாயின் அதற்குக் காரணம் வேண்டும். இக்ஷணிக விஞ்ஞானபரம்பரையே காரணமாயின் முற்கூறியகுற்றம் நேரிடும். மற்றெக்காரணம் ஒப்பினும் அம்படியே அந்நியமாயும் எக்காலத்திலுமுள்ளதாகியுங்கூறில் சுயஞ்சித்தாகிய அத்துவித சொரூபத்திற்கு வேறாயின்றி அனாத்மத்தன்மை பொருந்தி நீங்கிவிடும். ஒருவிஞ்ஞானம் உற்பத்தியாகாமலிருப்பதற்கும் யாதொரு சுருதி யுக்தி யநுபவமெனும் ஆதாரங்காணப்படாததினால் அஃது அம்மதத்தில் நிருபிக்கபபடாமலுமிருப்பதனால் அவர்கள் கருத்திலும் நிர்விசேஷ அத்துவித

சுபாவமேயுளதாம்.

ஆனால் முற்கூறிய சரமவிஞ்ஞானந் தனக்குப் பாவங்களாகிய விஞ்ஞானங்கள் போலன்று. விசேஷமுடையதாகும். அவ்விசேஷமாவது அதன் சொரூபலக்ஷணத்தையெம்மார்க்கத்தாலுங் கண்டிக்கக்கூடாத தன்மையேயாமெனில், அவ்விசேஷம் அவ்விஞ்ஞானத்துக்கந்நியமா? அல்லதுதானே தனக்கு விசேஷமா? தனக்கந்நியமாயின் தான் சித்தித்து விசேஷஞ்சித்திக்கவேண்டுவதால் அந்நியோந்நியாசிரயதோஷமுந்; தானே தனக்கு விசேஷமாயின் சுவாத்மாசிரயதோஷமும்; மற்றொரு விசேஷத்தை யபேக்ஷிக்கில் சக்கிரகாபத்தி அநவஸ்தாப்பிரசங்க முதலிய பெருங்குற்றமும்; முறையேநேரிடும்.

மேலும் க்ஷணிகவிஞ்ஞானத்தின் பரம்பரைகளில் ஆதிமங்களான சிலவிஞ்ஞானங்கள் துறவுமுதலிய சாதனங்களைச்சாதித்தனவாகி, அதன் பயனாகிய புருஷார்த்தத்தை சரமவிஞ்ஞானம் அடைவதாயின், ஒருவன் செய்த நன்மை தீமைகளை மற்றொருவன் அடைவதுபோல் அநீதியாகும். மேலும் பஞ்சஸ்கந்தத்தின் வழியாக விஞ்ஞானமெனும் ஆன்மாவினால் செய்யப்பட்ட அம்மதசம்மதமான நன்மை தீமைகள், அவற்றின் பலத்தையவனுக்கு ஊட்டிவித்துத் தேகநீங்கியதின்பின் அவ்வான்மாவுக்கு ஜநித்தலில்லாததால் புசித்தசேஷமான அக்கருமங்கள் தன்பலமாகிய ஜன்மத்தைக்கொடுக்க வல்லபமுடையதாகி மற்றோர்ஆன்மாவைச்சம்பந்தித்து ஜநிப்பிக்குமென்பது அம்மதத்தில் கூறப்பட்டிருப்பதால் அஃதும் முற்கூறியபிரகாரம் பெருங்குற்றமாகப்பவிக்கும்.

ஆதலால் அவ்விடத்து அத்திபச்சுவாலை பேர்வென்ற ஜாத்திகசுபாவமான நியாயங்கொண்டு போதித்திருப்பதில்,

விஞ்ஞானமயமாகிய ஆன்மாவினிடத்தில் அநித்தியத்துவம் க்ஷணிகவிஞ்ஞானனென்ற சங்கேதத்தால் அச்சாதகர்களுக்குந் தோற்றாமல், அந்நியாயத்தால் நித்தியத்துவம் தோற்றமாறு அங்ஙனம் சங்கேதித்திருப்பினும், அம்மதத்தின் கருத்து அதனாலேயே யான்யாநித்தியனென்பதை ஸ்தாபித்ததாகும். காரியவஸ்துவாகிய பிரபஞ்சம் அநித்தியமென்பதை ஸ்தாபிக்கவேண்டிக் காரணமாகிய க்ஷணிகவிஞ்ஞானத்தை அநித்தியமாய்க் கூறப்பட்டிருந்திடினும், அப்பரம்பரைகளின் ஜாத்திகசுபாவமே அவ்விஞ்ஞானமாகிய ஆன்மாவுக்கு நித்தியத்துவ ஸ்தாபகமாகக் காணப்படுவதால் ஆன்மாஞானரூபமெனவும், நித்தியனெனவும் சாதகர்களறியும்பொருட்டு அதிலெலகுவாகத்திருசியமாகத்தோற்றிய விஞ்ஞானம் ஆன்மாவெனவும், பூர்வங்களான விஞ்ஞானம் நிங்கினும் உத்தரமாக ஓர் விஞ்ஞானமுதியாவிடினும சரமமெனும் ஓர் விஞ்ஞானத்தை நிலைபெற நிரூபித்ததுகொண்டு, முற்கூறியகுற்றங்கள் அப்புருஷார்த்தத்தைச் சாராமலிருக்கவேண்டி, அத்துவிதிய சின்மாத்திர சொரூபமேயவர்கள் கருத்திலும் உளதாகுமெனத் தெரிவித்ததேயன்றி மற்றின்றென்றருள: மாணாக்கன் அங்ஙனமே யிம்மதத்திற்கும் அத்துவிதமே யுட்கருத்தெனத்தெளிந்தான்.

முற்றிற்று.

---

## எ-வது பாகம் சகஜமதம்.

---

மாணாக்கன்—ஆசாரியரது அம்புயச்செம்பதம்பணிந்து இக்காலத்தில் நவமாகத்தங்கள் மேதையாற்கண்டறிந்தது போற் சிலர் அவிவேகாதிக்கத்தாற் கொண்டாடிக்கொள்ளு

ஞ்சகஜமத சுபாவத்தையு மனுக்கிரகிக்கமேண்டுமெனப் பிரார்த்திக்க:

ஆசிரியர்—இச்சகம் உண்டாயிருந்து நசித்துப்பாரம்ப ரையாகவருவதில் இப்பிரபஞ்சத்தின் உற்பத்திஸ்திதி நாச ங்களை முன்னிட்டு ஈசன் ஒருவன் உளனென்பது அவிவேக மேதான்; ஏதெனில் அனைத்தும் சுபாவமாகவே உற்பவிக்க வும் இருக்கவும் நசிக்கவுங்காணப்பட இதற்காக யாராலுங் காணப்படாததாயுள்ள வொருஈசனையொப்புக்கொள்ளுதல் அனுவசியம். மேலும் ஒவ்வொரு மதத்தவர்களும் அவரவர் விவேகத்தவறுதலினால் இந்நிமித்தமாகக் கடவுளென்னும் ஒருபொருளையொப்பி அவனுக்குச்சில விலக்கணங்களையும் பின்னம் பின்னமாகக்கூறி, யாரும் அவரவர்கள் கருத்தின் படி சாதிக்கவல்லமையற்று,வாதமாத்திரப்பிரயோசனமாக நீங்கினார்கள். ஆதலால் இச்சகஜமென்னுஞ் சுபாவமே பிர பஞ்சத்திற்கு உற்பத்தி ஸ்திதிநாச வல்லபமாகச்சித்திக்கி ன்றது. எந்தஎந்தவஸ்துக்கள் எப்படியெப்படி உண்டாயி ருந்து நசிக்கின்றதோ, அப்படியப்படியாகின்றது. அதின் சுபாவமாகும்: என்பதேயிவர்கள் கருத்து.

இதில் இவ்வஸ்துக்கள் முற்கூறியபடி பவிப்பதில் சு பாவத்தின் சேர்க்கையாற்பவிக்கின்றனவா? அல்லது அவை களும் இச்சுபாபவமும் அபேதமா? அங்ஙனம் அபேதமா யினும் இரண்டாயிருந்து அபேதப்படுகின்றனவா? அல்லது ஏகமா? அல்லாமலும் இச்சுபாவம் அந்தந்த வஸ்துக்களிட த்தில் பின்னங்களாகி யநேகப்படுகின்றதா? அல்லது அஃ தும் ஏகமா? என ஆலோசிக்கின் சுபாவத்தின் சேர்க்கை யாற்பவிக்கின், அயத்தை வியாபித்த அனல்போல் அவ்வில க்கணத்திற்கு வேறாகிய விலக்கணத்தைப்பொருந்தி, அத

விஞ்ஞானமயமாகிய ஆன்மாவினிடத்தில் அநித்தியத்துவம் க்ஷணிகவிஞ்ஞானனென்ற சங்கேதத்தால் அச்சாதகர்களுக்குத் தோற்றாமல், அந்நியாயத்தால் நித்தியத்துவம் தோற்றமாறு அங்ஙனம் சங்கேதித்திருப்பினும், அம்மதத்தின் கருத்து அதனாலேயே யான்மாநித்தியனென்பதை ஸ்தாபித்ததாகும். காரியவஸ்துவாகிய பிரபஞ்சம் அநித்தியமென்பதை ஸ்தாபிக்கவேண்டிக் காரணமாகிய க்ஷணிகவிஞ்ஞானத்தை அநித்தியமாய்க் கூறப்பட்டிருந்திடினும், அப்பரம்பரைகளின் ஜாத்திகசுபாவமே அவ்விஞ்ஞானமாகிய ஆன்மாவுக்கு நித்தியத்துவ ஸ்தாபகமாகக் காணப்படுவதால் ஆன்மாஞானரூபமெனவும், நித்தியனெனவும் சாதகர்களறியும்பொருட்டு அதிலெகுவாகத்திருசியமாகத்தோற்றிய விஞ்ஞானம் ஆன்மாவெனவும், பூர்வங்களான விஞ்ஞானம் நீங்கினும் உத்தரமாக ஓர் விஞ்ஞானமுதியாவிடினும சரமமெனும் ஓர் விஞ்ஞானத்தை நிலைபெற நிரூபித்ததுகொண்டு, முற்கூறியகுற்றங்கள் அப்புருஷார்த்தத்தைச் சாராமலிருக்கவேண்டி, அத்துவிதீய சின்மாத்திர சொரூபமேயவர்கள் கருத்திலும் உளதாகுமெனத் தெரிவித்ததேயன்றி மற்றின்றென்றருள: மாணாக்கன் அங்ஙனமே யிம்மதத்திற்கும் அத்துவிதமே யுட்கருத்தெனத்தெளிந்தான்.

முற்றிற்று.

---

## எ-வது பாகம் சகஜமதம்.

---

மாணாக்கன்—ஆசிரியரது அம்புயச்செம்பதம்பணிந்து இக்காலத்தில் நவமாகத்தங்கள் மேதையாற்கண்டறிந்தது போற் சிலர் அவிவேகாதிக்கத்தாற் கொண்டாடிக்கொள்ளு

ஞ்சகஜம்த சுபாவத்தையு மனுக்கிரகிக்கமேண்டுமெனப் பிரார்த்திக்க:

ஆசிரியர்—இச்சகம் உண்டாயிருந்து நசித்துப்பரம்ப ரையாகவருவதில் இப்பிரபஞ்சத்தின் உற்பத்திஸ்திதி நாச ங்களை முன்னிட்டு ஈசன் ஒருவன் உளனென்பது அவிவேக மேதான்; ஏதெனில் அனைத்தும் சுபாவமாகவே உற்பவிக்க வும் இருக்கவும் நசிக்கவுங்காணப்பட இதற்காக யாராலும் காணப்படாததாயுள்ள வொருஈசனையொப்புக்கொள்ளுதல் அனுவசியம். மேலும் ஒவ்வொரு மதத்தவர்களும் அவரவர் விவேகத்தவறுதலினால் இந்நிமித்தமாகக் கடவுளென்னும் ஒருபொருளையொப்பி அவனுக்குச்சில விலக்கணங்களையும் பின்னம் பின்னமாகக்கூறி, யாரும் அவரவர்கள் கருத்தின் படி சாதிக்கவல்லமையற்று,வாதமாத்திரப்பிரயோசனமாக நீங்கினார்கள். ஆதலால் இச்சகஜமென்னுஞ் சுபாவமே பிர பஞ்சத்திற்கு உற்பத்தி ஸ்திதிநாச வல்லபமாகச்சித்திக்கி ன்றது. எந்தஎந்தவஸ்துக்கள் எப்படியெப்படி உண்டாயி ருந்து நசிக்கின்றதோ, அப்படியப்படியாகின்றது. அதின் சுபாவமாகும்: என்பதேயிவர்கள் கருத்து.

இதில் இவ்வஸ்துக்கள் முற்கூறியபடி பவிப்பதில் சு பாவத்தின் சேர்க்கையாற்பவிக்கின்றனவா? அல்லது அவை களும் இச்சுபாபவமும் அபேதமா? அங்ஙனம் அபேதமா யினும் இரண்டாயிருந்து அபேதப்படுகின்றனவா? அல்லது ஏகமா? அல்லாமலும் இச்சுபாவம் அந்தந்த வஸ்துக்களிட த்தில் பின்னங்களாகி யநேகப்படுகின்றதா? அல்லது அஃ தும் ஏகமா? என ஆலோசிக்கின் சுபாவத்தின் சேர்க்கை யாற்பவிக்கின், அயத்தை வியாபித்த அனல்போல் அவ்வில க்கணத்திற்கு வேறாகிய விலக்கணத்தைப்பொருந்தி, அத

னையும் எவ்வண்ணமாகுமென்றெண்ணில், பிறர்கூறிய கடவுள் பரோக்ஷமாயிருப்பதுகொண்டு குற்றங்கூறியதுபோல் இதற்கும்பவிக்கும். இத்தன்மையுடையதென விலக்ஷணப்படுத்திக்குறிக்கின் இவ்வஸ்துக்களுக்குள்ளொன்றாயிருக்கவேண்டும். அல்லது தனித்த விலக்கணத்தையுடையதாயிருக்கின் இப்பிரபஞ்ச விலக்கணத்தன்மையே அதற்குலக்ஷணமாகும். அங்ஙனமாயின் பிரபஞ்சத்திற்கண்ட பொருள்களுக்குஅந்நியமாகியும் பரோக்ஷமாகியும் அநுமானத்தால்சித்தித்ததாகியும்பவிக்கும். அஃதும் பின்னமாயினுங் கண்டங்கண்டமாகி அவ்வவ்வஸ்துக்களிடங்களிற் கூறியபிரகாரம் சித்திக்கவேண்டும். ஏகமாயின் பிரபஞ்சமியாவையும் வியாபித்ததாகியுங்கூறியபிரகாரம் சித்தித்ததாகியும் பவிக்கவேண்டும். கண்டமெனவும் அகண்டமெனவும் அதனைநிர்ணயிப்பதற்குயாரும் வல்லவர் அன்று. அபேதமென்பதில் இரண்டாகியும் அபேதமாயும் இருக்கின்றதெனில்; ஒருவஸ்துவுக்கும் இருதன்மை லக்ஷணமாகாது ஆயின்? இரண்டும் இடைவிடாமல் எங்கும் இருக்கவேண்டும். அதனால் உஷ்ணசுபாவமுடைய அக்கினியில் சீதம் சித்தியாததுபோல. சித்தியாமல் நீங்கிவிடும். ஏகமெனில்: கடம் கலசமென்ற பரியாயநாமம்போல், இவ்வஸ்துக்கள் சுபாவத்துக்குவேறாயில்லாமல் நீங்கிவிடும். இவற்றிற்கு அஃது அந்நியமாயில்லாவிடிற் கூறியபிரகாரம் சுபாவஞ்சித்தியாமல் வாதிக்கப்படும். யோசிக்க அர்த்தமாகிய வல்லபமுடையதெனில்; புத்தியில்லாத எம்மதத்தர்களும் தத்தம் மதங்களையும் இவ்வாயுதங்கொண்டே சாதிக்கத்துணிவார்கள்.

சுபாவம் என்பது ஒரு பொருளன்று. வஸ்துக்களுடைய ஒரு குணந்தானென்னில்; ஒருகுணம் அதற்கு ஆதா

ரமாயிருக்கிற குணியையுண்டுபண்ணும் என்பதைவிட ஆ சியபாத்திரமான வார்த்தையாமறியோம். அப்படியன்று சுபாவம் என்றதனால் ஒருபொருள் மற்றொரு பொருளாக மாறிமாறிப் பரிணமிப்பதேயன்றி பொருக்காலும் நவமா கவொன்றும் உண்டாகவில்லையென்பதே தாற்பரியமென் னில்: எப்பொருள் இங்ஙனம் மாறிமாறிப்பரிணமிக்கிறதெ னப்பார்க்கின் ஒருபொருள் அதின் குணங்களால் நிர்ணயிக் கப்படுகிறதேயன்றிமற்றில்லை. அங்ஙனமாயின் அப்பொ ருள் மற்றொன்றாகப் பரிணமிக்கும்போது தன் குணங்க ளோடு பரிணமிக்கிறதா? அல்லது குணங்களை நீங்கிப்பரி ணமிக்கிறதா? தன் குணங்களோடு பின்னும் இருக்கின் அ துவேயாமன்றி மற்றொரு பொருளாகவில்லை. குணங்களை நீங்கிப்பரிணமித்ததென்னில்? குணங்களாகவே பொருள் நிச்சயிக்கப்படுவதனாற் பரிணமித்தது அப்பொருள் என்ப துகூடாது. குணங்களோடுங்கூடிய பொருள்கள் பரிணமி ப்பதில்லை. அக்குணங்களுக்கு ஆதாரமானது யாதோ அ துதான் இங்ஙனமானது என்னில்: அதுயாது எனப்பார்க் கில்! கடபடாதிகள் போலல்லாமல் அதீந்திரியமாய்ப் பிர பஞ்சவிலக்ஷணமாய் அத்துவிதிய சச்சிதானந்த சொரூப மாகவேயிருக்கும். மற்றெப்பிரகாரம் உரைக்கினும் பங்க ப்படும்.

மேலும் எவ்வண்ணமேனும் இப்பொருள்களாயாவது இவற்றிற்கு விலக்ஷணமாயாவது யுக்திக்கு அகோசரமாகிய விசித்திரவல்லபமுடையதாயாவது இவைகளுக்கு உற்பத்தி ஸ்திதி நாசங்கள் சித்திக்கும்படி சுபாவம் ஒப்பப்படின், அ ங்ஙனம் அஃது பிரகாசிக்கவேண்டும், அங்ஙனம் பிரகாசிக் கின் பரோக்ஷமாயின் சிருஷ்டிஸ்திதி சம்ஹாரங்களைத்தன்

னிடமாய் விளக்குவிக்கின்ற சாஸ்திரசித்த சர்வஞ்ஞ சகல வல்லபமுடைய சுவப்பிரகாச ஈசனேயாவான். யாரோனும் அம்மதத்தர்களில் ஒருவன் கூறியபிரகாரம் இச்சுபாவம் அநுபவசித்தமாய்ப் பிரகாசிக்கின்றதென்னில் அஃதும் சாஸ்திரசித்தமான அபரோக்ஷபிரத்தியக்ப் பிரகாசமேயாகும். ஆதலால் அம்மதமும் ஆலோசிக்கின் அத்துவிதத்தைக்கருத்திலுடையதேயன்றி வேறில்லையென.

மாணாக்கன்—இவ்வற்பமாகிய இம்மதங்கூட ஆலோசிக்குங்கால் மேலானபலனையுடைய பரவஸ்துவின் நிலைமையே பொருந்தியிருக்கின்றதெனத் தெளிந்தேன், ஆயினும் இங்ஙனங்கருத்து ஒன்றாயிருக்க இம்மதங்கள் பின்னபின்னங்களாகப் பலவாறு தத்துவநிரூபணங்களைப் பேதித்துக் கற்பிக்குந்திறமையுடையனவையாகப் பிரவேசிக்கக்காரணமேதென:

ஆசிரியர்—கூறியபிரகாரம் சகல சாஸ்திரங்களுக்கும் அத்துவித பரவஸ்துவே கருத்தாயினும் அஃது வாக்குமனதுக்கு எட்டாத பெருமை பொருந்தியதாதலால் அதனை மேலான சிரத்தாபக்தியால் அவரவர்கள் புத்தித்திறமை வித்வத்திறமையெனும் தோத்திர புஷ்பங்களாகிய சப்தசக்திகளாலும், பின்னபின்னங்களாகவொப்பிய தத்துவபேதவகுப்புக்களாலும், விஸ்தாரப்படமொறு அப்பரவஸ்துவின் லேசமானபிரஞ்ஞையைவிரித்துப், பகுத்தறிவில் அவரவர்களின் விவேகத்திற்குத்தகுந்தபடி பிரகாசிப்பித்து; அவர்களும் அங்ஙனஞ்செய்த பக்திவிசேஷத்தால் மஹாமௌனத்தையேநிலைபெற அடைந்துநின்றார்களேயன்றி வேறில்லை. ஆதலால் எம்மதத்தைச் சார்ந்தவர்களும் பகுத்தறிவால் கிடைத்த மதசங்கேதமுடைய வாதங்களில் வியாமுகப்ப

யாமல், வாதங்கள் அனைத்தும்நீங்குமாறு நின்றிலங்காநின்றதாயும், விருத்திபோதம் தோற்றியொடுங்க ஆதாரமாகியும் இருக்கின்ற மஹாமௌனத்தையே நிலைபெற அடையவேண்டும். அவ்வாறே தெளிவாயாகவென, மாணுக்கன் வாதத்திற்கு இடமற்ற நிர்விகற்பமாம் நிஜானந்த சமுத்திரத்தில் தானே தானாக முழுகிநின்றான்.

மதசங்கேத நிரூபணப்பிரகரணம்

முற்றிற்று.

---

## ௰௧-வது உபாஸ்திநிரூபணப்பிரகரணம்.

---

### முதலாவது நரசிம்ஹோபாஸ்தி.

மாணுக்கன்—பின்பு நிஜானந்தவிலாசவுல்லாச ஆவேசனை விழித்து, ஆசிரியர் அடியிற் பன்முறைவிழுந்து ஆனந்தாபஷ்பம்பொழிந்து, நியாயமுதல் சகஜம்வரையுள்ள மதங்களின் சங்கேதபேத விவாதமெனும் கோதைநீக்கி அத்துவிதானந்த ரஸாமிர்தத்தையூட்டிய பெருங்கருணையால், இவ்விவேகம் அபரோக்ஷ சாக்ஷாத்காரமாக அநுதினநிலைபெறச்சாதனமாகிய சிலபின்னமாகிய உபாஸ்திகளையும் அருள்செய்யவேண்டுமெனப் பிரார்த்திக்க:

ஆசிரியர்—உபநிடதத்தில் பற்பல வுபாஸ்திகள் உபதேசிக்கப்பட்டிருப்பதில் இவ்விடத்தில் நரசிம்ஹ இராமச்சந்திர சுப்பிரமண்ணிய வுபாஸ்திகளின் கருத்தை சுருக்கிச் சொல்லுகிறோம்.

பிரபஞ்ச சூன்யகார விருத்தியாகிய சமஷ்டியானந்தமயகோசத்தை நிலைபெற அடைந்து, அதனை க்ஷீரசாகரமாகவும் சமஷ்டி விக்ஷேபசக்தியை ஆயிரஞ்சிரம் பொருந்திய

ஆதிசேஷனாகவும் பாவித்து, மகத்த்துவத்தையுபாதியாக வுடையவராகியும் த்ரியகூடஸ்த்சிவசைதந்யத்தைச் சொரூப்மாக வுடையவரா்கியுமுள்ள இலக்கணத்தைச் சாதகர்களுக்கு வெளிப்படுமாறு நரசிம்ஹவடிவத்தைத்தரித்ததிவ்வியமங்கள விக்கிரகரை அவ்வாதிசேஷ சயனத்தில் தியானித்து, சமஷ்டிபஞ்சபூதம் சமஷ்டிபஞ்சகுணம் சமஷ்டியிந்திரியதசகம் சமஷ்டிப் பிராணதசகம்-சமஷ்டிமனம்புத்தி இம்முப்பத்திரண்டு தத்துவங்களையுபாதியாயுடைய சைதந்நியம், அந்தந்தவுபாதிபேதங்கொண்டு பிரகாசிக்கின்ற பின்னபின்ன குணசக்தி வைசித்திரியங்களையுடைய பேதவகுப்புப்படியுபாதி பேதத்தால் திவ்வியமங்கள் விக்கிரகங்களைப் பொருந்தி, வரிசையாகச்சூழ மூன்று விருத்தமாகி அ-அ௯௬ இவ்விலக்கம் பொருந்திய வியூகங்களாகப்பவித்து, நரசிம்ஹவடிவம் பூண்டு தங்களது காரணமாகிய பிரதான நரஸிம்ஹமூர்த்தியைச் சகுண நிர்க்குணமாகத் தாதான்மியமுடையவர்களாக்ப் பிரகாசிக்கின்றதாய்த் தியானித்து, அப்படியே மூலநரஸிம்ஹனைச்சந்திரசூடகிரீடராகவும் திரிநேத்திராகவும் நீலகண்டராக்வும் பினக்பாணியராகவும் ஸ்ரீயாரூட இருதயராகவும்: தேவநரபசுபக்ஷி முதலிய யாவத்ஜெந்துக்களும் தன்அவயவங்களைப் பொருந்திச்சலிக்கின்ற தன்மையால் பிரபஞ்சசரீரியாகவும், வீரவுக்கிரபத்திர நரசிம்ம முதலிய இந்நாமம் பொருந்தினவராயும் தாதான்மியமாய்த் தியானித்து அபேதமான நரசிம்ஹப் பிரத்தியக் சைதந்நியத்தால் தனது சரீரத்துள்ளடங்கிய சகலபிரபஞ்சத்தையும் வியூகங்களோடும் வியாபித்துப் பிரகாசிப்பித்துப், பிரபஞ்சத்தையும் வியூகங்களையும் வியாபகமான நரசிம்ஹமூர்த்தியிலயிப்பித்து, அம்மூர்த்தியையும் வியாபகஞ்சதந்நிய வுபாதியிலயிப்பித்து, அவ்வியாபகமான அகண்ட

சைதந்நிய வுபாதியாய்ப் பிரகாசிக்கின்ற மகத்தத்துவத்திற்கு சகஸ்திர பணாமணி மண்டிதனாகிய ஆதிசேஷனை இலக்க மில்லாதகற்பனா சக்தியைப் பிரதானமாய்ப் பொருந்திய மள கருவியின் சமஷ்டி வல்லமை பொருந்திய விக்ஷேபசக்தி யாகக்கண்டு, அபின்னமாய் லயிப்பித்து அப்படியே சம ஷ்டியானந்தமயகோசமெனும் சமஷ்டிலயோபாதியில் க்ஷீர சாகரத்தை யதுமாத்திரமாக சேஷிப்பித்து, அவ்விதவிபா பக சமஷ்டியானந்த மயகோசத்தில் முற்கூறிய மகத்துவ த்தை யானந்தமயகோச மாத்திரமாகச் சேஷிப்பிக்க ஸ்தூ லசூக்கும வுபாதிநீங்கி அகண்டானந்த மயத்தின் அநுபூதி மாத்திரமாகக் காணப்படும். இவ்வுபாதியையும் அதன்றி ருக்கான துரியகூடஸ்தபிரம சைதந்நியத்தி லயிப்பிக்க, அ ச்சூநியாகாரவிருத்தியு நீங்கியாவுஞ்சுத்தசைதந்நியமாத்திர மாகவே பிரகாசிக்கும். அங்ஙனம் பிரகாசித்தலும் அவர து கருணையினாலேதான், அங்ஙனம் பிரகாசிக்கின்ற அவ்வ நுபூதியை விழிக்குங்கால் நிலைபெற நீங்காமல் அடையும் பொருட்டு "நான் வீரன், நான் பத்திரன், நான் உக்கிரன், நான் நிருஸிம்ஹன் நான் நானே" என அக்காமங்களின் பொருளாகிய விருத்தியநுபூதி சக்தியையுள்ளவாறு சைத ந்நியாநுபவத்தில் அடைய, நிஷ்பிரதிபந்த அபரோக்ஷாநு பூதிரசிகனாகச் சாதகன்பயிக்கின்றான். இங்ஙனமுபாசிப்பா யாகவென;

மாணாக்கன்—அங்ஙனமே யதனைப்பொருந்திவவ்வாறு கி வினவுவான். கருணாநிதியாகிய பரமகுருவே இக்காமங் களின் பொருளையுள்ளவாறு மனதிலுதிக்கும்படி யுபதேசி க்கவேண்டுமெனப் பிரார்த்திக்க;

ஆசிரியர்—பிரத்தியக பின்ன பரமாத்மஸ்வரூபமாகிய

தனக்குப் பின்னமில்லாத சகுணநிர்க்குண ரூபியாய்ப்பிர காசிக்கின்ற திவ்யமங்கள நரசிம்ஹ சுதாசிந்துவில் மூழ்கி நிஜானந்த பரவசராய் அருளுவார். * நிருஎ-து வியாபகம் ஸிம் எ-து பெந்தம். ஹ எ-து ஹனனம்-கெடுத்தல். எனப்படும். இம்மூன்று பொருளையுஞ் சேர்க்கில் சர்வவியாபகனுகிய சர்வபந்தகரன் எனப்படும். பிரதிபந்தங்களாகிய எச்சத்துருக்களும் எதிரிட்டு நோக்கத்தகாத உக்கிரகுண விருத்தியையும் அங்ஙனமே எதிரிடின் அதஞ்செய்யாநின்ற வீரகுண விருத்தியையும், திரிவிதபரிச்சேத சூந்யவியாபகருண விருத்தியையும், எக்காலத்தும் மற்றோர் உதவியில்லாத சொப்பிரகாசகுண விருத்தியையும், கடபடாதிபிரபஞ்ச சத்தாபேதங்களைத்தனது சத்தையால் வாதிப்பதான ஆன்மசத்தையை எவ்விடத்துமுளதாகச் செய்யத்தக்க குணவிருத்தியையும், தனது வியாபகத்தால் சாதகனது பெந்தமனைத்தையும் ஹரிக்காநின்ற குணவிருத்தியையும், பிரதிபந்தங்களான எச்சத்துருக்களும் முன்னிலைகொள்ளப்பயப்படத்தக்க குணவிருத்தியையும், எக்காலத்தும் தனதியல்பால் சாதகர்களுளத்தில் மேலான மங்களசுபாவமுடைய நிஜானந்தகுண விருத்தியையும் யாவரையும் வதைக்காநின்ற பிரமாதமெனும் மிருத்துவை வதைக்கத்தக்க குணவிருத்தியையும், பிரத்தியக்பின்னபரமான்ம சொரூபமாகிய ஐக்கியகுணவிருத்தியையும், அபரோக்ஷமாகிய பிரத்தியக்கேகரஸமாம் அகாரர்த்த சொரூபகுண விருத்தியையும், பொருந்திய உக்கிராதி நாம பேதங்களையுடைய நான்கு பாதங்களால் பிரகாசிக்கின்றதாகியும் முப்பத்திரண்டு வர்ணங்களால் அவ்விலக்கமுடைய அம்சமூர்த்திகளை நிரூபிக்கின்றதாயுமுள்ள ஆநுஷ்டுவமென்னும் மந்திரராஜத்தால்,

* நிரு-என்னும் வடமொழி தமிழில் நரஎன மரீஇயது.

மூன்றுபாதங்கொண்டு மூவர்வரணரூபமான மூன்றவஸ்தைகளும் ஒருபாதத்தால் அவஸ்தாதீத்துரிய கூடஸ்தசிவ் சைதந்யமும், அதில் சகுண நிர்க்குணவிஷயமான வுபாசனை விவேகவிருத்தியநுபூதி யிவைகளால் லபிக்குமாறு உபதேசித்தபடி யநுபூதியையடைந்து, தத்லலாசவிலாசியாய்ப் பவிப்பாயென்றருள்: மாணுக்கனும் அப்படியே அந்நிருகேசரி வித்தியானந்த ரசாயனத்தில் முழுகிக்கிருதார்த்தனானன்.

அங்ஙனம் உள்ளமாணுக்கனைக் கருணையால்நோக்கிக் கிஞ்சித்ரகசியமருளுவார். இந்நாரஸிம்ஹம் வைஷ்ணவமாகப்பிரசித்தமாயிருந்திடினும் இவ்வாறு சிவசின்னந்தரித்திருக்கக் காரணமேதெனநோக்கின், பரமபக்தராகிய பிரஹ்லாதருக்காக அவர் பிதாவைசசங்கரிக்கவேண்டி ஸ்தம்பத்தில்நின்றும் அவதரித்த வோர்பாகங்கொண்டு. நாராயணாநுசாவதாரத்துக்குட்பட்டிருந்திடினும், வேதசிரத்தில் ஜீவப்பிரம ஐக்கியத்தை யுபதேசிக்கவந்த மஹாவாக்கியத்தின் மூன்று பதங்களின் ஒருபதம் ஜகத்காரணவஸ்துவைப் பொருளாயுடையதாகி, சதாசிவனையதிஷ்டான தேவதையாகப்பொருந்தினதாகியும், ஒருபதம் பிரத்தியக்பின்ன அத்துவிதீய பிரமவஸ்துவைப் பொருளாகவுடையதாகியும் சிவசக்தி ஐக்கியமாகிய பரமேசுரனையதிஷ்டான தேவதையாகவுடையதாகியும், இவ்வித்தையாலுபதேசிக்கப்பட்ட நரஸிம்ஹர் அவ்வத்துவிதிய பிரமசக்தியாக நிரூபிக்கப்பட்டு அதனைப்பொருந்தியவராகியும் காணப்படுவதாலும். அப்படியே ஸ்மிருதியிலும் பிரதோஷ சமையத்தில் ஹரிசேவையின் நிமித்தம் செல்லலாகாதெனவும், அங்ஙன் செல்லினும் நரஸிம்ஹ இராமச்சந்திர மூர்த்தங்களின்

விஷயமாயிற் குற்றமல்லவென்றுங் கூறப்படுவதாலுஞ் சா க்ஷாத்பரசிவமே இந்நரஸிம்ஹமென மாணுக்கன் அங்ஙன மேதெளிந்து அத்தியானானந்த பரவசனானன்.

முற்றிற்று

## இரண்டாவது இராமச்சந்திரவுபாஸ்தி.

மாணுக்கன்—விழித்து இராமச்சந்திரவுபாஸ்தியை யும் இங்ஙனமே யனுக்கிரகிக்கவேண்டுமெனப் பிரார்த்திக் க ஆசிரியர் அருளுவார்.

நீலமேகசியாமளராகியும் கடகமகுடாதி திவ்யாபர ண பூஷிதராகியும் பீதாம்பரதாரியாகியுங் கர்ணாந்த விஸ்ரா ந்தலோசன பங்கேருகராகியும் ஆஜானுலம்பிபாகுத்துவய ராகியும் சுபாவமாங்காரூட ஜாநகியராகியும் பரதலக்ஷ்மண சத்துருக்ன சமேதராகியும் சின்முத்திராங்கித கரகமலரா கியும் இராவணசம்ஹார நிமித்தம் சின்மயமஹாவிஷ்ணுவி ன் அவதாரமாகியுமுள்ள தசரதாத்மஜ, ராமச்சந்திர திவ் வியமங்களமூர்த்தியை, தஹரமெனுந் தேவர்வாசபூவாகிய அயோத்தியிற் பாவித்து அத்தியானானந்தத்தில் முழுகிப், பின்பு இவ்விலக்கணம் பொருந்திய இராமச்சந்திரமூர்த்தி யைப் பிரணவார்த்தமாக அறிந்து அநுபவிக்கவேண்டும், அதெங்ஙனமெனில் இலக்ஷ்மணமூர்த்தியை அகரத்தின்பொ ருளான சமஷ்டி விஸ்வசைதந்யமாகவும் சத்துருக்னமூர் த்தியை உகரத்தின்பொருளான சமஷ்டி தைஜஸசைதந்ய மாகவும் பரதமூர்த்தியை மகரத்தின்பொருளான சமஷ்டி பிராஞ்ஞசைதந்யமாகவும் இராமச்சந்திரமூர்த்தியை அ கண்ட பிரணவத்தின் பொருளான சர்வசாக்ஷியாம் பரமே

ஸ்வரசைதந்நியமாகவும் அறிந்து, அப்படியே ஜாநகிமூர்த்தியையும் சர்வஜகத் காரணமான மூலப்பிரகிருதியெனவும் கண்டு மூர்த்தாமூர்த்தங்களாகப் பிரகாசிக்கின்ற வுபாசிய ஞேயங்களான இவர்களைத்தியாக விவேகவிருத்தியநுபூதிகளால் தாதான்மியப்படுத்தி அகங்கிரகோபாஸ்தியால் உபாசிக்கவேண்டும்; ஆதலால் அவ்வாறுபாசித்து அவரது பிரசாதத்தால் ஆன்மசொரூபத்தை நிலைபெறவடைவாயாகவென.

அப்படியே மாணாக்கன்—அவ்வாறு உபாசிக்கத்தொடங்கி வினவுவான். தஹரமெனுந் தேவர்வாச பூமியாகிய அயோத்தியென்றது எத்தன்மையதெனு;

ஆசிரியர்—ஸ்தூல சூக்குமோபாதிகளாகிய விஷயப்பிரகாசங்களெனுந் தேவர்கள் நிலைபெற்று வசிக்கத்தக்கதாகியும் யாராலுங்குறிப்பால் தகையத்தகாததாயும் உள்ளது எத்தன்மையதோ அத்தன்மையுடையதெனவருள;

மாணாக்கன்—அங்ஙனமே கருவிகரண வல்லபங்கள் பிரவேசிக்கத்தகாததாயும் இவைகள் தோற்றி யொடுங்கத்தக்கதாயும் விருத்தியின் தோற்றம் ஒடுக்கம் இவைகளால் அற்பபரிச்சேத முடையது போலக்காணப்படுகின்றதாயுமுள்ள தஹரமெனும் முற்கூறிய பொருளுடைய அயோத்தியில் அவ்வாறேறெியாகித்து, அத்தியாகாநுபூதியிற்கண்ட மூர்த்திகளை யுபதேசித்த பிரகாரமே அகாரத்தின் பொருளான சமஷ்டி ஜாக்கிரத்தை யபிமானிக்கின்ற விஸ்வனை இலக்ஷ்மணரோடு தாதான்மியப்படுத்தி அவனையுந்தனது விஸ்வசைதந்நியத்திற்கு அபேதப்படுத்தி உபாசித்து, அவ்வுபாசனபலத்தால் அவரது பிரசாதங்கொண்டு அவ்வகண்டவிஸ்வசைதந்நியம் விஸ்வனாகிய தானாகப்பிரகாசிக்க, அக்

காலத்து அச்சைதந்நியவுபாதியில் தனது ஸ்தூலதேகமும் சமஷ்டிஸ்தூலப் பிரபஞ்சமும் விஸ்வசைதந்நிய மாத்திரமாகச்சேஷித்ததுபோல, அவருந்தனக்கு வேறாயில்லாமல் விஸ்வசைதந்நியமாத்திரமாகவே பிரகாசித்திருக்க, அதனைக்கண்டு மகிழ்ந்து உகரத்தின் பொருளாகியசத்துருக்னனைச் சமஷ்டிலிங்கசரீர அபிமானியாகிய சர்வவியாபக சமஷ்டிதைஜச சைதந்நியத்தோடு தாதான்மியப்படுத்தி, அங்ஙனமே வியஷ்டிலிங்க சரீராபிமானியாகிய தைஜசனுக்குந் தனக்கு அபின்னமாகக்கண்டு, முற்கூறியபிரகாரம் (௩) கருவிவல்லபமாகிய சமஷ்டிலிங்க சரீரத்தையுள்ளும் வெளியும் வியாபித்த அகண்டவிருத்தி சைதந்நியமாத்திரமாகத் தனது (௩) வல்லபங்களையும் நீங்கிச்சேஷிக்க, அவ்வாறே வியஷ்டிசமஷ்டியான சூக்குமசரீரம் சொப்பனவஸ்தையோடும் நீங்கினவாறே இச்சத்துருக்னருங் கருணையாலங்ஙனம் சேஷித்திருக்கின்றதை நோக்கி ஆச்சரியப்பட்டு, மகரத்தின் பொருளானபரதமூர்த்தியை சமஷ்டியானந்தமயகோசமாகியவகண்ட காரணோபாதி சைதந்நியத்திற்கும் வேறுபடாமற்கண்டுபாசிக்க, அவரது கருணையால் முற்கூறிய அகண்டவிருத்தி சைதந்நிய உபாதிலயத்தோடும் இக்காரணோபாதியும் நீங்கிவிட அவரதுபாதியும் அஃதும் திடமாகவே தனக்கு வேறாயில்லாமல் சேஷிக்க, அவ்விடத்து ஸ்தூலசூக்குமகாரணமென்ற மூன்றுபாதிகளும் நீங்கியதால் திரிபுடியிலாதுகொண்டியாதொரு குறிப்புமற்றிருக்க, அவ்விடத்தில் நின்றும் விழித்து பிரணவத்தின் பொருளான கருணாசிந்துவாகிய இராமச்சந்திர மூர்த்தியினது கருணையாலுதித்த விவேகபெலத்தால் சமஷ்டிஸ்தூலசூக்கும காரணவுபாதிகளை [illegible]சித்துப் பிரகாசிப்பிக்கின்றதாகியும் அவ்வுபாதிகளின் ஆவிர்ப்பாவ திரோபாவங்களைச் சம்பந்தியாத[illegible]

யும் அவற்றிற்குச்சாக்ஷியாகியும் அவ்வுபாதிகளால்முற்கூறி
ய மூர்த்தநாமங்களைப் பொருந்தியதாகியுஞ் சர்வசாக்ஷியா
கியுஞ் சர்வஞ்ஞமாகியும் பிரகாசிக்கின்ற ஜகத்காரண சைத
ன்யசதந்ரியமே இராமச்சந்திர மூர்த்தியெனவும் அவ்விதோ
பாதியாம். மூலப்பிரகிருதியே சாநகிதேவியெனவுங்கண்
டு உல்லாசிக்க, வியக்தப்படாத அவ்வியக்தோபாதியாம் அ
ச்சாநகிதேவி தனதுகருணையால் அதுமாத்திரமாகச்சேஷி
க்க, அங்ஙனமே இராமச்சந்திரமூர்த்தியுஞ் சர்வசாக்ஷியாகி
ய பிரத்தியக்பின்ன பரமான்ம சொரூபமாத்திரயாகச் சாத
கனது கூடஸ்தசைதந்ரியத்திற்கு வேறுப்படாமல் தனதுபா
தியுடன் அஃதுமாத்திரமாய்ச் சேஷித்துப்பிரகாசிக்க, சாத
கனும், அவரது கருணையால் நித்தியதிருப்தனுகி நிஜாவந்த
தர்ப்பரனுகி விஞ்ஞாபிப்பான்,

மாணுக்கன்—முன்னுபதேசித்த நரஸிம்ஹமூர்த்தந்தி
ல் சிவசின்னம் வரக்காரணமேதெனச் சங்கித்ததற்கு சமா
தானங்கூறியவாறே, இராச்சந்திரமூர்த்திக்கும் அச்சிஹ்
ன்னமிருக்கலாமோவெனச் சங்கைவரலாம் ஆதலாலதனை!
மூபதேசிக்கவேண்டுமெனப் பிரார்த்திக்:

ஆசிரியர்—பஞ்சமுக-திரிநேத்திர-நீலகண்ட பிநாகபா
ணித்துவ முதலாகிய லக்ஷணங்களைப் பொருந்தியவராக
சாஸ்திராந்தரங்களிற் காணப்படுவதினாலும், இராமதாபநீ
யமெனும் உபநிடதத்தில் இப்பிரணவார்த்தரூபமாக ஸ்ரீ
ராமச்சந்திரமூர்த்தியை நிரூபித்தவாறே அப்பிரணவத்தின்
பொருளாக, அத்துவிதமாகியும் சாந்தமாகியும் துரியமாகி
யுமுள்ள சிவன் அவனே யான்மா. அவனே யறியத்தக்க
வன்." என முடிவாகவுபதேசித்திருப்பதினாலும், அவ்வு
பநிடதத்தால் அறியத்தக்கபொருள் நிஷ்பிரபஞ்ச துரிய

சிவசைதந்யமாகிய ஆன்மாவே அபரோக்ஷாநுபூதியின் பொருட்டுபதேசிக்கப்பட்டதென நிர்ணயிக்கலாம் அவ்வாறே நரஸிம்ஹதாபநீயமும் பிரணவார்த்தின் முடிந்தபொருளாகவுபதேசிப்பதினாலும் அங்ஙனமே மாண்டூக்கியஉபநிடதமும் உபதேசித்திருப்பதினாலும் மேலும் இலக்ஷ்மண பரதசத்துருக்னர்களை விஸ்வதைஜச பிராஞ்ஞர்களாக நிருபித்து இராமச்சந்திரமூர்த்தியை பரமேசுரராக உபதேசித்ததினாலும், இராவணசம்ஹார நிமித்தம் அவதரித்த நாராயணரது தசாவதாரத்துக் குட்பட்டிருப்பதுபோல் தோற்றினும், இச்சுருதியின் பிரபல தாற்பரியத்தால் சிவரூபத்துவயேயுளது. ஆனால் விஷ்ணுவின் அவதாரமாகக்கூறியதில் பிரயோசனமேதெனில், நியூனதானுபாதக ஆஹாரியம் எனுங்குணத்தால் நியோனம்போற்றோன்றலும்விஷ்ணுஆவிர்பாவவிசேஷம் அக்குணத்தாலுங்கூட அங்ஙனந்தோன்று து. சிவாவிற்பாவ விசேஷமென்பதே. மேலும் இவ்விடையத்தில் சூக்குமமாகத்தெளியுமாறு ஒரு நிரூபணமுமுண்டு. பிரணவார்த்தமாகக்கூறிய பிரம விஷ்ணு ருத்திரர் மகேசுரரென்ற பிரணவாதிஷ்டானதேவதைகளில் விஷ்ணு இரண்டாம் அக்கரத்தின்பொருளாக சர்வசுருதி சித்தமாகவிருக்க, அவரது அவதாரமாகிய இராமச்சந்திர மூர்த்தியினிடமாய் அப்பிரணவார்த்தொபாசனையை சுருதிவிதித்தல் எது காரணமென பார்க்கில், இம்மூர்த்தியில் சிவசைதந்ய பிரதிபலனுதிக்குமுளதெனத் தெளியலாம் என்றருள: மாணாக்கனவ்வாறே யான்மாராமனாகி விலாசித்தான்.

முற்றிற்று.

## ௩-வது சுப்பிரமணியவுபாஸ்தி.

மாணாக்கன்—பிரமவித்தியா சம்பிரதாயப் பிரவர்த்தகதேசிக சிகாமணியாகிய சுப்பிரமணியவுபாஸ்தியை யினியருளவேண்டுமெனப் பிரார்த்திக்க:

ஆசிரியர்—நிஷ்களங்கமாகிய ஆகாசத்தில் ஏககாலத்தில் வரிசையாயுதித்துப் பிரகாசிக்கின்ற சட்ராகர சந்திரமண்டலங்களைப்போல் சிதாகாசத்திலுதித்துப் பிரகாசிக்கின்ற சடானனபங்கயங்களையுடைய சுப்பிரமணியரது திவ்வியமங்கள மூர்த்தியை, சந்திரகலாதரராகியும் ரத்நகசிதகனகமயகிரீடச்ட்க அலங்கிருத சட்சிரத்தராகியும், கனகமயரத்ந குண்டலத்துவாதசங்களால் சோபியாநின்ற விகசிதமுககமல சட்கராகியும், தயாங்தோளித அஷ்டத்சங்யனகுமுதராகியும், நீலகண்டராகியும் சொர்னமயகேயூரங்களால் அலங்கிருதமான பன்னிருபுஜராகியும், குக்குடத்துவஜராகியும் சக்திபாணியாகியும் மயூரவாகனராகியும், சுவான்மானந்தவிலாசத்தால் நடிக்கின்ற சரணகமலநூபுரத்தொனியினின்றும் உதித்த நவவீரர்களால் சூழப்பட்டவராகியும், வள்ளிதெய்வானை சமேதராகியும் இவ்வாறே உசிதங்களான சர்வாபரணங்களாலும் பீதாம்பரங்களாலும் அலங்கரிக்கப்பட்ட சர்வாவயவராகியும், குங்குமரக்தவர்ணராகியும் தியானித்து அவரது கருணையால் நிஜபோதானந்தகனனுகப் பவிப்பாயாகவென:

மாணாக்கன்—அப்படியே யுபதேசித்தவாறு தியானித்து ஆன்மானந்தத்தின் முழுகிநின்ஜாரக்ஷணபெத்தகங்கணு ஆன்மானந்தத்தின் முழுகினன்.

ராகிய பரமகுரோ! கருணையாற்கிடைத்த இத்தியானானந்தரசயமிகமானவை யென்சொல்கேன்! நகமுதல் சிரம்வரை இத்

சிவசைதந்யமாகிய ஆன்மாவே அபரோக்ஷாநுபூதியின் பொருட்டுபதேசிக்கப்பட்டதென நிர்ணயிக்கலாம் அவ்வாறே நரஸிம்ஹதாபநீயமும் பிரணவார்த்தத்தின் முடிந்தபொருளாகவுபதேசிப்பதினாலும் அங்ஙனமே மாண்டூக்கியஉபநிடதமும் உபதேசித்திருப்பதினாலும் மேலும் இலக்ஷ்மண பரதசத்துருக்னர்களை விஸ்வதைஜஸ பிராஞ்ஞர்களாக நிருபித்து இராமச்சந்திரமூர்த்தியை பரமேசுரராக உபதேசித்ததினாலும், இராவணவசம்ஹார நிமித்தம் அவதரித்த நாராயணரது தசாவதாரத்துக் குட்பட்டிருப்பதுபோல் தோற்றினும், இச்சுருதியின் பிரபல தாற்பரியத்தால் சிவரூபத்துவமேயுளது. ஆனால் விஷ்ணுவின் அவதாரமாகக்கூறியதில் பிரயோசனமேதெனில், நியூனதானுபாதக ஆஹாரியம் என்னுங்குணத்தால் நியோனம்போற்றோன்றலும்விஷ்ணுஆவிற்பாவவிசேஷம் அக்குணத்தாலுங்கூட அங்ஙனந்தோன்றாது. சிவாவிற்பாவ விசேஷமென்பதே. மேலும் இவ்விடையத்தில் சூக்குமமாகத்தெளியுமாறு ஒரு நிருபணமுமுண்டு. பிரணவார்த்தமாகக்கூறிய பிரம விஷ்ணு ருத்திரர் மகேசுரரென்ற பிரணவாதிஷ்டானதேவதைகளில் விஷ்ணு இரண்டாம் அக்கரத்தின்பொருளாக சர்வசுருதி சித்தமாகவிருக்க, அவரது அவதாரமாகிய இராமச்சந்திர மூர்த்தியினிடமாய் அப்பிரணவார்த்தொபாசனையை சுருதிவிதித்தல் எது காரணமென பார்க்கில், இம்மூர்த்தியில் சிவசைதந்ய பிரதிபலனதிக்கமுளதெனத் தெளியலாம் என்றருளமாணாக்கனவ்வாறே யான்மாராமனாகி விலாசித்தான்.

முற்றிற்று.

## ௫-வது சுப்பிரமணியவுபாஸ்தி.

மாணாக்கன்—பிரமவித்தியா சம்பிரதாயப் பிரவர்த்தக்கதேசிக சிகாமணியாகிய சுப்பிரமணியவுபாஸ்தியை யினியருளவேண்டுமெனப் பிரார்த்திக்க:

ஆசிரியர்—நிஷ்களங்கமாகிய ஆகாசத்தில் ஏககாலத்தில் வரிசையாயுதித்துப் பிரகாசிக்கின்ற சட்ராக்ர சந்திரமண்டலங்களைப்போல் சிதாகாசத்திலுதித்துப் பிரகாசிக்கின்ற சடானனபங்கயங்களையுடைய சுப்பிரமணியரது திவ்வியமங்கள மூர்த்தியை, சந்திரகலாதாராகியும் ரத்நகசிதகனக்மயகிரீடசட்க அலங்கிருத சட்சிரத்தராகியும், கனகமயரத்ந குண்டலத்துவாதசங்களால் சோபிக்கின்ற விகசிதமுககமல சட்கராகியும், தயாங்தோளித அஷ்டத்சநயனகுமுதராகியும், நீலகண்டராகியும் சொர்னமயகேயூரங்களால் அலங்கிருதமான பன்னிருபுஜராகியும், குக்குடத்துவஜராகியும் சக்திபாணியாகியும் மயூரவாகனராகியும், சுவான்மானந்தவிலாசத்தால் நடிக்கின்ற சரணகமலநூபுரத்தொனியினின்றும் உதித்த நவவீரர்களால் சூழப்பட்டவராகியும், வள்ளிதெய்வானை சமேதராகியும் இவ்வாறே உசிதங்களான சர்வாபரணங்களாலும் பீதாம்பரங்களாலும் அலங்கரிக்கப்பட்ட சர்வாவயவராகியும், குங்குமரக்தவர்ணராகியும் தியானித்து அவரது கருணையால் நிஜபோதானந்தகனனுகப் பவிப்பாயாகவென:

மாணாக்கன்—அப்படியே யுபதேசித்தவாறு தியானித்து ஆன்மானந்தத்தின் முழுகிதினஜாக்ஷணபெத்தகங்கணராகிய பரமகுரோ! கருணையாற்கிடைத்த இத்தியானானந்த ரசயகிமானவை யென்சொல்கேன்! நகமுதல் சிரம்வரை இச்

திவ்ய மங்களமூர்த்தியின் ஒவ்வோர் அவயவங்களினும் தி
யானமார்க்கத்தால் அணுகிய சூக்ஷுமமான இவன் மனமும்
வாக்கும் மனமெட்டாத ஆனந்தசிந்துவாக அவ்வவ் அவய
வத்திலும் பதிந்து, நினைக்கவுஞ்சொல்லவும் வல்லமையிலியா
கின்றேன். ஆயினும் இவ்வுபாசனையின் மகிமாரகசியங்களை
இவனது மனதிற் பிரகாசித்து சோபிக்குமாறு கடாக்ஷிக்க
வேண்டுமென:

ஆசிரியர்—ஆனந்தமே பிரமமென்றுபதேசித்த சுரு
தியினால் ஆனந்தத்தையே சொரூபலக்ஷணமாகவுடைய தி
ரிவிதபரிச்சேத சூந்நியமாம் பரவஸ்துயாது அதினுதித்துப்
பிரகாசிப்பதான அநுபவசொரூபமே சுப்பிரமணியமெனப்
படும். எங்ஙனமெனில் சு—ஆனந்தம்-பிரம்ஹ—திரிவித
பரிச்சேத சூந்நியம்—ணியம்-அதினுதித்துப் பிரகாசிப்பது
ஆதலால் சேர்த்துப் பொருள்படுத்தின் முற்கூறியதேயா
கும். நிர்க்குண சிவாநந்தமெனும் பரவஸ்து எங்ஙனமோ
அதன் சக்தியும் அங்ஙனமேயாகும். அங்ஙனமாயின் நிர்க்
குணத்தன்மையால் நிருவிகற்பங்களெனலாம்; அச்சிவசக்தி
களின் சம்பந்தமும் நிருவிகற்பமேயாகும். அதினுதித்த சிவ
சக்திகளின் சமரசாநந்தாநுபூதியும் நிருவிகற்பமேயாகும்.
அவ்விதமாயின் சிவசக்தியபேதமாயுதித்த அச்சமரசாநந்
தாநுபவமே யுள்ளவாறு தனதியல்பு வெளிப்படும் நிமித்த
ம் சுப்பிரமணியமெனும் அனவர்த்தநாமாவைப்பொருந்தி
முற்கூறியபிரகாரம் திவ்யமங்கள மூர்த்தம்பூண்டு பிரகா
சிக்கின்றது. ஆதலால் சகுணபாகத்திலுஞ் சிவனதுமுகம்
ஐந்துஞ் சக்தியினதுமுகம் ஒன்றுங்கூடிய ஆறுமுகத்தால்
சிவசக்தி ஐக்கியத்தைத்தெரிவித்து, அப்படியே யோகமா
ர்க்கத்தாற் பரவஸ்துவை யடையத்தக்க ஆதாரமான சடா

தாரங்களிலும் அவைகளில் உபாசிக்கத்தக்க பரவஸ்துக்க
ளுந்தானே யெனக்காட்டும் நிமித்தம் ஷண்முகத்தவராகின்
றார். சுருதியிற் பிரணவத்தின் பூரணப்பொருளாகப் பரமசி
வன் உபதேசிக்கப்பட்டிருப்பதுபோல அங்ஙனமேயித்திவ்
யமங்கள மூர்த்தமும் உபதேசிக்கப்பட்டிருப்பதனுல், நாத
ப்பிரமமாகிய பிரணவத்தின் சப்தசக்தியால் அனுமாத்திர
மேனும் பிரணவார்த்தரான சிவனுக்கும் இச்சுப்பிரமணிய
ருக்கும் பேதமின்மையால் இவரே பரவஸ்து. இந்நாதப்பி
ரமமாகிய பிரணவத்தின் அம்ஸ அதிஷ்டான தேவர்களாகி
ய பிரமா விஷ்ணு ருத்திரர் மகேசுரர் சதாசிவர் விந்துநாத
ம் சக்தி சிவமெனும் ஒன்பது தத்துவங்களும், பிரணவரா
கிய இச்சுப்பிரமணியரது நாதப்பிரமமாம் தனது நடிக்கின்
ற அடியின் நூபுரஸ்தானங்களான அம்சவொலியினின்று
முதித்த அந்நவதத்துவங்களின் பூரணவல்லபங்களே நவ
வீரர்களெனும் நவவடிவங்கொண்டு உபாசிக்கின்றன. பிர
ம-விஷ்ணு-ருத்திரர்களின் உபாதிகளாகிய முக்குணங்கள்
பிரபஞ்ச காரியோன் முகங்களாக இத்தேவர்களோடும்
பிரகாசிப்பதைத்தன்னிற்றரித்து; அவைகள் தனது அம்ச
ங்களாகக் காட்டாநின்ற பிரகிருதியெனுந்தத்துவம் ஏகா
காரமாகிய திரிசூலமெனும் அஸ்திரதேவன் ரூபம்பூண்டு
பசுபதியினது சின்னமாவதுபோல, இத்தேவரது கரமல
ர்க்கிற்றரித்த சக்தியெனும் அஸ்திரதேவ சின்னம் அவ்வா
று முக்குணத்தின் பேதத்தைத்தரியாததுகொண்டு, அ
கண்ட சிற்சக்தியேயாம். அப்படியே—கு-பூ-அதனைக்குட்ட
லாஞ்செய்வதே யியல்பாயிருப்பதால் கோழிக்குக் குடமெ
ன்று பெயராம். ஆதலால் "பூ-சத்தை" என்ற சூத்திரத்
தால் சுவ சத்தாரூபமாகிய ஞானப்பிரகாசத்தால் அனாத்
மாகயுந்துவைதமின்றிப் பேதிப்பதும்; கு-குச்சிதமாகிய மூ

லாஞ்ஞானம் விசேஷபகாரியரூபத்துவைத்தப் பிரபஞ்சம்;
இதனை அத்துவிதமான தனது சொரூபசத்தையால் பேதி
ப்பதும் பொருளாயுடைய நிஜரூப சின்னதரராகியும் விளங்
குகின்றார். நானாவித விசித்திர தர அலங்காரம்பொருந்திய
முக்குணமெனும் பிரபஞ்சநாம் ரூபவிலாசமான தோகை
யை விரித்தாடாநின்ற முக்குணத்தின் சமுதாயம்பொருந்தி
ய மூலப்பிரகிருதியா மயூரத்தை வாகனமாயுடையவராயும்;
பின்னபின்ன அபிவியஞ்சகவுபாதிகளையநுகூதமாக வியா
பித்துப் பிரபஞ்சமியாவையும் பிரகாசிப்பிக்க ஆதாரமாயி
ன்ற பிரபஞ்சசுவ சியாபாதக சர்வாதாரஞானபிவியஞ்
சகவுபாதியிற் பிரதிபலித்த சைதந்நியத்தை இலக்கணமாயு
டைய தேவயானையெனுஞ் சக்தியால் அலங்கரிக்கப்பட்ட
ஓர் பாரிசராயும், அந்தர்முகமாயும் பகிர்முகமாயும் பிரகா
சிக்கின்ற பிரமவிலாசமாகிய சிருஷ்டியாதி வல்லபமாயுஞ்
சொரூபசத்தினியல்லை எக்காலத்தும் நீங்காது நிலைபெறச்
செய்யாநின்ற நவதத்துவங்களுடையவும் பரதத்துவத்தினு
டையவுஞ் செல்வங்களாகிய குசுமங்கள்விகசிக்கித்தக்கவு
பாதியெனுங் கொடியிற் பிரதிபலித்துப் பிரகாசியாநின்ற
சைதந்நியத்தை இலக்கணமாகவுடைய வல்லியெனும் ஓர்
பாரிசராகியுஞ் சமஷ்டியகந்தாபீஜமாகிய சூந்யாகார அவ்
வியக்தமெனும் நகரத்தைத்தவத்தால் பிராப்தமாகிய மகா
அகங்காரத்தில் பிரதிபலித்த அநேகபிரமாண்டாதிபதியா
கிய அகங்காரியெனுஞ் சூரனைக்கண்டு, முற்கூறிய இலக்க
ணம்பொருந்திய அஸ்திரத்தால் தனது சத்லக்ஷணத்திற்கு
வேறுபடாத நித்தியத்துவத்தையளித்து, அவனதுபாதியை
மயூரமெனும் வாகனமாக்கியும், அவ்வுபாதியிற் பிரதிபலித்
த அவனது அகங்காரி சைதந்நியத்தையவ்வுபாதியினின்று
ம்நீக்கி ஞானார்த்தம்பொருந்திய குக்குடத்துஜமாகச்செய்

தும் அவ்வாறு பிரகாசியாநின்ற ஸ்ரீ ஜெயந்திபுரமெனுஞ் சச்சிதானந்தபுராதிபராகிய சுப்பிரமணியனை அபாரமகிமை பொருந்தினவனென்றறிந்து தியாநிப்பாயாகவெனவருள;

மாணாக்கன்—உமையினது நூபுரத்தினின்றும் தெரித்தநவரத்நங்களிற்பிரதிபலித்த நவசக்திகளிடமாய்ப் பரமசிவத்தின் பிரதிபலனமுண்டாக நவவீரர்கள் உற்பத்தியானதாய் பிரபலப்பட்டிருக்க, ஷண்முகரது நூபுரத்தினின்றும் அவர்கள் உற்பவித்ததாகக்கூறியது எங்ஙனங்கூடுமென;

ஆசிரியர்—அதற்குஞ் சிலவிடத்திற் பிரமாணமுளது தான் மேலுந்தேவிக்கு உமாவென்ற நாமம் பிரணவரூபமானதாலும் பரமசிவனது நாமமும் அப்படியேயாதலாலும் பிரணவமென்பது நாதப்பிரணவமாதலாலும் இவ்விடத்து அஃது நிரூபிக்கப்படுதலாலும் ஏகார்த்தவாசகமாய் அபேதமாதலாற் கூடலாம் என;

மாணாக்கன்—அச்சம்சயம்நீங்கிஉபதேசித்தபடி தகராகாசத்தில் அத்திவ்யமங்கள மூர்த்தியைத்தியாநித்து விவேகவிருத்தியால் நோக்க, அவ்வாறே அவரது கருணையால் அவ்விருத்தியநுபவங்களுதிக்க அவ்வநுபூதியில் அத்துவித சச்சிதானந்த விலாசமாம் பிரத்தியக் பின்னபரமாத்மசொரூபமாகிய சுப்பிரமணியனை அபரோக்ஷாநுபூதியாகவடைந்து, அங்ஙனமே அநவர்த்தநமாவாகிய திரிவிதபரிச்சேதமில்லாத ஆனந்தவடிவமாகியே பிரகாசித்திநின்றான்.

முற்றிற்று.

## ௰௨-வது பிரணவாநுபூதிநிரூபணப்பிரகரணம்.

### ௧-வது ஞானமார்க்கம்.

பின்பு மாணாக்கன் விழித்து ஆசிரியரிருதாளைவணங்கி அன்னையினுங்கருணை மிகுந்தசுருதிகூறிய கர்மபக்தியோக ஞானங்களினநுஷ்டாநுபூதியை ஓரிடத்தநுபவிக்கும்படி தெரிய அருளவேண்டுமென:

ஆசிரியர்—சுருதியின் சாரமாகிய பிரமப்பிரதீகமான ஏகாக்ஷரமென்னும் பிரணவாநு சந்தானத்திற்றெரிய வருளுகின்றோம். அஃதாவது உள்ளபடியதிகாரமுடைய யதீந்திராளென்னும் வைதீகசிரோரத்நாளான ஞானிகளது இருதயத்தில், சிதேந்திரியர்களாயுஞ் சிதப்பிராணர்களாயுஞ் சிதமனஸ்கராளாயும் பவித்ர அநுசந்தானிக்குங்கால், அகர-உகர-மகரங்களாகிற மூன்றக்கரங்களைத் தன்னுளடக்கிய ஏகாக்ஷரமென்னும் பிரணவம் பிரகாசித்துநிற்கும். அங்ஙனம் பிரகாசிக்குங்கால், பிரத்தியக்ஷ அநுமான உபமான சாப்தங்களாகின்ற பிரமாணங்களாற் பிரகாசிக்கத்தக்க விராட்சரீரமான அநேககோடி பிரமாண்டமென்னும் ஸ்தூலப் பிரபஞ்சத்தை உடலைத்தொக்கிந்திரியம்போல வியாபித்துக் கலந்துநிற்கும்,

இவ்வித ஸ்தூலப்பிரபஞ்ச சரீரியான அவனனுபவமணி சத்தியாம் பாகுவல்லமை, திரிலோகாதிபதியாகிய தேவர்கோனென்னும் இந்திரவடிவம் பொருந்தி சொர்க்கலோகத்தில் வச்சிராயுதனாக இலங்கிநிற்கும்,

அவனது சுரோத்திரமென்னுமொருவல்லபம், அஷ்ட திக்கென்னுமோருருவங்கொண்டு: கிழக்கு-மேற்கு-தெற்கு-வடக்கு-கீழ்-மேல் உள்-வெளி என்ற தன்கலைகளால் பிரபஞ்சத்தை யளவைப்படுத்தி, வியவகாரத்தில் தேசபரிச்சேதமின்றி, சாஸ்திரங்களிற்கூறிய கர்மாகர்ம யோக்கியங்களாகியும், யஞ்ஞ தானதவங்கள் முதலான சுகிர்த துஷ்கிர்தங்களென்னும் நல்வினை தீவினைகள் அநுஷ்டிக்கப்பட, தாரதம்மியமுடையவையாகப் பலிக்கத்தக்க தேசங்களை, ஜீவர்களுக்குத்தெரியச்செய்து விலாசித்துநிற்கும்.

அவனது சக்ஷுவின் வல்லபம், இரவி என்னுமோருருவங்கொண்டு, ஸ்பந்த-திருடி-கலை-காஷ்டை-நிமிஷ-கடி-முகூர்த்த-யாம-இரா-பகல்-தினம்-திதி வாரம்-பக்ஷம்-மாசம்-அயனம்-வத்சரம்-யுகம்-கற்பம் என்றது முதலிய கலைகளால் பூதவர்த்தமான பௌஷியது என்னுங்காலவளவையுடையதாகப் பிரபஞ்சத்தைத் தன்னுள்ளடக்கி, சிவாக்ஞையாகிய சுருதி-ஸ்மிருதிகளான நூல்களிற்கூறிய விருவகையுடைய கர்மங்களநுஷ்டிக்கப்பட, அவற்றைத் தாரதம்மியமான பலமுடையவையாகப் பலிக்கச்செய்து, அவற்றுலாபாலாப சுகதுக்க-ஆரோக்கியானாரோக்கிய ஜநந-மரண-சிருஷ்டி-ஸ்திதி-சங்காரங்களென்னுந் தனதளவற்ற கலாசக்தி வல்லமைகளாற், பிரபஞ்சத்தை நியாமித்து விவகாரத்திற்றன் பரிச்சேதமின்றி விலாசித்துநிற்கும்.

அவனது நாவென்னுமொருகருவி, கார்கபத்தியம்-ஆகவநீயம்-தக்ஷிணம் என்னுமூன்றுபிரிவுடைய அக்கினியெனுமுருவமெடுத்து, தன் தகனம்-பிரகாசம் என்ற இரண்டுசக்திகளில், தகனமென்றபாகசக்தியாற், சுருதிகூறிய யாகாதியநுஷ்டான சமயத்திற்றனது பிரகாசமென்னுமொரு

சக்தி பிராமணியமென்று கூறப்பட்ட பிரமதேஜசென்னு முருவத்தைப்பொருந்தி, அப்படியே ஜாதி-வருண-ஆச்சிரம கர்ம நீதி-குல கோத்திர-ரிஷிப்பிரவரபாரம் பரியங்களென்ன, கர்ப்பாதான பும்ஸவன-ஜாதகர்ம-நாமகர்ம-அன்னப்பிராசன-சௌள-கர்னவேதன--உபநயன-விவாக-ஈசான பலி-சர்ப்பலி-ஆதான-பசுபந்த-சோமயாக-சர்வதோமுகவாஜபேய-மகாபவுண்டரீகசயன-திருணசிகேதசயன- விசுவஜித்தென்ற வைதிககர்ம சமஸ்காரங்களென்ன, ஷடங்கசஹித-நியம வேதாத்தியயன-அத்தியாபன-யஜன-யாசக-தானபிரதிக்கிரங்களென்ற ஷட்கர்ம அதிகாரங்களென்ன, இவற்றிற்கு அதிதரசாதாரணமான ஆதாரவல்லபமுடைய தனது வல்லபத்தால், இவ்வித விவஸ்தை பிரசரிக்கத்தக்க வேதோக்த வேத குலீனர்களான பிராமண ஜாதியினிடமாயிருந்து, விதி விலக்கென்னுஞ் சாஸ்திர சமஸ்காரஜக்யப்பிரஞ்ஞா திருஷ்டியாற் பிரபஞ்சத்தைப் பிரகாசிப்பித்து, தன் வருதியிலடக்கி, விவகாரத்தில் தான் சுதந்திரமாய் விளங்கிநிற்கும். இவ்வித பிராமணியமெனும் பிர்ம்ம தேஜசையுடைய அதிகாரிகளான வைதீகர்களால், முற்கூறியயாகாதியநுஷ்டான சமயமுடைய பாகசக்திபொருந்திய வைதீகாக்கினியாந்தன்னிடத்தில், விதிவத்தாக சமித்து-ஆஜியம்-ஹவி-புரோடாசம்-வபை-இவை முதலான ஓமத்திரவியங்கள் வைதீகசம்ஸ்காரமுடையவையாக ஆகுதிசெய்யப்படின், கர்ம-கர்த்திரு-தேவதாகுணசக்தி-அபூர்வாதிபரிஞ்ஞானமுடைய யஜமான்களது சிரத்தாபக்தியுடன் யஜித்தவைகளை அமிர்தங்களாக ஆதிகாரிகத்தேவர்களுக்கு விதிப்படியூட்டுவித்து, அவர்கள் மூலமாய் காலோசிதமான வருஷமுதலியவற்றாற் பிரபஞ்சத்தைக்காத்தலும், இவ்விதிப்படி நடவாவிடின் க்ஷாமாதிகளாற் சங்கரித்தலும், ஆன தன்னுளுநகைக்குட்ப

டுத்தி, விவகாரத்தில் தான் சுதந்திரமாய்ப் பிரகாசித்துநிற்பதோடு, இவ்வித யாககர்த்தர்களையும் அவர்களுளத்தில் அபூர்வமெனும் வல்லபமாயிருந்து, பரலோகத்தில் மேலான தேவபோகங்களைப் பொசிப்பிக்கும்.

இந்தப்பிரகாரம் விராட்டு சைதந்நியத்தின் ஒவ்வொரு கருவிகளே சமஷ்டிப்பிரபஞ்சத்தில் அதிகார தேவர்களாகப்பவித்து, சுருதிகூறிய யஞ்ஞதாநதவங்களாலுஞ் சத்தியாதியாசரணையினாலுஞ் சந்துஷ்டர்களாகிப், பரமசிவத்தின் ஆஞ்ஞைப்படி வருஷமுதலியவைகள் காலோபயோகியாயுண்டாகச்செய்து தநுகரணாதிகளைப்பலமாரோக்கியமிவையுடையவையாகவும் நிஷ்காம கர்மாநுஷ்டானமுடையவர்களது தநுகரணாதிகளைப் பகிர்முகமாகப்பவியாமலும் பாவவிருத்திகளில்லாதவையாகவும் பிரேரித்து நிற்கும்.

முற்கூறிய பிரணவத்தின் ஏகதேசமான அகரமெனுமொருவர்ணத்தினநுபூதியுநிப்பு. இத்திக்பால தேவர்களைக் கருவிகளாயுடைய பிரபஞ்சசரீரியான பிரமாண்டகோடியாம் பிரபஞ்சத்தையும், அதைவியாபித்த சைதந்நியத்தையும், அதன் கருவிகளாம் தேவதாகுணசக்தி வைசித்திரியங்களையும், அவ்விதமாகவுதித்தற்கு ஆதாரமாய்நின்ற கருவிவல்லமைகளையும், அப்படியே வியஷ்டியிலிந்திரியங்களின் அதிஷ்டான தேவதாரூபங்களான இந்திரியப்பிரேரகவல்லபங்களையுங் காண்பித்து அப்படியே சமஷ்டிப்பிரபஞ்சத்தை நானெனவபிமானிக்கும் விராட்டுசரீரியினதிகாரிகமான அவனது அதிகாரசம்பத் தைசுவரியபோக போக்கியமுடைய சத்தியலோகத்தையும், ஜபாகுஸ்மசமானமாகியும் வாணிசமேதமாகியும் சதுர்முகமாயுமிருக்கிற பிரமனெனும் பெயருடைய தேவதாகுணசக்தி வைசித்திரியங்களையும், அவன

'துவியூகமான தாதா-விநாதாபிரஜாபதியென்றதேவதாகுண சக்திவைசித்திரியங்களையும், அவனதுசுதந்திரசிருஷ்டிகர்த் துருவத்தையும். அவனதுவியூகங்களின் அவாந்திரசிருஷ்டி ஸதிதி சங்காரகர்த் திருத்துவங்களையும், தர்ப்பணபிரதிபி ம்பத்தைப்போல தனது வியாபகத்திலுள்ளடங்கிய இவ்வி தஸ்தூலப்பிரபஞ்சத்தை அகமெனவியாபித்த அகண்டாக ங்காரவிருத்தி தர்ப்பணத்தில், அப்பிரபஞ்சத்தையுதிப்பித் துப் பிரகாசிப்பித்து, இச்சமஷ்டி விசுவத்தைச் சரீரமாக வும் அவ்வகம் விருத்தியோடும் பிரிதிவிம்பித்து விளங்கிய சைதந்நியத்தை விராட்டுசரீரியாகவும் இவ்வதிகாரியில் நா னென வியாபித்து விளங்கிய விசுவசைதந்நியத்துக்கு அவ் விராட்டு சைதந்நியம் வேறில்லாததாகவும், அந்தேவதாகு ணசக்தி வைசித்திரியங்கள் இவனதுவாகவும் நிரூபித்துநிற் கும்.

உகரமெனுமொரு அக்கரம், முன்னுதித்த சமஷ்டிப் பிரபஞ்சத்தையும், பிரபஞ்சசரீரியான வகண்டவிராட்லும் ஞுவகண்ட விசுவனது உபாதியையும், அகண்டஞானேந்தி ரியபஞ்சக அகண்ட கர்மேந்திரியபஞ்சக அகண்டபிராண பஞ்சகமென்றவைகளென்ன, சித்தம் புத்தியிலும், அகங்கி ருதிமனதிலுமாகவடங்கிய மனம் புத்தி இவையென்ன, இ ப்பதினேழு தத்துவங்களையுடைய லிங்கசரீரமெனு மகத த்துவம், உள்ளும் வெளியும் வியாபித்துத், தன்னை யுள்ளு ம்வெளியும் வியாபித்துப் பிரகாசிக்குஞ் சைதந்நியத்தோடு முதிப்பித்து அவ்வுபாதியைச் சரீரமாகவும், அதனை நானெ னவகம் விருத்தியால் வியாபித்த வகங்கரரியா பிரணியகர்ப் பசரீரியை, யிச்சாதகனது இலிங்கசரீராவச் சின்ன தைஜ சனுக்குவேறிலாமல் தைஜசனுகவே பிரகாசிக்கும்படிசெய்

து, பரிபாலன கர்த்திருத்துவமாகியுஞ், சங்குசக்கிரதாரியாகியும், இலக்குமி சமேதராகியும், வைகுண்டாதிபதியாகியுமுள்ள நாரணனெனுந்தேவதா குணசக்திவைசித்திரியங்களையும், அவரது வியூகங்களாகிய அவாந்திர சிருஷ்டிஸ்திதி சங்காரகர்த்தாக்களான அநிருத்த பிரத்தியும்ன சங்கர்ஷணர்களான தேவதாகுண சக்திவைசித்திரியங்களையும், இவனது குணசக்தி வைசித்திரியங்களாக விகசிப்பித்து நிற்கும்.

மகரமெனுமொருவர்ணம், முற்கூறியசமஷ்டி ஸ்தூல சூக்குமங்களான பிரபஞ்சங்களையும், அவற்றைச் சரீரங்களாகவுடைய விராட்டு இரணியகர்ப்பர்களென்ற சமஷ்டிசரீரிகளையும், அவர்களினதிகாரிக தேவதாகுணசக்தி வைசித்திரியங்களையும், தனது சக்தியால் சாதகனது அநுபூதியிலுதிப்பித்து, அவற்றினுள்ளும் வெளியும் வியாபித்துப் பிரகாசிக்கின்றதாகியும், அவற்றினுற்பத்தி லயங்களுக்காதாரமாகியும், இத்தூல சூக்குமங்களின் குறிப்பின்றியதாகியும், பிரபஞ்சத் தோற்றத்தையில்லாமற் செய்கின்றதாகியுமிருக்கின்ற சமஷ்டிப் பிரபஞ்சகாரண சரீரமான அந்தரியாமியி னுபாதியையும், அதனைத்திருசிய தரிசன வுபாதிகளின்றிய கேவலதிருஷ்ட்ருவிருத்தியாங்காரண வகந்தாபீஜசக்தியால் வியாபித்துத் தாதான்மியமுடையதாக அவ்வந்தரியாமி சைதந்நியத்தையும், அவனது ஆதிகாரிகமானசம்பத்தைசுவரியங்களுடைய தான கைலாசபதியாகியும், சந்திரசூடத்துவ-கங்காதரத்துவ-திரிநேத்திரத்துவ நீலகண்டத்துவங்களான இலக்ஷணங்களுடையதாகியும்: சுத்தஸ்படிகசங்காசமாகியும், சமஷ்டிப்பிரபஞ்ச சங்காரகர்த்திருத்துவமாகியும், உருத்திராணிசமேதமாகியு முள்ள தேவதாகுண சக்திவைசித்திரியங்களையும், அவனது வியூகங்களான

பவமிருட-ஹர-என்றஅவாந்திரசிருஷ்டி ஸ்திதிசங்காரகர்த்தாக்களான தேவநாகுணசக்தி வைசித்திரியங்களையும், இச்சாதகனது காரண சரீர வுபாதியையுடைய பிராஞ்ஞனுக்கு வேறில்லாமல் அநுபவிப்பிந்து. விவகார திசையில் முற்கூறிய இரண்டு சரீரங்களும், அவற்றின் தன்மையும், இவ்வந்தரியாமியான தனக்கு வியாவகாரிக வுபாதி யெனவும், காரணவுபாதி வியாவகாரிக பரமார்த்தோபாதி யெனவும், நிரூபித்து நிற்கும்.

இம்மூன்றக்கரங்களுக்கர்ரியமாகியும், இவைகளுக்காதாரமாகியும், சர்வவியாபகமாகியுமுள்ளநாதப் பிரமமாகிய பிரணவம், சாதகனதுள்ளத்தில் அநுபூதி ரூபமாகப் பிரகாசித்துத், தன் சக்தியால் முற் கூறிய மூன்று சமஷ்டிசரீரவுபாதிகளுக் கர்ரியனாகியும், கடம் அறியப்படாததுகொண்டு கடாஞ்ஞானமாகிய கடாவரணம் அஃதை அறிவது கொண்டு கடஞானமாகிய கடவிக்ஷேபம். அஃது அறியப்பட்டதுபற்றி கடமென்றகாரியம்-இம்மூன்றும் உபாதானமாகிய மிருத்தில், முக்காலத்தும் கடமில்லாவிடில் அவ்விதமிருத்ஞானம் நிஷ்பிரதியோகியா யெப்படிப் பிரகாசிக்குமோ? அப்படி யியல்பாகவே திரிவித பரிச்சேத சூர்ரியமாய் நிஷப்பிரதி யோகிக சின்மாத்திரமாகப் பிரகாசிக்கின்றதாயும், மிருத்தில் முக்காலத்தும் கடங்காணப்படாவிடினு, மூலக வழக்கப்படி கடமென்ற விவகாரத்தால் பிரதீதிமாத்திர கரணமாகக் கடமொப்பப்படின், இஃதுஇரசிதமென்ற சுத்திரசிதஞானப் பிரதீதியினுலிரசித மொப்பப்படினும் கற்பிதமாகவே சித்திக்கவேண்டும். அப்படிக்கடங் கற்பிதமாகச்சித்தித்திட, முக்காலத்தும் அக்கடோற்பத்தி ஸ்திதிநாசங்களின்சம்பந்தங்களின்றிக், கடவிவகாரத்தாலு பூதாநமெனவும், சப்பிரதியோகிக பாவாபாவபதார்த்தங்

களுக்குள் ஒரு பொருளாகக்கடஞ் சித்தியாததனல், பி
ருத்துநிருபாதாக மெனவுமாகுதல்போல்? இக்கற்பிதமாகிய
பிரபஞ்சமென்ற விவகாரத்தால் அபின்னநிமித்தோபதாக
னெனவும், அப்படியே முக்காலத்துந்திரிவித பரிச்சேதஞூ
நியமாகியும். இப்பிரபஞ்சப்பிரதி யோகிக பாவா பாவ பதா
ர்த்தங்களுக்கு ளொன்ருக வில்லாததுபற்றி நிர்நிமித்த நிரு
பாதாநனெனவும், முற் கூறிய ஞெயஞானஞாதிருவென்னு
ம் சமஷ்டியா மூன்றுவிதப்பிரபஞ்சமும்பிராதீதிகங்களான
தால், சர்வாதிஷ்டான சித்தெனவும் பார்த்து, இவ்விகா
ரங்களையுள்ளும் வெளியுங்கலந்து வியாபித்த பிருதுவிவிகா
ரங்கள்கற்பிதமானது பற்றி நிர்விகாரமாய் அகண்டமாய்
ப்பிரகாசிப்பதுபோல பிராதீதிகசர்வப்பிரபஞ்ச சாக்ஷியா
கவும் நிர்விகாரமாகவும், சமஷ்டியான திருஷ்ட்ருதரிசந
திருசியங்களின்றிய அகண்டசைதந்நியமாகவும், பிரகாசித்
த வகண்டாகார சைதந்யத்தைச், சாதகனது சுழுத்தி
சாக்ஷியான பிரத்தியக்சைதந்நிய மாந்தனக்குவேறில்லாமற்
ருணகவே பிரகாசிப்பித்து, அப்படியேசமஷ்டிபிரபஞ்சஸ்
பூர்த்தி—அஸ்பூர்த்தி-இரண்டும் வியக்தப்படாத விவகாரத்
தை முன்னிட்டு, அவ்வியக்தத்தன்மை சமாகிய சுருதி
யுக்தி யநுபவங்களாற்றோன்றி வியாவகாரிக சத்திய சமஷ்
டிப் பிரபஞ்சத் துவம்சாதிகளுக்கு அதிகரணமாகியும், பர
மார்த்தத்தில், பிரளயசுழுத்தி சமாதிகளில், சப்பிரதியோ
கிகமாயாவது நிஷ்பிரதியோகிகமாயாவது யாராலும் பிர
தீதிகூற வுபகாரப பட்டாததனல் சப்பிரதியோகிக நிஷ்பிரதி
யோகிகமா யின்றிய நிருபாதிக சைதந்யமான சுத்தகேவ
ல சொரூபசிவமாம் பிரத்தியக்க பரோக்ஷ சாக்ஷாத்காரத்
தை யருளி, அப்பிரகாரமே சமஷ்டி துரியோபாதியநுபூதி
யில், அவ்வியக்த ஞேய-அவ்வியக்தஞான-அவ்வியக்தஞா

திரு-வென்ற வுபாதிகளையும், அவ்வாதிகாரிகர்களான. மகே சுர-சதாசிவ-பிந்துதத்துவங்களிலிரண்டு தத்துவங்களை, சந் திர சூடங்களாகியும் நீலகண்டங்களாயுமுள்ள மஹேசுர சதாசிவர்களில், மஹேசுவரர் மஹேசுவரி சமேதராகியும், சதாசிவர் பஞ்சமுகராகியும், மனோன்மணி சமேதராகியும், விளங்குகின்ற மூர்த்தங்களான தேவதா குணசக்திவைசித் திரியங்களுடையவர்களாகியும், பிரமா-விஷ்டுணு ருத்திரர் இம்மூவர்களும் மஹேசுவராது வியூகங்களாகவும் ஈசான- தற்புருட அகோரவாமதேவ-சத்தியோஜாதாளென்ற சிவச் சின்னம் பொருந்திய ஐவர்களும், சதாசிவரது வியூகங்களா கவும், அவாந்தர சிருஷ்டி ஸ்திதி சங்கார திரோபாவஅநு க்கிரககர்த்திருத்துவ முடையவர்களாகவும், நிரூபித்து, இவ்வியூகாதிப வியூகங்களான அவர்களது ஊர்த்துவகைலா ச மஹா கைலாசமென்ற உலகங்களையும், குணசக்தி வை சித்திரியங்களையும், அப்படியே, அவ்வியக்த கர்த்திருத்துவ உபாதியாம் விந்துதத்துவம், அதின் குணசக்தி வைசித்திரி யங்கள் இவைகளையும், அப்படியே புலுதப்பிரணவயோகத் தாற்றோன்றிய அகராதி மூன்றக்கரங்கள், அவற்றின் சமு தாயமாகிய ஓ காரம் விந்து இவற்றை வியாபித்ததாயும், இ வ்வக்கரவிகாரமின்றியதாயும், இவ்விந்துவை யதிகரித்து தீர்க்ககண்டாநாதம்போலொலிப்பிப்பதாயுமுள்ளநாதகத் துவத்தையும் அதின் தொழில் சக்தியால் முற்கூறிய யாவை யும் பிரகாசிப்பித்து, வேத்திய-அபிவியஞ்சக சாமக்கிரி யையில்லாத அந்நாதொபாதி அக்காரணங்கொண்டுநீங்க, தொழிலினுதவியுமின்றிப் பிரகாசிக்குஞ் சிற் சக்தியையும் (அப்படியே சித்தினது சக்தி சிற்சக்தியா? அல்லது சித் தே சக்தி சிற் சக்தியா? என ஆலோசிக்கின்,சித்தினது சக் தியெனில், சித்துக்கு வேறாகி ஜடமாய் விடும். அஃதுசித்

தின் சக்தியாகாது. சித்தே சக்தி யெனில், சித்துக்குவே றிலதாகி சக்தியிலதாகும். அக்கினியின் கனம் போல் அவ் விசமெனில், பார்த்திவாதி காஷ்டகனவுபாதியை நீங்கி, அக்கினியினதுவாகாததுபோல, சித்துபாதியைப்பற்றிய தாருமே யன்றி, சித்தைப்பற்றிய தாகாது. இங்ஙனம்அச்ச க்திதத்துவஞ் சித்துபாதியின்றி சின்மாத்திரமாய்ப் பிர சகாசிக்க, அதனையும், இச்சிற் சக்தியுபாதியை விட்டு அவ் வுபாதியின்றிய சித்து சிவமாதலால், இச்சக்தியுபாதி முற் கூறிய பிரகாரஞ் சித்தியாவிடில், சக்தனெனும் உபாதியின் றிப் பிரகாசிக்குஞ் சித்தே சுயம் பிரகாசமாதலால், இச் சுயஞ் சோதியே பிரத்தியக்கானதால், அங்ஙனம் பிரகா சிப்பித்து, அப்படியே முற்கூறிய யுக்தி யநுபவமுடையசக் தசக்தி பேதமின்றிய சொரூபமே சந்திர சூடமாயும், நீல கண்டமாயும், உமையொருபாகமாயும், நிஜானந்தவிலாசத் தால் ஆனந்த நடனவிலாசியாயும், முற்கூறிய ஆதிகாரிக சதாசிவாதி பிரமாந்த தேவர்களா லுபாசிக்கத்தக்கதாயும், சர்வகாரணமாயும். சர்வேசுரமாயும், சர்வைசுவரிய சம்பன் னமாயும், சுருதி கூறிய ஸ்ரீ குரு மூர்த்தியாயும், சிதாகாயத் திற் பிரகாசித்து, அடியார்களைக் காக்கின்ற சர்வகாரண பாதத்துவகுண சக்தி வைசித்திரியங்களையும் பிரத்தியக்கு க்கு வேறில்லாமலும் பிரகாசிப்பித்து. சர்வார்த்தவாசக சக்தியுடைய பிரணவமும், தனது பொருளான யாவும் மு க்காலத்துஞ் சுயஞ் சித்தான சிவமெனும் பிரத்தியக்கின் சொரூபத்துக்கு வேறாகவில்லாமல், சுயம் பிரத்திபக் மாத் திரமாகவே சித்தித்திடும். ஆகையால் சாதுசிகாமணியா கிய புருஷோத்தமனே இந்தப்படி பிரகாசிப்பாயாகவென் றநுக்கிரகித்தார்.

யாணுக்கனும்—அநு சந்தான விசேஷத்தால் சற்குரு

கிருபை பொருந்திய தனதுள்ளத்தில் பிரவணத்தை யநுசந்தானித்து, அதின் முதலக்கரத்தாற் பிரமாண்டகோடிகளை யப்பிரகாசிக்கின்ற ஸ்தூல ஜகத்தைக் கடத்தைத்திருக்கும் போல வியாபித்து அதனையும் அதிஷ்டான தேவதாபிரேரகத்துவத்தையும், திக்பால தேவதாகுண சக்தி வைசித்திரியங்களையும், சத்திய லோகாதிபதியாகிய தேவதாகுண சக்தி வைசித்திரியங்களையும், விராட்டு சரீரி சைதந்யத்தையும், விசுவனென எனக்கு வேறில்லாமல் நானாகவே பிர்சமுசமாய்க் கண்டநுபவித்தேன் அப்படியே தத்துவாதீதம் வரையாவுமென்னிற்கற்பிதமாகவும், எனக்குவேறில்லாததாகவும் சுத்த சின்மாத்திரமான சிவமாம் பிரதியக் சொரூபமேதான். என உத்கோஷித்துச் சமாதியுற்றான்.

முற்றிற்று.

---

## உ-யோகமார்க்கம்.

---

மாணாக்கன்—சமாதி தெளிந்து ஆசிரியனை வணங்கிச் சர்வார்த்த சங்கிரஹவாசகமான பிரணவத்தால் ஞானிகள் உபாஸிப்பது எவ்விதமென்றதறிந்தேன், யோகிகள் அநுஷ்டிக்கும் விபரத்தையும் அருள்செய்யவேண்டுமென.

ஆசிரிய—மூலாதாரம்-சுவாதிஷ்டானம்-மணிபூரகம்-அனுஹதம்-விசுத்தி-ஆஞ்ஞை—என்றாறுதாரமுள பிருதுவி-அப்பு தேயு-வாயு-ஆகாச-மனம் என்றாறு தத்துவங்களுக்குமங்களாகவுண்டு, இப்பூதஜயமும்-மனோஜயமும்-அருளத்தக்க குண்டலினிசக்தியு முளது. அதற்குப்பிரமக்கிரந்தி விஷ்ணுக்கிரந்தி உருத்திரக்கிரந்தி என்ற மூன்றுகிரந்திகளும், இதற்குமூலபந்தம் ஒட்டியாணபந்தம் கேசரி என்று

மூன்று சாதனங்களுமுளவாம். இவை பூரகம்-கும்பகம்-இரேசகம்-என்று மூன்றுவிதம் பிராணாயாமத்தை யாசிரய மாகவுடையன. இந்தப்பிராணாயாமம். முற்கூறிய பொருள் பொருந்திய பிரணவார்த்த சந்தானத்துடன் ஆசிரயிக்கப்படுங்கால், பூரகத்துக்கு முதலக்கரமும், கும்பகத்துக்கிரண்டாமக்கரமும், இரேசகத்துக்கு மூன்றாமக்கரமும், அவற்றின் அதிஷ்டான தேவர்களாகிய மும்மூர்த்திகளும், மூன்றுவல்லமைகளுமாகும். இதின் சாமாநாப்பியாசகாலத்தில், பிரமனுக்கு மணிபூரகமும், நாரணற்கு அநாகதமும், உருத்திரத்திற்கு ஆக்கினையுமாகத் தானங்களாகும். குண்டலினியினுத்தாபனங்கிடைக்கும்படியான அப்பியாசதார்ட்டிகம் பிராணாயாமதாரணை சித்தித்திடில், மூலாதாரத்தில் கணேசனும், சுவாதிஷ்டானத்திற் பிரமனும், மணிபூரகத்தில் விஷ்ணுவும், அநாஹதத்திலுருத்திரனும், விசுத்தியில் மஹேசுரனும், ஆஞ்ஞையில் சதாசிவனுமாம், பிருதுவிதத்துவத்தின் ஜயகாலத்தில் மூலாதாரத்தில். லகரம் பிரமனும், சுவாதிஷ்டானத்தில் வன்னிதத்துவ ஜபம். ரகரம் உருத்திரனும், மணிபூரகத்தில் அப்புதத்துவஜபம். வகரம் நாரணனும், அநாஹதத்தில் வாயு தத்துவஜபம். யகரம் மஹேசுரனும், விசுத்தியில். ஆகாயதத்துவஜபம் ஹகரம், சதாசிவனும் ஆஞ்ஞையில் மனோதத்துவஜபம் ஜீவாக்ஷரமுமாம்.

ஊர்த்துவகமந சக்தியான பிராணனும், அதோகமநசக்தியான அபானனும்,, சுவாதிஷ்டான மணி பூரகங்களின் சந்தியில், எந்தவிடத்து எந்தச் சாதனத்தால் நாடியின் பரிசமின்றியதால் தனது சக்தியை நீங்கியிருக்குமோ, அந்த சாதனம் மூலபந்தமாகும். அத்திசையிற் பிரமாண்ட பிண்டாண்டங்களை வியாபித்து பிரகாசிக்கின்ற அகாரத்தின் கிரி

யாசக்தியான அரூபமாகிய பிராணவாதத்தால், அத்தூலப் பிரபஞ்சமும் வாதிக்கப்பட்டுத் திருசியத்தன்மையை நீங்கி வாதசரீரமாகச் சேஷித்துத். தன்னை யுள்ளும் வெளியும் வியாபிதது்ப் பிரகாசிக்கின்ற விசுவசரீரியான பிரத்தியக் சைதந்ய, சமஷ்டி ஸ்தூலப்பிரபஞ்ச வியதிரேகாவச்சின் னமான திருக்குமாத்திரமாகப் பிரகாசிக்கும்- விஷயத்துக் குமூலந் திருசியப் பிரபஞ்சமாதலால் அதனை யில்லாமற் பந்திப்பதுகொண்டு மூலபந்தமெனப்படும்.

வாதசரீரமான பிரமாண்ட நாமரூபசூந்யவகண்டா காரத்தைத் திருசியமாகக் குறிக்கு மீக்ஷணசலநம் விருத்தி ரூபமானதால், அதிற்றிருசியசலந வியாபகத்தைபடக்க நீங் கிநிற்கும். அவ்விடத்தீக்ஷணவியாபாரம் அசைவற்ற ஆகா யம்போலப் பூரணமாகக் கும்பிக்கப்பட்டு, சப்ததசலிங்க சரீரத்தன்மையை நீங்கி, நிர்வியாபார:வியாபக ஈக்ஷண மாத்திமாகப் பிரகாசித்து நிற்கும், பதினேழு தொழிலையு நீங்கிவியாபக ஈக்ஷணகமஞ்சித்தித்ததாலும், பதினேழு கருவிகளும் பந்தப்படுதலாலும், இதற்கொட்டியாண பந்த மெனப்படும், இவ்வீக்ஷணமிலயிக்குமிடத்து இஃது தோற் றப்படாமையால், அதனல் இவ்வீக்ஷணம் வியாபிக்கப்படி ன், அதற்கு வேறாகத் தோற்றவிடமின்றி ரேசிக்கப்பட இ வ்விரேசகமென்னு மீக்ஷிதிருவிருத்தியாம். ஈக்ஷணவெதி ரேகாவச்சின்ன சைதந்யாநுபூதியைத் தோற்றிப்பித்து நிற்கும். இதிலகண்ட வீக்ஷணவிருத்தியை நீக்கிக்கிளம்பி, அதின் வெதிரேக வுபாதியா மீக்ஷிதிருவிருத்தியிற் புகுந் தாலும். அகண்டசூக்கும வுபாதி நிச்சேஷமாகப் பந்திக்க ப்பட்டதாலும், ஒட்டியாணபந்தமெனப்படும்.

இந்தப்பிரகாரந் திருசிய தரிசந வுபாதிகளை விழுங்கி

அகண்ட திருஷ்ட்ருபாதி மாத்திரமாய்ச் சேஷித்திருந்தி டினும் நானே ஈக்ஷிதாவென அகங்காரசலனமுதிக்குமிடமா தலால், அவ்வித வியாபகலயாகாரஞாதிருவிருத்தியை நிரா நித்தநுபவிக்க, அவ்வநுபூதி விஷயமாகிய ஞாதிரு அம்சம ஞேயமாகவும் அதனைக்குறிக்குமொரு அம்சம் ஞானமாக வும், அஃதுதித்தொடங்குமொரு அம்சம் ஞாதிருவாகவுந், தெரியவரும். ஞாதிரு ஞேயவிருத்திக்கும் அப்படியே, மற் றவிருத்திக்கும், அதிகாரிக தேவதை பவமிருட-ஹர என் றவர்களும், இஞ்ஞாதிருவின் அபரவிர்துவென்னும் ஞா திருஞாதிரு விருத்தியின் சங்கோசவிகாசமின்றி முத்தொ ழில் சித்தியாததனால், ஈஷத் விகாசம், சிருஷ்டி-ஸ்திதியி லும். ஈஷத் சங்கோசம் சங்காரத்திலு முளதாகும்- அவ்வி ருத்தியையுதாசீனமாக வபிமானித்துத்தனது, சத்துவ பிரா சுரியத்தாற்பிரசுரஞானானந்தகனமாகி, தப்தாயபிண்டம்போ ற்பரதத்துவத்தை யபேதமாய்க்கலந்து, கபளீகிருதசமஷ்டி ஸ்தூல சூக்கும பிரபஞ்சங்களையுடைய சமஷ்டி காரணோ பாதியென்னும் ஞாதிருஞேய ஞாதிருஞான இவ்வுபாதி களின்றி, அபாவிர்துவாம். ஞாதிரு ஞாதிரு விருத்தி, அ திர்த்தரிசன வியாபகமாய்ப் பிரகாசிக்க, அதின் சங் கோச விகாசா தாரமான சலன சக்தியை அவ்வுபாதி சம் மந்தமின்றி, யதனையநுப்பிரவேசித்துப் பிரகாசிப்பிக்கின்ற சொப்பிரகாச சிதாகாச நிர்சலன சக்தியாலடக்க, சமஷ்டி ஸ்பூர்த்தி யாதாரமான ஞாதிருஞாதிரு தனது சலன சக்தி யுடனில்லாததாகிச், சிதாகாசாநு பூதிமாத்திரமாக நிங்கி விடும். இதனைக் கேசரிவித்தை யென்பார்கள், இஞ்ஞாதி ருதுரியசிதாகாச வுபாதியி னதிகாரிக தேவதைஉருத்திரர். ஞாதிரு ஞாதிருவி னதிகாரிகதேவதை ஹரன. ஞாதிரு ஞான வுபாதியி னதிகாரிக தேவதை மிருடர் ஞாதிரு

ஞேயவிருத்தியி னதிகாரிகதேவதை பவர் எனப்படும். அவ்விருத்திகள் தமசில்இரஜசு தமசிற் சத்துவம் தமசிற்றம செனவும்படும்.

இவ்வித கேசரி வித்தையாற் சமஷ்டி ஞாதிருதுரிய சிதாகாசவுபாதியிற் பிரவேசிக்க, ஞாதிரு ஞாதிரு நிச்சேடமாயில்லாததாகி, இஃது ஞேயம் இஃதுஞானம் இஃது ஞாதிருவென்ற பேதமின்றி, சமாதியினநுபூதி யுதித்து நிற்கும், அவ்விடத்து இரஜசிலிரஜசு-இரஜசிற் சத்துவம்-இரஜசிற்றமசு-என்னு மூன்று பிரிவுடைய சமஷ்டி ஸ்தூல சரீரியான விசுவ சைதந்நிய வுபாதியாம் ஞேயஞேய ஞேய ஞான-ஞேய ஞாதிரு ஞேயதுரிய விருத்திகளென்ன அவ்விருத்தி சைதந்நியங்களென்ன, அவற்றினதிகாரிக தேவதைகளான தாதா-விதாதா-பிரஜாபதி பிரமாவென்றதேவதைகளென்ன, சமஷ்டி சூக்குமசரீரியானவிரணியகர்ப்பனென்னுந் தைஜசவுபாதியாம் சமஷ்டி சூக்கும சரீரமான மகதத்துவமெனும் ஞானவிருத்தி சத்துவமானதால், சத்துவத்தில் ரஜசு சத்துவத்திற் சத்துவம் சத்துவத்திற்றம சென்று கூறப்படும். அகண்ட ஞானஞேயம் ஞானஞானம்-ஞான ஞாதிரு-வென்றுமதில் துரியமெனக்கூறப்பட்டுப் பிரத்தியுமனசங்கர்ஷண-அநிருத்த-நாராயணரென்ற அவ்விருத்திகளினதிகாரிக தேவதைகளென்ன. இவ்வுபாதிகளென்ன, அனைத்து மொன்றிலொன்றொடுங்கி, சிதாகாச வுபாதியாம் பிராஞ்ஞதுரியோபாதிமாத்திரமாகச் சேஷித்துத், திரிபுடியில்லாத சமாதி பெலந்தால்அச்சிதகாச வுபாதியு நீங்க, அவ்விடத்துக்கேசரி வித்தைக்குப் பிரவேசமில்லாததால் சொரூபாநுபவர்திரோதானப்படும்.

திரோதானப்பட்டவிடம் அவ்வியக்தமானதாலும்.விய

ஷ்டி சமஷ்டியான காரியவுபாதியிற் பிரிதி விம்பிதசைதந்ணி யக் தனதுபாதியுடன் லீனமாய் விட்டதனலும், முற்கூறிய ஆதேய சைதந்யத்திற்குச் சர்வாதாரமான அதிஷ்டான பிரமசைதந்யத்தின் ஐக்கியாநுபவம் வரவேண்டி. அவ்வியக்தமான வக்கிரணவுபாதியில் உன்மனியென்னும் வித்தியா பெலங்கொண்டே சாதிக்கப்படவேண்டும். அவ்வுன்மனியும், திரிபுடியாகிய மனமெனும் விருத்தியை நீங்கியதானதால், அதனுற் பிரவேசிக்குந் தன்மையாவது-யாதொரு தோற்றமுமின்றி யவ்வியக்தமாகிக் காரணப்பிரமத்திற்கு வேறுயில்லாமற் சிதாகாச வுபாதியுநீங்கிலயித்த அச்சீவன், அவ்விடத்தினின்றும் முன்போல் அச்சிதாகாச அநுபூதி மாத்திரமாக விழிக்க, இவ்வுபாதியு மின்றிய தனது சொரூபமான அதிஷ்டான பிரமசொரூபந்தானுக விருந்திடினும். நிருபாதிகமானதுபற்றி வியக்தாகாரமான வோரநுபூதிய வ்விடத்துதித்து நிற்கும். அதனை வியக்தம் எனக்கூறக் கூடாததுபோல், அவ்வியக்த மெனவும் உண்மையர்கவுரைத்திடத்தகாது. இச்சிதாகாசாநுபூதியினின்றுமதனை பெதிரிடின் இச்சிதாகாசாநுபூதிநீங்கியவ்வியக்தம் போன்ற அநுபவமுண்டாகும். அதனைப் பிரகாசிப்பிக்கின்ற பிரகாசம் இயல்பாகவே விளங்குவதால், அதனை யிவ்வுன்மனியன்றித் தானுக வறியவுபகாரப் படாததனல், அவ்வநுபூதியையதிதாரத்துடன் றெளியின். அவ்வுன்மனிவித்தையினிலாபங் கிடைக்கும்.

அஃதாவது-அவ்வியக்தம் போலுதித்த அவ்வநுபூதியும், -அவ்வியக்தாகாரமாக விஷயப்படுவது கொண்டு, அவ்வநுபூதியிலும் ஞேயம்-ஞானம்-ஞாதிரு-இம்மூன்றும் அவ்வியக்தமாகவுளவாம். அங்ஙனமாயின் அவ்வியக்தஞேயம் அவ்வியக்த ஞானம், அவ்வியக்த ஞாதிரு எனக்கூறலாம்.

'அவ்வவ்வியக்தாகாரமா யுதித்தவநுபூதியில் அவ்வியக்தத் திரிபுடியான அவ்வியக்தத் தன்மை முன்னநுபூதிக்கு வேரூக யாதுகாணப்படுகின்றதோ, அத்தோற்றுங் குறிப்பே அவ்வியக்த ஞேயமாகும். அநந்த மாத்திரந் தாதான்மியப் படின், அத்திசையில் அவ்வியக்த ஞேயமாகவுதித்த விருத்தியின் றன்மை,தனக்சாதாரமாய் நின்ற அவ்வியக்தஞானோபாதியை யந்நியமாகக் காட்டித், தான் காட்சியாகி வியக்தப்படாத் தன்மையை நீங்கிநிற்கும். இங்ஙனம் நீங்கிநிற்கச் செய்த வல்லபத்தின் பிராப்தியே, மநோன்மநியினிலாபத்தின் பிராப்தியாகும்.

அதனுல் அவ்வியக்த ஞேயோபாதியை யவ்வியக்தஞானபெலங்கொண்டு இம்மநோன்மநி வித்தியா பெலத்தாற் பிரவேசித்திடின், முந்திய வநுபூதியி லிக்காட்சித் தன்மை காணுமையால், அவ்வியக்த ஞானமாத்திரமாகவே யவ்விடத்திருந்ததாகத் தன்னை யவ்வியக்த ஞானத்தோடுந் தாதான்மியப்படுத்தி, அவ்வியக்த ஞானமாத்திரமாக விருந்தவிடத்து, இக்காட்சியாம் அவ்வியக்த ஞேயம் வரவிடமில்லையென அவ்வியக்த ஞானமாத்திரமாகச் சேஷிக்க, அதனை நிஷேதித்து நிற்கும். அவ்வித அவ்வியக்த ஞானமாத்திரமாகத் தாதான்மியப்பட்டுப் பிரகாசிக்கின்ற அநுபூதி பெலத்தால் விளங்குகின்ற அத்திசையில், மநோன்மநியி னுதிக்கத்தினுற், காட்சியில்லாத காண்டல்போல், அவ்வியக்த ஞேயமில்லாத விடத்து, அவ்வியக்த ஞானம் நிரூபகாரமாக சித்திக்க விடமின்றி நீங்கும். அவ்வவ்வியக்த ஞானோபாதி நீங்க, காட்சி காண்டலிரண்டும் நீங்கினுங் காண்பான் மாத்திரமாகச் சேஷிப்பது போல், அவ்வியக்த ஞாதிருமாத்திரமாகச் சேஷிக்கச்செய்து அஃதோடுந் தாதான்மியப்படுத்தி நிற்கும். அத்திசையில் அம்மநோன்மநியினரு

னினால், காட்சி காண்டலில்லாதவிடத்து காண்பானும் நிரு பகாரமாகி சித்தியாததுபோல, ஞேயம் ஞானஞ்சித்தியாத விடத்து. ஞாதிருவும் நிஷ்பிரயோசனமாய்ச் சித்தியாமல் நீங்கிவிடும்.

அவ்வியக்த ஞாதிரு அங்ஙனநீங்க, குறிக்கப்படாவிடி னுஞ் சொப்பிரகாசமான தான் நிஷேதிக்க விடமின்றி நிரு பாதிகமா யபரோக்ஷமாக சித்தித்திருப்பதினால், குறிப்பி ல்லாதது பற்றி அவ்வியக்தமெனவும், சொப்பிரகாசமான துபற்றி அபரோக்ஷமெனவும், இங்ஙிலை கேசரிவித்தைக்கு அவிஷயமானதால் அவ்வியக்தத் தன்மை ஆரோபிதமென வும், உன்மனி வித்தையால் முன்னிலைப்பட அநுபவித்துக் கொண்டு அவ்வியக்தஞேய ஞானஞாதிருக்களுங்கற்பிதமெ னவும், சொப்பிரகாச அபரோக்ஷ சாக்ஷாத்காரமாயிருக்கிற பிரத்தியகபின்னபரமான்மாவாகிய தன்னிடத்தில், மனோ ன்ம நிவித்தையால் முன்னிலைக்கொள்ளாமலும், கேசரிவி த்தையுடன் உபாதி நீங்கியவிடத்தில் யாதொரு விருத்தியும் ஆபாசமாயேனுமில்லாமற் போவதனாலும், எக்காலத்தும் நிர் விகார நின்மல அத்துவிதீய நித்தியாபரோக்ஷ சொரூப மாகத், துவைதத்தி னுதிப்புக்கிடமின்றிச் சொரூபத்துக்கு வேறாக உன்மனியுமில்லாததாகச் சுயஞ் சொரூப மாத்திரமா கவே, அபரோக்ஷமாகப் பிரகாசித்து நிற்கும். அபரோக்ஷ மென்றால் அக்ஷத்துக்கு=திருக்குக்கு, பரமாக=அந்நியமாக, முக்காலும் பவியாததுபாது, அஃதெனப்படும். ஆதலால் ஜாதிக்குணக்கிரியா சூந்நியசுயம் ஞானசொரூபதிருக்குமாத் திரமாக வநுபவிப்பாயாகவென. அப்படியே மாணாக்கனு ம் உன்மனியின் கிருபைகொண்டு, ஆசிரியரருளிய பிரகாரம் அவ்வியக்த உபாதியைக்கிண்டு, பிரத்தியக பின்னபரமான்ம சுபாவமா நித்தியாபரோக்ஷத்தை நித்திய சித்தயாகவடை

ந்து, நிஜானந்த சமுத்திரத்தின் முழுகினன்.

முற்றிற்று.

---

## ௰௩-வது பஸ்பமகிமா நிருபணப்பிரகரணம்.

---

அஹோதுக, தயாசிந்துவாகிய பரமகுரோ! உவமையின்றிய கருணையாலடையா மலடைந்த சுவாநுபூதியையே தென மொழிவேன்! எக்காலத்தும் நானே யனைத்துமென க்கூடவுரைக்க நினைக்கவிடமின்றி யுள்ளபடி சொரூபமாக வே பிரகாசிக்கின்றேன்- முக்காலத்தும் பௌதீக முதல் அவ்வியக்தம்வரை காரியகாரணமாயுள்ள பிரபஞ்சம், விவர்த்தமாகவேனும் உற்பன்னமுமன்று. ஸ்திதமுமன்று. நஷ்டமுமன்று. இதனையிட்ட காரிய காரண வுபாதியிற் பிரதி விம்பித்துப் பிரகாசித்த ஜீவேச பேதமும், அதனையிட்டு வந்த பந்தமும், அதனல் விளைந்த துவைதமானகர்மபக்தி யோகமும், அப்படியே ஜீவேச பேதத்தை நீக்கவந்தஜீவேசர்களது ஐக்கியமும, அதனற் பெற்றதான மோக்ஷமுந் திரிவித பரிச்சேதசூந்யமான சொச் சொரூபமாம். நிஜமகிமையில், விவர்த்தமாயேனுஞ் சித்திக்கத்திரமின்றி, முக்காலத்துஞ் சொரூபத்திற்கு வேறில்லாமல் ஒழியாமலொழிந்தது எவ்விடத்தோ? எவ்வாறோ? ஆச்சரியம்! ஆச்சரியம்! கருணையின் மகிமையை யென் சொல்கேன்! என்சொல்கேன்! எனக்கொர்ஜித்து, ஆனந்தக் கூத்தாடிப், பரவசனுமுடனும் புளகிதமாய் ஆனந்தபாஷ்பம் ஆறாய்ப்பெருக, ஸ்ரீ குருவின் உபயசரண கமலத்தில் சங்கற்பமில்லாத தெண்டம்போல வீழ, ஆசிரியருமப்படியே பரவசராகி, குரு சிஷ்யபேதமில்லாத நிஜானந்த விலாசத்தில் மூழ்கிப், பின்பு பகி

ர்முகமாகி, அம்மாணாக்கனைப் பகிர்முகப்படுத்தி, உச்சிமோ ந்து ஆலிங்கித்து, சிரத்திலும் இருதயத்திலுஞ் சுவர்ன கமல துல்லியமானகரத்தா லநுக்கிரகித்து. பாலத்தில் விபூதியால் அலங்கரித்து நோக்கியருளுவார்.

நித்திய திருப்தனாகிய உன்னாலடையாமலடையப்பட்டவிந்நிலைமையார்க்கும் அரிதே! அஃது நீங்காத அநுபவமானவுனது சொரூபமாய்ச் சித்தித்திருந்திடினும், அதனைக் கரதலாமலகம் போற் பிரகாசிக்கச் செய்யும் வல்லபமுடைய அசாதாரணமான சாதனமியாதோ' அதனை மறவாமலிருப்பாயாகவென அருள.

வேதாகமமுதலிய சகல சாஸ்திரங்களாலும் பாகத்துக்கு வன்னிபோல் அசாதாரண சாதனமாகக் கூறிய பஸ்மத்தை: நாவினாற்கூடக் குறியாமற் குறிக்கத்தக்க இரகசிய வஸ்துவெனத் தெளிந்தேன். அற்பமான வெனது புத்தியினும் அளவின்றிய அதன் மகிமை பிரகாசிக்குமாறு. அநுக்கிரகிக்க வேண்டுமென்ற மாணாக்கனை நோக்கி யாஞ்ஞாபிப்பார். இவ்விபூதியின் மகிமை மும்மூர்த்திகளாலுமுரைக்கத்தகாதென, நவமாகநாங் கூறவேண்டியதின்றேவேதங்களே அங்ஙனஞ் சதாவோதுகின்றன. அனேக உபநிடதங்களிற் பலவாறு இம்மகிமையைக் கூறத்தகாததாக விதித்திருப்பினும், இதனைச்சுருக்கமாக விருத்தஜாபாலமெனுமுபநிடதங் கூறியவா றுபதேசிக்கின்றனம்.

ஜனகனெனும் அரசன் பிப்பலாதரெனும் ரிஷியையடைந்து பஸ்பமகிமாவை யுபதேசிக்க வேண்டுமெனவுபநயன விதிப்பிரகாரம் பிரார்த்திக்க, அப்பிப்பலாதர் ஜனகருடன் சத்தியலோகத்திற் சென்று பிரமாவை யிப்பிரகாரம் பிரார்த்திக்க, ஈசனது மகிமையெப்படியோ அப்படி

ந்து, நிஜானந்த சமுத்திரத்தின் முழுகினான்.

முற்றிற்று.

---

## ௰௩-வது பஸ்பமகிமா நிரூபணப்பிரகரணம்.

---

அஹோ தக, தயாசிந்துவாகிய பரமகுரோ! உவமையின்றிய கருணையாலடையா மலடைந்த சுவாநுபூதியையே தென மொழிவேன்! எக்காலத்தும் நானே யனைத்துமென க்கூடவுரைக்க நினைக்கவிடமின்றி யுள்ளபடி சொரூபமாக் வே பிரகாசிக்கின்றேன்- முக்காலத்தும் பௌதீக முதல் அவ்வியக்தம்வரை காரியகாரணமாயுள்ள பிரபஞ்சம், விவர்த்தமாகவேனும் உற்பன்னமுமன்று. ஸ்திதமுமன்று. நஷ்டமுமன்று. இதனையிட்ட காரிய காரண வுபாதியிற் பிரதி விம்பித்துப் பிரகாசித்த ஜீவேச பேதமும், அதனையிட்டு வந்த பந்தமும், அதனால் விளைந்த துவைதமானகர்மபக்தி யோகமும், அப்படியே ஜீவேச பேதத்தை நீக்கவந்தஜீவேசர்களது ஐக்கியமும, அதனாற் பெற்றதான மோக்ஷமுந் திரிவித பரிச்சேதசூந்யமான சொச் சொரூபமாம். நிஜமகிமையில், விவர்த்தமாயேனுஞ் சித்திக்கத்திரமின்றி, முக்காலத்துஞ் சொரூபத்திற்கு வேறில்லாமல் ஒழியாமலொழித்தது எவ்விடத்தோ? எவ்வாறோ? ஆச்சரியம்! ஆச்சரியம்! கருணையின் மகிமையை யென் சொல்கேன்! என்சொல்கேன்! எனக்கொர்ஜித்து, ஆனந்தக் கூத்தாடிப், பரவசனையுடனும் புளகிதமாய் ஆனந்தபாஷ்பம் ஆறுய்ப்பெருக, ஸ்ரீ குருவின் உபயசரண கமலத்தில் சங்கற்பமில்லாத தெண்டம்போல வீழ, ஆசிரியருமப்படியே பரவசராகி, குரு சிஷ்யபேதமில்லாத நிஜானந்த விலாசத்தில் மூழ்கிப், பின்பு பகி

ர்முகமாகி, அம்மாணாக்கனைப் பகிர்முகப்படுத்தி, உச்சிமோ
ந்து ஆலிங்கித்து, சிரத்திலும் இருதயத்திலுஞ் சுவர்ன கம
ல துல்லியமானகரத்தா லநுக்கிரகித்து. பாலத்தில் விபூதி
யால் அலங்கரித்து நோக்கியருளுவார்.

நித்திய திருப்தனாகிய உன்னாலடையாமலடையப்பட்
வின்மையார்க்கும் அரிதே! அஃது நீங்காத அநுபவமா
னவுனது சொரூபமாய்ச் சித்தித்திருந்திடினும், அதனைக்
கரதலாமலகம் போற் பிரகாசிக்கச் செய்யும் வல்லபமுடை
ய அசாதாரணமான சாதனமியாதோ' அதனை மறவாமலிரு
ப்பாயாகவென அருள.

வேதாகமமுதலிய சகல சாஸ்திரங்களாலும் பாகத்
துக்கு வன்னிபோல் அசாதாரண சாதனமாகக் கூறிய பஸ்
மத்தை: நாவினாற்கூடக் குறியாமற் குறிக்கத்தக்க இரகசிய
வஸ்துவெனத் தெளிந்தேன். அற்பமான வெனது புத்தியி
னும் அளவின்றிய அதன் மகிமை பிரகாசிக்குமாறு. அநு
க்கிரகிக்க வேண்டுமென்ற மாணாக்கனை நோக்கி யாஞ்ஞா
பிப்பார். இவ்விபூதியின் மகிமை மும்மூர்த்திகளாலுமுரை
க்கத்தகாதெனை, நவமாகநாங் கூறவேண்டியதின்றேவேதங்
களே அங்ஙனஞ் சதாவோதுகின்றன. அநேக உபநிடதங்
களிற் பலவாறு இம்மகிமையைக் கூறத்தகாததாக விதித்தி
ருப்பினும், இதனைச்சுருக்கமாக விருத்தஜாபாலமெனுமுப
நிடதங் கூறியவா றுபதேசிக்கின்றனம்.

ஜனகனெனும் அரசன் பிப்பலாதரெனும் ரிஷியை
யடைந்து பஸ்பமகிமாவை யுபதேசிக்க வேண்டுமெனவுப
நயன விதிப்பிரகாரம் பிரார்த்திக்க, அப்பிப்பலாதர் ஜன
கருடன் சத்தியலோகத்திற் சென்று பிரமாவை யிப்பிரகா
ரம் பிரார்த்திக்க, ஈசனது மகிமையெப்படியோ அப்படி

யென்று பிரமாவுரைக்க, அவருடனிருவர்களும் வைகுண்டம் புகுந்து நாரணனையப் பிரகாரம் பிரார்த்திக்க, அந்நாராயணரும் அங்ஙனமே கூற, அவருடன் மூவர்களும் உருத்திரலோகத்திற் கேகி காலாக்கினி ருத்திரரைவேதவிதிப்படி சரண் புகுந்து பிரார்த்திக்க, அவரும் அதனை யுபதேசிக்கின்றேமென அருளிப், பின்புபதேசிக்கவேண்டி நிமீலிதாக்ஷராகி சொரூபானந்தத்திலயித்தவராக விருக்க; அச்சமையத்தில் நிதாகர்-ரிபு-ஜடபரதர்-தத்தாத்திரயர்-துருவாசர் ரைவதகர்-எனும் இப்பிரமநிஷ்டர்கள் புசுண்டரையடைந்து ஜனகரைப்போலப் பிரார்த்திக்க, என்னுலுரைக்கத்தகாதென அவர் மொழிய, அவர்கள் கலக்கமுற்று நிற்க, பின்பு அவர்களுடன் புசுண்டர் காலாக்கினி ருத்திரையுற்று, விதிவத்தாய் வணங்கிப், பின்பு இவர்களுமத்தேவர்களும் பரஸ்பரஞ் செய்த சல்லாபத்தாற் பகிர்முகமாய்க் காலாக்கினிருத்திரரும் விழிக்க, இவர்களுமுபாயன விதிவத்தாகப் பிரார்த்திக்க வுபதேசிப்பார்.

சிருஷ்டி சமயத்தில் ஈசானுதிதத்துவங்களினின்று மைந்து பூதங்களும் ஐந்து கோக்களும் உற்பன்னமாயின. அக்கோக்களினின்றுமுண்டாகிய கோமயங்களின் விரஜாஸமஸ்காரவிசேஷத்தால் ஜந்யமாகிய திரவியம், பசிதம்-பஸ்மா-விபூதி-க்ஷாம் இரக்ஷை-என ஐந்துபேதமுடையதாகிப், பிரகாசித்தல்-புண்ணிய பாவ முதலிய மலங்களை அங்குரிக்கவிடமின்றி வறுத்தல்-ஈசுரத்தன்மையாகப்பவித்தல்-புண்ணியபாவ முதலிய மலங்களை யணுகாமனீக்குதல்-பிணிபூதப் பிரேதாதிகளை விலக்கி யிரக்ஷித்தல் எனும் பொருள்களைப் பொருந்தியிருப்பதால், கிரமாலங்காரமாக அவ்வைந்து நாமங்களின் யோக சத்தியை யறிய அருளி; அப்படியே பிரம சைதந்யத்திற்கும் இவ்வைந்து நாமங்களு

முளவென்றும், அவற்றுள் யோகரூடிகளாற்குறிக்கப்பட்ட
வின்னாமங்களைப் பொருந்திய பஸ்மா, மகத்தெனவும் இலகு
வெனவும் பிரமஜீவஸ்சதந்நியங்களைக் காட்டி, மஹா பஸ்மா
பிரமமெனவும் லெகு பஸ்மா பசுவாகிய ஜீவனென்வும், அ
வன் உண்மையில் பிரம சொரூபத்திற்கந்நியனாயில்லாமை
யாற் றன்னைப்பிரமமாகப் பிரகாசிப்பிக்குஞ் சாதன
மாம், பிரமஞ்ஞான மிக சீவனுக்கு பிராப்தியாக வேண்
டில், அவ்வைந்துவித பேதமுடையவிதிவத்தான பஸ்மதா
ரணமன்றி வேறு சாதன மிலதால் அதனையும் இலகு
பஸ்மாவெனவும் நிரூபித்து: அதின் தாரணை விதியையும்
ஸ்தானத்தையுங்கூறி அங்ஙனந் தரித்திட, அத்தாரண
த்தானேரிட்ட, உத்தூளனமெனவுந் திரிபுண்டரமென
வுமிரு வகுப்புகளில், முதல் வகுப்பு சர்வாங்கத்திலும், இர
ண்டாம் வகுப்பு சிரம் லலாடமுதலிய அவயவங்களிலும்,
ஆகவிதித்ததில், இவ்விதிப்பிரகாரம் எச்சாதிகளும் எத்
தன்மையுடையவர்களுமாகிய யார் தரித்தாலும். அச்சின்ன
முடைய அவன் காணப்படின், கிரமமாகக் கீழ் முதல் லலா
டத்தின் மேல் வரை தரிக்கப்பட்ட மூன்றுரேகைகளின்
றெரிசனத்தால், ஆதியாகிய வொரு ரேகைமுதல்மூன்றுரே
கை வரையிலுந்திரிமூர்த்திகளாகப் பாவிக்கப்பட்டு, அவைக
ளின் சமுதாயம் பொருந்திய சர்வாதாரமான பரப்பிரமமெ
னும் பரசிவத்திற்கந்நியனாக அவனை யுபாசிக்கவேண்டுமெ
னவும், அங்ஙன முபாசித்திடின் அவனைப்பாசவிநிர்முக்த
னெனவும் மொழிந்து: இப்பஸ்மத்தை யிரண்டு விதமாக
வும் விதிவத்தாக அணிந்தவனாகியும் பஸ்மத்தின் மீது சய
னித்தவனாகியுங்கொண்டு ருத்திரஜாபியாயின், பஞ்சமஹா
பாதகங்களினின்றும் அக்கணமேநீங்கினவனெனவுஞ், சகல
தேவர்களையும் தியானித்தவனெனவும், சகல கர்மங்களை

யுந் நிர்சேஷமாய்ச் செய்து முடித்தவனெனவும், சகல தீர்த்தங்களின் யாத்திராபலனை யுடையவனெனவுஞ், சகலஜெபங்களையும் ஜெபித்தவனெனவும், இம்மகிமையை யிவ்வுபநிடதத்தின் மூன்று பாராயணத்தால், கிராமாககிருத கிருத்தியத் தன்மை, காணுபத்தியத்தன்மை, திரிவிதபரிச்சேதமில்லாத மஹாதேவ சோதியிலக்கியத்தன்மை, இவற்றைப்பயனாகவுடையவனெனவுமுரைத்ததுமன்றி; இப்பிரபஞ்சமக்கினி சோமாத்மகமா யிருப்பதால் அக்கினி யென்பது சிவமுஞ், சோமனென்பது சக்தியுமாகு. ஆதலாலிப்பிரபஞ்சஞ் சிவசக்தி சொரூபமெனப்படும். அதின் விவரமியாதெனில்; பிரபஞ்சமென்பது விருத்தி மத்தாயிருப்பதால், அவ்விருத்திக்கு ஆகாரமாயுள்ள நெகிழ்ச்சிபமிர்த வடிவமானசோமனுஞ் சக்தி யெனவும், அதனை வர்த்திக்கவும் சோஷிக்கவும் ஆதாரமான வல்லபம் அக்கினியாஞ் சிவமெனவுங் கண்டு, அச்சோஷண சக்தியுடைய அக்கினியெனுஞ் சிவத்தால் பிரபஞ்சம் வியாபிக்கப்பட்டுச் சோஷிக்கப்பட, பூதபௌதிகத்தின் விகாரத்தோற்றநீங்கிப், பஸ்மமாத்திரமாகவே சேஷித்திடும். அஃதே முந்திய காலத்திற்றனதுதோற்றிய விகாராம்ஸத்தால், நாம ரூபமாகிய பிரபஞ்சமாக விளங்கியதெனவும், அக்காரியமான பிரபஞ்சமாக விளங்குங்காலும் அதீத காரண சத்தரூபமான அதிஷ்டானமாகவிருந்திருப்பதால், நாமரூபத் தோற்றமுடைய விகாரத்தால் வர்த்திக்கச் செய்யுமோரம்ஸத்தாற் சக்தியெனவும் சோஷிக்கச் செய்யுமோரம்ஸத்தால் சிவமெனவுங் காரியோபாதி நீங்கிக் காரணோபாதிமாத்திரமாகச் சேஷித்துவிடத்து சிவசக்தி ஐக்கியமான பஸ்மமெனவுங்கண்டு. உத்தூளனஞ் செய்யிற், றனது தேகமுஞ் சமஷ்டிக்குள்ளடங்கியதால் சரீரோபாதி நீங்கிப் பஸ்மமாகச் சேஷித்திடும்.

அங்ஙனஞ் சேஷித்திட விபஷ்டி சமஷ்டியான பிரபஞ்சமி
யாவையும். தன் சரீரத்தோடும் பஸ்மமாகக்கண்டதவனை
அசரீரியாகவும், பற்றவனைத்தையும் பஸ்மமாகவுங் காட்டி
நிற்கும். இங்ஙனமே பசுவின் மலமாகிய பிரபஞ்சத்தை
நீறாகக் காண்பித்ததுபோல, சூக்ஷமகாரணோபாதிகளையு
நீற்றிட சொரூப பஸ்மமாகவே, பிரபஞ்சமதற்கன்னியமாய்ப்
பிரகாசித்து நிற்கும். அவ்விடத்து துவைதமில்லாததால்,
துவைதமே பசுவெனவும் பாசமெனவுங்காணப்படுவதால்
அவயுபத்துவைதமான வான்மசொரூபமாகச் சேஷித்தி
டும். இப்பொருளோ பிரணவமுமுடையதாகவிருந்து, பிர
த்தியக பின்ன பரமான்ம சிரவணம் போல விதிவத்தாகவ
தனை யுபாசிக்கின்ற சந்நியாசிக்கு, ஆன்மானுபவ விவேகா
நுபூதியை நல்கி சகல பொருளுக்குஞ் சப்த சக்தியாயிருப்
பது போல, சகல வஸ்துவுக்கும் இந்த விபூதி யர்த்தசக்தி
யாயிருப்பதுகொண்டு, இவ்விரண்டுஞ் சமான வித்தியாதி
ஷ்டானமெனவும், இங்ஙனம் பிரணவோபாஸ்தி பொருந்
திய சந்நியாசியும் விதிவத்தான பஸ்மதாரியாகாவிடின், அ
வனுக்கு சிரவணத்திலதிகாரமில்லையென நிஷேதங் காணப்
படுவதுகொண்டு, சந்நியாசத்திலும் மேலான அசாதாரண
மான சிரவண சாதனமெனவும், அப்படியே பிரணவத்தின்
மூன்றக்கரங்களும், மும்மூர்த்திகள்-முக்குணங்கள்-மூன்ற
க்கினிகள்-மூன்றுலகங்கள்-முச்சுடர்கள்- மூன்றவஸ்தைகள்
முச்சீவர்கள்-இவற்றைப் பொருளாகவுடையனவாயிருப்
பது போல், இம்மூன்று ரேகைகளும், அப்பொருள்களை
யே பொருந்தினவையிருப்பதனாலும். அப்படியே மூன்றக்
கரங்களின் பொருளான மூன்றிலக்கமுடைய யாவையும்
வியாபித்து, பிரணவமெனும் நாதந் தனது பொருளான
பிரமசக்தியால் விளக்குவது போல், இம்மூன்று ரேகை

